





# வழியும், உண்மையும், வாழ்வும் "நானே"

There is only
One Awareness
One Consciousness
One Life
One Creator
Exploring, Experiencing and
Knowing ItSelf.
The One reading these words is the
same One who has written them.



Before Enlightenment
You are the Infinite, Immortal
Sea of Consciousness.
After Enlightenment
You are the Infinite, Immortal
Sea of Consciousness.
There is no other Identity.





## I am the Way, the Truth and the Life

Pax. Ravichandra-2023

# வார்த்தை





சிந்தையை வெறுமையாக்கி -மனம்
அன்புத் தந்தையை நினைத்து
ஆனந்த தவமிருக்க-
விதையாய் விழுந்த வார்த்தை
மனம் போற்றித் துதித்திட-பிறந்த
அன்பின் ஆனந்தக் கீர்த்தனை

வெற்றுப் புல்லாங்குழல் நான்
வேணுகானமாய் அவர்
என்தன் சித்தம், நினைப்பு, செய்கை
எல்லாம் தந்தைக்கே சொந்தமாக
யாத்த தவம்-வார்த்தையை
கவிதையாய் வடிக்க நான் பெற்ற வரம்



"It's the truth I'm after, and the truth never harmed anyone. What harms us is to persist in self - deceit and ignorance."

Marcus Aurelius

அன்னையிடம் கேட்ட அன்புத் தவம்
அருந் தமிழால் பாட-அன்னை
அருளிய வரம்

எல்லாப் புகழும் இறைவனைச் சேர
என் மனம் பாடும் ஆனந்த ராகம்
சத்தியமோ தரிசனம்
தூய மனத்தவருக்கே நிதரிசனம்




உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை
பூவுலகில், நல்மனத்தவருக்கு அமைதி
கிறிஸ்து பிறப்பின் நற்செய்தி

உள்ளுணர்வின் உன்னதமே- நல் மனம்
என் அமைதியை நான் தருகிறேன்
இயேசு தரும் அமைதியோ பெருவரம்
கேட்பவனுக்கு கிடைக்கும் அருவரம்




Sitting silently doing nothing
when season comes
the grass grows by itself

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-20-12-2023*

| வழியும்,உண்மையும், வாழ்வும் 'நானே' | |
|---|---|
| எண் | பொருளடக்கம் |
| | |
| 1 | வார்த்தை மனுவுருவாகி |
| 2 | வாசமலர்த் தேனாய் |
| 3 | சத்தியம் |
| 4 | வழியும், உண்மையும் வாழ்வும் நானே |
| 5 | ஓம் வார்த்தை காலமில்லா காலத்தே |
| 6 | ஓம் பிரணவமந்திரம் |
| 7 | ஓம் பிரபஞ்சப் பேரொலியே |
| 8 | ஓம் ஓங்காரத்தின் அதிர்வே |
| 9 | சக்கரியா |
| 10 | தேவ அன்னை |
| 11 | மங்கள வாழ்த்து |
| 12 | சூசை மனம் |
| 13 | கன்னி மனம்- மரியாள் |
| 14 | மரியாளும் எலிஸபெத்தும் |
| 15 | யோவானின் பிறப்பு |
| 16 | ஆனந்த பைரவி- இயேசுவின் பிறப்பு |
| 17 | இடையருக்கு நற்செய்தி |
| 18 | சிமியோனின் பாடல் |
| 19 | சந்திப்பு- மூன்று ஞானிகள் |
| 20 | யாத்திரை-எகிப்து நோக்கிய பயணம் |
| 21 | அன்னையர் துயரம்- பெத்லேகம் |
| 22 | நசரேயன் |
| 23 | ஏன் என்னைத் தேடினீர்கள்? |
| 24 | ஏமாற்றம் சிறுவன் இயேசு |
| 25 | ஆன்மீக புரட்சியாளர்- திரு முழுக்கு யோவான் |
| 26 | பாலைவனத்தில் ஓர் குரல் |
| 27 | இயேசுவின் திருமுழுக்கு |
| 28 | சத்திய சோதனை |
| 29 | சுயசோதனை |
| 30 | திருப்பணி |
| 31 | அழைப்பு-சீமோன் |
| 32 | அன்னையின் வேண்டுதல்-கானாவூர் திருமணம் |
| 33 | மத்தேயு- அன்பின் அழைப்பு |
| 34 | மலைப்பொழிவு |
| 35 | விதைப்பவன் உவமை |
| 36 | நோன்பு பற்றிய கேள்வி |

# வழியும்,உண்மையும், வாழ்வும் 'நானே'

## வழியும்,உண்மையும், வாழ்வும் 'நானே'

## வழியும்,உண்மையும், வாழ்வும் 'நானே'

# வார்த்தை மனுவுருவாகி

"வழியும், உண்மையும், வாழ்வுமான" இறை வார்த்தை
மனுவுருவாகி மானிடர் நம்மிடையே குடிவந்தது, இம்மானுவேல்
எனப் பெயர் கொண்டு, வாழ்வாலும், போதனையாலும்-
சத்தியத்திற்கு சாட்சியம் பகிர்ந்த வானமுதாய் அது



என் சித்தமன்று-உம் சித்தம் நிறைவேறுக "பரிபூரண சரணாகதியே"
நிலை வாழ்விற்கு வழி என்றே-அன்பினால் இன்புற்று
தன்னைப் பலியாக்கி, இறையன்பைக் காட்டிய தேவசெம்மறி
மரணம் கடந்து சுத்த சைதன்யமான ஜீவநதி

அனுபூதியில் அறியும் சச்சித்தானந்தத்தை, ஆனந்த சிவத்தை
"வார்த்தையால்"வடிக்க இறையருள் பெற்றேன்
பிரபஞ்ச கானமாய் ஒலிக்கும், பிரணவத்தை இன்புற்றுத் துதிக்க
அவதார புருஷர் "ஓஷோவின்"ஆசி பெற்றேன்



குன்றிக் குறுகி மடிந்து **நானழிய**-என்னில்
கிறிஸ்து எனும் பேரொளி ஓங்கி ஒளிர்ந்திட
தவமாய்த் தவமிருக்கின்றேன்




தவிப்போடு எழுதிய கவிதை ஜெபமாக
தந்தையோடு மகன் உறவாடும் நிகழ்வாக
அன்பே சிவமாக, வாழ்வே தவமாக
அனுதினமும் என் பிரார்த்தனைகள்

எல்லாம் நின் கருணை இறைவா என்று உள்ளம் பூரிக்க,
உவகை பெருக்கெடுக்க, அம்மையப்பனாய், ஆசானாய்,
அன்புறவான என் அன்னைக்கு பாத காணிக்கையாக்கி
பிள்ளை மனம் இன்புறும் நேரமிது



**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்**
Pax Ravichandra-15-10-2023

# வாசமலர்த் தேனாய்

---

இருப்பாய், எங்கும் நிறைந்த சூனியமாய், மானிட இதயத்துள்
"**ஆன்மாவாய்**" தன்னை மறைந்த சச்சித் ஆனந்தம், இறை வார்த்தையாய்,
ஓங்காரமாய், ஒலிக்கும் பிரணவம், மனுவுருவாகி இறைவன் விடுவிக்கிறார்
எனப் பொருள் படும் 'இயேசு' எனும் பெயர் கொண்டார்



வழியும், உண்மையும், வாழ்வுமான ஒளி-மனுமகனாய்
மண்ணில் உலாவியபோது-இறைமகனாய் கண்டவரே
இதயத்தை ஈந்து மகிழ்ந்தார்-இருண்ட
மதவாத மனங்களோ நிந்தை செய்து இகழ்ந்தார்

ஆணவத்தை தூண்டி, மனிதனை வீழ்த்திட அலகை காட்டியதோ
அழியும் உலக செல்வம், ஆணவம் கழித்திட, அழியாச் செல்வம்
நம்முள்ளே ,அனுபூதியில் அறிந்திட -பரிபூரண சரணாகதியே வழி
இயேசு காட்டிய வழி, சிலுவையில் கிறிஸ்துவான உன்னத நெறி




***வழியும், உண்மையும், வாழ்வும்*** **"நான்"**
உலகம் புரிந்ததோ அகங்கார-"நான்"
நம்முள் வாழும் தெய்வீகமே
**இருப்பவர் நாமே என்ற-மெய்யான "நான்"**



உள்ளுணர்வின் உன்னத நிலையே ஆன்மா,
***அதுவே சுத்த சைதன்யம்***
சின்மயமே நம் மெய் வடிவம்

விழிப்புணர்வெனும் பிரபஞ்சக் கடலில் எழுந்த பேரலை-இயேசு
கடலும், அலையும் வேறல்ல, அனுபூதியில் அவரைத் தரிசித்தவர்
அஹம் பிரம்ம அஸ்மி என்று ஆனந்த கூத்தாட
ஆனந்தக் கூத்தனாய் சச்சிதானந்தம்.



**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-15-10-2023

# சத்தியம்

***வார்த்தை கடந்த சத்தியத்தை***
***வாழ்ந்தறியும் அனுபவத்தை***
***வார்த்தைகளால் விபரிக்க முடியாது***



இறைவனோடு இறைவனாயிருக்கும் இறைவார்த்தை
தவமின்றி வரமாய் மானுடர் நிலை வாழ்வு பெற
மனுவுருவான தேவகிருபை

“வழியும், உண்மையும், வாழ்வும் நானே”
வார்த்தை கடந்த உண்மை, வாழ்வாலும், போதனையாலும்
உண்மைக்கு சான்று பகிர்ந்த இறையாண்மை

சத்தியம் தத்துவமல்ல விவாதிக்க, கற்றறிந்திட
இறையியலுமல்ல, சத்தியம் வாழ்ந்தறியும் அனுபவம்
***இயேசு உணர்வோடு***
***இயல்பாக வாழ்தலே இறைவாழ்வு***

சத்தியம் புரியாதோர்-மதங்களைப் படைத்து
மானுடத்தைப் பிரித்தார், இயேசு உணர்வைத் தவறவிட்டு
“இறை வார்த்தையைப்”போதனையாய் எச்சில் படுத்துகின்றார்

இயேசு ஒரு தனி மனித அனுபவம்
தன்னை தான் கண்டு கொள்ளும்-ஆனந்த
விழிப்புணர்வு நோக்கிய அகப்பயணம்




***வந்து பாருங்கள்-வாழ்ந்தறியுங்கள் இன்றும் இயேசுவின் அழைப்பு***
***நமக்கு நாமே மீட்பர் ,கிறிஸ்துவாக வாழ்வதே நம் மீட்பு***
***உண்மையே நமக்கு விடுதலை***

பெயரின்றிப் பிறந்து-பெயர் சூடி மகிழ்ந்து, மடிந்து பிணம்
எனப் பெயர் மாறும் உலகில், உடலல்ல நாம்-
அழிவற்ற ஆன்மா நாம், சச்சிதானந்தம் நாம்-
அனுபூதியல் அறிந்ந்தவருக்கே பிரக்ஞானம் பிரம்மம்

சின்மயமே சுத்த சைதன்யம்
நம்மை நாமறிதலே மெய்யறிவு
மற்றெல்லாம் தகவல் அறிவே

“வழியும், உண்மையும், வாழ்வும் நானே”
நானே வழி- பாதை என்னுள்ளே
பயணமும் என்னுள்ளே

நான் யார்?-சுயவுணர்வு நிலையே,
சுத்த சைதன்யமே நாம்,
நம்மை நாமறிந்தால் உண்மையை அறிவோம்
சச்சிதானந்தமே நம் மெய் இயல்பு

தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு
நானும் தந்தையும் ஒன்றென்ற பூரிப்பு




ஆணவம் நிலைக்க, நாம ரூபங்களில் சிறைப்பட்டு
நம்மை நாம் மறந்தோம், ஆணவ மனதில் நின்று
பெறும் விடுதலையே அமைதி
அதுவே இயேசு அருளும் பெருநிதி

தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு

***எங்கும் நிறைந்த எல்லாமுமான சத்தியத்தை***
***விபரிக்க வார்த்தைகளில்லை***
***பெயரிட்டழைக்க எந்த நாமமுமில்லை***
***இறைவனுக்கு ரூபமுமில்லை***

வார்த்தைகளால் விபரிக்கமுடியாதது உண்மை
இருப்பவர் நாமே-மோசேக்கு இயம்பிய நாமம்
நிர்க்குண பிரம்மமாய்-சகுண பிரம்மமாய்
சிவ சக்தியாய் ஆனந்த நடனம்




***அயம் ஆத்மா பிரம்மம்***- ஆன்மா நாம்
அதுவே நாம்-***தத் த்வம் அஸி***
***“நான்”அழிந்தால் –ஆனந்தத் தரிசனமே***
***அஹம் பிரம்ம அஸ்மி***- நானும் பிரம்மம்

உருவற்றது தோற்றம் பெறுவதே பிறப்பு
உருக்கொண்டது-தோற்றத்தை இழப்பதே இறப்பு
ஓம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
Pax Ravichandra-15-10-2023

# வழியும், உண்மையும், வாழ்வும் நானே



வார்த்தை மனுவுருவாகி நம்மிடையே குடிவந்தது
விருந்தாடி, வாழ்வைக் கொண்டாடி, ஏழை, பாவி,
விபச்சாரிகளோடு நண்பனாய், குருவாய் உறவாடி
மனக்காயங்களை ஆற்றி ஆனந்த அமைதி அளித்தது



தனி மனித ஆன்மீகக் கிளர்ச்சி , மானுட மனங்களில
அன்பெனும் ஆன்மீகச் சுடரை ஏற்றிய புரட்சி-
“சிலுவை மரணமோ”இழிந்த மதவாதத்தின் சூழ்ச்சி

இயேசு நம் பாவங்களுக்காய் மரித்தார்
மதம் அபினியும், போதை வஸ்துமாய் நாறிட
ஒரு ஆன்மீகக் கிளர்சியாளனின் படுகொலையை
மதவாதிகள் மறைத்த கொடுமை, அதுவே உண்மை

***ஆபிரகாமிற்கு முன் “நான்” இருக்கிறேன், நானும்
தந்தையும் ஒன்றே  வழியும், உண்மையும், வாழ்வும்
“நானே” , “இருப்பின் எதிரொலியாய்
“கிறிஸ்து” பேருணர்வின் பிரபஞ்ச கானம்***




நம்பிக்கை கடந்த வாழந்தறியும் உண்மை
இறையியல் வல்லுனர்களின்
நூலாம்படை வேலிக்குள் அடங்காத
விழிப்புணர்வின் மேன்மை

உன்னத அகக்கனலாய் -பாரம்பரிய,
மத கலாச்சார நம்பிக்கைகளுக்கு எதிரான
ஒரு தனி மனித அகக்கிளர்சியாய்
“இறை வார்த்தையின் புரட்சி”

நம்பிக்கை கழித்து-நம்மை நாம் கண்டு கொள்ள
***சத்திய யாத்திரைக்கான அழைப்பு*** இன்றும் ஒலிக்கின்றது
கேட்கச் செவியுள்ளோரே கேட்கின்றார்

***என்னைப் பின் செல்-நீங்களே வந்து பாருங்கள்
உண்மையே உங்களுக்கு விடுதலையளிக்கும்***
அகத் தீ மூட்டி-ஆணவத்தை ஆகுதியாக்கும் அகவேள்வி
இறைமகனாய் நாம் பிறந்திட, இயேசு விடுக்கும் அழைப்பு
நம் மெய்யான இரண்டாம் பிறப்பு

இறை வல்லுனர்கள் கற்றுத்தர இயேசு மதப்பாடமல்ல
நாளும் குருக்கள் ஓதிடச் சடங்கும்
திருப்பலியுமான வழிபாடல்ல

***அன்பே இறைவன்-உண்மையே இறை வார்த்தை,***
தன் சிலுவையை சுமந்து இயேசுவின் பின் செல்ல-
பாரம்பரிய மத நம்பிக்கைகளைத் தகர்த்து
உண்மையின் ஒளியில் நாம் நடந்திடும் கிளர்ச்சி



கசையும், முள்முடியும், கழுமரமும்
சிலுவைச் சாவும்- நமக்கு பரிசாகிட
சத்தியத்திற்கு சாட்சியான அவர் வாழ்வில்
நாமும் பங்குதாரியாகும் அகக் கிளர்ச்சி

ஆலய முகப்புகளில் -இன்றும்"***இயேசு எனும் விழிப்புணர்வை***"
அறைந்து கொல்லக் காத்திருக்கும் வெற்றுச்சிலுவைகள்
மதவாதிகள் நட்டு வைத்த "***வெருளிகளே***"




வாழ்நாளெல்லாம், கிறிஸ்மஸ், பாஸ்கா கொண்டாடி
கிறிஸ்தவராக வாழ்ந்து மடிதல் வாழ்வல்ல
வாழ்வே இறைவன், வாழ்வை கொண்டாட்டமாக்கி-
கிறிஸ்துவாக மலர என்னைப் பின் செல் என்பதே
இன்றும் அவரின் மாறாத அழைப்பு

காலம், நித்தியத்தைச் சந்தித்த அருங்குறியாய்
"விழிப்புணர்வின் அடையாளமாய்ச் "சிலுவை"

பரி பூரண சரணாகதியில்-இயேசு, கிறிஸ்துவாய் -
ஆணவ மனமழித்து, மலர்ந்து விரிந்து
மணம் பரப்பி தம்முள் வீட்டை அடைகின்றார்

நித்தியத்தில் காலமில்லை
மனமழிந்த -தூய மனமே நித்தியம்
மனதின் சிருஷ்டியே காலம்

ஆணவ வாழ்வோ நடைப்பிணம்
தூங்கும் நிலையை குறிக்கும் கிடையான தோற்றம்
விழிப்புணர்வோ நிலைக்குத்தான எழுச்சி மாற்றம்

விழிப்புணர்வே ஆன்மீக அகக்கிளர்ச்சி
***உண்மையே உங்களுக்கு விடுதலையளிக்கும்***
***உலகின் ஒளி நீங்கள்-உலகின் உப்பு நீங்கள்***

வேதங்களும், மதப்போதனைகளும் வெந்து சாம்பலாக
மதம் கடந்த மனிதநேயத்தின் புதுப்புரட்சி
இயேசுவின் ஆன்மீகம், நம்பிக்கை கடந்து வாழ்ந்தறியுங்கள்
இது ஒரு தனி மனித யாகம், நீங்களும் தெய்வங்களே

இயேசுவாக மலர்வதே-நம் இரண்டாம் பிறப்பு
நம்மிலே அவரின் மறுவருகை, பவுலின் திசை மாறிய பயணிகளே
மற்றவையெல்லாம் கட்டுக்கதைகளே, வெற்று நம்பிக்கைகளே



இயேசுவே உன் ஒளி. உன் ஒளி ஒளிர்ந்திட பிரகாசி,
விழிப்புணர்வே இறைதன்மை
உனக்கு நீயே கிறிஸ்து-உனக்கு நீயே மீட்பன்
நீயும் கிறிஸ்துவே

நானும், தந்தையும், நீயும் ஒன்றே
அத்வைதம், துவைதம், விசுடாத்வைதம்
சத்திய தரசனத்தின் பன்முகங்களே

கிருஷ்ணா நீ- பெருமான் புத்தர் நீ
இயேசு கிறிஸ்துவும் நீ
நம்மை நாம் அறிதலே மெய்யறிவு
மற்றெல்லாம் தகவல்களே.

எல்லாப் புகழும் இறைவனுக்கே
இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்
Pax Ravichandra-15-10-2023

# ஓம்! வார்த்தை

"***இருப்பாய் இருப்பவர் நாமே***" காலம் தோன்றாக் காலத்தே
இயம்பிய முதல் வார்த்தை "ஒளி உண்டாகுக"
ஓங்கார நாதத்தால் பிறந்த ஆனந்த ஒளி வெள்ளம்
ஒலியும், ஒளியுமாய் இறை பிரசன்னம்



ஓங்கார நாதம் அதிர்ந்திட-ஒளியும், ஒலியுமாய் இறைவன்
இறை வார்த்தையால் தோன்றிய படைப்பு-இறைவனின்
மகத்தான கலைப்படைப்பு, பெருவெளியும்,
ஐம்பெரும் ஆற்றல்களுமாய் அதன் நிலைப்பு



உலகிற்கு அவர் வந்தார், இருளோ அவரை
ஏற்க மறுத்தது, இருப்பேயில்லாத இருளில்
இருப்பான இறை ஒளி பிரகாசித்தது

வழியும், உண்மையும், வாழ்வும் "நானே"
மானுடம் உய்வுற - தம்மை, எமக்காய்த்
தந்தவருக்கு-இருளோ
சிலுவை மரணத்தைப் பரிசளித்தது

"அறிவுக்கனியால்" வீழ்ந்தவர்
"வாழ்வுக்கனியாய் உயிர்த்தவரால் உய்வுற"
வழி பிறந்தது.

Before Enlightenment
You are the Infinite, Immortal
Sea of Consciousness.
After Enlightenment
You are the Infinite, Immortal
Sea of Consciousness.
There is no other Identity.

ஆண்டவனாகிட, அறிவுக்கனியைத் தேர்ந்த ஆதாம்
ஆணவத்தால் வீட்டை இழந்தான், தம்மையே வெறுமையாக்கி
ஆணவம் கழித்த பரிபூரண சரணாகதியில்
இயேசு, கிறிஸ்துவாகி வீடு சேர்ந்தார்

***நம்முள் வாழும் இறைவனை அறிதலே –கிறிஸ்து***
வாழ்ந்து காட்டிய உண்மை-ஆணவம் கழிந்த
உள்ளுணர்வின் உன்னதமே இறைவன்

அன்பே சிவமாக, சத்தியமே தவமாக வாழ்தலே
உண்மை இறைவனை வழிபடும் அகவழிபாடு
புறச்சமயம் தாண்டிய-தனி மனித அகக்கிளர்ச்சியே
விழிப்புணர்வு, விழிப்புணர்வே விடுதலை

பிரபஞ்சகானம் இன்றும் ஒலிக்கின்றது
கேட்கச் செவியுள்ளவர் கேட்கின்றார்
காண விழியுள்ளவர் காண்கின்றார்.

இருளும் ஒளியுமாய், சக்தியும், சடமுமாய்
ஒலியும், ஒளியுமாய், விழிப்புணர்வின் பெருவெளியாய்
இருமைகளின் இசைவாய், முரண்பாடுகளின் சங்கமமாய்
சத், சித், ஆனந்தமாய், சிவ சக்தியாய்-சுத்த சைதன்யம்.

வெற்றுப் புல்லாங்குழலிலோ வேனுகானம்
போதிமரத்தடியிலோ தம்ம ஞானம்
வழியும், உண்மையும், வாழ்வும் ‘‘நானே’’
கழுமரத்திலோ, இயேசு கிறிஸ்துவான அற்புதம்




இருமை கடந்து தெரிதலைக் கழித்து
வருவதை ஏற்ற தூய மனங்கள்
ஆம் என்ற அற்புதங்கள்-வாழ்வைத்
யோகமாய் வாழ்ந்த அவதாரங்கள்

எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது
வேனுகானமோ யோகம்
என் சித்மன்று -தந்தையே உம் சித்தமே என் சித்தம்
சரணாகதியான கிறிஸ்து மனம்
விழிப்புணர்வில் நிலைத்த புத்த மனம்
ஞான மனதிலோ தியானம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

Pax Ravichandra-15-10-2023

# ஓம்–பிரணவ மந்திரம்

---



பிறப்பறியாப் பிரணவம், இறப்பறியாத ஓங்காரம்
ஆதியில் ஆதியோடு“ஓம்” என ஒலித்த தேவராகம்
நாளும், பொழுதும் அதிரும் ஆதியின் நாதம்
படைத்து, காத்து, இரட்சிக்கும் ஆதி சிவம்

ஆதியும் அந்தமுமான சிவனை
பிறந்தார்-இறந்தார்
மூன்றாம் நாள் உயிர்த்தார் என்று
புலம்புபவர் பேதைகளே




வார்த்தை மனுவுருவாக அன்னையாய்க் கன்னியை தேர்ந்த இறைவன்
தொழுவமே பிறப்பிடமாக-வாழிடமின்றி அலைந்த நாடோடிப் போதகன்
இறைமகன், மனுமகன் என்னும் உள்ளுணர்வில் பூரித்த தேவதீபன்
இரவல் கல்லறையில் ஓய்வு கொண்ட சிவன்

நானும் தந்தையும் ஒன்றே
வழியும், உண்மையும், வாழ்வும் நானே
ஆணவ மனம் கழித்த தூய மனம்
ஆனந்தக் கூத்தாடியது தினம் தினம்

அவதாரமாய் வந்த சத்தியத்தை அறியாத மதவாதம்
சிலுவையில் அறைந்தது, அன்பு மறந்து, ஆயிரம் கதை
வளர்த்து நிறுவனமான கிறிஸ்தவத்தில்-நாளும்
மதப்பிரிவினைகள் தொடர்கதையானது




மானுடர்க்கு நீதித்தீர்ப்பு வழங்கிட-மீண்டும்
மனுமகன் வருவாரென்ற கோஷங்கள்
ஆண்டுகள் இரண்டாயிரம் கடந்தும் ஓயவில்லை,
இரண்டாம் வருகை இன்றும் நிகழவில்லை

பவுலின் வழியில் பாதை மாறிய பயணங்கள்
அன்பே சிவம் நீதியை அறியாதது-இறைவனோ
கருணாகரன்-தீர்ப்பிடாத தயாபரன்

நம், சொல், செயல், சிந்தனையால், நாமே நம்மை
தீர்ப்பிடும் அவலம், கருப்பைக் குழிக்குள் நம்மை நாமே-
மீண்டும், மீண்டும்  வீழ்த்திடும் அந்தகனான துயரம்

இருமை கடந்து ஒன்றிக்கும் வரை
ஓயாத சக்கரமாய் சுழலும் வாழ்வு
அச்சாணியாய்-அசையாது நிற்கும்
சுத்த சைதன்யம்.

பூரணத்திலிருந்து தோன்றியதும் பூரணம், எஞ்சியதும்
பூரணம், மனுரூபமாகி ஒளியாய் பிரகாசித்து
மரித்தோரை வாழ்வுக்கு அழைத்த இறைவாக்கு
மானுடர்க்கு ஒளியும், உண்மையுமான திருவாக்கு




உண்மையின் அகதரிசனத்தை
அனுபூதியில் அறியாத மதவாதிகள்
குருடராய் குருடர்க்கு வழிகாட்டிட
குழியில் விழும் மூடர்களே

மரணம் மாறுபடும் உடலிற்கே அன்றி ஆன்மாவுக்கல்ல
அனுபூதியில் அறிந்தவர் ஞானிகளே
ஆணவம் கழிந்திட-தூய மனம் ஒளிர்ந்திட
இறைவடிவே நாம்

மனிதன் இறைவனாவதே நிலைவாழ்வு, ஆண்டவனாக
ஆசைப்பட்ட ஆதாம் அறிவுக்கனியை உண்டு
இருமை அறிந்து பிளவுபட்டான், ஆணவ மனம்
அகநிர்வாணத்தை அறிந்திட நாணி ஓடி ஒளிந்தான்

தன்னுள் வீட்டை இழந்தவன் வாழ்வோ-நாளும்
பொய்மையும், போராட்டமுமானது-
ஆணவம் கழித்து தன்னுள் வீட்டை அடைந்த
இயேசு கிறஸ்துவான புதுப் பிறப்பு

பரிபூரண சரணாகதியில், ஆணவம் கழித்து அக்களித்த
தூய மனம்-தம்மை வதைப்போரையும் மன்னித்த
கருணாகரன், சிலுவையில் கிறிஸ்துவாய் மலர்ந்தே
ஏதேனை தம்முள் அடைந்த ஆனந்த சிவமோ இறைமகன்

உண்மையை வாழ்வாக்கி வாழ்ந்த பேரன்பு
இருமையின் “நானை” ஒன்றாக்கி
பரிபூரண சரணாகதியில்-சிலுவையில்
ஒருமையில் இறைவனாய் நின்ற இறையன்பு

வாழ்க்கை வட்டம் பூர்த்தியானது, வழியும், உண்மையும்,
வாழ்வுமாய், இயேசுவின் அகமாற்றம் பூரணமானது

இருள் என்று ஏதுமில்லை, ஒளியின் அளவு மாற்றங்களே
ஓசையின் இழிந்த பெறுமானமே மௌனம்
**இருப்பதெல்லாம் கடவுள் மனிதன் –அல்லது**
**மனிதக்கடவுள் என்ற ஏகம்தான்**




வாழ்வு உள்முகச் சேகரிப்பு
மரணம், வெளிமுகச் சிதறடிப்பு.
அன்பினால் துன்புறும் வரை
நாம் உண்மை அன்பை அறியோம்.

உள்ளம் பெரும் கோயிலாக-
உள்ளத்தில் உண்மையைக் காணதவர்
உலகில் இறைவனைக் காண்பாரோ?

அன்பினால் இதயம் நிறைந்திட, இறைதன்மை
பொங்கித் ததும்பிட, எங்கும் இருப்பது "அதுவே" உணர்ந்திட
எல்லா உயிர்களையும் தன்னுயிர்போல் அன்பு செய்து இன்புற
அஹம் பிரமஸ்மி என்றே, ஆனந்த கூத்தாடும் தூய மனம்
தூயமனதிற்கே சத்திய தரிசனம்.

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்**

Pax Ravichandra-16-10-2023

# ஓம்-பிரபஞ்சப் பேரொலியே

-----------------------------------



பிரபஞ்சப் பேரொலியே-ஓம் எனும் பிரணவ மந்திரமே-
மெய்ப்பொருளே, மானுடர்காய் உன்னை நீ வெறுமையாக்கி
ஏழை மனுவுருவானவாய், விழிப்புணர்வை வரமாக்கிச்
சிலுவையில் உண்மைக்குச் சாட்சியமானாய்

ஓங்காரநாதமாய், இறை வார்த்தையாய்
அன்பின் பேரதிர்வாய் அதிர்பவனே
உன் அதிர்வால்-பரிணமித்த படைப்பு
பரிணாமத்தில் உன் இருப்பின் எழிலானது




குருடு, செவிடாய் வாழ்ந்த மானுடம்
நிலை வாழ்வின் பொருளைப் புரிந்துணர
"ஞானக் கண்ணும்", "புதிய கேள்வியும்"
கொடுத்த தயாபரன் நீ

உயிரளிக்கும் உன் மொழி கேட்டு,
அழியும் நீரும்-அழியாத திராட்சை மதுவானது
மடிந்த இலாசரையும் புது வாழ்விற்கு
கல்லறையினின்று அழைத்து வந்தது

உன் 'இருப்பே" ஒரு "சத்சங்கம்"
பசித்த ஆன்மாக்களுக்கு உன் வார்த்தை உணவாக
நீயோ வாழ்வளிக்கும் அட்சய பாத்திரம்

வருந்திச் சுமை சுமப்பவருக்கு
உன் நுகமோ இனிதும், எளிதுமானது
நோயுற்றவருக்கு உன் ஆடையும், வார்த்தையும்,
தொடுகையும், சஞ்சீவினியுமானது

விழிப்புணர்வெனும் ஞானதீபத்தை-மானுட
மனங்களில் ஏற்றி வைத்த தேவதீபன் நீ
ஏழைகளின் கண்ணீர் துடைத்த
அம்மையப்பனும் நீ

மலைப்பொழிவும்-பாதம் கழுவிய படிப்பினையும்,
மரிக்கும் வேளையில் வாதைப்போருக்காய்
மன்னிப்பை வேண்டிய மாகருணையும்
மானுடம் அறியாத அன்பின் கீதை



உலகின் ‘ஒளி’’ நீங்கள்-உலகின் ‘‘உப்பு’’ நீங்கள்
நீங்களும் ‘‘தெய்வங்களே’’-நீங்களும் ‘‘இறைமக்களே’’
நம்மை நாம் அறிந்திட-நம் உண்மை இயல்பில் வாழ்ந்திட
சங்காய் முழங்கி, முரசாய் அதிர்ந்த உன் நற்செய்தி

நிலைவாழ்வை மானுடம் சுவீகரிக்க, வழியும்,-உண்மையும்,
வாழ்வுமாய் மலர்ந்தவனே உன் ஒளியால், இருண்ட
எம் உலகு ஒளிர்ந்திட உன் வார்த்தையால் புது வாழ்வு
மலர்ந்திட, மானுட மறுமலர்ச்சியின் ஞானஜோதி நீ

இறைவன் நம் தந்தை -நான் உங்கள் சகோதரன்
மெய்யறிவு புகட்டிய மெய்பொருளே-குருவே
‘‘உன்னையே உண்டு குடித்து-உன் மயமாகிட’’
‘‘இறை வார்த்தையை’’‘‘திரு விருந்தாக்கிய’’ ‘‘அருவிருந்தே’’

மானுடம் கண்ட மாபெரும் அழகு
உன் ‘‘***மைத்திரேய வடிவம்***’’
விலைமகளுக்கும் தீர்ப்பிடாத கருணாநிதி-
கள்வனுக்கும்- சுத்த சைதன்யத்தை அருளிய தயாநிதி

அழுகையும், ஆனந்தக் களிப்பும் உன்னில் கலந்த உணர்வாக
காட்டு மலர்களின் அழகை இரசித்துப் புகழ்ந்த கவிஞன் நீ
குழந்தைகளைத் துாக்கிக் கொஞ்சி மகிழ்ந்து ஆசீர் வழங்கிய
அம்மையப்பன் நீ-மறுபடியும் மானுடத்தை
குழந்தைகளாகும்படி அழைத்த தேவராஜனும் நீ

பிறந்திட குடிலுமின்றி-ஆடிடத் தொட்டிலுமின்றி, அடங்கிட
சொந்தக் கல்லறையுமின்றி, நாடோடிப் போதகனாய்
நற்செய்தி சொன்ன ஏழ்மையின் அவதாரம் நீ

நல்லாயனாய் தொலைந்த ஆடுகளைத் தேடி நடந்து தேய்ந்த
திருப்பாதங்களுக்கும், விரித்த கரங்களோடு பாவிகளை
அரவணைத்த கைகளுக்கும்- மதவாதம் அளித்த பரிசு
கூராணிகளும், கொடுஞ் சிலுவை மரணமும்

கருணை வடிவான உனக்கோ, கசை, வசை, சிலுவை
அன்பைப் பொழிந்த அதரங்களுக்கோ புளித்த காடி
மானுடம் ‘‘நிலை வாழ்வை’’ மறுதலித்த சிறுமை,
ஆணவத்தின் மாறாத அலங்கோல நிலைமை

கசை கிழித்த மேனியில் குருதி கொப்பளிக்க
ஆணிகள் துளைத்த அங்கங்களை கொடிய வலி சீரழிக்க
வசை பொழிந்து வதைப்போருக்காய்-சிலுவையில்
கருணை இசைபாடிய பூங்குயில் நீ



தரணியை மீட்க- உம்மையே தந்தைக்கு காணிக்கையாக்கிய
தேவசெம்மறி நீ, நித்தியம், காலத்தை சந்தித்த அடையாளமாய்
மாயை, பிரம்மத்தை சந்தித்த மகிமையாய்ச் சிலுவையில் நீ

ஞான புத்தனுக்கு போதி மரமும்-நவநீத கிருஷ்ணனுக்கு
புல்லாங்குழலும் கொடுத்த பூமி, அமைதியை ஈந்து
மகிழ்ந்த உனக்கு-முள்ளால் மகுடமிட்டு, கசையும்,
கழுமரம் ஈந்த கொடுமைதான் என்னே?

நரிகளுக்கு வளைகளும், ஆகாயத்துப் பறவைகளுக்கு
கூடுகளுமிருக்க, தலைசாய்க்க இடமின்றி
அலைந்த நாடோடி-இறந்தும்
இரவல் கல்லறையில் அடங்கிய மெய்ஞானி

அன்பும், விழிப்புணர்வும் உன் அழைப்பாயிருக்க
கிறிஸ்தவம் சாரமற்ற உப்பாய் மாறிட-சிறுவர் துஷ்பிரயோகம்
அனர்த்த சுனாமியாய் திருச்சபையை அச்சுறுத்திட-தொடர்ந்தும்
உன்னைக் காட்டிக்கொடுக்கும் கொடுமை

மெய்யுணர்வினுள் மீண்டும் மானுடம் பிறந்திட-விழிப்புணர்விற்கு
நீ விடுத்த அழைப்பு திருமுழுக்குச் சடங்கானது, உயிரளிக்கும்
இறை வார்த்தையை வாழ்வாக்கி வாழ, நீ விடுத்த அழைப்போ
நற்கருணை வழிபாடாய் சிதைந்து போனது




கபடமின்மையிலிருந்து, கபடமின்மைக்கான
புனித யாத்திரை, அறியப்படாமலே, தேடப்படாமலே
தொலைந்த துயரமானது

அடிமையின் விலை முப்பது வெள்ளி
அன்று திருச்சங்கம் உனக்கு நிர்ணயித்த விலை
கள்வர் குகையான திருச்சபைகளில்
இன்றும் உனக்கோ மலிவு விலை

வெற்றுச் சிலுவைகளை மலர் மாலையாய் சூடி
வெண்ணாடைக்குள் ஆயிரம் விரியன்கள்,
நற்செய்தியோடு நடமாடும் போதகர்களோ
ஆட்டுத்தோல் போர்த்திய ஓநாய்கள்

விரியன்களை மனம்மாற்றிட புரட்சியாளனாய் இன்றும்
ஒரு திருமுழுக்கு யோவான் வேண்டும் உள்ளம் பெருங்கோயில்,
ஊனுடம்பு ஆலயம் உண்மை வாழ்ந்திட -மானுட உள்ளங்கள்
உன்னால் குடமுழுக்குப் பெறவேண்டும்




உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்
பூவுலகில் நல்மனத்தவருக்கு அமைதியும் நிலவிட
மானுட இதயங்களில் **ஆணவமழிந்து**
***உள்ளுணர்வின் உன்தமாய் நீ பிறக்கவேண்டும்***

கள்வர் குகையான ஆலயம் அழுகைச்சுவராய் மாறிட
அன்று நீயிட்ட சாபம் நிலைத்த உண்மையானது
இன்று மழைக்கு முளைத்த காளான்களாய்-பல்லாயிரம்
பிரிவினைச் சபைகள் தோன்றிட யாரிட்ட சாபமிது?

நாங்களோ வலுவற்றவர்கள்-இறைமகனே
எம்மில்தான் உம் மறு வருகை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
*Pax Ravichandra-16-09-2023*

# ஓம் வார்த்தை

---

ஓ தேவமகனே!, ஓங்காரத்தின் அதிர்வே! ஒலி வடிவே!
ஆதியின் வார்த்தையே! இறையன்பே!
சட்டங்களும் , சடங்குகளும், பலிகளுமாய்
உருவழிந்த மதத்திற்கு, உன்னைப் பலியாக்கி
அன்பே கடவுள் என்று ஓங்கி ஒலித்தாய்



வாழ்வும், போதனையும் ஒன்றான உன் வாழ்வு
வதைப்போரையும் மன்னித்த கருணையாய் உன் மாட்சி,
நம்பிக்கை நலிந்த உலகில் -உன் வார்த்தை
வாழும் இறைவனுக்கோ மாறாத சாட்சி




சத்தியத்தை சிலுவையில் அறையும் தீராத மதவெறிகள்
உண்மையா அது என்ன?-பிலாத்துவாய் வினாவி
விடையாய் நீயிருந்தும், காணாத அந்தகனாய்
ஆணவத்தின் அலங்கோலங்கள்

ஏரோதியாளை மோகித்து, சலோமியில் சபலமுற்று
திருமுழுக்கு யோவானின் தலையை வெட்டும், ஏரோது-
ஏரோதியாள்களும் இங்கே-புதிய ஸ்தேவானாய்
எரியும் சிதையிலிருந்து கதறும் Rev.John Huss
ஆன்மீகப் புரட்சியாளராய் வண. மார்டின் லூதர்.

ஆன்மீகக் குருடர்களின் அதிகார வெறியால், சிலுவை யுத்தங்கள்,
மதப் பிரிவினைகள், ஆட்சி அதிகாரங்களுக்காய்- மாட்சியிழந்து
அலகையை வணங்கிடும் அருவெறுப்புகள்.நற்கருணையாய்
"இறைவார்த்தையை" உருமாற்றிய அலங்கோலங்கள்

அன்றும் சிலுவையில் நீர்-இன்றும் சிலுவையில் நீர்
யூதர்களுக்கும், உம் சீடர்களுக்கும், பாரோக்களுக்கும்,
பாப்புகளுக்கும் வேற்றுமையில்லை

திருச்சங்கத்திற்கும், திருச்சபைகளுக்கும்
ஒற்றுமைக்குப் பஞ்சமில்லை
உண்மையே பஞ்சமான அவலநிலை

ஆபிரிக்க அடிமைகளின் அழுகுரலை கேட்டும், இரங்காத வெள்ளை
கிறிஸ்தவப் பாரரோக்கள்-பெண்மைக்கு எதிரான கொடுமைகளுக்கும்,
இன, மத, நிற, மொழி வன்முறைகளுக்கு எதிராகக் குரல் கொடுக்காத
ஊமைகளாய், கல் எறியக் கை கொடுக்கும் திருச்சபைகள்.




காயின் சிந்திய ஆபேலின் இரத்தமாய் , ஹிட்லர் சிந்திய
அப்பாவி அறுபது இலட்சம் யூதர்களின் இரத்தம்
இயேசுவை கூவியழைக்க- அண்ணகனான உம் சீடர்கள்,
யூதரை வதைத்த வரலாற்றுக் கொடுமைகள்

இராக்கேலின் ஒப்பாரி வானை முட்ட
சிறுவர் துஷ்பிரயோகம் திருச்சபையை நாறடிக்க
பாதிரிகளின் கழுத்தில் தொங்கும் சிலுவைகள்
பரிகசித்து எள்ளி நகையாடும் எந்திரக் கற்களோ?

எரிக்கப்பட்ட நூல் நிலையங்களில் கொளுத்தப்பட்ட
உண்மைகள், இரக்கத்தை, மன்னிப்பை பரிகசித்தே
எரியும் சிதைகளில் தீய்ந்திட்ட உயிர்கள். கலிலியோ கலீலீ
புருணோவை வதைத்த ஆணவ அவலங்கள்

ஆடை தொட்டவளும் குணமாகிட, பாடையில் போனவனும்
எழுந்து பேசிட, கடலும் காற்றும் கேட்டு அமைதி கொள்ள
குருடனுக்குப் பார்வையும்,,செவிடனுக்கு கேள்வியும் கொடுத்து
பிணி தீர்த்து, பசி போக்கி-மானுடர்க்கு புது வாழ்வளித்த குரு நீ

அழியும் நீரையும் அழியாத இரசமாய் மாற்றிய
உம் “வார்த்தை” இன்று ஊமையானதா? என்ன?




யார் பெரியவன் எனும் ஓயாத விவாதம், முத்தமிட்டு காட்டி
கொடுக்கும் யூதாஸ், மறுதலிக்கும் சீமோன் -சந்தேகி தோமஸ்,
விழிப்புணர்வின்றி தூங்கி கிடக்கும் சீடர்கள்
ஆழமில்லாக் கடலில் வலை வீசும் மீனவர்கள்

முப்பது வெள்ளிக்கு விலைபோகும் உண்மை
இன்றும் யதார்தமாகிட-நிறுவனமான மதம்
பழம் புத்தகமான திருவிவிலயம்

விலைமகளிற்கும், பாவிகளுக்கும் ஒளியான இறை வார்த்தை,
விழிப்புணர்வின்றி, வெற்றுச்சடங்குகளில் மூழ்கி, தூங்கிவழியும்
கிறிஸ்தவர்களுக்கு சாரமற்ற உப்பான போதனை-
கிறிஸ்தவத்தில் பல்லாயிரம் பிரிவினைச் சபைகள்

உரசி நடக்கும் சீமோனும் உன்னைத் தொடாமல்
கும்பலோடு கும்பலான வேதனை
“இயேசு ஜீவிக்கிறார்” போதனை

ஆதாம், நீ எங்கேயிருக்கின்றாய்? இன்றும் வினவிடும் இறைவன்
அச்சத்தோடும், வெட்கத்தோடும் ஓடி ஒளியும் நிர்வாணி-
விழிப்புணர்வின்றி , மரித்தோர் தங்களில் மரித்தோரை அடக்கம் செய்திட
நடைபிணமாய் வாழும் கிறிஸ்தவர்களோ இன்றும் அக நிர்வாணி




இருப்பை அனுபூதியில் அறிந்திட
விழிப்புணர்வே அக ஒளி-வார்த்தை கடந்த,
வாழ்ந்தறியும் உண்மையே சத்தியம்




***அன்பே சிவமாக, வாழ்வே தவமாக வாழ்பவருக்கு***
***விழிப்புணர்வே அருள் வரம்***
வாழ்ந்தறியும் உண்மையை அனுபூதியில் அறிந்தவருக்கு
வாழ்வோ கொண்டாட்டம்-அஹம் பிரம்மம் அஸ்மி
நாமும் அதுவே எனும் சச்சிதானந்தம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
Pax Ravichandra-16-10-2023

# நம்பிக்கை- Zechariah-



முடி நரைத்து, நடை தளர்ந்து-முதுமை
பூத்துக் குலுங்கிட-வெறிச்சோடிக் கிடக்கும் இல்லம்
பெயர் சொல்ல ஒரு பிள்ளைக்காய் ஏங்கும்
தம்பதியர் மனங்களோ துயரத்தின் இல்லம்

இறை புகழ் பாடும் சான்றோன் நெஞ்சில்
பெயர் சொல்லப் பிள்ளை இல்லை
என்ற பெருஞ் சோகம்-இறைவா
அருள்வாய் என்ற தவமாய் இதயத்தாகம்

ஊர் பழிக்க, உற்றார் , உறவுகள் ஒதுக்க
குழியில் விழுந்த சிறுமான்போல் மனம் தவிக்க
எரிநரகாய் மாறிய வாழ்வு-பல்லாண்டு
மலடன், மலடி எனக் கூடி வாழும் உறவு

சிந்தையைத் தைக்கும் நெருஞ்சி முள்ளாய்
நிந்தையான மலடன், மலடி என்ற வசைமொழி
மணவாழ்வு மணமின்றிச் சோர-தவமான
வாழ்வில், சோகத்தின் ஓயாத எதிரொலி

ஆசைக்கு ஒரு மகன் என்ற வேண்டுதல்
ஆண்டவன் விரும்பாத விண்ணப்பமோ?-தவமான
வாழ்வும் வரமின்றிச் சாபமாய்ப் போனதோ?
அங்கலாய்க்கும் அண்ணலின் மனம்

ஊரார் மலடி என பழிக்க, உற்றார், உறவுகள் ஒதுக்க
தனிமையில் கண்ணீர் சிந்தித்து துடித்து
தாய்மைக்காய் ஏங்கித் தவிக்கும் பெண் மனம்
பாலையான வயிற்றைத் தடவி பரிதபிக்கும் குணம்

தூபம் காட்டிட குலுக்கிப் போட்ட திருவுளச்சீட்டு
குரு சகரியா பெயரில் விழுந்திட-
வாழ்நாளில் ஓர் நாளாய் வந்த வசந்தம்
வானவனைப் புகழ்ந்த மனதிலோ இனிய சுகந்தம்

உள்ளம் குமுற-கண்ணீர் பெருக்கெடுக்க
தூபம் காட்டிடத் தோன்றிய தூதர் கபிரியேல்
செவி மகிழ உரையோ மங்கலம் -விழி காண
தவமான வாழ்விற்கு சுபதரிசனம்

கலங்கிய மனம் கண்டு “அஞ்சாதீர்-ஆண்டவர்
உம் வேண்டுதலைக் கேட்டார்-உமக்கோர்
ஆண் மகனை உம் மனைவி ஈன்றெடுப்பார்
மதுவோ, கனிரசமோ அருந்தாத கடும் தவசி

தூய ஆவியின் துணையும், எலிஜாவின் மனப்பாங்கும் ஓங்கிட
இறைமக்களைத் தயார் செய்யும் ஞான உபதேசி
அகமகிழ்க, அவர் நாமம் "யோவான்" என்றார் மோட்சவாசி

நானோ முதுமையின் முழு வடிவம்
என் மனையாளோ கருத்தரிக்க முடியாத சாபம்
நம்புவதோ நிஜம் கடந்த சொப்பனம்?



வார்த்தையை நம்பிட வானவன் காட்சியே சாட்சி
கண்டும் நம்ப மறுத்த அறிவு மனம்-பல்லாண்டு
ஓதித் தொழுததும் சடங்கான கிளிப்பிள்ளை வேதம்
அறிவு கழித்த மனதிற்கே புரியும் இறை நாதம்

நம்பமறுத்தவரைக் கடிந்த தூதர்-இவை
நடக்கும் நாள் வரை-உம் நா பேச்சிழக்கும்
இதுவே அடையாளம் -இறைவனால்
கூடாதது ஏதுமில்லை

வானவன்மேல் விழி வைத்து-மொழிந்த
வார்த்தையின் மேல் அறிவை வைத்து-விதண்டா
வாதம் புரிந்து நம்ப மறுத்த மனம்- இறை வாக்கை
நம்பிட பேச்சிழந்து ஊமையான தினம்

அயராது ஜெபித்தும், அறிவைச் சுமந்து
மூப்பால் நம்பிக்கை நலிந்த மனம்,
தவம் வரமாகும்போது தர்க்கித்த குணம்



இறை ஈந்த தானம் தந்தைக்குப் பெருந்தனம்
தாய்மையோ பெண்மைக்கு கனம்-இருவருக்கும்
கனாகாபிஷேகமான ஆனந்தம்

தூது உரைத்த தூதரும் தூய மரிக்கு எலிசபெத்தின
தாய்மையைச் சான்றாய்க் கூறிட
வார்த்தையை ஏற்று வாழ்வை தவமாக்கிய மங்கை
தர்க்கம் கடந்த பெண்மை-இறையடிமை என்ற மேன்மை

அம்மையைக் கண்டு அன்னை வாழ்த்திட
ஆனந்தச் சங்கமமோ தேவ கடாட்சம்
நம்பிய மனம் துதிபாட-நம்ப மறுத்த
மனம் நாணி மகிழ்ந்திட எங்கும் ஆனந்தம்

என் ஆண்டவரின் தாய் என்னிடத்தில் வர
என்ன தவம் செய்தேன், உம் வாழ்த்தொலியால்
உதரத்தில் என் மகவும் துள்ளியதே
உத்தமியே, பெண்களில் பேறுடையவள் நீரே
அன்னை மகிழ்ந்திட அம்மையின் வாழ்த்து,

ஆறு மாதம் அம்மைக்குப் பணி புரிந்து
ஆனந்தி வீடு திரும்பிட மனதிலோ
தாய்மையின் ஆனந்தக் கூத்து

தந்தை முகம் கதிர் போல் ஒளிரப்-புதிதாய்
பூத்த பங்கயம் எனத் தாய் முகம் மலர
எத்தனை கோடி இன்பம் தந்தாய் எம் இறைவா
பக்திப் பரவசத்தோடு துதித்த முதிய பெற்றோர்

அம்மைக்கு அருந்தவப் புதல்வன் பிறந்திட
சுற்றமும், சொந்தமும் கூடி மகிழ்ந்து-பிள்ளைக்குப்
பெயர் சூட்டு விழாவெடுத்து-தந்தையின்
பெயரைத் தனயனுக்குப் பரிந்துரைத்தார்

தாய் மறுத்து யோவான் என்றுரைக்க
உம் உறவு முறையில் யாருக்கும் இப்பெயர் இல்லையே
தந்தையிடம் வினவிட-எழுது பலகையை வாங்கி
எழுதினார் தந்தை இவன் பெயர் யோவான்

நா கட்டவிழ- நன்றி பெருக்கெடுக்க
நாதன் தாள் போற்றித் துதித்த நாயகன்,
யாரோ இக் குழந்தை, இறை தூதரோ?
சுற்றமும், சொந்தமும் வியந்த பாலகன்

கன்னியின் வாழ்வில் கபிரியேலின் வாழ்த்து மங்களமாக
இறை அடிமை என்றே தன்னை வெறுமையாக்கி
சரணடைந்த தாயின் நம்பிக்கை ஏழ் கடலினும் ஆழம்
இறையருளால் பெற்றதோ இறைமகனுக்கு தாயாகும் வரம்.

குரு மரபின் வழி வந்த சகாரியவோ-
அறிவின் வழி நின்று-ஆண்டவன் மொழியில்
அவநம்பிக்கை கொண்டதால் பேச்சிழந்த சாபம்

அறிவு கடந்து இதயத்தின் மொழியில் -அன்பு இறைவன்
இன்றும் பேசுகின்றார், கிளிப்பிள்ளையாய் வேதம் அறிந்த குரு
வாதத்தில் நிலைத்து இறைவாக்கில் ஐயமுற்றதே தண்டனை

அன்பில் நிலைத்து இறை அடிமை நான் என்று
ஆணவம் கழித்த தூய கன்னியோ-இறை மகனுக்குத்
தாயாகும் பேறு பெற்றதோ உன்னத மகிமை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
Pax Ravichandra-16-10-2023



மானுடரோடு சொந்தம் கொண்டாடத் தாயாய்-இறைவன்
தெரிந்த மகத்தான அன்புறவு, மாதாவை உலகிற்குத்
தாயாக்கி- மனுக்குலத்தை உறவாக்கி-மகிழ்ந்த
மகனோ இறைமகனான பேரழகு

இறைமகனுக்குத் தாயான அழகை வானவரும்
வாழ்த்திப் போற்ற, ஞானிகளும் வணங்கித் துதிக்க
இறைவன் தெரிந்த மங்கை
இறைமகன் உலகிற்கு ஈந்த அம்மை

தஞ்சம் என வந்தவருக்கு அடைகல மாதா
நலம் நாடுவோருக்கு ஆரோக்கிய மாதா
தேவ சகாயம் தேடுவோருக்கு சதா சகாயமாதா
வாழ்வை நைவேத்திமாய் ஈந்த காணிக்கை மாதா

பூ முகமோ அருள் பொழிய
தேனிதழோ புன்னகை புரிய -வான்
அமுதோ திருக்கரம் அமர -வையகமோ
தாள்பணியத் தாயவள் தோற்றம்

அழகில் பூத்த முழுநிலவு, அருளில் தாய்மையின் பேரழகு
தன்னை ஈந்த ஈகையோ அழகிலும் அழகு
வாழ்வைத் தவமாக்கி-வார்த்தைக்குத் தாயான
அழகோ பெண்மைக்கே பேரழகு

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்**
Pax Ravichandra-16-10-2023

# மங்களவாழ்த்து





திங்களில் முகமெடுத்து-பவளச் செவ்வாயில்
முத்துப் புன்னகையைத் தொடுத்து
மங்களம் எல்லாம் மங்கையில் பூத்தாட
நங்கையோ அழகு நடமாடும் கலைக்கூடம்

அங்கமெல்லாம் பசும் தங்கமாய் மின்னிட
அழகோ, வண்ண மலர்களாய்ப் பூத்தாட
பூவிழிகளோ குவளை-கூப்பிய கைகளோ
இறைதுதி பாடும் பொன்காந்தல்

பங்கயமோ மங்கை முகம், பரிமளமோ பூமேனி மணம்
அங்கலட்சணங்களில் தேவதை-செவ்வாயில்
அன்பு பூத்தாடும் முத்துப் புன்னகை

அழகு கண்டு மலர்கள் கூத்தாடும்
கார் கூந்தல் சூட வரம் வேண்டும்
நிலவும் மதி வதனம் கண்டு மகிழும்-கூடி
உலாவிட மண் வர ஏங்கும்



பெற்றோரைத் தொழுது பெரியோரைப் போற்றி
கற்றாரைக் காமுறும் புத்தழகு-நாளும்
இறைவனைத் தொழுது பேரின்பம் காணும்
கன்னியோ பெண்மைக்குப் பேரழகு

புள்ளினம் கூவியழைக்க-பூவினம் பூத்தே
காலைத் தென்றலுக்கு மணம் சேர்க்க
குவளை விழிகள் பூத்து மகிழ குதூகலமாய் நீராடி
மாதவனைத் தொழுதிட மங்களம் சொன்ன தூதன்

அருள் நிறை மரியே வாழி ! ஆண்டவர் உம்முடனே-
பெண்களுள் பேறுடையவள் நீரே
உம் உதரத்தின் கனியும் இறை மகனே

தெய்வமே துணை அசையாத நம்பிக்கையாக
வாழ்வோ நீ தந்த கொடை மாறாத துதியாக-வானவன்
மங்களமோ புதிராக-இறைவா உன் அடிமை நான்
நலம் தருவாய் மனதில் எண்ணி மயங்கிய நங்கை

அருள் மரியே அஞ்சாதீர், இறை அருளோ என்றும்
உம்மோடு, கருத்தாங்கி ஒரு மகனைப் பெறுவீர்
இயேசு எனப் பெயரிடுவீர்



அவரோ பெரியவர், உன்னதரின் மகன்
தாவீதின் அரியணை அமர்ந்து
யாக்கோபின் குடும்பத்தை ஆள்வார்
அவர் ஆட்சிக்கோ முடிவிராது

கன்னி நானோ மண ஒப்பந்தமான மங்கை
கணவனை அறியாத நங்கை-எவ்வாறு
உம் வார்த்தை நிறைவேறும்?

தூயவர் ஆவி உம் மேல் வரும்-உன்னதர்
வல்லமை உம்மீது நிழலிடும்-உம் குழந்தையோ
தூயவர்- இறைமகன் எனப்படுவார்

ஊரார் மலடி எனப் பழித்த உறவினள் எலிசபெத்
தாயாகி,இன்றோ ஆறு மாதம்-முதுமையில்
கருவுற இயலாதவர் கருவுற்றது இறை கருணை
வல்ல இறைவனால் கூடாத புதுமை ஏதுமில்லை

இதோ ஆண்டவரின அடிமை
உம் வார்த்தையின்படி எனக்கு ஆகட்டும்
சம்பூரணனைச் சரணடைந்த மங்கை
தாய்மையின் திருக்கோலம் பூண்ட பெண்மை



சொந்தம் சொல்ல இறைவன் தேர்ந்த நங்கை
இறையடிமை நான் என்றே-தன்னை இறை
காணிக்கியாக்கி, அன்பு வேள்வி யாத்த மங்கை

வானவன் கபிரியேலால் அருள் மரியே
என வாழ்த்தப் பெற்றேன், வானவன் தாய் என
உறவினள் எலிஸபெத்தால் போற்றப் பட்டேன்

இதயம் உம்மை ஏற்றிப்போற்ற-இறை மாட்சி பெரிது,
உன் கருணையோ மிகப் பெரிது, உன் மகனுக்குத்
தாயாக- அடிமை செய்த தவமேது? நூற்காத வேள்விக்கும்
புரியாத தவத்திற்கும்-பெருமானே நீ தந்த வரம் பெரிது

உள்ளம் குளிர உத்தமரை இதயம் ஏற்றிப் போற்ற
வெள்ளமென ஆனந்தக் கண்ணீர் விழிகளில் ததும்ப
பொன் மேனி சிலிர்க்க, வானுறையும் தேவனை
தெண்டனிட்டு வணங்கி இன்புற்ற கோதை

என் ஆன்மா என் ஆண்டவரை ஏற்றிப் போற்றுகின்றது
என் மீட்பராம் கடவுளை நினைத்து என் இதயம் களிகூருகின்றது
தாழ்நிலை நின்ற தம் அடிமையை கடைக்கண் நோக்கினார்-இது முதல்
எல்லாத் தலைமுறைகளும் என்னைப் பேறுடையாள் எனப் போற்றுமே

வல்லவர் எனக்குத் தந்த வரம் பெரிது, தூயவர் என்பதே
அவர் திரு நாமம், எந்நாளும் போற்றித் துதிப்பதே
அடியவள் நூற்கும் அன்புத் தவம்

இறைமகனுக்குத் தாய் -எண்ணிட இதயம்
வண்ணப் பறவைபோல் இறகு விரித்து வானில் பறந்தது
செவ்வாயில் இறை துதி கவிதையாய் தவழ்ந்தது

கண்களில் ஆனந்தக் கண்ணீர் அரும்ப
கானக்குயிலாய் நெஞ்சம் இசைபாடித் துதிக்க
கலாபமயிலாய் இதயம் ஆடிக்களித்திட
இரு கரம் கூப்பி வானவனைத் பூ மனம் தொழுதது

இறைமகனுக்குத் தாயாக வரம் பெற்ற மங்கை
மானிடர்க்குத் தேவதாயாய் மகன் ஈந்த அம்மை
தொழுவம் முதல் கல்லறை வரை-மகனோடு
சுக துக்கம் பகிர்ந்த தாய்மை

ஈன்ற மகவை மடியில் வைத்துப் பூரித்த அன்னை-ஈனர்
கொன்ற மகனை மடியில் வைத்துக் கண்ணீர் சிந்தியழுத தாய்மை
மடியும் வரை இறையடிமை என்று வாழ்ந்த அம்மை
எல்லாப் புகழும் இறைவனுக்கே என்ற வாழ்வோ மேன்மை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra-16-10-2023*

# சூசையின் காதல் மனம்



வாசமுல்லையோ?, அடுக்கு மல்லிகையோ? வான் நிலவோ?
தேன் மலரோ? நீலக்கடலின் நித்திலமோ? செம்பவளமோ?
பொன்மேனி வாசம் சந்தனமோ? பெண்ணாய் உருவெடுத்து
பூமியில் நடமாடும் பொற்சித்திரமோ? கன்னி மரி

கார்குழலோ பூவனம், கருவிழிகளோ கயலினம்
செவ்விதழ்களோ கொவ்வையினம், இடையோ
நூலினம்-மொழியோ கிளியினம், நடையில் மோகனம்-
தாமரை நெஞ்சமோ இறையன்பின் இருப்பிடம்



கனிமொழியிலே இனிக்கும் தேனினம் பாடித் தொழும்
நெஞ்சிலோ தேவகானம், பூவிழிகள், பொன்னிதழ்கள்
எளிமையின் அழகில் இறையியல்கள்

இருப்பதை பகிர்ந்து ஏழைகள்
துயர் துடைப்பதில் தாய்மையின் நிலைகள்
கன்னியவள் நெஞ்சில் கருணையின் அலைகள்

மதுமலர்க் கூந்தல்-கரங்களோ காந்தள், பாதங்களோ
செம்பங்கயம்-மதிவதனி முகம் பார்த்த மனதிலோ
பூபாளம், முறுவல் பூத்த கணத்திலோ –கண்ணாளன்
இதயத்தில் காதலின் இசைவெள்ளம்

இறைதொழும் அழகு, இறைவனுக்கே அர்ப்பணமான
வாழ்வு, பெற்றோர், பெரியோர் ஆசியுடன்
சூசையோடு மண ஒப்பந்தமான நிகழ்வு

மனமோ இறை வணக்கத்தில் ஒளிர , மரவேலையில்
கைவண்ணம் மிளிர, கலை படைக்கும் சூசை உள்ளம்
கன்னியைக் கைபிடிக்கும் மணவாழ்வை
எண்ணிக் களிக்கும் காளையின் இதயம்

கருவுற்ற சேதி கன்னி இயம்ப, உருவழிந்த சித்திரமாய் மனம் வெதும்ப
நிறைகுடமும் தளும்பிட -கன்னியின் “நிறை” கேள்வியானது
அனல் மழையில் நீராடி அங்கம் வெந்து புண்ணாக, கானல் நீரானதோ காதல்,
நெஞ்சிலோ ஓயாத கவலைப் புயல், நினைவிலே அலைமோதும் சோகக் கடல்

மங்களமாய்க் கூடி வாழமுன்
அமங்களமாய்க் கன்னி கருவுற்ற சேதி
திங்களையும் இருள் கவ்வியது என்ன நியதி
நெஞ்சிலே இடி தாங்கிய சோதி



கன்னி கருவுற்ற சேதி இடியாய்த் தாக்கிட,
கல் எறிந்து கொல்வார் திருச்சட்ட நீதி
கனி நெஞ்சைப் பிளந்திட-களவாய் விலக்கிடல்
கன்னியை காத்திட நல்வழி, அதுவே நம் வழி

துடித்த காதல் நெஞ்சம்-மனத் துயரோடு போராடி
கண்ணீரோடு மன்றாடிக் அயர்வால் உறங்கிட -கனவில்
தோன்றி -கபிரியேல் தூதர் உரைத்த அருள்மொழி

கலங்காதீர், மரியாளோ மாசற்ற கன்னி -இறைமொழியே
மனுவுருவான மாதா உதரத்தின் கனி, வார்த்தை மனுவுருவாகி
மங்கை உதரத்தில் மீட்பராய் வருவதோ இறை வழி-
அகமகிழ்ந்து அன்னையைத் துணைவியாய் ஏற்பது உம் பணி

அண்ணலே நீரே அன்னைக்கு அருந்துணை
அன்னையை ஏற்று இறை சித்தம் நிறைவேற்றும்
***இறைதந்தை விடுவிப்பார் எனப் பொருள்பட***
***மகவுக்கு இயேசு-இரட்சகன் எனப்பெயரிடும்.***

கன்னியையும், மகனையும் காப்பது
கடவுள் உம்மிடம் ஒப்படைத்த திருப்பணி
உத்தமர் உம்மை இறைவன் தேர்ந்ததோ இறை வெகுமதி
நீதிமான் உம் வாழ்வோ இனி என்றும் இறைபணி

கணையாய் நெஞ்சை வாட்டிய சஞ்சலம்
கணப்பொழுதில் மறைந்திட-மணவாழ்வில்
பொங்கும் மங்களம் செழித்திட-சூசையின்
கனவில் மங்களம் சொல்லிய தூதர்

காரிருளாய் நெஞ்சை நிறைத்த சஞ்சலம் வானவர் வார்த்தையால்
மறைந்திட புது உதயம், தந்தையானவர் நெஞ்சிலோ பேரானந்தம்
வாழ்வோ வண்ணமும், வாசமும் நிறைந்த புதுக்கதம்பம்

மங்கல நாள் வர, செங்குமுத மங்கையை , தங்க மகன்
கைப்பிடிக்க-மதிநுதலிலோ குங்குமக் கோலம்,
கார்குழலில் மலர்க்கோலம் மணமக்கள் உள்ளத்திலோ
மாறாத, மறையாத ஆனந்தக் கோலாகலம்

மணநாள் வந்திட-மங்களம் முழங்கிட, சுற்றமும், சொந்தமும்
கூடி வந்து வாழ்த்திட, மகிழ்வோடு கன்னியின் கைத்தலம் பற்றி
மணமகனான சூசையின் மங்கலக்கோலம்

மணவாழ்வின் மங்கள விளக்கேற்ற மங்கலையாய் மாறிய
மங்கை , பொங்கும் மங்களம் வாழ்வில் நிலைக்க
குங்குமம் சூடி மணமகளான மங்கள நங்கை

அன்னைக்குத் துணைவனாகி , இறை மைந்தனுக்குத்
தந்தையாகி, வாழ்வைத் தியாகமாக்கிய தீபம்
“திருக்குடும்பமோ” மணம் வீசும் நறுந்தூபம்

தவமாய்த் தவமிருந்தவருக்கு-அப்பா எனும் மழலை மொழி
அமுதாய்ச் செவியில் பாய, மனம் குளிர, ஆனந்தராகத்தில்
மனம் இசைபாட, அன்னையையும் மகனையும் அரவணைத்த தந்தை
வாழ்வை இறை வேள்வியாய் நூற்ற பெருந்தகை



வேதம் கொள்ளாத முதல்வனை, நாதம் கடந்த நாததீதத்தை-
நாத பிரம்மத்தை பலி கடந்த இரக்கத்தை, பாரினில் அன்பு
புரட்சி செய்ய வந்த மீட்பனை, கன்னியும் உதரத்தில்
கொண்டாள், தேவதாய் எனப் போற்றப் பேறுபெற்றாள்

வழியும், உண்மையும், வாழ்வுமானவருக்குத்
தந்தை உறவு பூண்டார்-இல்லறம் நல்லறமாக
அன்னைக்குத் துணைவனாய் இன்பம் கண்டார்

தந்தையாம் இறைவனைப் போற்றி
வாழ்நாள் எல்லாம் தாயும், சேயும் நலம் வாழ
வாழ்வை வேள்வியாக்கி-தன்னை ஆகுதியாக்கி
அன்புத் தவம்புரிந்த பெருந்தகை சூசை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra-16-10-2023*

# கன்னி மனம்-Mary

வானவன் கபிரியேல் வாழ்த்து மலைத் தேனாய்
செவி வழிபாய-மான்போல் துள்ளிய மனம்
தோகை மயிலாய் ஆடி, உதரத்தை தொட்டுத் தடவி
வானமுதை சுவைத்த பேரின்ப தினம்



பூ மகள் நெஞ்சுக்குள் பூ மழை பொழிய
கானம் பாடும் வானம் பாடிபோல் கன்னி மனம்
கடவுளுக்கே அடிமை என்ற தேவ குணம்

என் அண்டவரின் தாய் என்னிடம் வர
என்ன தவம் யான் செய்தேன்?-மரியே
உம் வாழ்த்தொலி கேட்டு-வயிற்றில்
என் குழந்தை மகிழ்வால் துள்ளியதே!



பெண்களுள் பேறுடையவள் நீரே
உம் வயிற்றின் கனியும் இறைமகனாமே
வாழ்த்தி மகிழ்ந்து வாரியணைத்து
பூரித்த அம்மை எலிசபெத்

வாழ்த்தால் பூரித்த அன்னை மனம்
வாஞ்சையோடு அம்மைக்குத் தன்னைச் சேவகியாக்கி
ஆறு மாதம் தொண்டு புரிந்த தெய்வீக இனம்

நீரோடை கண்ட மானாய் இதயம் துள்ள
பார் போற்றும் பெண்ணாய்க் கன்னியும் மாற
என்னுள் குடிவந்தவர் இறைமகன் -எண்ணமே
பேரின்பமாக நெஞ்சுக்குள் ஓயாத பூமழை

கதிர் பட்டு கண்விழித்த மலர், மழைத் துளிபட்டு
கருத்தரித்த முத்துச்சிப்பி, தாயாய் உருத்தரித்து தவமிருக்க
சேயாய் உதரத்தில் வானவன் செல்வம்
வானவன் தாய் என்ற மனதிலோ பேரின்பம்

வானவன் வேள்விக்கு ஆகுதியாகித் தாயான கன்னி
வார்த்தையைத் தியானமாக்கி-இன்பத்திலும், துன்பத்திலும்
இறைமகனோடு நின்ற தாய்மை, என் சித்தமன்று நின்
சித்தமென்ற பெண்மை, என் அம்மை, தேவ அன்னை

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்**

Pax Ravichandra-16-10-2023

# மரியாளும் எலிஸபெத்தும்

---

வானவன் நற்செய்தியால், வண்ணத் தாமரைபோல் மலர்ந்த
வனிதையின் நெஞ்சம், தூய, தவறான உடலுறவு கொள்ளாத
மலடி பேறுபெற்றவர், கடவுள் மனிதரைச் சந்திக்க
வரும்போது, அப்பெண் கனிதருவார் நிஜமானது

(சாலமோனின் ஞானம்:3-13)

கருவுற்றார் எலிஸபெத் வாழ்த்தோடு வாழ்த்தான
வானவர் சேதி கன்னித் தாய்க்குப் பேரானந்தமானது
மகிழ்ந்து இறை துதிபாடிய நெஞ்சம், உறவான தாய்மைக்கு
உன்னத பணி புரிய, ஊர் விட்டு, ஊர் போன அஞ்சுகம்



கருவுறாத பெண்மை பெருநிந்தையாக
கணவனுக்கோ மாறாத துன்பமாக,
சமூகம் போற்ற இன்றோ நிலைமை சுமூகமாக
இறை கருணைதான் என்னே?

தாயைத் தேடி வந்து வாழ்த்திய தாய்மை
தனிமரமாய் நிற்கும் பெண்மைக்கு, தன்னை
பணிப்பெண்ணாக்கிய மேன்மை
தூய மனமான உண்மை இறை அம்மை



கண்டதும் உள்ளம் உவகையால் பொங்கிட, உதரத்தில் இருந்த
மகனும் துள்ளி ஆனந்தம் சொல்லிட, என் ஆண்டவருடைய தாய்
என்னிடத்தில் வருவதெப்படி ? உம் வாழ்தொலி கேட்டு வயிற்றிலிருந்த
மகனும் துள்ளினாரே பெண்களுள் மரியே நீர் பேறுபெற்றவர்



அன்னையும் மகிழ்ந்து மரியை வாழ்த்தி, அரவணைத்து
அன்பைச் சொல்லி மகிழத், தாய்மைக்குத் தன்னை மகளாக்கி-
தாய் மரியாள் பணிபுரிந்த அன்புதான் என்னே!

ஆறு மாதங்கள் அன்னைக்குப் பணிபுரிந்த அம்மை
பேறுகாலம் நெருங்கிட-தன் வீடு வந்த தாய்மை
இறை தேர்ந்த பெண்மை, எளிமையின் மேன்மை
என்றும் தூயமனதில் இறையடிமை என்ற இனிமை

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-16-10-2023

# யோவானின் பிறப்பு

---

அன்னை எலிஸபெத் அழகிய ஆண் மகவைப் பெற்றெடுக்க
சொந்த பந்தமும் சுற்றமும் கூடி மகிழ்ந்து
கொண்டாடி விழாவெடுக்க-தந்தை நெஞ்சிலே இறை துதி
தாய் மனதிலோ குறை நீங்கிய ஆனந்த நிம்மதி





நின் கருணைதான் என்னே என் இறைவா?
எளியவன் நிந்தை நீக்க- எனக்கோர்
குழந்தை தந்தாய்-உம் திருமகன் பாதையை
சீராக்கும் பணியும் கொடுத்தாய்

உள்ளம் நெகிழ்ந்து ஆனந்தக் கண்ணீர் துமிக்க
புதுவெள்ளமென நன்றி பெருக்கெடுக்க
எல்லாம் மாயை என்ற சோகம் மறைந்திட
காயமான மனங்களிலோ களிப்பின் புது உதயம்

சொந்த பந்தம் மகிழ்ந்தே -தந்தையின்
பெயரைத் தனயனுக்கும் சூட்ட முனைந்திட
தாயோ மறுத்து தனயன் பெயரோ
யோவான் என்றுரைக்க வியந்த உறவுகள்

உம் உறவில் யாருக்கும் இப்பெயர் இல்லை, தந்தையே உம் வாய்
மொழிதான் என்ன? எழுத்துப் பலகையை வாங்கிய தந்தை
எழுதினார் இவன் பெயர் யோவான்-அக்கணமே வாய் கட்டவிழ,
நா இறைபுகழ் பாடிட வியந்த சொந்தம், பந்தம், சுற்றம்.



இறை கரமோ குழந்தையோடிருக்க, இறைமகனுக்கு,
மகனே நீ முன்னோடி, அவர் வரும் பாதையை செப்பனிடல்
உன் திருப்பணி, இறை தூதர் சொன்ன வாக்கு நிஜமாக-
இறைவனைத் துதித்து அக்களித்த அருட் பணி

நிந்தை நீங்கி நெஞ்சம் மகிழ்ந்திட -பிள்ளைச்
செல்வமோ இறை தந்த பெருநிதி-நாளும்
இறை துதி பாடி நன்றி சொல்லும் பெற்றோர்
சிந்தையிலே ஆனந்தப் பேரமைதி

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-16-10-2023

# ஆனந்த பைரவி

---

இல்லை, இடமில்லை எனச் சத்திரங்கள் கதவடைக்க,
இல்லை, இடமில்லை எனப் பெத்லேகம் ஊராரும் கைவிரிக்க,
செல்லும் வழியும், சொல்லும் மொழியும் அறியாது,
நெஞ்சில் பூத்த முல்லைவனமே நெருஞ்சிக் காடாய் வருத்திட,
அஞ்சிக் கலங்கிய அன்புத் தந்தை சூசை





தழுவிடும் தென்றலில் தாயின் முக்காடு விலகிட
முழுமதியாய் அழகு முகமும் தோன்றி மறைந்திட
இறை மகனுக்கு தாயான அபூர்வ ராகம் -என்றும்
இறை அடிமை என்று மனம் பாடும் ஆனந்த ராகம்

மாதமோ மார்கழி தேவமங்கையோ-நிறை மாதக் கர்ப்பிணி-
மனமிசைக்கும் நாதமோ ஆண்டவரின் அடிமையெனும் இசைமொழி
அன்னை மரியோ இறையன்பின் அழகுமொழி

கார்மேகம் சூழ்ந்த வானாய்-கவலை கணவரின் அழகு
வதனத்தைச் சூழ்ந்திருக்க, களை சூடிய கோதுமை
வயலாய்-வேதனை, கணவன் மனதை வாட்டி நிற்க-கண்ட
அன்னை மனம் தந்தையை வேண்டியது

நிறை மாதக் கர்ப்பிணிக்கு ஓர் இடமில்லை, நிழல் தர, தருவோ,
சோலையோ இல்லை, ஈரமில்லா இதயங்களோ பாலையான
சோதனை, ஈரவிழிகளில் கங்கை பொங்கிட-இறைவனை
வேண்டிய தந்தை மனதிலே தாளாத வேதனை

நடந்த களைப்பைத் தளர்ந்த கால்கள் சொல்ல-இருந்த நம்பிக்கையை
நிறைந்து வழியும் சத்திரங்கள் கொல்ல, கடந்து வந்த சோதனையில்
கடவுள் அன்பைச் சுவைத்தவர், அன்பே சிவம் என அனுபூதியில்
அறிந்தவர், நின்னடி சரணம் என்ற இறையடியார்

ஈர விழிகள் பார்வையை மறைக்க, கதிரவன் மேற்கில் மறைய-
காரிருள் மெல்ல அவிழ, இறைவா, உன் மகன் பிறந்திட
ஓரிடம் காட்டு , ஒரு வழி காட்டு, நெஞ்சுருகி நின்ற இறைநேசர்

விண்ணவர் வணங்கும் இறைமகனோ?, மண்ணவர் காத்திருந்த
மெசியாவோ-எளியவள் மணி வயிற்றில் மகனாய்க்
குடி வந்தது, அன்புத் தவத்திற்கு ஆண்டவர் தரும்
இன்பப் பரிசோ எத்துனை பெரிது

எண்ணமோ தேனாய் இனித்திட,-இதயமோ  வண்ணப் புள்ளாய்
எழுந்து பறந்திட கனவுகளில் வண்ணங்கள் பூக்க
ஆனந்த பைரவி இதயத்தில் ஒலிக்க, புன்னகை பூத்த அன்னை



நரிகளுக்கு வளைகளும் -ஆகாயத்துப் பறவைகளுக்கு
கூடுகளுமிருக்க , எங்கும் எல்லாமுமாய் மறைந்து உறையும்
அந்தரியாமி பிறந்திட, ஒரிடம் தேடி பாசத்தந்தை அல்லாட-
உயரிடமாய் கொழுநன் காட்டினான் தொழுவத்தை

கல்மனங்கள் கதவடைக்க, நல்மனம் படைத்த மூதாட்டி
கர்ப்பிணியின் துயர் கண்டு, கனிமுகம் காட்டி, தொழுவத்திற்கு
வழி சொன்னார், தொழுத்தக்கவரைப் பெற்றெடுக்கத் துணை நின்று
அன்னை, தந்தையர் கவலையைத் துடைத்தாள் பெருமாட்டி

எளிய மனத்தவர்க்கு எல்லாம் இறை செயலாக
வல்லவரின் திருவுளத்திற்கு வணங்கித் தாள்பணிந்த உள்ளம்-
இல்லமாய் தொழுவத்தை மாற்றி இன்புற்ற அன்பு வெள்ளம்

அருள் கொண்டதோ அன்னை இதயம்,
இறை வார்த்தை குடிகொண்டதோ இளையவள் உதரம்
இறை மகன் திருவடியில் மிதியுண்டதோ ஆணவ நச்சரவம்
வார்த்தை மனுவுருவாக மீட்பைக் கண்டதோ மானுடம்

அம்மா என்றழைத்து பசுக்களும், பாசத்தோடு அன்னையை
வரவேற்றிட-கிடைகளும் கத்தியும், கனைத்தும் நல்வரவு
சொல்லிட, அகமகிழ்ந்த குணவதி-எல்லாம்
இறைசெயல் இன்புற்ற தந்தையோ தயாநிதி



ஆனந்த சௌந்தர்யத்தை அன்னை பெற்றெடுக்க, விண்ணும் மண்ணும்
வானவரோடு மகிழ்தே கொண்டாட, எளிய மனத்தவரும்,
ஞானியரும் ஒன்றாய் மகிழ்ந்திட, உன்னதங்களில் இறைவனுக்கு
மகிமையும்-உலகில் நல்மனத்தவருக்கு அமைதியும் உரித்தானதே

***அமைதியின் தேவனாய் அவர் அவதாரம்***
***அமைதியே அருளிடும் பெருவரம்-அறிந்தவருக்கு***
***அமைதியே ஆனந்த மோட்சம்***

உண்மையாய், ஓங்கார நாதமாய் தந்தையோடு ஒன்றானவருக்கு
இல்லமோ தொழுவமாக, எளிய உள்ளத்தவரோ பெற்றோராக,
விண்ணையும் மண்ணையும் இணைக்கும் வியப்புறு ஏணியாய் மாறிட
தன்னையே வெறுமையாக்கி அடிமையாய் உருமாறிய இறைமைந்தன்

இறை அடிமை எனும் தேவ மங்கை
இறை மகனை ஈன்றெடுத்த தூய கங்கை
திங்களும், செவ்வாயும் ஒன்றிணைந்த
திருக்கோலமான தாய்மை



மைந்தனும், மங்களநாயகியும் இணைந்திருந்த திருக்கோலம்
கண்ட கண்களிலோ ஆனந்தக் கண்ணீர்க் கோலம்
நெஞ்சிலே நன்றிக்கோலம் -தாயை அணைத்து, குழந்தையை
கொஞ்சிய மனதிலோ தந்தையின் அன்புக்கோலம்

தீவனத் தொட்டிலில் தேவமகனின் திருக்கோலம்
ஜீவனை ஈந்து நிலை வாழ்வளிக்கும் மன்னாவான
இறைவார்த்தையின் அருட்கோலம்-இடையரும்,
கிடைகளும் சுற்றமும் சொந்தமுமான பாசக்கோலம்



இறைதூதர் வாழ்த்திய அருளினி
தேவர் மகனிற்கு அன்னையான அமலினி
மானுடத்திற்கு தாயான-தயாளினி
பாவக்கறையின்றி தோன்றிய விமலினி

கன்னி வயிற்றில் கருவாய் விண்ணவனும் குடியேற
அன்னையிவளும் திருக்கோயிலானாள்-கல்வாரியில்
அன்னையும் சோகச் சிலுவையை மனதில் சுமந்து
இரட்சகியும், இராக்கினியுமானாள்

மாளிகையில் செருக்குற்ற மன்னரும், செல்வரும் வாழ
மனைகளில் கல்லான இதயங்கள் வாழ-சத்திரங்களில்
பயணிகள் வாழ, எளிய மனமான தொழுவத்தில்
இன்றும் இறை மகனின் பிறப்பு

தந்தையும் தன் மகன் பிறந்திட-இன்றும் மனித இதயங்களில்
இடம்தேடி அலைகின்றார், சிந்தையில் செருக்குற்ற மாந்தர்
கல்லான இதயக் கதவுகளை மூடி -இல்லை
இடமில்லை என்றே இன்றும் மொழிகின்றார்.



உன்னத இருப்பெனும் பெருங்கடலில் எழுந்த
ஓர் பேரலையே இயேசு கிறிஸ்து-
இறையியலுக்குள் அடங்காத வார்த்தை
வாழ்வும், போதனையும் ஒன்றான அன்பின் கீதை

மதம் கடந்த சச்சித் ஆனந்தம், விழிப்புணர்வின்
ஆனந்த சிகரம், இருமை கடந்து, கழுமரத்திலும்
கருணை மழை பொழிந்த அன்போ தெய்வம்

வழியும், உண்மையும், வாழ்வும் ''நான்'' எனும்
உள்ளுணர்வின் உச்சம்-எளிய மனங்களில்
இன்றும் பிறக்கும் அதிசயம்



அன்பு, கருணை, மன்னிப்பு, இரக்கம், சகோதரத்துவம்
நம்மில் மலர, ஆணவம் கழித்து-உள்ளுணர்வில்-இயேசுவாய்
மலர்ந்திடும் நம் புதுப்பிறப்பே நத்தார்



அதுவே நம் இரண்டாம் பிறப்பு
ஆனந்த சமாதானத்தில் நம் நிலைப்பு
நம்மில்தான் அவர் மறுவருகை
நம்மில் நிறைவேறும் இறை வாக்கு

இறைவன் நம் தந்தை-நான் உங்கள் சகோதரன்
எளிய மனத்திற்கே இறையரசு-தூய மனத்திற்கே சத்திய தரிசனம்
இறை வார்த்தையை வாழ்வாக்கினால்
இயேசுவாய் -சத்தியத்திற்கு சாட்சியாய் நம் வாழ்வு

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை
பூவுலகில் நல்மனங்களுக்கு பேரமைதி
தூய மனமே இறை சன்னிதி
என்றும் மாறாத இறை வெகுமதி

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
*Pax Ravichandra-16-10-2023*

# இடையருக்கு நற்செய்தி

------------------------------------------------------------

வானிலோ மார்கழிப் பௌர்ணமி மகிழ்ந்து பூரிக்க
மண்ணிலோ-நல்லாயர்கள் கிடைகளுக்கு சாமக் காவல் புரிந்து
விழித்திருக்க-இசையாய் ஒலிக்கும் கிடைகளின் மணிச்சத்தம்
ம்மே! ம்மே என பண்ணாய் ஒலிக்கும் குட்டிகளின் மழலைச் சந்தம்





கூடி அமர்ந்து குளிர் காய்ந்து கதை
பேசி மகிழ்ந்திட, ஆனந்த ஒளி வெள்ளம் சூழத்
தோன்றிய வானவர் சேனை, அஞ்சிய மனங்கள்
ஆண்டவனை கெஞ்சி அழைத்த ஆராதனை

அஞ்சாதீர் மானிடரே! ஆனந்த நற்செய்தி
நவில வந்தோம் மானுடம் மீட்புற-இறைமகனே
மனுமகனான அவதாரம், களிப்புறுங்கள்

மகிழ்ந்து களிகூர-பகிர்ந்து இன்புற
தொழுது பணிந்திட இனிதான நற்செய்தி
துணிகளால் பொதிந்த குழந்தை-
தீவனத்தொட்டியில் உறங்குவதே ஆதாரம்

வானக சேனையால் வையகம் ஒளிர்ந்திட
உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்
பூவுலகில் நல்மனத்தவருக்கு அமைதியும் உரித்தாகுக
உவகையோடு ஒலித்த பாடல் சப்த ஸ்வரமானது



இன்புற்று இடையர் மயங்கிய இதயகீதம்-வானவர்
கண் மறைந்தும் நெஞ்சுக்குள் ஒலிக்கும் உதயகீதம்
அஞ்சிய மனங்களிலோ ஆனந்தம்-கண்டு
ஆராதித்து தொழுதிட தூண்டிய பேரின்பம்

கண்டதும், கேட்டதும் கனவா? நனவா? வானவர் காட்சியும்,
நற்சேதியும் நிஜமா? நிழலா? இனம் புரியாத ஆனந்தம
இதயத்தை நிறைக்க இறைவனும் நற்செய்தியை- கடையர்
ஆயர், எமக்குச் சொன்ன கருணைதான் என்னே?

இறை புகழ் பாடித் துதித்த மனங்கள்-ஒருமனத்தவராய்
வானவர் உரைத்த திருமகனையும், மாதாவையும், கண்டு மகிழ
கடுகி நடந்தார், களிப்போடு -புதிதாய் கறந்த பாலை
காணிக்கையாக்கித் தொழ கூடிக் குதூகலமாய் நடந்தார்

கோலமயிலாள், வானவர் போற்றும் குலமகளாள்
நிலவான பௌர்ணமி, தாய்மையின் அழகோ தேம்பாவணி
இல்லமோ தொழுவமாக ஈன்ற செல்வமோ இறைமகனாக
வாழ்வைத் தவமாக்கிய அன்னையோ கன்னி



காணாத அதிசயம் காணச் சென்ற இடையரும்
காணக்கிடைக்காதவரை கண்டு மகிழ்ந்தார்-பாலை
காணிக்கையாக்கி பச்சிலம் குழந்தையையும்
தாயையும் மகிழ்ந்தே தொழுது பணிந்தார்

தூதரும் இடையருக்குத் தூதுரைத்தார்-தூதும்
வழிகாட்டியுமாய் வான் நட்சத்திரம் ஞானியருக்கு மாறிட,
ஞானியரும் நற்செய்தி பகிர்ந்தார்-கொடிய ஏரோதிற்கு

இடையரும் நற்செய்தி பகிர்ந்தார் எளியோருக்கு
யாவருக்குமாம் இறை கருணை
இருமை கடந்த இறைவனுக்கே மகிமை

நல்லோர், தீயோர், உயர்ந்தோர், தாழ்ந்தோர்-மன்னன்,
ஞானி பேதம் கடந்து மகன் பிறந்த சேதி சொன்ன இறைவன்
மானுடம் உய்ய ஒரே பேறான மகனைத் தந்து
தம் அன்பைக் காட்டிய பரமேஸ்வரன்



அன்பை பகிர்ந்த இறைவனுக்கு-அன்பு மகனைச்
சிலுவையில் அறைந்து வெறுப்பைச் சொல்லிய
உலகு , கழுமரத்திலும் அன்பை காட்டிய உறவு,
வாழ்வுக்கனியாய் மாறிய இன்ப நிகழ்வு

இம்மானுவேலான மனு அவதாரம்-உன்னதங்களில்
இறைவனுக்கோ மகிமை-நல்மனத்தவருக்கே அமைதி
இறை தரும் பெரு நிதி-வானவர் சொல்லிய நற்செய்தி
என்றும் மாறாத உன்னத நியதி

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
*Pax Ravichandra-16-10-2023*

# ஆனந்த ராகம்-சிமியோன்

---



தூய்மைச் சடங்கை நிறைவேற்றி, தூயவர் மகனைத்
திருச்சட்டப்படி தூயவருக்கே காணிக்கையாக்கிட
குதூகலமாய்த் தூயகம் வந்த பெற்றோர்.

நிறை வாழ்வின் அழகை-மூப்பின் திருக்கோலம் சொல்ல
இறைவாழ்வின் அழகை, பக்திக்கோலம் சொல்ல, இறைமகனின்
வருகையைத் தூய ஆவி சொல்ல, இளையோனாய் ஓடி வந்த
சிமியோன் அழகோ நீரோடை கண்ட கலைமானின் பேரழகு

இறைமகனைக் காண முன்-மரணம் உமக்கில்லை
இறையடியார் சிமியோனுக்கு இறை வரமாக
இறை ஆவியால் தூண்டப் பெற்றவரும்
இறையில்லம் வந்தே-அமலனைக் கண்டார்



கண்ட விழிகளில் ஆனந்தக் கண்ணீர் கசிய-மழலையை
உண்டு களித்த இதயத்தில் உவகை பெருக்கெடுக்க
குழந்தையைக் கையில் ஏந்திக் களித்தவர் மொழிந்தார்

வண்ணமலராய் மலர்ந்து, முழு நிலவாய் ஒளிரும்
அண்ணலின் முகம் பார்த்துக் களித்தேன்
மழலையை ஏந்தி மலரடிதொழுது
மாதவம் புரிந்த மாமுனியாய் மகிழ்ந்தேன்

மானுட இரட்சகரை, மாதாவின் கொழுந்தை
மலர் முகம் சிரிக்க, மணி விழிகள் ஒளிரக், கரங்களில்
ஏந்திக் களித்தேன், நெஞ்சில் பேரின்பப் புதுவெள்ளம்
பாய்ந்திட மனதார மாதவனைப் போற்றித் துதித்தேன்.

வானமுதை வணங்கப் பேறு பெற்றேன், வையகம் பேறுடையாள்
எனப்போற்றும் மரியாளையும், இறைமகனையும்,
மாமுனி சூசையும் ஒருங்கே தரிசிக்கப் பேறுபெற்றேன்

உயிர் பிரிந்து ஊனுடல் அழியுமுன், ஆவியின் அருளால்
வானவன் கொடையை-கரங்களில் ஏந்தப் பேறு பெற்றேன்
மானுட மீட்பை, மாசறு தேவசெம்மறியை, கண்டு
மகிழ்ந்து கொண்டாடிடப் பேறுபெற்றேன்

வானவர் அறியாப் பேரின்பத்தை யான் சுவைக்க
மகிழ்ச்சி வெள்ளத்தில் இதயம் திளைக்க
நாதசொருபியாம் இறைவனை உள்ளம் துதிக்க
யான் பெற்ற பெரும்பேறு யார் பெற்றார்

இனி யான் மடிந்து அமைதியில் உறங்கிட
எக்குறையும் எனக்கில்லை, இனியவனே, அடியவனுக்கு
அருளிய உம் ஆசீர் வானிலும் பெரிது

தள்ளாத வயதில் நான் செய்யாத தவத்திற்கு-தெய்வமே
நீ தந்த வரம் அளப்பெரிது, ஆனந்தக் கண்ணீர் கசிய
கவிதையாய் வாய் நன்றி மொழிய, நெஞ்சுருக,
மெய் சிலிர்க்க இறை துதி பாடிய சிமியோன்



கதிர் கண்டு வாசம்தான் காற்றில் மணக்க,
பூத்தன வண்ணமலர்கள்-உதயம் கண்டு பூபாளம்
காற்றில் கலந்திட பாடி விழித்தன புள்ளினங்கள்

பூவாசம் வீச-நெஞ்சில் பூபாளம் ஒலிக்க
***வாழ்வு தரும் வார்த்தை மனுவுருவாகி-மானுடர்க்கு***
***மன்னாவானதை புது உதயம் என்றே***
வியந்தே புகழ்ந்து மகிழ்ந்தது சிமியோன் இதயம்

எங்கும் இருப்பாய் இருப்பவர் மகனை
இரு கரங்களில் ஏந்தி இறை துதிபாடி-மகளே
இஸ்ராயேலுக்கு மகிமையும்-பிறவினத்தாருக்கு
ஒளியுமாய் உம் மகன் இருப்பார்

வதைக்கும் பெருஞ்சோகம் ஒரு நாள், கூர் வாளாய்
உன் பூ நெஞ்சைத் தைக்கும்- வருந்தாதே மகளே,
இன்ப துன்பம், இரவு பகல் என மாறுபடும் வாழ்வில்
இறை அமைதியே நிம்மதி , தேற்றிய இறையடியார்

வானவன் வார்த்தையால் மகிழ்ந்த பூ நெஞ்சம்
அன்னை எலிசபெத் வாய்மொழியால் பூரித்த அஞ்சுகம்-
இன்றோ இறையடியார் வாய்மொழியால்-அனலில்
விழுந்த புழுவாய் துடித்த துயரம்தான் என்னே!

ஆனந்த ராகம் இசைத்த தாய் நெஞ்சில்
நிலைத்த முகாரி ராகமாய் சிமியோன் வார்த்தை
வார்த்தையை சுமந்து இன்புற்ற உதரம்
வாள் தைக்குமே என அஞ்சித் துன்புற்ற இதயம்



மகனை மார்போடு அணைத்த அன்னை
நெஞ்சுருக காப்பாய் இறைவா
மனதிற்குள் கதறிய அம்மை-என்றும்
நின் அடிமை நான் என்ற தாய்மை

மூதாட்டி அன்னாவும் -முத்தமிட்டு
இஸ்ரயேலின் மீட்பரை வாழ்த்தி இன்புற
அவதார புருஷர் இவர் என்பதை எண்பிக்க
சான்றோர் பகிர்ந்த சாட்சியங்கள்

விண்ணவனே , மண்ணவனான அவதாரம்
தந்தைக்கோ அளவில்லாத ஆனந்தம்.
தாய் நெஞ்சில் "கூர்வாளோ"
தாங்கொண்ணாப் பெரும் துயரம்

காணத் தவித்து கண்டதுவும் -வானவன் மகனை
கரங்களில் ஏந்திடப் பேறு பெற்றதுவும்-வானவன் அருளே-
இறையடியார் நெஞ்சிலே மாறாத பேரின்பம்
அன்னை மனதிலோ நிலைத்த ஆனந்த சோகம்

வானவன் வாழ்த்தை மனதில் வைத்தாள்
சிமியோன் மொழியை சிந்தையில் வைத்தாள்-மகனை
மார்போடு அணைத்து இறைவனைத் துதித்தாள்
உள்ளத்தில் உன் அடிமை நான் என்ற உத்தமியாள்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra- 16-10-2023*

# சந்திப்பு–Three Wise men

-----------------------------------------------------------

மானுட வாழ்வின் இரகசியங்கள் பன்னிரு இராசிகளுக்குள்
மறைந்திருக்க, வானில் சுற்றும் கோள்களும்,
மாறாத நட்சத்திரக் கோலங்களும் சொல்லும் சேதி
மறைபொருளான நீதி, சோதிடமான நியதி?





வானிலே புது வரவாய் வால் நட்சத்திரம்
நல்மனத்தவர் அமைதியில் பூரிக்க
பூமியிலே இறைமகனின் அவதாரம்

வான் ஆய்ந்து, கோள்களின் உலா அறிந்து
"இருப்பு" இயம்பிடும் இரகசியம் புரிந்து
இன்புறும் நண்பர்கள் மூவருக்கும் ஆச்சரியம்
அறிவுக்கு விருந்தான நட்சத்திரமோ அதிசயம்

வானவன் மகன் வந்துதித்தார் வால் நட்சத்திரம்
மொழியும் நற்செய்தி, தம்மிடையே சேதி பரிமாறி தெளிந்தவர்
வணங்கி, வாழ்த்தி, காணிக்கை செலுத்தல் நம் பேறு
பரவசம் பொங்கப் தொடர்ந்த பயணமோ நற்பேறு

பல நாள் பயணம் ஜெருசலேமில் ஒன்றிணைய
கண்டு மகிழ்ந்தவர்-கதை பேசி உறவாடி-நட்பை
விருந்தோம்பி இன்புற்றார்-தேவசோதியைத்
தரிசிக்க மன்னன் ஏரோதைச் சந்தித்தார்

ஆய்தறிந்த ஆனந்தச் சேதியை அறிஞர்
அஞ்ஞானி ஏரோதுவிடம் கூறி அகமகிழ்ந்து வினவிட
குஷ்டம் பட்ட நெஞ்சம் போல்
குமுறிக் கலங்கியதே நயவஞ்சகன் நெஞ்சம்




யூதரின் மன்னராய் பிறந்த குழந்தை எங்கே? தேவர் விண்மீன்
வானில் கண்டோம், எம்மை வழிநடத்திட யூதேயா வந்தோம்,
வணங்கி, வாழ்த்தி, அருள்பெற, காணிக்கை செலுத்தி இன்புற
தூரம் கடந்த நண்பர்கள் நாமோ வானியல் அறிஞர்கள்

அறிஞர் மொழி கேட்டு அஞ்ஞானி கலங்கினான்
முழு ஜெருசலேமும் கலங்கிட-முதல்வனின் வருகை
எளியோருக்கு நற்செய்தியானது- ஆணவ மனங்களுக்கு
அரியணை பறிபோகும் அச்சத்தை தந்தது

அரியணைக்கு ஆபத்து அறிந்த நரி-மறை நூல்,
அறிஞரை அழைத்து ஆய்ந்த கபடவேடதாரி -பெத்தலேகம்
மெஸியாவின் பிறப்பிடம் அறிந்திட, வஞ்சகன் நெஞ்சத்திலே
எரிமலையின் குமுறல் பெருமூச்சிலே நச்சரவங்களின் சீறல்



அஞ்சுகங்களை ஏமாற்ற நயவஞ்சகம்
வஞ்சகமாய் விரித்த வலையிலே பூபாளம்
அழகிய கலைமானைப் பிடிக்க-கொடிய
வேடன் வைத்த கண்ணியிலே ஹிந்தோளம்

நஞ்சை நெஞ்சிலே வைத்து -நறுந்தேறலை வாக்கிலே வைத்த
வஞ்சகம்-வணங்கி வாழ்த்தி, வந்து மொழியுங்கள்
குழந்தையின் இருப்பிடத்தை, சென்று வழிபட்டு வாழ்த்துதல்
நம் கடன், பூபாளமான மொழியில் ஏமாளியான ஞானியர்

அறம் பிறழ்ந்த கொடியோன்-நிறம் மாறும் பச்சோந்தி
தந்திரி ஏரோதோ குள்ளநரி
ஞானியர் அறியாத பஞ்சதந்திரி

நுனி நாக்கிலே அமுதும்-அடி நாக்கிலே நஞ்சுமாய்
படமெடுத்த நாகம் சாதுரியமாய் ஒடுங்கி அடங்கி
பூ மழை பொழிந்து பொய்யாய் பாடிய காம்போதி
ஞானியர் மனதிலோ ஆனந்த அமைதி

விண்மீனைத் தொடர்ந்த பயணம்-மன்னவன்
தரிசனத்தை எண்ணிட மனதிலே பொங்கும் பேரின்பம்
மாளிகையைத் தேடிய விழிகளுக்கு
விண்மீன் காட்டியதோ மாட்டுத் தொழுவம்

மன்னன் மகனாய்க் காண வந்தவரை-மனங்கவர்
எளிய தச்சன் மகனாய்க் கண்டார்-மாளிகையில்
தேடியவரை தொழுவத்தில் கண்டே வியந்தார்

வான் நட்சத்திரம் வழி நடத்த, வனமும், நாடும் கடந்து
கூன் விலங்கில் தொடர்ந்த தீர்த்த யாத்திரை
மாதாவோடு திருமகன் தரிசனமோ-ஞானியருக்கு
மங்களமான ஆனந்தக் கீர்த்தனை

தூயகமாய் காட்சி தந்த தொழுவம், குலமகளின் மடியில்
எளியவனாய், கோமகனின் எழிற்கோலம் , ஆனந்தப்
போதையில் அக்களித்த மனங்களில் பரமானந்தம்

வல்லவன் செயல் யாரறிவார்?
வானவன் காட்டிடும் வழி-மானுட
மீட்பின் வழி எனப்புரிந்தார்

இசை பாடிக் களிக்க இதயமோ கோகிலம், நடனமாடி மகிழ
மனமோ வண்ணமயில் கோலம், அன்னையோடு மகனையும்
-தெண்டணிட்டு தரையில் முகம்படியத் தலை தாழ்த்தி
காணிக்கை படைத்து செய்த *ச அஷ்ட அங்க நமஸ்காரம் .*

தொழுவமே ஆலயமாக முன்னிட்டியில் வளர்த்திய குழந்தை
மானுடருக்கு நிலை வாழ்வளிக்கும் உணவாக-மன்னாளும்
மன்னரல்ல, மனம் ஆளும் மனுமகன் -இறைமகனே

இறை தேர்ந்த திருமகளே குலமாதா
அருட்பணியாளரோ அன்புத் தந்தை சூசை
அறிந்து அகமகிழ்ந்து தொழுது மனம் மகிழ்ந்தார்

மன்னாதி மன்னன் இவர், மனமகிழ்ந்து
பொன்னைக் காணிக்கையாக்கி
புகழ் பாடி வணங்கிய காஸ்பரோ இந்தியர்

தேவாதி தேவனிவர், தூபத்தை
காணிக்கையாக்கி- பக்தனாய்ப் போற்றி
வணங்கிய பல்தசாரோ அரேபியர்

அவதார புருஷர், அபிஷேகம் பெற்றவர், அன்னார் மரணமும
மங்காப் புகழ் படைத்து மானுடருக்கு நிலை வாழ்வளிக்கும்
வெள்ளைப் போளத்தை காணிக்கையாக்கி
ஆராதித்த மெல்கியரோ பாரசீகர்

புனிதனை வழிபட்டு இன்புற்ற பொன்மனங்கள்.
வஞ்சகன் ஏரோதை மறந்து-இறைவனைப் புகழ்ந்து
இறைவழி காட்டிய புது வழியில் -விண்மீன்
வழி நடத்த வீடு நோக்கிய, திசை மாறிய பயணங்கள்

அம்மையப்பனோடு அருந்தவப்புதல்வனை
ஆவியின் அருளால் ஆலயத்தில் கண்டு
இறை புகழ் பாடிய முதியவர் சிமியோன்

ஜெப தவத்தில் நிலைத்து-குழந்தையை வாழ்த்திப்
போற்றிய மூதாட்டி அன்னாள் அவதார புருஷர்
தோன்றும்போதெல்லாம் ஞானியர் வழிபட்டு போற்றும்
மரபு, அன்றும் நிறைவேறிய அதிசயமான நிகழ்வு

எங்கும் நிறைந்த இன்பச் சுடர் அவதாரமெடுக்க
பொங்கும் ஒளியில் இருள் மங்கி மறைய-பூமி
எங்கும் பூபாளம் ஒலித்தே மங்களம் சொன்னது
மானுடர்க்கு புது உதயம் என்றது

விண் களிகூர்ந்திட-மண்ணவர் துயர் நீங்கிட
வானவர் புகழ் பாடி-இடையருக்கும் சொன்ன நற்செய்தி
உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்
பூவுலகில் நல்மனத்தவர்க்கு அமைதியும் ஆனது

இறை வார்த்தை மனுவுருவான அவதாரம்-
"மானுடம் நிலைவாழ்வு பெற"
இறைவனின் மாறாத அருள்வரம்

மன்னவரோ மண்ணரசைத் தேட-கோலும், படையும், குடையும்,
முடியுமின்றி-கோமகனோ தச்சன் மகனான அவதாரம்
அருகிருந்தும் அரசனுக்கு கிட்டாத பாக்கியம்
இடையருக்கு வானவரால் கிட்டிய சுபதரிசனம்

ஞானியருக்கும், இடையருக்கும், இறையடியார்களுக்கும்
இறைமகன் தரிசனம் இறை வரப்பிரசாதம்
எளிய மனத்தவருக்கே இறையரசு, தூய மனத்தவருக்கே
சத்திய தரிசனம், என்றும் பொய்க்காத சத்தியம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
*Pax Ravichandra-16-10-2023*

***ச அஷ்ட அங்க நமஸ்காரம்***:
இரு கை, இரு கால், இரு தேள், மார்பு, நெற்றி என
எட்டு அங்கங்கள் மண்ணில் படிய வணங்குவது.
மனம் அடங்கிட, உடல் மண்ணோடு மண்ணாக-
நான் இருப்பேன் அதுவே ஆன்மா-
மனம் அடங்கியிருப்பதே ஆசிர்வாதம்

# எகிப்து யாத்திரை

துணைவன் கைபட்டுத் தொழுவம், இல்லமாய் மாறிட
பூந்துகில் போர்த்திய புல்லும் பூம்பஞ்சணையாகிட
ஈன்ற மகனைக் கண்ட தாய் உள்ளத்திலோ ஆனந்த உவகை
தந்தையானவன் நெஞ்சிலோ பூங்கமிழ் பொய்கை



என் மகன் இறைமகன்-எண்ணமே தேனாய் இனிக்க
வண்ணமகன் அழகில் துன்பமெல்லாம் பஞ்சாய்ப் பறக்க
அம்மானைப் புகழ்ந்த அன்னை மனம்
கண்ணே கண்ணுறங்கு தாலாட்டுப் பாடிய தினம்



அன்னையும், மகனும் அயர்ந்துறங்கும் அழகில்
அன்புச் சேவகனானவன் நெஞ்சிலே ஆனந்த நிம்மதி
உள்ளத்தில் அமைதித் தென்றல் உலாவிட
உவகையோடு துதிபாடிய மனமோ இறை சன்னிதி

எளிய தச்சனுக்கு எழில் நங்கை துணைவியாக
மனமொத்த தம்பதிக்கு இறைமகனும் ஒரே மகனாக
இறைவன் நம்மோடு எனும் பொருள்படும்
"***இம்மானுவேலாய்*** அன்பரின் அவதாரம்.

கணவனும், தந்தையுமான ஆனந்த உறவு
காவலனாய்ச், சேவகனாய் கண்விழித்திருந்தே
விளங்கிட முடியாத இறை திட்டத்தை எண்ணி
வியப்பில் ஆழ்ந்த பேரின்ப இரவு

கைத்தலம் பற்றுமுன் கருவுற்ற கன்னி
ஊர் அறிந்தாள்-விபச்சாரி எனத் தூற்றும்
திருச்சட்டமோ கல் எறிந்து கொல்லும் -எண்ணிப்
புலம்பிய மனதிலோ நிம்மதி எட்டாத வான்மதி

கதிரும், கருவான் நிலவுமறியாமல் இரகசியமாய்
உறவைத் துண்டிக்க நினைத்த குணாளன்
கனவில் வந்த தூதர் கவலையைப் போக்கிட
கன்னித் தாயை உவப்போடு கரம் பிடித்த மணாளன்

கன்னித் தாய்க்கு மாலையிட்ட மணாளன்
அருட் செல்வனுக்குத் தந்தையான சத்தியசீலன்
இறைவனுக்கே வாழ்வை அர்ப்பணமாக்கி
இல்லறத்தை நல்லறமாக்கி இன்புற்ற தயாளன்

கானக்குயிலாய் பாடி கலாபமயிலாய் ஆடிக்களித்து
தெய்வமே துணை என நம்பி வாழும் நங்கைக்கு
கணவனாய், மகனுக்கு காவலனாய் சூசை அமைந்தது
நூற்காத தவத்திற்கு இறை ஈந்த பெருவரமே

தொழுவமே இல்லமான போதும் துவளாத மனம்
வருந்தாத குணம்-எளிமையே வரமான நங்கை
ஜெபமோ தவமான தேவகங்கை-எண்ணிப்
பூரித்த சூசை மனமோ ஆனந்தப் பொய்கை

இறைமகனுக்குத் தாயான அம்மை
எளிய தச்சனுக்கு மனைவியான பெண்மை
என்னே இறை தந்த பெருமை

கடை விழி நின்று கசியும் ஆனந்த நதி
இறைவா என்றும் நீயே என் பெருநிதி
எண்ணிப் பார்த்த நெஞ்சிலே இறைதுதி

அணைத்த பூங்கரங்கள் கண்ணீர் துடைத்து
அன்பாய் ஆறுதல் மொழிந்தது
அன்பரின் தோள்களில் தலைவைத்து
இனியவன் நீ என் துணை என்றே இன்புற்றது

கண்ணயர்ந்த தந்தைக்கு கனவில் வானதூதன்
எச்சரிக்கை, கொடுங்காவலன் ஏரோது
குழந்தையை கொல்லத் தேடுகிறான்

"குழந்தையையும், தாயையும்" எகிப்துக்குச்
கூட்டிச் செல்லுங்கள்"
விழித்தவர் மொழிந்தார் "மரியே புறப்படும்."

இறை மகனைக் காத்திட புதுப்பயணம்,
இறை வார்த்தையை வாழ்வாக்கும் தியானம்
என் உயிரும், உறவும் நீயே என்ற-மங்கை
ஏனென்று மறுவார்த்தை கேளாத அம்மை-

பெருநிதியாய் மகவை ஏந்திய தாய்மை, உத்தமனை பின்
தொடர்ந்த பெண்மை, ஒரு துணி முடிச்சோ எளியவரின் உடைமை ,
எல்லாம் இறை சித்தம் என்ற நம்பிக்கை, காரிருளில் நெடும் பயணம்
நைல் பாயும் எகிப்தோ, போலித் தெய்வங்களின் நந்தவனம்

கொல்லுமோ கொடியவன் ஏரோதின் குறுவாள்-
மெல்லுமோ என் செல்வத்தின் உயிரைக் கூர்வாள்
ஒரு கணம் எண்ணிக் கலங்கிய தாயின் இதயம்

மறு கணம் இறைவன் நமக்குத் துணையிருக்க, இறை தந்த
அருந்துணை நமக்கிருக்க, ஏனோ வீணாய் இந்த மனக்கவலை
மகனை மார்போடு அணைத்த அன்னை மகிழ்வோடு
துணைவனைப் பார்த்து புன்னகைத்த பெண்மை

பூத்தாள் புன்னகையில்-மனம் காற்றாய் மாறிடப்
பூத்த கவலைகள் பஞ்சாய்ப் பறந்திட-கனத்தமனம்
பூவாய் மலர்ந்திட புன்னகைத்த மணாளன்

கதிரவன் எழுந்திட-காரிருள் பயணம் முடிந்திட
நெஞ்சிலே நம்பிக்கையின் புது உதயம் தோன்றிட
இறைதுதி பாடிய இளைய நெஞ்சங்கள்

நல்மனங்களில் இறை அமைதி நிலவிட, இடுக்கன்
வரும்போது-தளராத இறை நம்பிக்கை பாறையில்
கட்டிய வீடானது, புயலும், பெருமழையும்-
அசைக்கவோ, வீழ்த்தவோ இயலாத அதிசயமானது.

மூப்பர் பேசி முடித்த திருமண ஒப்பந்தம், மணமாகுமுன்
சோதனையான பந்தம், இறையருளால் திருமணமான சொந்தம்
முக்கனிச் சாறுபோல் இனிக்கும் இல்லறம், இறைவா
நீ எனக்கீந்த பேரின்பம், துதித்த சூசை மனம்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-16-10-2023

# அன்னையர் துயரம்



நஞ்சை நெஞ்சில் வைத்து-நறுந்தேறலை
உதட்டில் வைத்து, வஞ்சகன் ஏரோது
ஆடிய கபட நாடகம்-கள்ளம், கபடம் அறியாத
ஞானியர் உள்ளம் கடந்த நயவஞ்சகம்

நிறம் மாறும் பச்சோந்தி, குணம் மாற்றி
நயமாய் உரைத்தான் ஞானியரிடம்-ஐயன்மீர்
அருந்தவப் புதல்வனைக் கண்டு வணங்கி,
காணிக்கை செலுத்தி -திரும்பி வாருங்கள

எம் விருந்தாய் தங்கி, உண்டு குடித்து இளைப்பாறி
மகிழ்ந்து குழந்தை பிறந்த இடம்தனைக் கூறுங்கள்
யூதர்களின் மன்னரை நானும் சென்று பணியவேண்டும்
வாழ்த்தி, காணிக்கை செலுத்தி வந்தனை புரியவேண்டும்

கோள்கள் உலவும் வழி அறிந்தவர்
கொடியவன் மொழியில் மறைந்த சதி அறியார்
நாதமாய் ஒலித்த சங்கதி
ஞானியர் மனங்களுக்கோ சங்கநிதி

வஞ்சகன் நெஞ்சம் அறியாத ஞானியர்-விண்மீன்
வழி நடத்தச் சென்றார்-குழந்தையைக் கண்டு
நெஞ்சம் மகிழ்ந்து வணங்கிக் காணிக்கை செலுத்தி
***இறை காட்டிய வழியில் வீடு சென்றார்***



ஏமாந்த வஞ்சகன் நெஞ்சில் எரிமலையின் சீற்றம்
பொங்கிடும் கோபத்திலே எரிநரகின் வெப்பம், ஆணையிட்டான்
கொலைப் படைக்கு, அகவை இரண்டு நிரம்பாத பிஞ்சு மழலை
அனைத்தையும் பெத்லேகேமில் கொல்லுங்கள்

வண்ணப் பூக்களைப் பறிப்பதற்கு கொடுவாட்கள்
சின்னப் புள்ளினத்தை அழிப்பதற்கு தீக்கணைகள்
ஆணையிட்ட மன்னவனோ கொடுங்கோலன்
ஆண்டவனாய் எங்கும் நிறைந்தவனோ கருணாகரன்

உருவிய வாட்கள் உயிர் பறிக்க-ஏரோது
ஆடிய தாண்டவமோ ருத்திரம்-வாழ் நாளெல்லாம்
உருகிப் புலம்பியழ அன்னையர் சிந்திய
கண்ணீரோ சோக அலை மோதும் சமுத்திரம்

பூவிழி யாழ் மொழி, புன்னகையோ தேன்மொழி
பூ மணம், பால் மணம் வீசிடும்
பொன்மேனி நறுமணமோ தாய் மனம்

யாழிலும், குழழிலும் இனிதான மழழை மொழி
ஊமையானது-பூவாய் மணந்து, தேனாய்ச்
சுவைத்த செல்வம் காலன் வசமானது

கண்ணீரில் கரையாத சோகம்-பெற்றோர் சொந்தமானது, அழுதும்
அணையாத நெருப்பு நெஞ்சை தீய்க்கும் எரி நரகானது, கண்ணே,
மணியே எனக் கொஞ்சி மகிழ்ந்த பேரின்பம் கண் மறைந்து போனது
ஏழைக்கு எல்லாம் மாயை என்றானது, வஞ்சகனுக்கு கொலை நீதியானது



தாலாட்டுக் கேட்டுத் தூங்கிய பூவிழிகளும்
தந்தை மார்பில் தவழ்ந்த பூமாலைகளும், பாட்டன்,
பாட்டி கதை கேட்டுப் பூரித்த பூமனங்களும்
பொய்யாய்ப் பழங்கதையாய், கனவாய்ப் போனது

பூத்த ஆனந்தம் காய்ந்த சருகானது
பூ மழையே கல் மழையாக-விடியல்
காணாத இருளுக்குள் மூழ்கிய சொந்தம்
கண்ணீருக்குச் சொந்தமான பந்தம்

டக்! டக்! டடக்! கொதிக்கும் வெயிலில் குதிரைக்
குளம்பொலிகளின் சத்தம், கொடிய ஏரோதின் போர்
முரசமானது-ஆறாய்ச் சிந்திய குழந்தைகளின் இரத்தம்
ஏழைப் பெற்றோருக்குச் சொந்தமான தீராத சோகம்

பெற்ற மனம் பித்தாகிக் கதறிப் புலம்பிட, செல்வங்கள்
கொடுந்தீயில் பூச்சரங்கள்போல் வெந்து கருகிட
கொலைவெறி கொண்ட படையணி நடத்திய
குழந்தைகளின் ஈனப்படுகொலை.

ஓடிக் களைத்து, ஒளிந்து மறைந்தும் ஓயாத படுகொலை
கெஞ்சி மன்றாடியும் இரங்காத அரக்கர்களின் வன்முறை
அன்னையர் மார்போடு அணைத்து அழுது கெஞ்சிட
தந்தையர் தடுத்துப் போராடி வீழ்ந்திட, நடந்த படுகொலை

குத்திக் கிழித்தும் வெட்டிச் சாய்த்தும்-வெறி பிடித்து
கழுத்தை நெரித்தும், தரையில் அறைந்தும் ஆடிய
உருத்திர தாண்டவம், மழலையர் பூங்காவை
மதயானைகளாய்த் துவம்சம் செய்த அராஜகம்

ஒப்பாரியும், புலம்பலுமாய் ஊரே அழுதிட
வாங்கிய வரமே சாபமாய் நிலைத்திட
பொன் வானத்து வண்ண நிலவும் தேய்ந்து மறைந்தது
புள்ளுறை சோலையும், பூங்கமிழ் வாவியும் காய்ந்து கருகின

பீறிட்ட பாலிலும் குருதி-சிந்திடும் கண்ணீரோ அருவி-
நெஞ்சத்திலே ஓயாத முகாரி , கன்றைத் தேடும்
பசுவாய் அன்னையர் இதயத்திலோ ஒப்பாரி



குளம்பொலிகள் தேய்ந்து மறைந்திட
ஒப்பாரியும், புலம்பலும் ஓயாது நிலைத்திட
தாய் மடியிலும், தந்தை தோள்களிலும்-தரையிலும்
செம்பூவாய் வாடிக் கிடந்த பாசமலர்கள்.

மழலைகளின் குருதி வெள்ளம் மாதவனைக்
கூவியழைத்துக் களைத்திட அரியணைக்கான
அசுர வேள்வியில் அப்பாவிக் குழந்தைகளோ ஆகுதி
நரபலி எடுத்த வஞ்சனனோ மன்னவனான நீதி

மண்ணிலே காயாத குருதி-
மனதிலே முகாரியின் ஓயாத சுருதி
பூவும், பிஞ்சும் உதிர்ந்து கிடக்க-பெற்றவர்
நெஞ்சில் கொடுவாள் பாய்ந்த அநீதி

கண்ணீர் வெள்ளத்தில் மூழ்கியும்
கரையாத பெற்றவர் சோகம்- இன்னோர்
மரியாளாய் பலநூறு அன்னையர்
இன்று பட்ட ஆறாத் துயரம்



இராமாவில் இராக்கேலின் அழுகையொலி
ஆறுதலின்றித், தேறுதலின்றி ஓயாது ஒலிக்க-தன்
மகனைக் காத்த வல்லவர்-ஏழைக் குழந்தைகளைக்
கை நெகிழ்ந்த இறை நீதிதான் என்னே?

கார்கால மழையைக் கண்கள் பொழிய
ஒப்பாரியும், புலம்பலும் ஊரை அழவைக்க
நாடாளும் கொடியவனை ஈனப் படுகொலை பழிக்க
ஓயாது ஒலித்த மாதவனின் ஆராய்ச்சி மணி

வரமாய் ஈந்த பிள்ளையை சாபமாய்ப் பறித்ததேனோ?
உறவாய்ப் பூத்த வாச முல்லை-மாலை வருமுன்
சருகாய் மாறியதுமேனோ?-காக்கும் கரங்களே
கை கட்டி வேடிக்கை பார்த்ததும் அறமோ? முறையோ?

பால் பொங்கிக் கொங்கை வருந்த
நீர் சிந்திச் சேல் விழிகளும் சிவக்க
கனவாய் கலைந்து, பழங்கதையாய்ப் போன
அம்மா என்றழைத்த அன்புறவு

மலையளவு சோகம் நெஞ்சை வருத்த
கடலளவு கண்ணீரை விழிகள் சிந்திச் சிவக்க
சின்னச் செம்மறியை வெம்புலி குதறிக் கிழிக்க
கருணைக் கடலே நீ வாழாவிருந்தது ஏனோ?

நோயழிக்கவில்லை, தீ அழிக்கவில்லை
நொந்து பெற்ற இன்பத்தைப் பேய் அழிக்கவில்லை
பூவையும், பிஞ்சையும் புயல் அழிக்கவில்லை-காக்கும்
காவலன் அழித்த கொடுமைதான் என்னே?

திங்கள் முகம் குலைந்து ஒளியிழக்க-செவ்வாய் குளறி மொழி பிறழ-
செங்கயல் மாரி மழை பொழிய, கூந்தல் மழை குலைந்து புழுதியில் புரள
கொங்கை முகம் குலைந்து சிந்தும் முலைப்பாலோ சிவப்பு, அங்கம் நடுங்கிட
கொஞ்சி மகிழ்ந்த பெற்றோர் நெஞ்சுக்குள் கொடுஞ் சோகத்தின் கசப்பு

உள்ளம் குமுறி உடல் நடு நடுங்க
வெள்ளமென விழி நீர் பெருக தன்னை மறந்தாள்
பத்து மாதம் சுமந்த பால்குடி மறவாப் பாலகனை
கத்தி குத்திய ஏக்கத்தில் கல்லாய் விறைத்த தாய்

Existence is to have no fear will become of you, depend no one.

Only the moment you reject all help are you freed.

-Lord Buddha

நீர் ஏந்தி விழிகள் சிவக்க, சோக நெருப்பேந்தி இதயம் கருக
மண்ணில் உடலைப் புதைத்து, மனதில் உறவை விதைத்து
இமயச் சோகத்தால் இதயம் கனக்க -சோகச்
சுமை தாங்கியின்றி ஏங்கித் தவித்த பெற்றோர்.

கண்ணூறு படுமென்று திருஷ்டி வைத்தேன்,வல்லூறு
தூக்காமல் காவல் காத்தேன், முந்நூறு நாள் சுமந்த
இன்பம் நீடூழி வாழ, எந்நாளும் வேண்டுதல் செய்தேன்

ஒரு நாளில்  என் செல்வம் பறிபோக-என்
திருநாளும் கரிநாளாய்ப் போன கொடுமையை
யாரிடம் சொல்வேன்-இறைவா?

கண்ணீர் பொழிந்து தாய் மனம் கேவ, விண் பார்த்து தந்தையர்
மனம் நோக, மண் புதைந்து மகன் மறைந்தான்
கண் மறைந்தே உறவுகளைப் பிரிந்தான்

ஆனந்தம் தவழ்ந்த இல்லங்களில் ஒப்பாரி, மழலை ஒலித்த கிள்ளை
வனத்தில் ஓயாத கண்ணீரோ மாரி, பூங்கமிழ் வாவி வற்றிச் சோர,
புள்ளுறை சோலை மௌனிக்க-மனமெங்கும் மயான அமைதி



மண்ணும் தணல் ஆற- கொடுங்கோல்
மன்னன் கொலை வெறியும் ஆற-கண்ணே
மணியே என அழைத்த பிள்ளையோ
பிணமாக- ஆறாத பெற்றவர் துயரம்

யூதக் குழந்தைகளைப் பாரோ கொல்ல-எகிப்தியர்
தலைச்சன் பிள்ளைகளை யாவே கொல்ல
குழந்தைகளைக் கொன்ற ஏரோதின் கொடுங்கோலம்
வல்லமைதான் நீதி என்ற அலங்கோலம்

கதறி விழுந்து நினைவிழந்த தாய்கள்
தாளாத சோகத்தை சிலுவையாய்ச் சுமந்து
தள்ளாடித் துவண்ட தந்தையர்

தந்தி அறுந்த வீணையாய்-தந்தை முடங்கிக் கிடக்க
ஆடிய தொட்டில் கயிறு அறுந்து தொங்கிட-ஒப்பாரி
வைத்து ஓயாது புலம்பியது தாலாட்டுப் பாடிய தாய்மை

அரியணைக்காய் மன்னன் ஏரோது
யாத்த அசுர வேள்வியில் ஆகுதியாய் குழந்தைகள்
இனத்திற்காய் மதவெறியன் கைபாஸ் கொடுத்த நரபலி
கல்வாரியில் செம்மறியாய் இயேசு

பத்துக் கட்டளைகளையும் தாண்டிய இறை நிந்தனை
ஏரோதின் சிந்தைக்கும் எட்டாத வஞ்சனை, முழு இனமும்
மடிவதை விட, இனத்திற்காய் ஒருவன் மடிவது மேலானது
வஞ்சகன் கைபாஸின் யோசனை

மதவெறிக்குப் பலியான மாமனிதம்
தந்தையே இவர்களை மன்னியும் தாம் செய்வது
இன்னதென்று இவர்கள் அறியார்
கல்வாரியில் ஒலித்த கீதையோ தெய்வீகம்

சத்தியத்திற்கு சான்றாய் பலியான மனுமகன்,
கொலையை இரட்சணிய இறையிலாக்கிய
பவுலும். சவுலும் ஒன்றான பரிசேயன்

அரசியலிலும் மாறாத குருதி வாடை
மதங்களில் நரபலியோ நாறும் பீடை
அன்பு மனங்களிலோ வற்றாத கண்ணீர் ஓடை
வாழ்வே மாயம் என்றான அவல நிலை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-16-10-2023*

# நசரேயன்





முடி சார்ந்த மன்னரும் முடிவில் ஒரு பிடி சாம்பலாவார்
மண்ணாண்ட மாமன்னரும், மண்ணிற்கே திரும்புவார்
கொண்டு வந்ததும் ஏதுமில்லை-கொண்டு
போவதும் ஏதுமில்லை-வாழ்வு ஒரு தீர்த்த யாத்திரை

குழந்தையைக் கொன்று குவலயத்தை ஆள நினைத்தவனை
கொடிய குஷ்டம் கொன்றிட, மண்ணாலானது, மண்ணிற்கே
திரும்பிட-விதி வகுத்த நியதி -வேந்தனாலும்
மாற்றமுடியாத என்றுமுள்ள தர்மத்தின் நியதி

மரணம் வரும் நாளை மாமன்னனும் அறியான், வாழ்நாளில்
ஒரு நொடிதானும் கூட்ட-பாவம் பாராளும் வேந்தனுக்கும்
அதிகாரமில்லை, மருத்துவனுக்கும் சக்தியில்லை
அமரத்துவத்திற்கு அமுதாய் ஏதும் இல்லை

உண்மை அறிந்தால்-மண்ணாளும் வேந்தரும்
மானுட மனங்களில் நிலைத்து வாழ்ந்திட
நன்மை புரிவார்-இழிசெயல், பாவம் புரியார்

குழந்தையைத் கொல்லத் தேடிய கொடியவன்
ஏரோது காலமானான்-குழந்தையையும், தாயையும்
கூட்டிக் கொண்டு நாடு திரும்பும்
கனவிலே கணவருக்கு வானவன் காட்சி



ஊர் திரும்பியவர்-தந்தைக்குப் பின் தனயன் ஆளும்
நிலைக்கஞ்சி நாசரேத்தில் குடியேறினார்
“நசரேயன்” என அழைக்கப்படுவார்
இறைவாக்கு இவ்வாறு நிறைவேறியது

கண் பார்த்து மனம் குளிர, மண் தொட்டு மேனி சிலிர்க்க,
ஆனந்தக் கண்ணீர் பொங்கிடத் தன்னை மறந்தார்-
நம் முன்னோர்க்கு தந்தையாம் இறைவன் தந்த பூமி
என்றே விண் பார்த்து மனம் தொழுத தந்தை சூசை

குழந்தையைக் காத்திட சொந்த பந்தம் பிரிந்து,
பிறந்த மண் துறந்தவர்க்கு இன்று பொன்னாள்
பிறந்த பொன்னாட்டை மீண்டும் அடைந்திட, பிரிந்தவர்
கூடி மகிழ்ந்திட வாழ்வில் அழகிய திருநாள்

பிள்ளையைக் காத்திட வல்லவன் சொற்றபடி
பிறந்த மண்ணை துறந்து நாடு கடந்தார்
ஆண்டுகள் சில காலம் அந்நிய தேசத்தில்
அகதியாய் வாழ்ந்தவர் மீண்டும் தாயகம் வந்தார்

நெஞ்சில் அமைதி நிலைக்க, நேசம் பொங்கித் ததும்ப,
மனம் தூயவரைத் துதிக்க, அன்னை, தந்தை, மகன்
எனும் ஆனந்த உறவு, பிராயத்திலும், ஞானத்திலும்
பிள்ளை வளர இறை குடும்பமான இன்ப நிகழ்வு

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-16-10-2023

# ஏன் என்னைத் தேடினீர்கள் ?



வருடந்தோறும் பாஸ்காவைக் கொண்டாட,
வாழும் இறைவனைப் போற்றிப் புகழ்ந்து நன்றிப்பலி
செலுத்திட-பாத யாத்திரையாய் “திருக்குடும்பம்”
ஜெருசலேம் பயணிப்பது வழக்கானது



அகவை பன்னிரண்டு நிரம்பிய சிறுவனும்
அன்னை, தந்தையோடு ஆலயம் சென்று
இனிதாய் இறை கடன் முடித்திட-தொடங்கிய
இல்லம் திரும்பிடும் யாத்திரை

ஆண்கள் கூட்டத்தில் மகனைக் காணாது
அன்னையோடு மகனிருப்பார், தந்தை மனம்-
தன்னைத் தேற்றியது, தந்தையோடு மகனிருப்பார்
தேடிய தாயுள்ளம் மனம் ஆறியது

ஒரு நாள் பயணம் இனிதாய் முடிந்திட
ஓய்வு கொள்ளத் தந்தையும், தாயும் இணைந்திட
தனயனைக் காணாத உண்மை-பெற்றோர்
நெஞ்சை இடியாய்த் தாக்கிய கொடுமை

வரமாய் கிடைத்த திருச்செல்வத்தை
தவமாய் காத்திடத் தவறிய தாயுள்ளம்
கன்றை இழந்த பசுவாய் கதறியது-தந்தியறுந்த
வீணையாய் தந்தையுள்ளம் குமுறியது

கண்ணில் நீர் எழுதி கருத்தில் சோகம் சுமந்து
சுற்றத்திடமும், சொந்த பந்தத்திடமும்
மகனைத் தேடிக் களைத்து-காணாத உள்ளங்கள்
தரையில் விழுந்த மீனாய் துடித்துத் தவித்தன.

மதி காணாத அல்லி முகம் மலர-பெரு
நிதியான மகனைத் தருவாய் இறைவா
தந்தை நெஞ்சம் வேண்டித் தவிக்க
தாயுள்ளம் கண்ணீர்த் தவமிருந்தது

கனியான நெஞ்சங்கள் காயமாக, ஆனந்தம்
பூத்தாடும் அன்னை நெஞ்சில் அச்சமும், கலக்கமும்
அழையாத விருந்தாக-சோகச் சுமையால்,
கணவன் தோள் சாய்ந்த முல்லை

கங்கை கண்களில் பொங்கிட, கயல் விழிகளும் கன்றிச் சிவந்திட
கனிமொழியும் விம்மலாய்த் தேய்ந்திட, புத்திர சோகம்
பூ நெஞ்சை வருத்திட, மகனே, என் மகனே, ஏன் என்னைப் பிரிந்தாய்
மறந்தாய், கன்றை இழந்த தாய்ப் பசுவாய் உள்ளம் கதறியது



நெஞ்சுக்குள் புகையும் சோக எரிமலை, விழிப்பதா?
வெடிப்பதா எனத் தவிக்க, தாயைத் தேற்றி
தன் துயர் மறைத்து-நெஞ்சைத்
தாளிட்ட தந்தை அன்புதான் என்னே!

சொல்லியழுதால் கொஞ்சமேனும் தீரும் சோகத்தை
சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல்
நெஞ்சுக்குள் பூட்டி வைத்து -நீறு பூத்த
நெருப்பான சோகத்தில் வெந்த தந்தை

முழுநிலவாய் பூத்த இதயம்-சோக அமாவாசை இருளில்
மூழ்கித் தவித்திட, புது முல்லையாய்ப் பூத்த ஆனந்தம்
சருகாய் வாடிச் சோர்ந்திட, தென்றல் உலாவிடும் சோலையில்,
சோகப் புயல் வீசிய அவலம்தான் என்னே?

பிள்ளைப் பாசம் வருத்த, பிரிவோ தீயாய் நெஞ்சைத்
தீய்க்க, வாடிக் கலங்கி வந்த வழியே செல்வனைத்
தேடி, நா வரள, நீரோடை தேடும் கலைமானாய்
ஜெருசலேம் திரும்பிய பெற்றோர்

அம்மா எனும் குரல் கேளாது
அற்ற குளத்து பங்கயமாய் வாடிய அன்னை முகம்
அப்பா என்ற மொழி கோளாது -மழை
காணாப் பயிராய் கேவிக் கனத்த தந்தை மனம்

ஓய்வு காணாது ஓடி நடந்து, வழியெங்கும்
மகனைத் தேடிக் களைத்த பாதங்கள்
கன்றிக் கனத்து நொந்திருக்க-நோ மறந்தார்

காணத்தவித்த விழிகளும் இமை மூடாது
பார்க்கத் தவித்திருக்க தூக்கம் தொலைத்தார்
பசி மறந்தார், தாகம் துறந்தார்

பேசத் தவித்த மொழிகளும் ஊமையாகிட, காணத் தவித்த
விழிகளுக்கு கண்ணீர் திரையாகிட விம்மித் துடித்த அன்னை,
தாயைத் தேற்றித் தன் துயர் மறைத்த தந்தை

சிந்தையில் நெருப்பை வைத்து, சின்ப் பூவிழியில்
நீரை வைத்து, நெஞ்சில் இறைவனை வைத்து
இராப் பகலாய் நூற்ற தவம் வரமானது

ஆறாத்துயர் பழுங்கனவாக
ஆனந்தம் பூரித்து புதுப் புனலாய்ப் பொங்க
மூன்றாம் நாள் , இளங்கதிரை, முழு நிலவை
ஆலய முன்றலில்  கண்டார்,

வெள்ளமாய் பெருஞ்சோகம் அலைமோத
கண்ணீரும் கம்பலையுமான அன்னை
நெஞ்சில் அம்பு தைத்த கலைமான்போல் தந்தை

சோகக்கடலில் தத்தளித்த அன்பு மனங்கள்
கரையேற இறை நம்பிக்கை புணையானது
மகனைக் கண்ட ஆனந்தம் வெந்த புண்ணான
நொந்த மனங்களை ஆற்ற அருமருந்தானது

திருச்சட்ட வல்லுனர்களோடு உரையாடி, உண்மையின் ஒளி
காட்டி-வினாவும், விடையுமாய் நின்ற திருமகன் கோலம்
கேட்பவர்க்கு பிரமிப்பும் , பெற்றோருக்கு பெருவியப்பானது

மறையறிந்த வேதியரும் மற்றோரும் சூழ்ந்திருக்க
இளையோன் ஓதிடும் அன்பின் வேதம்
சட்டமறிந்த மறையவருக்குப் புதிதானது
இறைவனுக்கு அன்பின் கீதை நாயனமானது

காணாமல் தவித்த தாய் நெஞ்சம்
கண்டு களிப்போடு துடிக்க, துதிக்க
பண்ணாய் ஒலித்த அன்னையின் குரலில் பரிவும்,
பாசமும், சோகமும் கலந்த இராகங்கள்

கலங்கிய தாயுள்ளம் கரைந்தே கேட்டது
மகனே ஏன் இப்படிச் செய்தீர்? உம்மைக் காணாமல்-
தந்தையும், நானும் கலங்கியதை அறிவாயோ?

தாயின் கவலைக்கு அருமருந்தாய்
தனயன் பதிலுருரைத்தார்
அம்மா ஏன் என்னைத் தேடினீர்கள்?

என் தந்தையின் வீட்டில் **நான்** இருப்பேன் என்பதை
அறியாததும் ஏனோ? இருப்பவர் நாமே எனும் தந்தையோ
உள்ளுணர்வின் சிகரம்- பெருங்கோயிலான
உள்ளமே உன்னதரின் உறைவிடம்

பிள்ளைக்குத் தன் அழைப்பு வெள்ளிடை மலையாக
இறைமகன் **நான்** -மொழி கடந்த உண்மை
பெற்றோருக்குப் புரியாத மேன்மை



கண்டு பூவிழிகளும் பூத்தாட-தாய் மனம் தேன் உண்ட
வண்டாய்க் கூத்தாட, தேடிக் கண்ட மகனோ
பெற்றோரின் பேரின்பம், நல்லாயனான பெற்றோரே
பிள்ளைக்கு வற்றாத பேரானந்தம்

இல்லம் வந்தவர் கூடி இன்புற்றார்
பாசம்மிகு பெற்றோரை அன்பு கூர்ந்து
பணிவிடை புரிந்தே-ஞானத்திலும் பிராயத்திலும்
பிள்ளை நாளும் வளர்ந்தார்

தனயன் மொழிகளைத் உள்ளத்தில் பதித்து
வார்த்தை மனுவுருவான அதிசயத்தை-மறவாது
மனதில் தியானித்து மகிழ்ந்து-தாயோ
நாளும் இறைவனை போற்றிப் புகழ்ந்தாள்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-16-10-2023*



# ஏமாந்நம்- சிறுவன் இயேசு



உள்ளக் கமலத்தே உறையும் இறைவனை
நாளும் தொழுது மகிழும் இதயம்
பெருங்கல்லால் மன்னன் ஏரோது கட்டிடும்
பேராலயத்தைக் கண்டு வியந்த பொழுதோ உதயம்




புத்தம் புதுமலராய் விழிகள் பூத்துக்களிக்க
கானக்குயிலாய் நெஞ்சம் இறைபுகழ் இசைக்க
கலைமான்போல் துள்ளி மகிழ்ந்த சின்ன இதயம்

தங்கத்தகடுகள் காலைக்கதிரில் மின்னிட
இளங்கதிராய் ஆலயம் தக, தகவென ஜொலித்திட
கண்கள் கூசிடக்-காண்போர் நெஞ்சைக்
கவரும் தங்கத் திருத்தலமாய்ப் பேரலாயம்.

ஆடையணிகளோடு ஆரவாரமாய் உலாவிடும் ஆசாடபூதிகள்
கூட்டமோ திருச்சங்கம், அங்காடியின் ஆரவார ஓசைகளோ
இறைவணக்கத்திற்குப் பெரும் பங்கம்.



ஆலயமோ கள்வர் குகை, திருச்சட்டமோ இரும்புச்
சுமை, மெய் நெறி விட்டுப் பிறழ்ந்த வேதம்
இறைவன் விரும்பாத பிரசாதம்



பாஸ்கா நாளில், பலியாகும் மிருகங்களோ பல்லாயிரம்
குருதியே, திருமஞ்சன நீராக ஆரவார அபிஷேகம்,
பலியே முதன்மையான குரூர நியதி, கொழுப்பை எரித்து
வாசனை முகரும், அரக்கனாய் இறைவனின் தகுதி.

திருச்சங்க விவாதங்களில்-கருணை
இரக்கம், மன்னிப்பு கசப்பான பகுதி-வரட்டு
ஓய்வு நாள் விதிகளோ தித்திப்பான நீதி

பலியையல்ல இரக்கமே இறை விருப்பம் , நொருங்குண்ட
இதயமே இறை விரும்பும் காணிக்கை பழங்கதையான நிலை
மனிதன் ஓய்வு நாளுக்காய் அன்றி
ஓய்வு நாள் மனிதனுக்கல்ல-வேதமான நிலை

எழைகள் வாழ்வோ அவல நிலை, மதவாத அரியணையில
முடிசூடா மன்னனாய் தலைமைக் குரு, இறை வணக்கம்
பெருவணிகமாகப்-பலி, காணிக்கை பெருநிதியாக
ஆலயமோ ஆசாடபூதிகளின் பொருளாதார மையம்

கோடுவன வேதியர் மறைகள்-குளறுவன
கூண்டுப் பறவைகள், கதறுவன சின்னச் செம்மறிகள்-
புலம்புவன கடன் பட்ட விதவை மனங்கள்
மெய் நெறியைக் கைவிட்ட மதவாத மனங்கள்




ஏழைகளுக்கு இறைச்சி பாஸ்கா நாளின் ஒரு நிகழ்ச்சி
ஊனும், கொளுப்பும் நாளும் உண்டு கொளுத்த
மதவாதிகள் உடல்களிலோ தீராத நோயின் ஆட்சி

பத்திலொரு பாகத்தை உறிஞ்சியும்- தீராத குருதி விடாய்,
காணாமற் போனதோ நெஞ்சுற்ற பக்தி விடாய்-ஆரவாரச்
சடங்குகளோ கழைக் கூத்து இறைவனோ எட்டாத சொத்து
திருச்சங்கத்துக்கு மதமே அரியணை, ஏழை முதுகோ கால்மனை

ஆன்மா லயம் பெறும் ஆலயம்-வணிக மையம்,
மிருகவதையின் இருப்பிடம், பலியும், சடங்கும்,
ஆசாரமும் வெறும் வேஷம்
மதமோ தோஷம்-இளம் மனதிலே ஆவேசம்

கள்வர் குகையை தந்தையின் இல்லமாய் மாற்றுவதே-
தன் அழைப்பு, விழிப்புணர்வால் விம்மிக்
கலங்கியழுத இளநெஞ்சில் கொதிப்பு

எல்லாம் மாறிட இனியொரு புது விதி செய்வோம்
உண்மை, அன்பு , கருணையைத் தவமாக்கி, உள்ளதை,
இல்லாதவரோடு பகிர்ந்து, அன்பே சிவமாக, வாழ்வே தவமாக
வாழும் வாழ்வே -மெய்வழிபாடு, அகவழிபாடு முழங்குவோம்



ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம்,
எதிரிக்கும் அன்பு என்றே முழங்கி
அன்பினால் திருச்சட்டத்தை நிறைவு செய்வோம்

பலியை அல்ல இரக்கம் இறை விருப்பம்
நொருங்கிய இதயமே இறை வேண்டும் காணிக்கை
உள்ளமே பெருங்கோயில், ஊனுடம்பே ஆலயம்
உள்ளுணர்வின் உன்னதமே இறைவன்

தன்னைத் தயார் செய்யத் தனித்தே தவமிருந்தது
தந்தையின் வார்த்தையில் விழிப்புணர்வோடு
பசித்திருந்தே, காலம் வரும்வரை-வார்த்தை
இறை அழைப்பிற்காய் தவமாய்த் தவமிருந்தது.

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-16-10-2023*

# ஆன்மீகப் புரட்சியாளர்-யோவன்

---





பலி, சடங்கு, சட்டம், பாரம்பரியம், சம்பிரதாயம்
எனச் சீரழிந்த மதம், சாரமற்ற உப்பாய்ச் சுவையிழந்து
பாதையில் மிதிபட்டு கிடந்த அமுதம்

உயர்ந்து வளர்ந்தும்-கனிகொடாத மரம் இடத்தை
வீணடிக்க- சட்டம், பலி சடங்கு ஆலயத்தை நாறடிக்க,
அன்புப் பாதையில் பாலையின் வரட்சி ஏழைகளின்
கழுத்திலோ இரும்பு நுகமாய் மதவாதத்தின் ஆட்சி

ஒட்டக மயிராடை, காட்டுத்தேனும், வெட்டுக்கிளிகளும்
உணவு, தவமான வாழ்வு, இடியாய் முழங்கிட்ட
வார்த்தைகளோ, எளியோருக்கு வரப்பிரசாதமும்
வலியோருக்குச் சாபமுமான தேவப்பிரசாதம்

விரியன் பாம்புக் குட்டிகளே!. மதப்போலிகளை
விழித்த குரலில் கண்டனம், பரிசேய -சதுசேய-
திருச்சட்ட வல்லுனர்க்கோ பெருத்த அவமானம்

ஆபிரகாம் எம் தந்தை என்ற வரட்டுத் தத்துவம் போதாது,
அன்பே இறை பண்பு-இரக்கமே அவர் விரும்பும் நோன்பு
நேரம் நெருங்கிவிட்டது, கனி கொடாத மரங்கள்
வெட்டுண்டு அவியாத அக்கினியில் போடப்படும்

ஓங்கி ஒலித்த யோவானின் குரல், மனமாற்றத்திற்கு
அழைப்பு விடுத்திட, அக்கினி அம்புகளான மொழிகள்
அனலாய்ச் சுட்டிட, அஞ்சிப் பயந்த கூட்டம்-
யாதுமறியாதவர்போல் வினவியது

ஐயனே!, பாவிகள் நாம் உய்ய வழி சொல்லும்

இரண்டு சட்டையுள்ளவன்-இல்லாதவரோடு பகிரட்டும்
இரந்து வாழ்வோர் இல்லாதொழிய இருப்பதைப்
பகிர்ந்து -இறைவன் மகிழ அன்பில் வாழுங்கள் புதிய
அறம் மொழிந்தார் இறைவாக்கினர்

வரிதண்டுவோருக்கோ
விதிக்கப்பட்டதற்கு மேலாக எதையும்
வசூலிக்காதீர் என்றார்.

படையினருக்கோ-அச்சுறுத்தி, அப்பாவிகள் பணத்தைப்
பறியாதீர், பொய்க் குற்றம் சுமத்தி பாவம் புரியாதீர்
ஊதியமே போதும் என வாழுங்கள் என்றார்



மதப்போலிகளையும், சமூக அநீதிகளையும் கண்டித்த தவசி
சமத்துவம், சகோதரத்துவம், நீதி நிலைபெற, அன்பே இறைவன்
என்று முழங்கி, ஆயுதம் ஏந்தாமல்-சாத்வீகப் புரட்சிக்கு
அழைப்பு விடுத்த ஞான உபதேசி

மெஸாயா அல்லேன், அன்னார் மிதியடி வாரை
அவிழ்கவும் தகுதியற்றவன் அடியேன், தம்மைத்
தாழ்த்தி இறைமகனைப் புகழ்ந்த அண்ணல்

“இதோ இறைவனின் செம்மறி” “இயேசுவைச்
சுட்டிக் காட்டி” கட்டியம் மொழிந்த இறைநேசன்

“*அவர் வளரவும், நான் குறுகவும் வேண்டும்*”
***வாழ்வின் ஆழ்ந்த சத்தியத்தை*** அறமாய் மொழிந்து
***ஆணவமழித்து கிறிஸ்து உணர்வில் வாழ*** அழைத்த
பாலையில் ஒலிக்கும் குரலான தவநேசன்



இரண்டு சட்டையுள்ளவன் இல்லாத ஏழையோடு பகிரட்டும்
வளமைக்கும், வறுமைக்கும் சவாலாக
நடைமுறைக்கு அசாத்தியமாக -பகிர்ந்து வாழ
***சமத்துவ சகோதரத்துவ சமுதாயத்திற்கான துவக்க விழா***

புதிய சமத்துவ -சகோதரத்துவ சமூகப் புரட்சிக்கு
அழைப்பும், தன்னலம் துறந்து -பிறர் நலம் பேண
சவாலுமாய்-யோவானின் அழைப்பு

பாலையில் ஒலித்த குரல்-பசுமைப் புரட்சிக்கு
பாலை மனங்களில் வித்திட்டது, அன்பில் களிகூருங்கள்-
ஏழை, எளியோர் கண்ணீர் துடைத்து இன்பம் காணுங்கள்
அன்பே சிவம்-அன்பின் வழியே மீட்பு, அன்பே ஆன்மீக ஒளி

புரட்சிப் பாதைகளில் காயாத குருதியும், அவியாத நெருப்பும்
அச்சத்தை ஊட்ட, கத்தியின்றி. இரத்தமின்றி- சத்தியப் புரட்சிக்கு
அன்பினால் அழைப்பு விடுத்த கடுந் தபசி - வாழ்வைத்
தவமாக்கி, உயிரை ஆகுதியாக்கிய சத்தியப் புரட்சி

கேட்க செவியுள்ளவர் கேட்க-செவிடரோ தம் வழி நடக்க-
கொன்றும், சத்தியத்தின் குரலைச் சாய்க்க முடியவில்லை,
விவிலியத்தில் இன்றும் ஒலிக்கும், திருமுழுக்கு யோவானின்
புரட்சிப்பண் திருச்சபைக்கும் கேட்கவில்லை?

குயில்கள் பரிசுக்காய்ப் பாடுவதில்லை
பூக்கள் புகழுக்காய்ப் பூப்பதில்லை
நிலவும் பொன்னுக்காய் காய்வதில்லை
தென்றல் துதிக்காய் வீசுவதில்லை

***அன்பே இறை பண்பு.***
***உண்மையே இறை விரும்பும் நோன்பு***

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
Pax Ravichandra-16-10-2023

# திரு முழுக்கு யோவான்



பாலையில் ஓர் குரல் கேட்டது-விண், மண் அதிர்ந்திட-
பாலையான மனங்கள், அஞ்சி மனம் திரும்பிட
இடியாய் முழுங்கி, கனலாய் வாட்டிட
மீட்பரின் வருகைக்கான கட்டியம் ஓங்கி ஒலித்தது



மானிடரே வழியைத் தயாராக்குங்கள், பள்ளங்கள் நிரம்பிட-
கோணல் நேராகிட, மலையும், குன்றும் தாழ்த்தப்பட
கரடு முரடானவை சீராக்கப்படும்
**மானுடம் எல்லாம் இறை மீட்பை காணும்**

நெருங்கி வரும் கூட்டத்தைக் கண்டு
நெருப்பாய்க் கொதித்தவர்-விரியன் பாம்புகளே
இறை சாபத்தில் நின்று தப்பிக்க
உங்களுக்கு வழி சொன்னவன் யார்?

மனந்திரும்பி நற்கனி கொடுங்கள், மாறாக எம் தந்தை
ஆபிரகாம் என்னும் வரட்டுப் பெருமிதம் வேண்டாம்
இறைவன் நினைத்தால்-காலடியில் கிடக்கும்
கற்களும் ஆபிரகாமின் சந்ததியாய் மாறும்

மரத்தடியில் கோடரி வைத்தாயிற்று
கனி கொடாத மரமெல்லாம்
வெட்டுண்டு அக்கினியில் போடப்படும்

இடியாய் முழுங்கி மின்னலாய் வெட்டிடும் குரலோ
இருண்ட மனச்சாட்சிகளைச் சுட்டெரித்து புடம் போட்டிட
அகநிர்வாண நிலை அறிந்து அஞ்சிய மனங்கள்
அறவழி யாதோ? ஐயனே சொல்லும்



இரண்டு சட்டை உள்ளவன் இல்லாதவரோடு பகிரட்டும்
ஏழையின் நிர்வாணம் மறையட்டும்
பசித்திருப்பவரோடு உணவையும் பகிர்ந்து உண்ணுங்கள்
பசியும் போகட்டும், பகிர்தலில் வாழ்வு இன்புறட்டும்

உலகம் கண்டு, கேளாத சகோதரத்துவத்திற்கும்
சமத்துவத்திற்குமான அறை கூவல், மனச்சாட்சியைப் புடமிடும்
யோவானின் வார்த்தைகளோ எரிதணல்

விதிக்கப்பட்டதற்கு மேலாக- வரி தண்டுவோரே
எதையும் வசூலிக்காதீர்- படை வீரரே
மக்களைச் சுரண்டிப் பிழைக்காதீர்-
ஊதியமே போதுமென்று திருப்தி கொள்ளுங்கள்

அஞ்சிய கூட்டம் கெஞ்சி-ஐயனே
வரவிருக்கும் மெஸியா நீர்தானோ?
பணிவோடு வினவியது



என்னிலும் வல்லவர் வருகின்றார், அண்ணலின்
பாதணிகளின் வாரை அவிழ்க்க அடியவன் தகுதியற்றவன்-
நீரினால் என் திருமுழுக்கு நெருப்பினாலும்,
இறை ஆவியினாலும், அன்னார் அருளும் திருமுழுக்கு

முறமோ அவர் கரங்களில் உள்ளது, கோதுமையைப்
புடைப்பது போல் மானுடமே, உங்களைப் புடைத்து
நல்லவற்றைக் களஞ்சியத்திலும்-பதர்களை
அவியாத அக்கினியிலும் சுட்டெரிப்பார்

ஒட்டக மயிருடை அணிந்த துறவி, வெட்டுக்கிளியும்,
காட்டுத்தேனும் உண்ணும் தபசி, குரலோ இடியாய் முழங்க-
இருண்ட மனச்சாட்சிகளோ அஞ்சி நடுங்க-நீதி வழங்கிடும்
இறை தூதராய் இளையவர் கம்பீரத்தோற்றம்

நீரினால் சுத்தமாவது வெளிப்புறமே, அக்கினியாலும்,
தூய ஆவியாலும் புடம்மிடப் பொன்னாவது,
இருண்ட மனமே, மானுடரே மனந்திரும்புங்கள்

யோர்தான் நதியோரம் பாலையின் குரல் ஒலிக்க
ஓடும் நதியும் உவகையால் பொங்கிப் பெருக்கெடுக்க்
மனம் மாறிட-திருமுழுக்குப் பெற்ற கூட்டம்



மூழ்கி எழுந்தவரெல்லாம் மூச்சிழந்து இறந்து
புது மூச்சோடு புதுப்பிறப்பெடுக்க
கூடி வந்த கூட்டத்தே-அண்ணனும் கண்டார்
அண்ணலை, அருமைச் சகோதரனை-

உம்மிடம் நான் திருமுழுக்குப் பெறக் காத்திருக்க
எளியவன் என்னை நாடி நீர் வருவதும் ஏனோ?
இறை சித்தம் நிறைவேற இருவரும் வழி சமைப்போம்
மொழிந்த இயேசு-நீரில் மூழ்கி எழுந்தார்

***முழு உலகே மனந்திரும்பிடும் அடையாளமாய் மூழ்கி எழ
ஆண்டவரின் ஆவி புறாவடிவாய் அவர் மேல் தங்கிட
இதோ என் மகன், இவர் மேல் நான் பிரியமாயிருக்கின்றேன்
இவருக்குச் செவி கொடுங்கள்***

இன்னிசையான பிரபஞ்ச கானம், திருமகனைப் போற்றிட
மகிழ்ந்த இறைமகன், அண்ணலை அறிந்த
இறைவாக்கினன், இடி எனப் பயந்த மானுடம்



பொங்கிய வெள்ளமோ யோர்தான் நதியில்
பொங்கிடும் ஆனந்தமோ யோவான் மனதில்
காணத் தவித்தவரை கண்ட மனது-விடியல்
கண்ட சேவலாய் கூவிக் களித்த பொழுது

பாலையின் குரல் விடாது ஒலித்திட
பாலை நோக்கித்-தூய ஆவி வழி நடத்திட
தொடர்ந்த இயேசுவின் பயணம்

வரண்ட பாலையில் -அருந்தவமாய்
நாற்பது இரவும் பகலும்-தனித்திருந்து , விழித்திருந்து
தந்தை சித்ததிற்காய் பசித்திருந்த வார்த்தை

விண்ணவன் நற்சேதியை மண்ணவர் அறிந்திட
ஆணவம் கழித்தவருக்கு விழிப்புணர்வு வரமாகிட
மனுவுருவான வார்த்தையின் தவம்

வாழ்வு தவமாகி -இறை அழைப்பு வரமாகிட
***வழியும், உண்மையும், வாழ்வும் "நானே"***
வெற்றுப் புல்லாங்குழலில் வேணுகானம் ஒலித்தது

கேட்கச் செவியுள்ளவர் கேட்டிட-இயேசுவின் கீதை
காண விழியுள்ளோர் கண்டு நடந்திட
சத்தியமாய் அவர் பாதை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
Pax Ravichandra-16-10-2023

# திருமுழுக்கு-நீரும் நெருப்பும்

*When there is darkness, there is no day or night,*
*no being or non being. Only Siva*-Revelation 218
*All this existed reduced to darkness, unperceived, undefined;*
*Shiva literally means "that which is not"*




*Then God said "Let there be light"*—Gen :1-3
*You are the light of the world- Jesus*-Mat 5-14



**" மானிடரை நம் உருவிலும், நம் சாயலிலும் உண்டாக்குவோம்"**
**தம் உருவிலே கடவுள் மானிடரைப் படைத்தார்**
**கடவுளின் உருவிலேயே -ஆணும்**
**பெண்ணுமாக அவர்களைப் படைத்தார்**-Gen 1:26-27

எரியும் முட்செடியில், சடமும் சக்தியும் கலந்தும்,
கடந்ததுமான புரிதல் கடந்த பிரபஞ்ச இருப்பு,
இயம்பியதோ, **இருப்பவர் நாமே எம் நாமம்**
*I am who I am* -(Exodus-3: 2, 14)

இருப்பதெல்லாம் இறையன்றி வேறில்லை,
அறம், பொருள், இன்பம் அறிந்து கடந்து,
வீடு தேடும் மனிதன்
இறைவனேயன்றி வேறு யாருமில்லை



இருமையின், இரு பால்களின், (Transcental & Phenomenal)
சிவ-சக்தி வடிவான முதன்மைச் சக்திகள் இணைப்பாய்
அர்த்நாரிஸ்வர வடிவாய் (Androgynous figure), ஆதிபகவானாய்,
கடலும், அலையுமாய் ஒன்றில் ஒன்றான பிரபஞ்ச இருப்பு
( cosmic consciousness )

தூய உள்ளுணர்வாய், நிர்குண பிரம்மமாய்த்-தியான மனமாய்த்
செயலுக்கு அப்பாற்பட்ட இருப்பாய் (absolute reality), ஆற்றலாய்,
நிலைச் சக்தியாய்(Static) ஆன்மாவாய், ஆண்மையாய்,
தந்தையாய் சிவம், சிவத்தின் வெளிப்பாடே சக்தி
(The masculine- feminine polarity-Tantrism)

சக்தியைச் சடமாக மாற்றும் அன்னையாய், பெண்மையாய்-
தியானத்தின் இயக்க சக்தியாய்த்- தூய ஆவியாய்-
சக்தி (Kinetic) உருவற்ற சக்தி, அன்னை வழியாய்ச்-சடமாய்
உருப்பெறத் தோன்றுவதே படைப்பு




***சக்திக்கு அப்பால்-சடம் கடந்த சூனியமாய்ச் சிவம்***

சிவமே சக்திக்குத் தந்தை-சக்தியே சிவத்திற்குத் தாய்
விளங்கமுடியாத பேருண்மை-ஒன்றில்லாமல் ஒன்றில்லை
சிவனின்றிச் சக்தியில்லை-சக்தியின்றிச் சிவமில்லை

தாய் வழியே உருவற்றது வடிவம் பெறுகின்றது
சக்தி சிவத்தின் தொடர்ந்த தொடர்ச்சி
அருவ, உருவ அடையாளம்-சிவசக்தி

தியானிக்கும் தூய மனமாய்ச் சிவம், தியானத்திற்கான
ஆற்றலாய்ச் சக்தி,தியானத்தின் உயர் நிலையே சமாதி
பொங்கி வழியும் ஆனந்தமே சக்தி
சிவ சக்தி ஒன்றிணைதலே உயர் யோகம்

***பிரபஞ்சத்தின் கூறான மனித உடலில் ஏழு சக்கரங்கள்***

1. மூலாதாரம்
2. சுவாதிஷ்டானம்
3. மணிப்பூரகம்
4. அனாஹதம்
5. விசுக்தி
6. ஆக்னா
7. சகஸ்ரஹாரம்-துரியம்



சகஸ்ரஹாரம் அல்லது துரியம் சிவ அம்சமாக-மூலாதாரத்தில்,
முதுகெலும்பின் அடியில் சுருண்ட சர்பவடிவில்,
சக்தி அம்சமாய்க்- குண்டலினி, மானுடத்தில்
மறைந்திட்ட மறையவன் அடி முடியாய்ச் சக்கரங்கள் ஏழு

குண்டலினி எழுந்து உயர்ந்து சுழுமுனை வழியே
***ஆறு சக்கரங்களைத் தூண்டிக் கடந்து- சஹஸ்காரத்தில்***
சிவத்தோடு ஒன்றாகச்-சிவ சக்தியாக
மனிதன் இறைவனைத் தன்னுள் அனுபூதியல் உணர்ந்திட
ஆன்மா, இறைவனோடு ஒன்றினையத்-தோன்றும்
***பேரின்பமே குண்டலினி யோகம்***

அறிபவன், அறிதல் எனும் வேறுபாடு மறையாமல்
இரண்டற்ற பிரம்மத்தின் தன்மையை அடைய
***அறிதலாய்த் தோன்றுவதே ஞானம்***
***அதுவே சவிகல்ப சமாதி நிலை***

அறிவுக்கு காலம் தேவை
அறிதல் நிகழ்வது கணப்பொழுதே
அதுவே ஞானம்

ஏழு ஸ்வரங்களுக்கள் எத்தனை இராகம்
ஏழு சக்கரங்களுக்குள் இறைவனின் தேவகானம்
ஏழ் கடல் கடந்து, ஏழ் மலையேறி, ஏழ் ஏழ் பிறப்பெடுத்து
மனிதன் இறைவனாகும் பரிணாமம் குண்டலினி யோகம்



விண்ணினின்று மண்வந்து, மண்ணவர் உய்வுற-
மானுட வடிவெடுத்து
விண்ணவனாகும் வழியும், உண்மையும், வாழ்வும்
சொன்ன மன்னவனோ மாதவனே

ஐம்புலனறிவாய் அலைக்கழிக்கும் விலங்கு நிலை
அறிவாய் ஆணவமாய் அலைபாயும் மனமோ ஆதாம் நிலை
பிரக்ஞையின் பேராழத்தில் பெருமுத்தாய், ஏழாம் சக்கரத்தில்
சிவ சக்தியாய் இன்புற கிறிஸ்து பிரக்ஞை நிலை (Christ consciousness)

அறிவுக்கனி உண்டு, ஏதேன் தோட்டத்தை இழந்து
ஆதாமாய் வெளியேறி-நாடோடியாய் அலைந்து
பூரண சரணாகதியில் இயேசு-கிறிஸ்துவாகி
வீடு திரும்பும்-வட்டப் பயணமே நிலை வாழ்வு

ஆண்டு முப்பது யாருமறியாது. அஞ்ஞாதவாசத்தை-
தவமாய் யாத்த தபசி. பாலையில் ஒலித்த
குரல் பரவச அழைப்பாக
அகப்பயணம் தொடங்கிய நாடோடி இயேசு

தன்னை அறிதலே மெய்ஞானம்
தன்னை அறிந்தவன் தந்தையை அறிகிறான்
வாழ்வு தேடலாக-ஆணவம் கழித்த யோகி
பூரண சரணாகதியில் வீட்டை அடையும் ஞானி

மனம் மாறுங்கள், விண்ணரசு நெருங்கி வந்துவிட்டது
திருமுழுக்கே முதல் தீட்சையாக யோவானின் அழைப்பு

குரு, சீடனுக்குத் தீட்சையை நீராலும், நெருப்பாலும் வழங்கிட
முரண்பாடுகளின் வடிவமாய் நீரும், நெருப்பும்
ஒன்றையொன்று நிறைவு செய்யும் அழகு

கீழ் நோக்கிப் பாயும் நீர்-மேல் நோக்கி எழும் நெருப்பு
நீரால் நெருப்பணையும்-நெருப்போ நீரை ஆவியாக்கி
மேல் நோக்கி எழுப்பும் நெருப்பில் படைப்பதெல்லாம்-நெருப்பாக
பஸ்பமாக்கி பின் தானாய் அணையும் நெருப்பு



கீழ் நோக்கிப் பாய்தலுக்கு நீரும்-(சவிகல்ப சமாதி)
மேல் நோக்கி எழுதலுக்கு நெருப்பும் (நிர்விகல்ப சமாதி)
உருவகமான இரு நிலைகள்.

நீரும், நெருப்புமான கலவை மனிதன், உடலின்
பெரும் பகுதி நீராக, உயிர்ச்சுவாசம் நெருப்பாக,
உடல் குளிர்ந்தாலும் மரணம், கொதித்தாலும் மரணம்
இரண்டின் சமநிலையில் அவன் இருப்பு

உள் மூச்சால் பிறந்து-வெளி மூச்சால் இறந்து
ஒரு கணம் பிறந்து- மறு கணம் மடிந்து கணந்தோறும்
ஓர் ஊசலாட்டமாய், பிறப்பு, இறப்பு எனும்
இரு கரைகளுக்குமிடையில் ஓடும் நதியாய் மனித வாழ்வு

கொண்டு வந்ததும் ஏதுமில்லை, கொண்டு போவதும் ஏதுமில்லை
வாழ்வு ஒரு அழகிய கனவே, ஆன்மா அழிவதில்லை
ஆணவ மனமே அழிகின்றது, வாழ்வின் ஆழங்களைச் சுவைத்தவன்
வீடு செல்லும் வழியை அறிகின்றான்-

விழிப்புணர்வு நிலையின் ஏற்றத் தாழ்வில்
தம்மை அறிந்தவர் மொழிந்தார்-நானோ
உம்மிடம் திருமுழுக்கு பெறவேண்டியவன்
என்னிடம் நீர் வருவதென்ன?



யோவானை மனம் மாற்றி- ஆன்மீகப் பாரம்பரியத்தை
நிலை நிறுத்தி ,சீடன் வழியாய் குரு பெற்ற திருமுழுக்கு

குருவின் பாதையைத் தயார் செய்ய, யோவானின்
அழைப்புத் தவமானது, திருமுழுக்கு வழியாய்-இயேசுவை
அடையாளம் காணல் அண்ணலுக்கு வரமானது

தவத்தால், தியானத்தால், பிரார்த்தனையால், தன்னைத்
தயாராக்கும் சீடனின் இருப்பு, இறைவேட்கையால் தவித்திட
உள்ளமும், உடலும் குளிர நீருள் மூழ்கிட, குருவின் சக்தி பாய்ந்திட
ஆணவ மனம் கழிந்திட நிகழும் இறப்பு

எழும்போது குரு அளிக்கும்,**நீராலும். தூய ஆவியாலும்**
**நிகழும்**, இரண்டாம் பிறப்பு-ஞானத்தில் நிலைப்பு

இருமை கழிந்து தூய மனம் மலர்ந்திட, சக்தி புறா வடிவில்
அவர் மேல் இறங்கிட , தூண்டப்பெற்ற குண்டலினி
சுழுமுனை வழியே ஆறு சக்கரங்களைத் தூண்டி மேல் எழுந்து
சிவ இருக்கையான சஹஸ்ஹாரத்தில், நடந்த
சிவ, சக்தி சங்கமம் குண்டலினி யோகமானது



***ஆற்றலான அன்னை தூய ஆவியும், தூய பிரக்ஞ்சையான***
***தந்தையும் இணைந்திட, சிவசக்தியின் ஆனந்த இணைதலில்***
தந்தை உள்ளுணர்வு பூரிக்க, சச்சிதானந்தமாய், ஞானமயமாய்
பிரபஞ்ச பிரக்ஞ்சையாய் இறை மகனாய் மாறிய அவர் திருநிலை
இயேசுவின் இரண்டாம் பிறப்பானது

***இதோ என் பிரிய மகன், இவர் மீது பிரியமாயிருக்கிறேன்***
நீர் என் மைந்தர்-இன்று நாம் உம்மைப் பெற்றெடுத்தோம்
முழு இருத்தலும் பூத்து மகிழ்ந்து (Pslams 2:-7)
சிவத்தின் குரலாய் வாழ்த்திக் களித்திட
இருப்பிலே மலர்தலும், மகிழ்ச்சியும் பூத்தாடியது

இறைவன் அரியணை அமர்ந்திட, ***அறிவு கடந்த***
***அறிதலின் மலர்ச்சியில், இயேசு ஞானம் பெற்ற அற்புத நிகழ்வு***
மானுட பிரக்ஞ்சையின் -அதி உன்னத
மலர்வான சவிகல்ப சமாதியானது



மனமழிந்து சூனியமாய்-இறையுணர்வாய்
சமம் சக ஆதி யாய் மாறும் உன்னத நிலையே சமாதி
அறிபவன், அறிவு எனும் வேறுபாடுகள் மறையாமல்
பிரம்மத்தோடு ஒன்றிக்கும் நிலை சவிகல்ப சமாதி

***மனித உடலில்-தெய்வீக உணர்வு நிலை***
சஹஸ்ஹாரத்தில் இருந்து-இதயத்தின் இருக்கையான
ஆன்மாவின் இருப்பிடமான,அனாஹத சக்கரத்திற்கு இறங்கிட
அறிவு கடந்த அறிதல் மலர்ந்திட
ஞானமாய், கருணையாய் அவர் இருப்பு

இயம்புவதெல்லாம் இறைவார்த்தையாய்
வெற்றுப் புல்லாங்குழலில்-
இறைவனின் வேனுகானமாய் அவர் நிலைப்பு

விழிப்புணர்வு பெற்றவர் இதயத்தால் வாழ்கிறார்
சொல், செயால், சிந்தனை எல்லாம் அன்பு மயமாகிட
-கருணை பொங்கிட அழிவற்ற ஆன்மா நான் எனும் உணர்வு
தெய்வீக உள்ளுணர்வோடு இணைகின்றது
*( Ego transcends to Super Ego)*

மனமழிய, இருமை கழிந்திட, நானும். தந்தையும்
ஒன்றென்ற அக்களிப்பு, மானுட பிரக்ஞ்சையில் நிகழும்
அற்புதமாய் இருமையின் இசையாய், இசைவாய்
மனுமகன், இறை மகன் சமநிலையின் உருவகமாய்
அன்பு, பகை மறைந்திட தோன்றும்
**இருமை கடந்த சுத்த சைதன்யமாய் இயேசு**

அமைதியின், சமாதானத்தின், தூய்மையின்
இசைவாய் புறா உருவமாய்ச் சக்தி-
தூய பிரபஞ்ச உணர்வாய்ச் சிவசத்தி

பிரபஞ்ச உணர்வு எனும் நாணயத்தின்
இரு பக்கங்பங்களாய்ச்-சிவமும், சக்தியும்
***ஆணும். பெண்ணும் தம்முள் ஒன்றாக***
***அர்தநாரிஸ்வரரான அழகு நிலை***




கட உள்ளே கடவுளாவாய், மனம் மாறுதலின் சாரமாக
"மனம் மாறுங்கள்-விண்ணரசு நெருங்கிவிட்டது"
"நான் உங்களுக்குச் சொல்கிறேன்"
அறிதலால் மலர்ந்த உண்மை -அதிகாரத்தோடு முழுங்கிட
அவர் பிரசன்னம் சத் சங்கமாய்-மானுடத்தை ஈர்க்கும்
தெய்வீகக் காந்தப்புலமாய் இறை இருப்பின் சாட்சியமானது

செங்கமலத்தை சூழும் மதுகாரிகளாய்
ஏழை , எளியோர் கூடிக் களிக்க
திருச்சட்டம் கடந்த அன்புப் புரட்சி-அகக்கிளர்ச்சி
பாரம்பரிய மதவாதிகளுக்குச் சவாலானது

ஆணவ மனமழிந்து பெருவாழ்வு வாழ
புதுப்பிறப்பிற்கான-இறப்பே திருமுழுக்கு
மரணமே குரு- குருவே மரணம்
தன்னை இழப்பவனுக்கே நிலை வாழ்வு

நீரால் என் திருமுழுக்கு என்னிலும் வல்லவர்
ஒருவர் வருகிறார், ***அவரோ தூய ஆவி எனும் நெருப்பால்***
உங்களுக்கு திருமுழுக்கு கொடுப்பார்

அவருடைய மிதியடி வாரை அவிழ்க்க அடியவன் அருகதையற்றவன்
-தம் சுளகைக் கொண்டு கோதுமையையும், பதரையும் பிரிப்பவர்
கோதுமை களஞ்சியத்தில் அக்களிக்க
பதர்களோ அணையா நெருப்பில் புலம்பும்

அடி மரத்திலோ கோடரி -நற்கனி கொடாத மரங்களுக்கோ
அபாய அறிகுறி, நெருப்பாய், சமத்துவ சமுதாயப் புரட்சியாய்
இறைவாக்கினராய், நீதியின் வடிவாய் யோவான்




பாதையைத் தயார் செய்த பணியாளர்-தம் சீடர்கள்
இயேசுவைப் பின் செல்ல, இதோ கடவுளின் செம்மறி என்றே
இயேசுவை சுட்டிக் காட்டிய கைகாட்டி

அன்பின், மன்னிப்பின், இறை இரக்கத்தின் அமைதியின் தூதராய்
-உண்மையும், அருளுமான அன்புப் புரட்சியாய்-ஆன்மீக
அகக் கிளர்ச்சியின் புதுவடிவமாய், புதிய அகத்தேடலின்
முதல் குருவாய் உள்ளுணர்வின் புதிய திருப்புமுனையாய் இயேசு

மனித உள்ளங்களில் இறையுணர்வு விழித்திட
“விழிப்புணர்விற்கான” பிரக்ஞ்சையின் எழுப்புதல்
அவர் வாழ்வும் போதனையுமானது

யோவானின் எதிர்பார்ப்பை கடந்த அகக்கிளாசியாளராய்
இயேசு, தீர்ப்பும், தண்டனையுமின்றி அன்பே இறைவன்-
அவரோ நம் தந்தை நான் உங்கள் சகோதரன்
எல்லையில்லாக் கருணையே அவர் இயல்பு

எளிய மனத்தவர் பேறுபெற்றோர்-விண்ணரசு அவர்களதே
இரக்கமுடையோர் பேறு பெற்றோர் இரக்கம் பெறுவர்
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்-பகைவனுக்கு அன்பு,
பலியை அல்ல இரக்கமே இறை விரும்புவது

சிறையிருந்த செம்மலுக்கு-இயேசுவின் போதனையும், வாழ்வும்,
எதிர்பார்த்த சமூக மறுமலர்ச்சிக்கு ஏமாற்றமாய், இடறலாய் மாறிட
சீடரை அனுப்பி-வரவிருப்பவர் நீர்தானோ இல்லையேல் வேறொருவரை
எதிர்பார்க்க வேண்டுமோ? கேள்வியானது
இயேசுவின் இருப்பும், பதிலும் சத்தியத்திற்கு சாட்சியமானது

பெண்மையாய்த் தூய ஆவி -Ruach-உண்மையே அது
***அதுவே சக்தி அதுவே தாய் ஆணாய்த் தந்தையாய் சிவம்***
***அரு, உரு, அறிவு கடந்த மெய்பொருளாய்-இறைவன்***

தட்டுங்கள் திறக்கப்படும்- குண்டலினி சக்தியைத் தூண்டும்
கேச்சார முத்ராவைக் குறிக்க- (திருமந்திரம் -808)
கேளுங்கள் கொடுக்கப்படும்- பக்தி யோகமாக
தேடுங்கள் கண்டடைவீர்- கர்ம யோகமாக-அவர் போதனை

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரந்
தான் பற்றத் தலைப்படுந் தானே-

**திருமூலர் திருமந்திரம்-85**

திருமுழுக்கோ குண்டலினி யோகமாக
உலகின் ஒளி நீங்கள்-உலகின் உப்பு நீங்கள்
உங்களுக்கு நீங்களே ஒளியாகிப்போங்கள்

வானுறைவோன் வந்தே என் நெஞ்சில் தானுறைய-
தேனுறை மலராய் நெஞ்சம்தான் தித்திக்க
யானும் அவனாகி-நானும் தந்தையும்
ஒன்றென்ற பேரின்பப் பெருநிலையில்
யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்றே
மனம் மாறுங்கள் விண்ணரசு நெருங்கிவிட்டது
இயேசுவின் நற்செய்தி- அழைப்பானது.

## நெருப்பு

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

காற்றில் நாணல் ஆட-வெண். கலிங்கம் உடுத்தியவர்
மாளிகையில் வாழ, இறைவாக்கினர் சிறையில் வாட
நற்செய்தி முழங்கி, நலமளிக்கும்
நாடோடிப் போதகராய் இயேசு



நெருப்பால்-நான் பெற வேண்டிய திருமுழுக்கு உண்டு
அது நிறைவேறுமளவும் -மிகவும்
மன நெருக்கடிக்குள்ளாகி இருக்கின்றேன்

இரத்தமும், சதையுமான மானுட உருவுள் சிறையுண்ட
ஒளிரும் ஒளி மேகத்தின் ( Luminous cloud of light )
***தெய்வீகத்தின் விடுதலையாய்-பரி நிர்வாணமாய்***
வசை, கசை, வானுயர்ந்த கல்வாரிச் சிலுவை வழியாய்
அவர் பெற்ற **நெருப்பாலான திருமுழுக்கு**

***நிர்விகல்ப சமாதியாய் இயேசுவின் உடல் உதிர்ப்பு***



குண்டலினி எழுந்து, ஆயிரம் இதழ் சஹஸ்கார சக்கரத்தில்
சிவத்தோடு சங்கமிக்க-ஆயிரம் இதழ் விரித்து அழகிய தாமரை மலர
சக்தி சிவத்தோடு-ஒன்றான நிலையில் மரணத்தில் உடல் கழித்து
***இருப்போடு இருப்பான சம்பூரண மலர்தல்***

வந்த விடமும், போனவிடமும் மறைந்து
சூனியத்தில் ஒன்றாக-இயேசு
கிறிஸ்துவாய் மலர்ந்த தெய்வீக நிலை (Christo Genesis)

***" என் தந்தையே என் தந்தையே ஏன் என்னைக் கை நெகிழ்ந்தீர்"***
முழு பிரபஞ்சமும் மௌனத்தில் இலயித்திருக்க
மனுமகனின் ஆதங்கக் குரல் இரு முறை தவித்தே ஒலித்தது

வார்த்தை கடந்த-மனம் கடந்த இறப்பின் வழியான
உயிர்ப்போ இருப்பானது
***இயேசு, கிறிஸ்துவாய் மலர்தல்*** பதிலானது
பூரண சரணாகதியில் இறப்பவரே உயிர்க்கின்றார்

உன்னுள் வாழும் மெய்யிருப்பிற்கு இறப்பேது?
***நானே நீ-அஹம் பிரம்ம அஸ்மி***
எப்படி நான் உன்னைக் கைவிட முடியும்
***உன் மெய்யிருப்பு நானே***

இரத்தமும் சதையுமான உடலிற்கே இறப்பு
அது நீயுமன்று, நானுமன்று, பிரக்ஞைக்கு இறப்பேது
"இருப்பாயது" "இருப்பவர் நாமே அது"

கடலோடு சங்கமிக்க கணப்பொழுது அஞ்சிய நதி-
மறு கணம் என் சித்தமன்று நின் சித்தமென்றே-
மௌனத்தில் சரணடைந்து சங்கமித்து கடலானது
எல்லாம் இன்பமயமானது

ஆணவத்தின் இறுதித் துளியும் அழிந்திட
ஆழ்ந்துணர்ந்த புரிதலில் இயேசு மௌனத்தில் நிலைத்திட
பூரண சரணாகதியில்-இயேசு, கிறிஸ்துவாக மலர்ந்து
இருப்போடு இருப்பாகி ஒன்றாகிட
இறப்பைத் தொடர்ந்து நடந்த உயிர்ப்பு

ஜீவ துரியத்தில் இறையுணர்வு மலர்ந்திட
தம்மை அறிந்தவர் இறைவனோடு இருந்தார்,
பரா துரியத்தில் தந்தையை அறிந்து
ஐக்கியமாகி, இரண்டாகி நின்றார்,

1.*In Jiva turiya, Jiva realizes its spiritual nature, and is in God consciousness-but duality still exists.*

2. *In Para turiya, Jiva realizes Siva, and is union with HIM, but not united-duality still exists.*

3.*In Siva turiya, Jiva unites in God totally, himself becoming God-the unitive state is reached*

4.*In Beyond turiya, Jiva himself become undifferentiated in God, and attains the subtle Siva state of Luminous Self-Manifestness (Sivarupa)*

திருமூலர் திருமந்திரம் 2826

சிவ துரியத்தில் தந்தையோடு ஒன்றானார்,
துரியம் கடந்த நிலையில்
சிவத்தோடு ஒன்றாகி சிவரூபமானார்-

பூரண விழிப்புணர்வில்-மெய் கழித்து
மகன்-தந்தையாகும் நிலை
வீட்டை அடையும் நிலையானது
முழு இருத்தலியலும் ஆனந்தமானது

பிறப்பறுத்தார், தூய பிரக்ஞ்சையின் உச்சத்தில்
இறப்பறுத்தார், விழிப்பு, தூக்கம், கனவு நிலை
அறுத்தார்-துரியித்தில் இருமை கடந்து
இறையாய் நின்றார்-சச்சித் ஆனந்தம் ஒளிர
ஆகாசவெளியில் ஆடும் கூத்தனானர்

தந்தையும் தானும் ஒன்றாக, தந்தையின் வார்த்தையே
தவமாக, என் சித்தமன்று நின் சித்தமென்றே
சிந்தையறுத்தவர் சிவமாகி நின்றார்

பூரண சரணாகதி-இராஜயோமாக
விழிப்புணர்வின் உச்சத்தில் தம் ஆவியை கையளித்து
இயேசு கிறிஸ்துவாக மலர்ந்தார் (*Christo genesis*)
வாழ்வில் பக்தி யோகம். ஞானயோகம்
கர்ம யோகம் காட்டிய-மகரிஷியாய்
மனுபுத்திரனாய் அவதார புருஷராய் அவர்

***அயம் ஆத்மா பிரம்மம், அஹம் பிரம்ம அஸ்மி-தத் த்வம் அஸி***
நாம் அதுவாக இருந்தும் அதை அறியோம்
மனம் திரும்பி -இயேசுவாய் பிறந்திட-நீராலும்,
தூய ஆவியாலுமான திருமுழுக்கு

என்னைப் பின்பற்ற விரும்பும் எவரும், தன்னலம் துறந்து-
தம் சிலுவையை நாள்தோறும் சுமந்து என்னைப் பின்பற்றட்டும்
என் பொருட்டு தம் உயிரை இழப்பவர் அதை காத்துக் கொள்கிறார்

நெருப்பால் பெறும் திருமுழுக்கிற்கு ***குருவாய் இயேசுவின் அழைப்பு***
இயேசுவாய் இரண்டாம் முறை பிறந்து-பூரண சரணாகதியில்
கிறிஸ்துவாக மலராதவரை, மீண்டும் மீண்டும் கருப்பைகுழியில் விழும்
பிறப்பு இறப்பிற்கிடையேயான ஊசலாட்டமான வாழ்வு துன்பமயமானது
***நாமும் இயேசுவே-அதுவே மெய்யறிவு***
***நம்மிலே கிறிஸ்துவின் இரண்டாம் வருகை***
***அதுவே நிலை வாழ்வு-இறையரசு***

- - - - - - - - - - - - - -





படை கண்டு நடுங்கும் பாம்போ?, விடை காண முடியாத
ஞானத்தின் வடிவோ? மடையாய் பெருகும் ஆரோக்கியத்தின்,
நீண்ட ஆயுளின் உருவோ?, வாழ்வு, சாவை ஆளும்-
வல்லமையே வழிபட "சர்ப்பம்" தெய்வமானது (Nehushtan)

வான்நோக்கி வெண்கலப் பாம்பை உயர்த்திட
விண்ணோக்கி உயர்ந்த விழிகள்
சர்பத்தை கடந்து, வானவனை கூவி இறைஞ்சிட
நோய் நீங்கி குணமான இஸ்ராயேல் மக்கள்

சர்ப்ப வடிவான குண்டலினி மேல் நோக்கி எழுந்து
சஹஸ்ஹாரத்தில் சிவத்தோடு இணைந்திட
சிலுவையில் இயேசு -கிறிஸ்துவாக மலர்ந்து
பிரபஞ்ச பிரக்ஞ்சையோடு ஒன்றானார்




ஆன்மீகத்தின் உயர் விழிப்பு நிலை
**உயர்தப்பட்ட வெண்கலப் பாம்பிந்கு உருவகமானது**



மதங்கடந்து -மதத்தன்மையில் நிலைத்து
சுயம் கழித்து சூனியதமாதல் நம் சுதந்திரம்-
**அதுவே ஜீவனமுக்தி**

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-3.11.2021

***Gender of the Holy Spirit***

*In Christian theology, the gender of the Holy Spirit has been the subject of some debate in recent times.*

*The grammatical gender of the word for "spirit" is feminine in Hebrew (רוּחַ, rūaḥ),[1] neuter in Greek (πνεῦμα, pneûma) and masculine in Latin (spiritus). The neuter Greek πνεῦμα is used in the Septuagint to translate the Hebrew רוּחַ. The pronouns used to address the Holy Spirit, however, are masculine.*

உருவற்றது உருக்கொள்வது பிறப்பு
உருக்கொண்டது உருவிழப்பது இறப்பு
அழிவற்ற ஆன்மா நீங்கள்-அறிந்து அகமகிழுங்கள்

புதிய திராட்சை மதுவை, புதிய தோற்பைகளில் சேமியுங்கள்
பழைய தோற்பைகளில் புதிய திராட்சை மதுவைச் சேமித்தால்
தோற்பைகளும் பாழாகும்-மதுவும் சிந்திப்போகும்
மேலும் பழைய மதுவைக் குடித்த எவரும் புதியதை விரும்பார்
பழையதே நல்லது என்பது அவர் கருத்து




புதிய துண்டெடுத்து பழந்துணிக்கு
ஒட்டுப்போடல் ஆகாது-புதிய ஆடையும் கிழியும்
புதிய துண்டும் பழையதோடு பொருந்தாது

வரண்ட திருச்சட்டங்களுக்கு -அன்பினால் உயிர் கொடுத்து
நம்பிக்கை கடந்து வாழ்ந்தறியும் உண்மையே இறைவன்
அன்பின் புதிய வேதம் அருளிய அதிகாரமிக்க ஞானச்சித்தன்

***வந்து பாருங்கள்***-என்னைப் பின் செல்லுங்கள்
உண்மையே உங்களுக்கு விடுதலை தரும்
உண்மைக்கு வாழ்வைச் சான்றாக்கி, மதவாதப்
பொய்களுக்கு சவாலான தனிமனித அகக்கிளர்ச்சியாளன்

புதுமையும், புரட்சியுமான அன்பின் அதிகாரமிக்க
போதனைகள், சுப்பிரதீபமாய் ஒளிர்ந்திட, மனம்
புழுங்கி குறை கண்ட மதவாதம்-ஏழைகளின் தோழனாய்-
பாவிகளின் நண்பனாய் மாமனிதம்



புதிய சித்தைகளில் புது மதுவை வார்க்கும் ஞானச் சித்தன்-
புதுத் துணியெடுத்து- பழந்துணிக்கு ஒட்டுப்போடாத-வித்யாபரன்
விழிப்புணர்வே நிலை வாழ்வுக்கு வழி-எளிய மனங்களில்
இறை வார்த்தையை வித்தாக தூவிய ஞான உழவன்

மரணவேளையிலும் வாழ்வும், போதனையும் ஒன்றாக
கருணை மழை பொழிந்த தேவன்-நல்ல கள்வனுக்கு
பரகதி ஈந்த தேவன்-உள்ளுணர்வின் உன்னதமே இறைவன்
அன்பே கடவுள் வாழ்ந்து காட்டிய மாமனிதன்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra-17-10-2023*

# விதையும் விதைப்பவனும்

---



இருமை கடந்த “இருப்பாய்” இறைவன்
நல்லோர் மேலும் தீயோர் மேலும்
நாளும் சூரியனை உதிக்கப்பண்ணும்
நற்கருணைநாதன்



மழையால் மண்ணை வளமாக்கும் தலைவன்
மண்ணவர் வாழ்வை வளமாக்க வார்த்தையான
தம் மகனை-“**மன்னாவாய்**”
உலகிற்கு அனுப்பிய தகப்பன்

மனுவுருவான இருமை கடந்த மனுமகனோ
நல்லோர், தீயோர் பேதம் கடந்து கருணையால்
மானுட இதயங்களில்- இறை வார்த்தையை
விதையாய்த் தூவிடும் ஞான உழவன்

பாதையில் விழுந்தன சில-பாறையில்
விழுந்தன சில, முள்ளில் விழுந்தன சில-நல்ல
நிலத்தில் விழுந்தன பல.




பாதை மனங்களில்-நாளும் பல்லாயிரம்
ஆசைகளின் பயணங்கள், ஆசைப் பறவைகள்
அவற்றைப் பட்சித்துப் போட்டன

***புலனின்பம் தேடி “உடலால்” வாழும் மனிதர்***
***பாதை மனங்களோ-பாலை வனங்கள்***

பாதையோரம் பல நூறு காட்சிகள், பயணிக்கோ எல்லாம்
பொழுதுபோக்குகள், ஒரு காதால் வாங்கி மறு காதால் ஓடவிட்டு
உடலால் வாழும் மனிதனுக்கு “வார்த்தையை” வாழ்வாக்க
வரமில்லை, உவமையோ கேட்டு மகிழ ஒரு கதை

பாறைகளில் விழுந்தவை முளைத்தன,
மண்ணின்றிக் காய்ந்துபோயின, தர்க்கம்,
கோட்பாடு, தத்துவம், நம்பிக்கை
தகவல் ***அறிவால்*** வாழும் பாறை மனம்

உவமையைக் கேட்டது, உவப்போடு ஏற்றது
மெய்ஞானமோ அறிவு கடந்தது, அறிவுமனத்திற்கு
ஆன்மீக உண்மை எட்டாக் கனியானது

வாழ்ந்தறியும் உண்மை நிரூபணம் கடந்தது
எய்த வேண்டும் என்ற ஆர்வமும், உத்வேகமும்
அறிவு சார்ந்த ஆணவத்தின் கோலங்கள்

விருப்போடு ஏற்ற அறிவுமனம் -நாட்பட வார்த்தையை
வாழ்வாக்க முடியாது போராடி வேரூண்ட மண் இன்றிக்
காய்ந்து போனது, நிலையற்ற மேல் மட்ட விசுவாசம்-
வார்த்தை ஆழமாய் வேரூண்டத் தடையான சுபாவம்



முள்ளில் விழுந்தவை முளைத்தன
முட்புதர்களோ விரைந்து முளைத்து
நாட்பட அவற்றை அமுக்கிப்போட்டன

ஆசாபாசங்கள் நிறைந்த **இதயத்தின்** ஓரத்தில் விழுந்த
வார்த்தை, உயிர் தரும் வார்த்தையை வாழ்வாக்கிட
உலக இன்பம் அர்ப்பண வாழ்வுக்குத் தடையானது.
அலைபாயும் மனம் கிளைபாயும் குரங்கானதே நிஜம்

***அறிதலாய் கேட்ட வார்த்தை-புரிதலின்றி***
***கதையாய் தத்துவமாய், கவிதையாய் மாறிக்***
***காற்றோடு போன கதையானது***

நல்ல நிலத்தில் விழுந்தவை முளைத்தன
முப்பது, அறுபது, நூறு மடங்காய்ப் பலன் தந்தன.
நம் மனமே வயல்-கல், முள், களை அகற்றி
விதை முளைத்திட விழிப்புணர்வே வழி

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பெருமானுக்கு வாய் கோபுரவாசல்
சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைத்தும் காளமாணி விளக்கே

தவமாய்த் தவமிருந்த இதயத்திற்கு வார்த்தை வரமானது
விளைச்சல் பன்மடங்கானது, பரிபூரண சரணாகதியான
மனம், விதை முளைத்திட நல்ல நிலமானது

அன்பு வாழும் அர்ப்பண இதயம்
இறை வார்த்தையைக் வாழ்வாக்கி கொண்டாட
தூய மனதிற்கே சத்திய தரிசனம் வரமானது

மனித சுதந்திரம் அளப்பெரிது, வாழ்வும் , சாவும் நம் கையில்
மண்ணாய் நாம்-வாழ்வளிக்கும் வார்த்தையாய் அவர்

உணவினால் வாழ்வது உடலே
இறை வார்த்தையால் வாழ்வது உயிரே
உயிரற்ற வாழ்வு நடைப்பிணமே
மெய்யான வாழ்வு சத்திய யாத்திரையே

அன்பே சிவம்-அனைவருக்கும்
அருள் மழை பொழியும் உற்சவம்
ஏற்பதும், மறுப்பதும் அவரவர் சுபாவம்




ஓட்டைப் பாத்திரம் நீரைக் கொள்ளாது
பன்றிகள் முத்துக்களை அறியாது
பழாக்கொட்டைகளை தேடும்-மந்திகளுக்கு
பவழம் பசி தீர்க்காது

வர்ணங்கள் நான்கு -குணங்கள் மூன்று
இராசிகள் பன்னிரண்டாய் மானுடத்தில் பேதங்கள்
பாதையாய், பாறையாய், முட்புதராய்
ஆணவ மனங்களின் தோற்றங்கள்

புலனின்பம் தேடும் பயணிக்கு -உவமை
சொல்லி மகிழ்ந்து மறந்திட ஒரு கதை
அறிவு மனத்திற்கோ உவமை-புரிதலின்றி
அறிதலாய் விவாதிக்க அழகிய தத்துவம்

உணர்ச்சி மயமான மனிதனுக்கு-உவமை, படித்துச்
சுவைத்திடக் கவிதையான, பார்த்து இரசித்திட நாடகமான
கலைப் படைப்பு, தென்றலாய் வருடி புத்துணர்ச்சி
அளித்து மறைந்த வார்த்தைகளோ வெதுவெதுப்பு

பாதை, பாறை, முட் செடி மனங்களாய் **மக்கள்**
**கூட்டம்**, அறிதல் தாண்டி புரிந்திட -தவமில்லாத
மனங்களுக்கோ வரமில்லை

உடல், அறிவு, உணர்ச்சி கடந்து, கூட்டம் தாண்டிய
தனித்துவமானவரே வாழ்வை குருவுக்கு
அர்ப்பணமாக்கி இயேசுவைப் பின் செல்வார்
உளமாற்றத்தில் ஒரு நாள் சீடராவார்

அறிதல் தாண்டிப் புரிதல் தெரிந்திட
உவமையின் கருப்பொருளை-சீடர்களுக்கு
ஆசிராய் வழங்கிய குரு

**உண்மையோ அகமாற்றத்தின் இரஸவாதம்**
**ஒரு நாள் சீடன் குருவாக மாறும் அற்புதம்**



தட்டுங்கள் திறக்கப்படும்-
கேளுங்கள் கொடுக்கப்படும்
தேடுங்கள் கண்டடைவீர்-

அறிதல் கடந்து புரிதல் தேடி, தேடலைத்
தவமாக்கியவருக்கு, வார்த்தை வரமானது-
வாழ்வளிக்கும் உணவானது

உள்ளவனுக்கு கொடுக்கப்படும்-
இல்லாதவனிடத்திலிருந்து
உள்ளதும் பறிக்கப்படும் மெய்யானது

காண விழிபடைத்தோருக்கே சத்திய தரிசனம்
கேட்கச் செயுள்ளோருக்கே பிரபஞ்ச கானம்
அனுபூதியில் உண்மையைப் புரிந்தவர் மகிழ்ந்தார்
உண்மை விடுதலை அளிக்கும் எனத்தெளிந்தார்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# நோன்பு பற்றிய கேள்வி



நோன்பிருத்தல்-மதவழகு
பரிசேயர்களும், நாமும் நோன்பிருக்க
நீரும், உம் சீடர்களும்-உண்டு, குடித்து
விருந்தாடுதல் என்ன அழகு?

பழமைவாத யோவானின் பாதையோ
மாறாத மோஸேயின் மரபு
அகக்கிளாசியாளர் இயேசுவோ
அன்பின் வேதம் அருளும் புதுவரவு



பரிசேயரோடு உறவாடி-மதவாதம் பேணி, மறைமுகமாய்
இயேசுவை சாடும் யோவானின் சீடர்களின் கேள்வி,
ஏழை, பாவிகளோடு உறவாடி-அன்பினால் திருச்சட்டத்தை
புடமிடும் மனுமகனோ மதப்புரட்சியின் அக வேள்வி

உண்டு குடித்து, ஏழை எளியவரோடு உறவாடும் மனுமகனோ,
இறை இரக்கத்தைப் பறைசாற்றும் அன்பே இறைவன் எனும் அகப் புரட்சி
காட்டுத்தேனும், வெட்டுக்கிளியும் உணவாக, ஒட்டக மயிர்
உடையாக -யோவானோ ***இறை நீதியை*** பறைசாற்றும் கடும் தபசி

அழகும் மணமும் அமுதும் இழந்து-மாலை
வருமுன் வாடி உதிரும் மலராய் மதம் மாறிட
பலி, சடங்கு, சட்டமாய் நாறிட
பழமை போற்றும் ஆச்சாரம், மரபு

புத்தம் புது மலராய்ப் பூத்து-மணம்பரப்பி
தென்றலில் ஆடித் தேனீக்களை வரவேற்று
வாழ்வளிக்கும் வார்த்தைகள் புத்துயிர் அளிக்க
அமுதளிக்கும் வள்ளலாய் இயேசுவின் இருப்பு

மனுமகன் இருப்பே சத்சங்கமாய்ச் சுவைக்க
மணவாளன் இருக்கையில்-மணவிருந்தினர்
துக்கம் கொண்டாடல் முறையோ?வாழ்வே இறைவன்-
வாழ்வைக் கொண்டாடுதல் முறையே

இதில் என்ன ஆச்சாரம்?, அபச்சாரம் ?
விருந்தும், மணவாழ்வும்-மெய்வாழ்வுக்குத் தடை
துறந்து வா என அழைக்கும் மதமோ
பூவில்லாப் பாலை, நிலவில்லா வான்சோலை

இறை பிரசன்னத்தில் வாழும் இதயங்கள்-
மணவாளனோடு-மணமகளாய் உறவாடி
விருந்தாடி வாழ்வைக் கொண்டாட
எங்கும் இன்ப மயம், எல்லாம் இறை மயம்

அன்பினால் இன்புற்று-தன் சாயலாய்
ஆணும், பெண்ணுமாய் மனிதரைப் படைத்த இறைவன்
பல்கிப் பெருகி உலகை நிரப்பி ஆண்டு நடத்துங்கள்
வாழ்வைக் கொண்டாட்டமாய் வாழ ஆசீரளித்த ஈசன்

உண்டு குடித்துக் கொண்டாட உணவும், பானமும்
உறவு கொண்டு சந்ததி பெருகிட மணவாழ்வு
அறம், பொருள், இன்பமாய் வாழ்வு
விழிப்புணர்வோடு வாழ்ந்தால் நம்முள்ளே வீடு



உண்டு குடித்து-ஏழை பாவிகளோடு
உறவு கொண்டாடிய மனுமகன்
“வாழ்வே இறைவன்” நானோ “மணமகன்”
வாழ்ந்து மகிழும் போதகன்

உண்ணா நோன்பும், துறவும் இறைவழி, யோவான்,
பரிசேயர் முதுமொழி, உம் போதனையும், வாழ்வும்
புது மொழி, மனுமகனை குற்றம் சொல்ல ஒரே வழி

அன்பே இறைவன்-வாழ்வோ இறை தந்த வரம்
மணமகன் நானிருக்க உலகே மணவீடு
கொண்டாடி மகிழ்தல் வழிபாடு-

மணவாளன் இருக்கையில்-மண வீட்டில்
நோன்பும், துறவும் எதற்கு?
இறைவன் நம் தந்தை-இறை குலம் நாம்
அறிந்து கொண்டாடு

பசியயை வெல்ல நல்லுணவு,-காமனை வெல்ல நல்மனைவி
பசியும், காதற் காமமும் பூர்த்தியாக உடலிலும், உள்ளத்திலும்
திருப்தி, உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை
உலகில் நன்மனத்தவருக்கே இறைதரும் அமைதி

மணவாளன் மறைந்த பின் மணவீடு மணமிழக்கும்
கொண்டாட்டம் மறைந்திட-பலி, சடங்கு, சட்டம்
சம்பிரதாயம் வழிபாடு சார்ந்த மதமாய் மாறிட
நோன்பும், துறவும் வாழ்வில் புகுந்திடும்

உண்ணா நோன்பும், இளமையில் துறவும்
வாழ்வக்கு எதிரான பாதை
அறம், பொருள், இன்பம் அறிந்து கடப்பதே
வீட்டை அடைந்திட முறையான கீதை

உணவும், காதலும் உடலின் இன்றியமையாத நியதி
காதற் காமமே சந்ததி பெருக இறைவன் வகுத்த நீதி
நோன்பும், துறவும் பூண்டு, பசியால் மெலிந்து வருந்தி
காமத்தீயால் வெந்து பொய்மையில் வாழ்வது அநீதி

அறம், பொருள் இன்பம் அறிந்து
விழிப்புணர்வோடு கடந்தால் வாழ்வே மோட்சம்
துறந்து நடந்தால் வாழ்வே நரகம்

உயிர்ப்போடு ஓடும் நதி சங்கமத்தில்
கடலாகி அலை வீசி மகிழ்கின்றது
தேங்கிய குட்டை சகதி நிறைந்திட
நாறித் துர்வாடை வீசுகின்றது

**இறுக்கமான தந்தியில் இசை பிறக்காது**
**தளர்ந்த தந்தியும் இசை மீட்காது**
**மகத்தான இசைக்கு மத்திமமே பாதை**
***வாழ்வெனும் உன்னத இசை மீட்க இதுவே கீதை***

புதிதாய் வடித்த திராட்சை மதுவை, புதிய தோற்பைகளில்
சேமித்தலே சாலச் சிறந்தது, பழையதில் சேமித்தால்
தோற்பைகள் வெடித்திடும், மதுவும் வீணாகும் -

புதிய துண்டெடுத்து யாரும்,பழந்துணிக்கு
ஒட்டுப்போடுவாரும் உண்டோ?, ஒட்டும்
ஆடையை கிழித்திட, கிழிசலும் பெரிதாகும்

பூத்த புது மலராய் மணங்கமிழும் போதனை, காகிதப்பூவான
பழமைவாத மதத்திலோ பூஞ்சணத்தின் துர்வாடை, ஒட்டடை
மணவாளன் பிரியும் நாள் வரும் புரட்சியும், புதுமையும் மங்கி
சடங்கும், சட்டமான மதமாய் மாறிட சீடரும் நோன்பிருப்பார்.

பக்தன் தாவீதை வீழ்த்தியதும் காமம்
ஞானி சாலமோனை தாழ்த்தியதும் காமம்
பசியால் தவித்த தாவீதும் படை வீரரும்
உண்டதோ படையல் அப்பம்

உடலை வருத்துவதைவிட-உளத் தூய்மை மேலானது
பலியைவிட இரக்கத்தை விரும்பும் இறைவன்
நொருங்கிய இதயத்தைப் புறக்கணிப்பதில்லை

நோன்பிருத்தலை விட-அன்பு. இரக்கம்,
உண்மையைக் வாழ்வாக்குதல் மேன்மை
ஏழைக்கு உணவளித்தல் உத்தம நோன்பு
விழிப்புணர்வோடு வாழ்தல் பெருநோன்பு

அன்பைவிட மேலான நோன்பில்லை
உண்மையை விட உயர்ந்த நெறி ஏதுமில்லை
அன்பே சிவமாக-வாழ்வே தவமாக வாழ்ந்தால்
அமைதி வரமாக வாழ்வே கொண்டாட்டம்



வாழ்வே இறைவன்-துறவும், நோன்பும்
இறைவன் வேண்டாத பண்பு
இறைவனை அன்பால், உண்மையால்,
கருணையால் வழிபட்டு வாழ்வைக் கொண்டாடு

தன்னை வருத்துவதில் இன்பம் காண்பது அசுரின்பம்
மதத்தின் பெயரால் மற்றவர் மேல் சுமத்துவது எரிநரகம்
துறவும், நோன்பும் மனிதனைப் புனிதனாக்காது
தூய மனதிற்கே சத்திய தரிசனம் மாறாது

மண்ணால் கட்டிய கூடு-மனிதன் வாழும் வீடு
மண்ணால் மனிதனைப் படைத்து, உழைத்துண்டு உலகை
ஆளப் பணித்த இறைவன் உள்ளுணர்வில் உயர்ந்து
இறைவனாய் மாறு அழைத்த தலைவன்

மனிதனோ மண்ணில்-விண்ணவனோ உள்ளுணர்வின்
உச்சத்தில், உயர்ந்தால் சொர்க்கம், தாழ்ந்தால் நரகம்
மனிதன், விலங்கு நிலைகளுக்கிடையே ஊசலாடும்
உள்ளுணர்வு-வாழும் மண் குடிலோ உடையும் கூடு

மனிதன், விலங்கு இருமை கடந்து
உள்ளுணர்வில் உயர்ந்தால் மோட்சம்
தூய மனதிற்கே சத்திய தரிசனம்

கூட்டைச் சுமந்து வீட்டைத் தேடும் மனித வாழ்வு-
தன்னுள் வீட்டைக் கண்ட மனுமகனோ-வாழ்வை
மணவிழாவாய் நாளும் கொண்டாடும் மணவாளன

மண் வீடு சாய்ந்திட நேரமில்லை, மரணம்
நேர்ந்திடக் காலமில்லை, உடலோ ஒன்பது வாயில்
மண் குடிசை, நீ சுமக்கும் சிலுவை-நாளும்
தூக்கிச் சுமந்து என்னைப் பின்பற்று

கூடு சாயுமுன், குடிசை உடையுமுன்
உள்ளுணர்வில் உயர்ந்து-மானுடா
விழிப்புணர்வோடு வீட்டை உன்னுள் தேடு
எல்லாம் உன்னுள்ளே-கடந்தால் கடவுள் நீ

சச்சித் ஆனந்தமே நம் சுயம்
ஆணவ மனமழித்து-அனுபூதியில் அறிந்திட
அஹம் பிரம்மஸ்மி- அதுவே நாம்
வாழ்வைக் கொண்டாடு

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-17-10-2023*

# தொழு (ம்) நோயாளி



ஓயாது உள்கி உன்னைத் தேடுவேன், உன் அருள் பெறும் நாளே
என் வாழ்வின் பொன்னாள் எனப் போற்றுவேன், என் உடல்
பொருள் ஆவியெல்லாம் உனக்கே அர்ப்பணம், உள்ளம் தாள்பணிய
உன்னைக் காணாமல் மழை காணப் பயிராய் வாடுகின்றேன்



யானே பொய் என் நெஞ்சும் பொய், என்
அன்பும் பொய் வினையேன் அழுதால்
உனைப் பெறலாமே என்பது மெய்தானே?

அங்கமழுகி துர்நாற்றமோ எங்கும், அழகு அழிந்து
விகாரமான துன்பம், நாமமிழந்து குஷ்டரோகியாகியான
பங்கம், ஊரும், உறவும் ஒதுக்கிட அநாதையான அவலம்

இறை சாபம் பெரும் பாவம் -மதமும்
மனதை நொருக்கிட, மருந்தோ, உணவோ இன்றி
பன்றியிலும் இழிந்த பாவியாய் துயருறும் மனம்

ஓசை எழுப்பி, உரக்கக் கூவி-ஊர் கடந்து, எல்லையில்
வாழும் வாழ்வோ சாபம், சாவே வரம் என
வெதும்பும் மனதில் என்றுமே தீராத சோகம்



மலை நின்று மனுமகன் இறங்கிவர, நீரோடை கண்ட
கலைமானாய் துள்ளிய மனம், ஓடித் தாள் பணிந்து
உத்தமரை வேண்டியது நீர் விரும்பினால்
என்னைக் குணமாக்க உம்மால் கூடும்

கருணை வடிவான தெய்வம், கனிவோடு
என்னைத் தொட்டு பரிவோடு உரைத்தது
நான் விரும்புகின்றேன் நலம் பெறுங்கள்

நம்பிய நெஞ்சம் நெகிழ-என் உடலும், புது மலராய் மலர
என்னே எந்தன் ஆனந்தம் இறைவா, பூரித்த நெஞ்சம்
புளங்காகித்து புண்ணியனைப் போற்றித் தொழுதிட
புன்னகை மலர -என்னை அணைத்த தெய்வம்
இயம்பியது நீரும் இறை மகன் என்று.

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# சீமோனின் மாமி

---



ஓடியாடி உழைத்த உடல் ஓய்ந்திட- வாடிடும் மலராய்
வற்றிடும் நதியாய் படுக்கையில் கிடந்த அம்மை
பாடிய கானம் ஓய்ந்திட மௌனத்தின் ஆலாபனம்
சோகத்தில் சொந்தங்களின் கண்ணீர்த் தவம்

காய்ச்சலால் வாடிய அம்மை-மாமிக்கு
கடும் காயச்சல் சீமோன் மொழிந்த உண்மை
கரம் பற்றி குணமளித்த இறைமை
மகிழ்வோடு பணிவிடை செய்த அம்மை



வாடிய பூவிற்கு வசந்தம் வந்திட
வண்ணமலரின் சோபனம்-ஊமைக்
குயிலின் வாய் திறந்திட-மனுமகனிற்கு
கான மழையின் அபிஷேகம்

சேதியறிந்து சேர்ந்த மக்கள் கூட்டம்
குணமாக்கலும் போதனையுமான சத்சங்கம்
மாலைவரை நீடித்த மக்கள் பணி-அதிகாலையில்
தந்தையோடு தனிமையில் உறவாடிய அருட்பணி

தந்தையும், மகனும் தனிமையில் உறவாட
அன்புறவான ஜெபம், அன்பே சிவம்
அனுபூதியில் அறிந்தவர் வாழ்வோ நாளும் தவம்



தேடி வந்த சீமோன் குருவைக் கண்டார்
ஆயனைத் தேடும் ஆடுகளாய் -மக்கள்
உம்மைத் தேடுகிறார் குருவே என்றார்

ஏனைய ஊர்களுக்கும் நற்பணி புரிய நாம் செல்வோம்
ஊர்கள்தோறும் நற்செய்தி, நல்லாயன் நற்பணி
உயிரும், மெய்யும் குணமாக திருப்பணி. கூடும்,
வளையுமற்ற போதகனோ ஏழை நாடோடி

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-17-10-2023*

# நயீம் ஊர் கைம்பெண்



உள்ளம் குமுற, உதரத்தில் சோக எரிமலை பொங்க
பூவிழிகளில் புனல் பாயப் பேதலித்த நின்ற தாய்மை
ஈன்ற ஒரு மகனையும் காலன் கவர்ந்திட
இறைவனை வேண்டி அழுத அம்மையோ விதவை

பாடையில் மகனை வைத்தாள்-மாதம்
பத்து சுமந்த வயிற்றில் சோக நெருப்பை வைத்தாள்
பார்த்துப் பூரித்த விழிகளில் கண்ணீரை வைத்தாள்
வான் பார்த்த விழிகளில் கேள்வியை வைத்த அம்மை

விழியிரண்டில் வற்றாத நீர்க்கோலம்
அழுகையும், விம்மலுமாய் அன்னையின்
மொழியிரண்டில் மாதுயரின் அலங்கோலம்

மகனையிழந்த உறவால் மாதோ அநாதை
துயரம் உருவழிக்க வாழ்வோ கயிறறுந்த பட்டம்,
உறவிழந்த நிலையில் தாயோ நிலவிழந்த கருவானம்.

மூடிய மகன் விழிகளுக்குள் முற்றாய் அஸ்தமித்ததோ-
அன்னை முகம் கண்ட வற்றாத பேரானந்தம் ,
வாடி வதங்கிய உடலுக்குள் ஓடி ஒளிந்ததோ
அம்மா என்றழைக்கும் அன்பு மகனின் ஆனந்தகீதம்

பாடி மகிழ்ந்த இதய கீதத்தைப் பாதியில் கலைத்ததோ
சாவு என்னும் பாவத்தின் கொடிய சம்பளம்,
பாடையில் தூங்கி ஊர்வலமாய்க் காடு போவதோ
காதலில் பூத்த உறவெனும் பூபாளம்

ஒன்றாய் ஊர் திரண்டு வந்தாலும்-தன்னுள்
தனிமையின் வெறுமையைத் தாயுணர்ந்தாள்,
குன்றாய், மலையாய்ச் சுற்றம் நின்றாலும்
மனதில் வெறுமையின் விரிசலைக் கண்டாள்

கண்மணியை காதலில் மலர்ந்த வெண்முத்தை
காலன் கவரக்கண்டாள்-அந்தகிபோல் அடி தடுமாறி
அடிவயிற்றில் அணையாத் தீ மூள-அநாதை
அந்திப் பயணம் தொடர்ந்தாள்.

புயலழித்த பூவனம்போல் துயரழித்த மனமிருக்க,
சோக வெள்ளம்  கரையுடைத்துப் பெருக்கெடுக்க,
கையளவு மனதை கடலளவு துன்பம் மூழ்கடிக்க-
ஒரே மகனை இழந்த தாயுள்ளம் விம்மிப் புலம்பியது

மார்பிலடித்து, ஒப்பாரி வைத்து புலம்பியழுதாள்
கண்ணே, தேனே, என் பொன்மானே என குலுங்கியழுதாள்
விழியிரண்டில் கண்ணீர் வெள்ளம் புரண்டோட
இறைவனைக் கதறி அழைத்தாள் அன்னை

அன்னையின் மாதுயரை அன்பு மகனாய் கண்ட
அநாதரட்சகனோ- யாருமற்ற அநாதைக்கு
கனிவோடு மொழிந்தார் “ ***அம்மா  அழாதே***”

ஈன்றவள் களித்திட “எழுந்திரு” என்றே
முன் நடந்து முதல்வன் பாடையைத் தொட்டு
கண்ணயர்ந்த காளைக்கு கட்டளை இட-பூத்தது
பொழுதென்று பூவாய் மலர்ந்த விழிகள்

மடிந்தவன் உயிர்த்ததை மக்கள் கண்டு வியந்திட
முடிந்தது எல்லாம் முடிந்தது புலம்பிய அன்னையும்
விடிந்தது பொழுது மலர்ந்தது புதுவாழ்வென்று-
மகனை ஆரத்தழுவி மகிழுந்தாள்

மரணத்தைக் கடிந்தவர் மாஇறைவாக்கினரே புகழ்ந்தவரும்,
மக்களைக் காத்திட மாதவனே வந்தார் வியந்தவரும்
வழியும், உண்மையும், வாழ்வுமானவரை-இறைமகன் நீரே
வாழ்த்திப் போற்றி வணங்கி மகிழ்ந்தார்

சருகான மலரும் மீண்டும் புது மலராய்ப் பூத்தாட
செவ்விழிகளிலே ஆனந்தக் கண்ணீர் கூத்தாட
நெஞ்சம் நெகிழத், தாய் மனம் மகிழ்ந்தே உரைத்த நன்றி
கீதாஞ்சலி, மலரஞ்சலி, தூபாஞ்சலியானதே

காலன் கடிந்த கானக்குயில் , கண் விழித்துப் பூபாளமிசைக்க,
பிள்ளை மொழியோ கீதாஞ்சலி, பாடையோடு
வாடி நடந்த சொந்தம் பாட்டோடு பரதமும் ஆடிட-பார்த்த
அதிசயம், பண்ணோடு மொழிந்த துதியோ தூபாஞ்சலி

பெற்றவள் பெருமகிழ்ச்சியில் பிள்ளையும் கலந்திட
அன்னையும் மகனும் அண்ணலைத் தொழுது வணங்கிட
சுற்றமும் சொந்தமும் வியந்து போற்றிட
துன்பக் கண்ணீரும் ஆனந்தக் கண்ணீராய் மாறியதே

கலக்கத்தோடும், ஈர விழிகளோடும் காடு நடந்த கூட்டம்
களிப்போடு வீடு நோக்கி நடைபோட-மரித்த மகனை எழுப்பி
மாதாவின் கண்ணீர் துடைத்த அநாதரட்சகன்

மடிந்த தம் மகனை எழுப்பி-தேவ
மாதாவின் மா துயர் துடைத்த
தந்தை இறைவன்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023



# வருந்திச் சுமை சுமப்போரே



நாடோ சீசர் வசம், கள்வர் குகையான
ஆலயமோ ஆசாடபூதிகள் வசம்
வறுமை, நோய், அறியாமை ஏழைகள் வசம்
ஏழை எளியவரோ இயேசு வசம்

நடைப்பிண வாழ்வோ வாட்டும் சுரம்
பலி, சடங்கு, சட்டமான மதமோ
சுருதி தப்பிய ஸ்வரம்



எளியோருக்கு-இறைமகனாக
புத்துயிரளிக்கும் வார்த்தை சஞ்சீவினியாக
சத்சங்கமாய் இயேசுவின் பிரசன்னம்

வருந்திச் சுமை சுமந்து சோர்ந்திருப்போரே
வாருங்கள் எல்லோரும் என்னிடம்
உங்களை நான் இளைப்பாற்றுவேன்
கனிவும், மனத்தாழ்மையும் என் இருப்பு

என் நுகம் இனிது-என் சுமை எளிது
என் நுகத்தை ஏற்று கற்றுக்கொள்ளுங்கள்
ஆசையே துன்பச் சுமை-ஆணவமே பாரிய நுகம்
ஆணவம் கழித்திட ஆனந்தமே உங்கள் சுயம்

எதை உண்போம், எதை உடுப்போம்
என்ற கவலைகள் வேண்டாம்
உணவை விட உயிரும்-உடையை விட
உடலும் உயர்ந்தது அன்றோ?

வான் பறவைகளைப் பாருங்கள்-அவை
விதைப்பதுமில்லை, அறுப்பதுமில்லை
களஞ்சியத்தில் சேமிப்பதுமில்லை-நாளும்
போஷித்துப் பராமரிக்கும் இறை தந்தை

காட்டுப் புஷ்பங்களைப் பாருங்கள்
உழைத்து, நூற்காதவை உடுத்திடும்-ஆடையோ
வண்ணமும், வாசமும் -தம் மேன்மையிலும்
மன்னன் சாலமோன் அணியாத உடைகள்

இன்று மலர்ந்து நாளை தீயில் எறியப்படும்
வண்ண மலர்களுக்கு இத்தனை மேன்மை என்றால்
நம்பிக்கையோடு தன்னைத் தேடும் மானுடர்க்கு
இறைவன் தரும் மேன்மைதான் என்னே!



வான் பறவைகளிலும் மேலானவர் நீங்கள்
வண்ண மலர்களிலும் அழகானவர் நீங்கள்
நீங்கள் இறை மக்களே-களிகூருங்கள்

கவலை மனதைச் சிதைக்கும் , இறை நம்பிக்கையோ
வாழ்வளிக்கும், உண்டு குடித்து, உடுத்து உறங்கி எழும்
விலங்கு வாழ்வு வாழ்வல்ல, மனித வாழ்வு மேன்மையானது

இறை தந்த கொடையே வாழ்வு
இறைவனுக்காய் வாழ்வதே மானுட மாண்பு
இறை அன்பே மானுட மேன்மை
இறை தன்மையே மானுட இயல்பு



மனிதன் அப்பத்தினால் மட்டுமல்ல-இறை மொழி
ஒவ்வொன்றினாலும் வாழ்கிறான், இறை மக்களாய் வாழ-
இறை வார்த்தையே உங்கள் உணவும், பானமுமாகட்டும்
உங்கள் உயிர் மூச்சாகட்டும்

***அன்பே சிவமாக-உண்மையின் பாதையில்***
***அன்பைத் தவமாக்கி வாழ்வதே வாழ்வு***
***மெய்யான இறை வழிபாடு***

சிறு மந்தையே பயப்படாதே-இறைவன் நம் தந்தை
இறை அரசையும், நீதியையும் முதலில் தேடுங்கள்
எல்லாம் கொடுக்கப்படும்

இருப்பதை இல்லாதவரோடு பகிர்ந்து, திருடவும், பூச்சி
அரிக்கவும் முடியாத செல்வத்தை விண்ணுலகில்
சேர்த்து வையுங்கள், உங்கள் செல்வம் எங்குள்ளதோ
அங்கே உங்கள் உள்ளமும் இருக்கும்

கேளுங்கள் கொடுக்கப்படும்-தேடுங்கள் கண்டடைவீர்
தட்டுங்கள் திறக்கப்படும், கேட்பவன் பெற்றுக்கொள்கிறான்
தேடுபவன் தன்னுள் கண்டடைகிறான்
தட்டுபவனுக்குத் தாள் தன் உள்ளத்தில் திறக்கப்படும்
தூய மனத்திற்கே சத்திய தரிசனம்

மீனுக்குப் பதிலாய் பாம்பையும், முட்டைக்குப் பதிலாய்
தேளையும், தன் பிள்ளைக்கு, எந்தத் தீய தந்தையும்
உணவாய்க் கொடுப்பாரோ?



நல்லவற்றையே தம் பிள்ளைகளுக்கு அளிக்க
தீய தந்தைக்கும் நல் மனமுள்ளபோது
நல் இறைவனைக் கூவி அழைப்பவர் குரலை
நம் தந்தை கேட்க மறுப்பாரோ?

ஆனந்த அமைதி வரமாகும்
உண்மையின் ஆவி கொடையாகும்
உண்மையே உங்களுக்கு விடுதலை தரும்




கனிவும், தாழச்சியும் நிறைந்த மனமே களிப்புறும்
நல்மனத்தவருக்கே அமைதி உரித்தாகும்
எளிய மனத்தவருக்கே இறையரசு
தூயமனத்தவருக்கே இறைதரிசனம்

இரு எஜமான்களுக்குப் பணி புரிய எவராலும் முடியாது-
ஒருவரைப் பகைத்து மற்றவரை நேசிப்பார்
இறைவனுக்கும், செல்வத்துக்கும், பணிபுரிய யாராலும் முடியாது
இரு குதிரைகளில் யாராலும் பயணிக்க முடியாது

இறைவனே நம் தந்தை-விழிப்புணர்வே
நிலை வாழ்விற்குப் பாதை
அன்பினால் இன்புற்று அன்பை வாழ்வாக்குங்கள்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-17-10-2023*

# நூற்றுவர் தலைவன்

வண்ணமிழந்த சித்திரமோ? வடிவம் சிதைந்த சிற்பமோ?
வாட்டிடும் நோயால் மரணப் படுக்கையில் கிடப்பது?
கண்டு கலங்கிய நெஞ்சில் ஈட்டி பாய்ந்த துயரம்
இதயம் இசைத்த பண்ணில் முகாரியின் அவலம்



நெஞ்சை முட்டும் சோகம் நிம்மதியைக் குலைக்க
வாஞ்சையோடு சேவை செய்தவன் பாசம் கண்ணீரை
வரவழைக்க-பாசத்தோடு தடவி-பரிவோடு ஆறுதல் கூறி-
களத்திலும் கலங்காத எ∴கு உள்ளம் கலங்கியது

உணர்வின்றி ஊழியன் படுத்திருக்க
உயிர்க்காற்றும் இருப்பதா, போவதா என
இரு மனதோடு தவித்திருக்க,
உயிர் எடுக்கக் காத்திருந்த கூற்றுவன்

மருத்துவம் கைவிரிக்க, பணமும், பதவியும் பொய்யென்றாக
கற்ற தத்துவம் ஏட்டுச் சுரைக்காயாக, தெய்வம் மெய் என்றாக
காணாத ரோம தெய்வங்களிடம் மண்டியிட்ட உள்ளம்
அருள்க ஊழியனுக்கு நலம், கைகூப்பி மனதார வேண்டியது

வற்றிய குளத்தின் வாடிய ஆம்பலை
முற்றிய நோய் புழுப்போல அரிக்க
பற்றிய நம்பிக்கை கனவாய்க் கலைந்திட
வாழ்வே மாயை என்றான அவல நிலை

இயேசு வருகின்றார் இவ்வழியே-இன்னிசையாய்
காதில் விழுந்த சேதி- மனுமகன் புரிந்த அற்புதங்கள்
நம்பிக்கையூட்ட-தலைவன் முகத்திலோ ஆனந்த சோதி
யூத மூப்பரைத் தன்னிடம் அழைத்துச் சொன்ன சேதி

என் ஊழியன் நலம்பெற -பெருமான்
"***இயேசுவே ஒரே வழி***"-செல்லுங்கள்,
என் துயர் சொல்லி அண்ணலை என் இல்லம்
அழைத்து வாருங்கள் என் ஊழியன் நலம் பெறுவான்

வந்த மூப்பரும், வருந்திடும் தலைவன் நிலை சொன்னார்-
நம்மவர்க்காய்த் தொழுகைக் கூடம் அமைத்தவர்
நல்லவர், தயை கூர்ந்து வாருங்கள்- வந்து -அவர்
ஊழியனைக் குணப்படுத்துங்கள்-

சேதி சொன்னவர்கள் சோதியை வருந்தியழைத்திட
அண்ணலும் அழைப்பை ஏற்று வழி நடந்திட- ஐயகோ
அந்நியன் என் வீட்டிற்கு ஐயன் வருவதா? தீட்டாகுமே-
அண்ணலின் திருநிலைக்கு இழுக்காகுமே



வருந்திய தலைவரும் விரைந்தே சேதி அனுப்பினார்
ஐயனே, என் இல்லம் நீர் வர, நானோ தகுதியற்றவன்-
உம்மண்டை நான் வர எனக்கோ தகுதியில்லை
ஒரு மொழி கூறும் என் ஊழியன் நலமடைவான்

அதிகாரி நான், என், பணியாளரைப் பார்த்து
“போ” என்றால் போகிறான், “வா” என்றால் வருகிறான்
“எல்லாம் உம் வார்த்தைக்கு கட்டுப்பட்டிருக்க”
என் இல்லம் நீர் வருவது முறையா?

இஸ்ராயேலிடம் காணாத விசுவாசத்தை
அந்நியரிடம் கண்டு மகிழ்ந்த மனுமகன்
குணம் பெறுக என்று மொழிந்தே
குணவானை மனமாரப் புகழ்ந்த இறைமகன்

வாட்டிய நோயும் வார்த்தையால் மறைந்திட-கவலை
மூட்டிய தீயும் கருணை மழையால் அணைந்திட
பெருமானைப் போற்றிய நூற்றுவர் தலைவன்
வாழும் இறைமகன் என வாழ்த்திய பக்தன்

***வாடிய பயிரையும் புது மழை அணைத்திட***
***வற்றிய குளத்தையும் புதுப்புனல் நிரப்பிட***
***வாழ்விலோ புதுவசந்தம், தேய்பிறை நிலவிற்கோ***
***புதுப்பௌர்ணமி, தேவமகனிற்கோ புகழஞ்சலி***

**எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# காந்நில் ஆடும் நாணல்

பாலையில் இடியென முழங்கிய கட்டியம்-வஞ்சகி
ஏரோதியாள் சதியால் சிறைப்பட்டு- மன்னன்
ஏரோதின் பாதாளச் சிறைக்குள் முடங்கிட
நிதரிசனமான ஆளும் வர்க்கத்தின் அராஜகம்



சிங்கத்தின் கர்ச்சனையும்-செந்தணலின் சூடும் தணிந்திட
சீதளத் தென்றலாய் வருடி-வருந்திச் சுமை சுமந்து
களைப்புற்ற மானுடம் இளைப்பாற -மனந்திரும்புதலின்
அழைப்பாய் மனுமகன் இயேசுவின் போதனைகள்



ஏழை எளியவருக்கும், ஒடுக்கப்பட்டோருக்கும்
இனிய தோழனாய்- திருச்சட்டத்தை
அன்பினால் புடமிடும் நற்போதகனாய் இயேசு
சத்சங்கமாய் அவர் இருப்பு

அன்பின் வேதமோ இறை மன்னிப்பின் ஆனந்த ராகம்
இடியின் நாதமான தம் வேதமோ எரிதணலின் பாவம்
இயேசுவோ ஏழை எளியவர்க்கு இறை அன்பின் ஜோதி
சீடர் சொல்ல யோவான் அறிந்த நற்செய்தி

அடி மரத்தில் கோடரி வைத்தாயிற்று-கனி கொடாத
மரமெல்லாம் வெட்டுண்டு அக்கினியில் போடப்படும்
புடைத்த நற்கோதுமை களஞ்சியத்தில் மகிழ்ந்து வாழ
பதர்களோ அக்கினியில் எரிந்து சாம்பலாகும்



அக்கினி அம்புகளான வார்த்தைகள் புஸ்வாணமாகிட
மன்னிப்பின் தேவனாய் இயேசுவின் வேனுகானம்,
சுருதி தப்பிய சுரமான தம் தீர்க்கதரிசனம்
சப்தஸ்வரமான இயேசுவோ சத்திய தரிசனம்

ஐயம் தீர்க்க அண்ணல் தம் சீடர்களை ஐயனிடம் அனுப்பினார்
சென்று காணுங்கள், கண்டதையும் கேட்டதையும் வந்து கூறுங்கள்
வரவிருப்பவர் நீர்தானோ? இல்லை இன்னொருவருக்காய்
நாம் காத்திருக்க வேண்டுமோ? என் ஐயம் தீருங்கள்

வாழ்வில் காணாததை வந்த சீடரும் கண்டார்
செவிகள் கேளாத இதமளிக்கும் நாதத்தை
இறை கீதத்தைக் கேட்டே இன்புற்றார்
அன்பே இறைவன் அறிந்து களிப்புற்றார்

ஊனக்கால்கள் நடந்தன, ஒளியிழந்த விழிகள்
பார்த்து மகிழ்ந்தன, மரித்தோர் உயிர் பெற
நோய், நொடி மறைந்திட, எளிய மனத்தோர் வாழ் பெற
இறை செய்தி, இயம்புவதோ அன்புருவான இறைசோதி

தேன் மலர் நாடும் வண்டுகள் போலும்
பசும் புல்வெளி தேடும் மந்தைகள் போலும்
நீரோடை தேடிடும் கலைமான்கள் போலும்
இயேசுவை தேடி அலைமோதும் மக்கள் கூட்டம்

கண்கள் வியந்து மலர-நெஞ்சினில்
நேசம் பொங்கிப் பெருக-இயேசுவின்
காந்தமயமான இருப்பைக் கண்டார்
காதல் கொண்டார்

நீங்கள் கண்டதையும், கேட்டதையும், யோவானிடம்
சென்று மொழியுங்கள்-என்னைத் தயக்கமின்றி ஏற்றுக்கொள்வோர்
பேறுபெற்றவரே, ஆசிராய் முழங்கிய வார்த்தை-ஐயமுற்ற
குரு, சீடர்களுக்கு ஔடதமான கீதை

வண்ண மலரில் தேனுண்டு, போதையில் வண்டுகள் பாட
கன்றுகள் துள்ளி விளையாட, பசும்புல் மேய்ந்த ஆ நிரைகளும்
களைப்பாற, நீர் அருந்திக் கலைமான்களும் நெஞ்சம் மகிழத்
துள்ளி நடைபோட, எங்கும் ஆனந்தம்-எல்லாம் இன்பமயம்

சீடர் சென்ற பின்னர் இயேசு வினவினார்
பாலையில் எதைப் பார்க்கப் போனீர்கள்?
காற்றில் அசைந்தாடும் நாணலையா? பட்டுக்
கலிங்கமணிந்த செல்வச் சீமான்களையா?

மென்துகில் அணிந்த செல்வர் மாளிகையில் வாழ-தபசியாய்
வாழும் இறைவாக்கினரைக் காணவோ வனம் போனீர்கள்?
இறைவாக்கினரிலும் மேலானவர் யோவான், மனிதராய்
பிறந்தவருள் யோவானை விடப் பெரியவர் யாருமிலர்

ஆயினும் இறையாட்சிக்கு உட்பட்டோர் இவரிலும்
பெரியவர்களே, ஆனந்த பைரவியாய் அவர் கானம்
எளியமனத்தவருக்கே வரமான இறை ஞானம்.

சிறையிருந்த செம்மலும் இறை கருணையைப் போற்றி
இறைமகனை மனதாரப் புகழ்ந்தார்,-நீதி கடந்த
அன்பின் அவதாரத்தை வியந்தார்



மக்கள் வியந்து மனுமகனைப் போற்ற-
மதவாத மனங்கள் இகழ்ந்து பரிகாசிக்க
இறை திட்டத்தை புறக்கணித்து
இறை வார்த்தைக்கு செவி கொடாத மடமை

எதற்கு இத்தலைமுறை ஒப்பாகும், சந்தை வெளியில்
குழல் ஊதினோம் நீங்கள் கூத்தாடவில்லை, ஒப்பாரி வைத்தோம்
நீங்கள் புலம்பியழவில்லை, விளையாட்டுப் பிள்ளைகளின்
கூப்பாடு, சிறுபிள்ளைத்தனமான மதவாத நிலைப்பாடு

நல்லுணவும் உண்ணாது, திராட்சை மதுவும் பருகாத
தவசி, திருமுழுக்கு யோவானோ பேய் பிடித்தவன்
உண்டு, குடித்து விருந்தாடும் மனுமகனோ
பெருந்தீனிக்காரன், குடிகாரன், பாவிகளின் நண்பன்

தகவல் அறிவோ கிளிப்பிள்ளை வாதம்
ஞானம் மெய்யானது என்பதற்கு-ஞானிகளின்
வாழ்வே சான்று, மாறாத அன்பின் வேதம்

மனந்திரும்பி பாவ வாழ்வை விட்டொழியுங்கள்
நோன்பிருந்து மன்னிப்பை வேண்டுங்கள்-பற்றறுத்து
சீடர்களே தவம் புரியுங்கள்-யோவானின் போதனை

இறை இரக்கத்தில் நம்பிக்கை வையுங்கள்
நோன்பிலும், மன்னிப்பு மேலானது
பலியிலும் இரக்கம் உயர்ந்தது
பற்றறுத்த துறவிலும்-பணி வாழ்வு உயர்ந்தது

நீரால் அவர் நல்முழுக்கு-தூய ஆவியால் மனுமகனின்
திருமுழுக்கு-மனுவுருவான வார்த்தைக்கு பாலையில்
ஒலித்த குரல் கட்டியமானது-வார்த்தையோ-
மானுடருக்கு வழியும், உண்மையும், வாழ்வுமானது

நீதியும், இரக்கமும் சார்ந்த
பழமையும், புதுமையுமான போதனைகள்
யோவானின் இறைவனோ வல்ல நீதிபதி,
இயேசுவின் தந்தையோ கருணையின் அதிபதி

**எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# அன்பே சிவம்-இயேசு





வாக்களிக்கப்பட்ட வளநாடோ-சீசர் வசம்
வாழ்விழந்த விதவையின் குடிலோ கடன்காரன் வசம்
ஆலயமும், மதமும் திருச்சங்க வசம்-ஏழை
எளிய மனங்களோ இறைமகன் இயேசுவின் வசம்.

நலிந்த மனங்களைக் குணமாக்கும் தேவ வைத்தியனோ
இறைவன் நம் தந்தை என விளம்பிடும் அன்பன்
லேவி, பாவி, விபச்சாரிகளோடு-உண்டு குடித்து
உறவு கொண்டாடும் நல்விருந்தோ நாடோடிப் போதகன்

ஏழையர் நுகத்தை முறிக்கும் திருச்சட்டத்தை
அன்பினால் புடமிடும் ஞானச் சித்தன்
ஓய்வு நாள் மனிதருக்கே ஓங்கி முழங்கிடும்
அன்பின் அகக்கிளர்சியாளன்

நல்லாயனாய் உலா வந்த உறவு
நாளும் தேன்மலரைச் சுற்றும் மக்கள் கூட்டமோ
வண்டும், தேனீயுமான அன்பின் கூட்டுறவு

கண்கொள்ளாக் காட்சி கண்டு-மனம் வெந்த
மறை வல்லுனன்-குற்றம் கண்டு எள்ளி நகையாட
போலிப் பணிவோடு வினவினான்-ராபி
திருச்சட்டத்தில் உயர்ந்த கட்டளை எது?

இறை கட்டளைகள் போதாது எனத் திருச்சங்கம் விரித்தெழுதிய
கட்டளைகளோ பல நூறு, மோயீசன் வாரிசு நாம் எனும்
ஆணவம், பலியை அல்ல இரக்கத்தை விரும்பும் இறைவனுக்கு
மிருக பலியே உவந்த பலி எனும் விதண்டாவாதம்

திருச்சட்டம் வகுத்தபடி ஆடை அலங்காரம்
ஆசாட பூதிகளுக்கு வெளிப்பூச்சான கோலாகலம்
மதமே மக்களுக்கு சுமையான அலங்கோலம்
மதவாதிகளுக்கோ ஆளும் அதிகாரம்

அன்பே சிவம் என்னும் அற்புதனோ
விழிப்புணர்வின் மணிமுடி-அன்பின் சிகரம்,
சட்டமே மதம் எனும் விதண்டாவாதியோ
இறிந்த மதவாதத்தின் அடிவருடி

சட்டம் இன்றேல் நீதியில்லை, சடங்குகள் இல்லை
சம்பிரதாயங்கள் இல்லை, ஏன் வேதமே இல்லை?
வீறாப்பாய் நாமே இறை பிரதிநிதி என
மார்பு தட்டும் மதவாதம்



அன்பினால் திருச்சட்டத்தை நிறைவு செய்யும்
இறை பித்தன் மொழிந்தார், உன் கடவுளாகிய ஆண்டவரை
உன் முழு இதயத்தோடும், உன் முழு அறிவோடும்
உன் முழு ஆன்மாவோடும் அன்பு செய்வாயாக
உன்னைப்போல் உன் அயலவனையும் அன்பு செய்வாயாக

அன்பினால் உன்னை முழுமையாக்கு நீ இறைவனாவாய்
எதிரிக்கும் அன்பு என்றே அவர் முழக்கம்-நாம்
எல்லோரும் இறை மக்கள் என்றே அவர் விளக்கம்

அறிவினால் சட்டம் ஆள்கின்றது, தீர்ப்பிட்டுத்
தண்டிக்கின்றது, அன்போ அரவணைத்து
எதிரியையும் மன்னிக்கின்றது



திருச்சட்ட மனம் இயம்பும் -அஞ்சத்தக்க
நீதியின் தேவனோ எட்டாத வானகத்தில்,
அன்பு மனம் இயம்பும் இறைவனோ
எளிய உள்ளங்களில்

அறிவைச் சார்ந்த சட்டமோ அமுலாக்கக் கூடியது
சட்டத்திற்கெதிராய் சட்டமுண்டு
அன்போ இதயம் சார்ந்தது சுயமானது
அமுலாக்க முடியாதது-எதிர்ப்பற்றது

இரு வேறுபட்ட தளங்களில் வினாவும், விடையும்
சட்டத்தின் கேள்விக்கு அன்பே பதிலானது
***சட்டமே மதம் என்ற வல்லுனன்***
***அன்பே சிவம் என்ற அகக்கிளர்ச்சியாளன்***

***கடவுள் என்பது இருப்பு– முழுமை***
***அன்பின் இருப்பாய், முழுமையாய் இறைவன்***
இறைவனைக் காணமுடியாது-காணமுடியாத
இறைவனை அன்பு செய்யமுடியாது

உன்னை அன்பு செய்வதுபோல்
உன் அயலானையும் அன்பு செய்வதன் மூலமே
இறைவனை அன்பு செய்ய முடியும்.



காணமுடியாத இறைவனின் காணக்கூடிய தோற்றமாய் படைப்பு
இருப்போ படைப்பாய் மாறிய வியப்பு- இயற்கையையும்
உயிர்கள் அனைத்தையும் அன்பு செய்வதே-
இறைவனை அன்பு செய்யும் அழகிய பண்பு

உன்னை நீ அன்பு செய்யாவிடில்
உன்னால் அயலவனை அன்பு செய்ய முடியாது
தன்னை அன்பு செய்தலே மதத்தன்மை

கடவுளையும், உன்னையும், உன் அயலானையும்
அன்பு செய்தலே முதற் கட்டளை
அன்பு அமுலாக்க கூடிய கட்டளையல்ல
அன்பு சுயாதீனமானது-உள் ஆழத்தில் இருந்து பிறப்பது

அன்பே நம்மை இறைவனோடு இணைக்கும் ஆனந்த உறவு
ஒட்டிப் பிறந்த தொப்பிள் கொடி-வந்தவிடமும்
வாழுமிடமும், போகுமிடமும் ஒன்றான இருப்பே
இறைவன் -அதுவே நம் மெய் இருப்பு

விண்ணும், மண்ணும் இறை மாட்சி
தூய மனத்தவருக்கே இறை காட்சி
நண்பனும், எதிரியும் இறை சாயல்
இருமை கடந்த அன்போ இறை இயல்




அன்பே மானுடத்தின் மாட்சி-அன்பு,
உண்மையை வாழ்வாக்குதலே மெய்யான வழிபாடு
ஈசன் எனக்கருதி எல்லோரையும் நேசித்தால்
வாழ்வே வழிபாடாகும்-உலகோ இன்பமயமாகும்

***விழிப்படைந்தவரின் விடை -அறிவுக்கல்ல,***
***இதயத்திற்குப் பதிலானது-கேள்விக்கல்ல***
***உள்ளார்ந்த தேவைக்கு மருந்தானது***

உணர்வுகளின் மையம் இதயம்-உள்
***உணர்வுகளின் ஒத்திசைப்பில் தோன்றும்***
***இதயத்தின் பிரார்த்தனையே மெய்யான ஜெபம்***
உன் முழு இதயம்தோடும் அன்பு செய்தலே ஜெபம்

எண்ணங்களின் கூட்டமே மனம்
***எண்ணங்களின் ஒத்திசைப்பில்***
மனமழியப் பிறப்பதே தியானம்-முழு
அறிவோடும் அன்பு செய்தலே தியானம்



ஜெபம் உணர்வுகளின் ஒத்திசைவாக, தியானம்
மனதின் ஒத்திசைவாக, முழுமையான ஒன்றினைவால்-
இதயம், இறைவனை-அப்பா!, தந்தாய் என உறவு கொண்டாடி
நன்றியே ஜெபமாக-அன்பினால் போற்றுகின்றது

எண்ணங்களையும், உணர்வுகளையும் கடந்ததாய்
ஆன்மா-ஆன்மாவே நாம்-அதுவே நம் மெய் இயல்பு
***ஜெபத்தையும், தியானத்தையும் கடந்திட***
***தோன்றும் தூய மனமே ஆன்மா***

இதயமும், அறிவும் ஒரு முக்கோணியின்
இரு பக்கங்களாக-உணர்வு பிராத்தனையாக,
சிந்தனை தியானமாக-உள்ளுணர்வின் உச்சத்தில்
இரண்டும் சந்திக்கும் இடமே ஆன்மா

***இதயமும், மனமும் சங்கமிக்கும் இடமே ஆன்மா***
***அதுவே நம் மெய்யிருப்பு***
மானுடா நீ மனமல்ல, இதயமல்ல,
அழிவற்ற ஆன்மா-சின்மயன் நீ




மதங்கள் உங்களைப் பாவிகள் எனத் தீர்ப்பிட
அன்பு உங்களை இறைமக்கள் எனப் போற்றிட
அன்பின் அத்திவாரத்தில்
இறைவாக்கும், திருச்சட்டமும் நிறைவாகும்

***அன்பை அறியாதவன் எதனையும் அறியான்***
***இறைவனாய் இருப்பதோ உன்னில் இருப்பது***
***உன்னில் இருப்பதோ உன் அயலவனிலும் இருப்பது***
***ஆன்மா நீ என அறிந்தால் ஆனந்தம்***

***ஆன்மாவிற்கு பேதங்களில்லை***
மனம் அழிந்தால் எல்லாம் இறைவடிவமே
உன்னை அன்பு செய்வதும், அயலவனை அன்பு செய்வதும்
இறைவனை அன்பு செய்வதும் ஒன்றே

அன்பே இறைவன் என அறிந்துணர்ந்த இயேசு ஒரு தேனீ-
தேன்மலரின் இருப்பிடத்தை-***அமுதுண்ட தேனீ***
ஆனந்தமாய் நடனம் ஆடிக்காட்டுவதுபோல்-நடராஜனாய்
நாடோடிப் போதகனின் ஆனந்தக்கூத்து

என்னைப் பின் செல், வந்து பாருங்கள் -அன்பின் அழைப்பு
இன்றும் ஒலிக்கின்றது, ***கட உள்ளே- கடவுளாவீர்***

“அன்பே இறைவன்” என்ற நாடோடிப் போதகன்
தம்மை வதைப்போரையும் மன்னிக்க
தந்தையை மன்றாடிய இறை மகன்
வாழ்வும், போதனையும் ஒன்றான தூயவன்



அன்பினால் தன்னை முழுமையாக்கி
கிறிஸ்துவாய் மலர்ந்த-அன்புக்
காவியத்தின் நாயகனோ இறை மகன்



***இயேசுவாய் இரண்டாம் முறை பிறவாதவர்
கிறிஸ்துவாய் மலர முடியாது
கிறிஸ்தவனாய் வாழ்வதை விட- இயேசுவாய்
உண்மைக்கு சாட்சியமாய் மடிவது மேலானது***

அன்பினால் உன்னை முழுமையாக்கு நீ இறைவனாவாய்
வேதம் கடந்த நாதம் சாதி, மத, பேதம் கடந்த அன்பே வேதம்
மானுடத்தை இணைக்கும் அன்பே  வாழும் இறை கீதம்

பிரிவினைவாத மதங்களுக்கே செத்த வேதம்
பிணவாடை வீசும் மதங்களால் அமைதிக்கே விநாசம்
பிணம் எங்கேயோ கழுகுகளும் அங்கே நிதரிசனம்



குருவாய், லேவினாய் கடந்து போகும் மதம்
நல்ல சமாரியனாய் வீழ்ந்தவனுக்குக் கைகொடுக்கும்
அன்பே உயர்ந்த இறை குணம்.

விபச்சாரியைக் கல் எறிந்த கொல்வதோ திருச்சட்ட நீதி
மன்னித்து புது வாழ்வு கொடுப்பதோ அன்பின் மாறாத நியதி
இடது கன்னத்தில் அறைபவனுக்கு-வலது கன்னத்தையும்
காட்டுங்கள்-எதிரியையும் அன்பு செய்யுங்கள்

அன்பிற்கு எதிரி யாருமில்லை-உலகில் மதங்களுக்கு,
மதங்களே எதிரிகளான அவலம், அன்போ அகவழிபாடு
-மதமோ புறவழிபாடு, மதம் கடந்தவன் ஆன்மீகவாதி-
முழங்கிடும், அன்பே வேதம் எனும் அழகிய நீதி

வான் மழைபோல்,  மலை அருவிபோல்-உள்
உணர்வின் சிகரத்தில் உதிரும் பொன் மொழிகள்

அன்பு மனம் சட்டம் அறியாது, சட்ட மனம்
அன்பைப் புரியாது, இரு துருவங்களாய் அவை
சட்டத்தின் கேள்விக்கு அன்பே பதிலானது



கிளிஞ்சல்களோ கரையில்-முத்துக்களோ ஆழ்கடலில்
கற்களோ தரையில்-வைரங்களோ பூமித்தாய் வயிற்றில்
கண்ணாடிக் கற்களை தேடுபவனுக்கு -வைரத்தின்
அருமை புரியாது-காகிதப்பூக்களை மோகிப்பவனுக்கு
வண்ணமலரின் அருமை கிட்டாது

கதிராலும் போகாது, விரிசுடராலும் நீங்காது, ஈரமதியாலும்
போகாது மதவாதத் திமிர்,அறியாமை போக்கி, ஆணவம் நீங்கி
சத்திய தரிசனம் காண வார்த்தையின் அழைப்பு
சத்சங்கமாய் அவர் இருப்பு

**எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# தையலும், பரிமள தைலமும்

-----------------------------------------------

நெஞ்சினுள் கள்ளம் வைத்து, நேயமாய் விருந்துக்கழைத்து
அதிதிக்கு அபச்சாரம் செய்யும் சீமோன் கண்டே-வஞ்சகப்
பரிசேய நெஞ்சங்கள் குதூகலிக்க, சஞ்சலத்தில் ஆடும் மாதர்
விழிகள்போல்-சரவிளக்கின் செஞ்சுடர்களும் காற்றில் ஆடினவே





படிந்து கிடந்த தெருப்புழுதியைக் கடிந்திட
நடந்து களைத்த அதிதியின் கால்களுக்கு நீர் ஈயவில்லை
ஆடிச்சூட்டில் வாடி -காற்றில் அலைந்து தோள் உறங்கும்
கருங்குழல்களுக்கு பரிசேயன் நெய் ஈயவில்ல

செம்மண் புழுதிபட்டு சிவந்த பாதங்களோ வாடிய செங்கமலம்
அம்மான் மகன் தோள்தொட்டு ஆடிய குழல்களோ, நெய் காண
வறுமையின் கோலம்-விருந்தாய் அழைத்து அதிதிக்கு அபச்சாரம்
சிறுமை பொறுத்த பெருமானோ அன்பின் அவதாரம்

சுற்றும் வையகமும் சுந்தரக் கதிரால் ஒளிபெற,
வான் கொடையால் மண்ணும் வளம் பெற
அருளிழந்த மானிடரும் மனுமகனால் புத்துயிர்பெற
புகழ்ந்தார் எளியோர், இகழ்ந்தார் மதவாதிகள்

சுந்தரச் சுடரொளி சுற்றிலும் ஒளிர்ந்திட
இளங்கதிராய் இயேசுவும் பந்தியிலமர்ந்திட
குற்றம் கண்டு குந்தகம் புரிந்திடும்
பரிசேயரும் கூட்டமாய்க் குழுமியிருந்தார்

கண்ணையும், கருத்தையும் கொள்ளை கொள்ளும்
உண்மையின் பேரழகு -இறை வார்த்தையை
பெருவிருந்தாய் அளிக்கும் திருவிருந்து-பரிசேயன்
சீமோன் வீட்டில் விருந்தாய் அமர்ந்திருந்த பேரழகு

இடைதொட்டு, அன்ன நடையோடு இசைந்தாடும் பூங்குழலில்
அகிலின் நறுமணம், கடைந்தெடுத்த அழகுச் சிலையோ காஞ்சனம்
வேலோ, கயலோ விழிகள், தாமரையோ, தாரகையோ நயந்திடத்
தளிர்ப்பாதங்கள், முழுநிலவே, பனிமலரோ மயங்கிடும் முகம்

இரைதேடும் நரியிடையே உயிர் பிழைத்திட , விரைந்தோடும்
கலைமானாய் நடை துடிக்க வந்தவள் நடந்த
சிறுமை கண்டு மனம் நொந்தாள், கொடி இடை
வளையக் குனிந்து பாதம் அமர்ந்த தோகை

உள்ளமும் சுக்கு நூறாய் உடைந்து நொருங்கிட
மடை உடைத்த வெள்ளம்போல் சோகம் பெருகிட
அள்ள அள்ள குறையாக் கருணை வள்ளல் தேடி
அமைதி நாடி வந்து நடக்கும் அபசாரம் கண்ட ஆயிழை

நீர் கொடாதோர் பாலை நெஞ்சை கால் வண்ணம் சொல்ல
நெய் கொடாதோர் கல்நெஞ்சைக் குழல் வண்ணம் சொல்ல
கார் கொண்ட வஞ்சகர் நடுவே கதிரவனைக் கண்ட கோதை

பூ நெஞ்சும் கரைந்து விழிநீர் பூக்களாய் உதிர்ந்திட
நினைவில் மாதவன் கருணை என்றும் நிலைத்திட
அண்ணலின் திருவடி அமர்ந்து அழுத அபலை

நீல நயனங்கள் வான்மழை பொழிய
நீர் பட்டு பாதங்கள் நீரல்லியாய் மலர- அலை
அலையான கார்கூந்தல் பாதங்களை அணைத்துத் துடைக்க
விலையான நறுமணதைலத்தால் வீடெங்கும் மணந்த பரிமளம்

தலையையும், பாதங்களையும் தைலத்தால் அபிஷேகித்த
கீதாஞ்சலி, கவிதாஞ்சலி, புஷ்பாஞ்சலி, தூபஞ்சலி கடந்த
அன்பு மகளின் கலையழகான இதய அஞ்சலி

மங்கை விழி நீர் மறையோன் கழல்கழுவி
மாரி பொருகூந்தலால் துடைத்து
நங்கை செவ்விதழ் திருவடிகளை முத்தி செய்து
நயந்து நன்றியைப் பக்தியோடு சொன்னது

எங்கும் பரிமளம் மணக்க-திருவடிக்கும், திருமுடிக்கும்
எண்ணெய்க் காப்பு வைத்து, குருவடியை
முத்தி செய்து பக்தையாய், பாத பூஜை செய்த அன்பு மகள்
பாததீட்சையான அமைதியோ குருவின் அருள்

மழையெனப் பொழிந்த கண்ணீர் மாதுயரைக் குறிக்க
விலைமகள் பாவம் பொறுப்பாய் என்றே, தலைமகன் பாதம்
தன்னிதழ் பதித்து-நின்னடிமையெனத்
தன்னை காணிக்கையாக்கிய காஞ்சன மங்கை

விலை கொடுத்து உடல் சுவைத்து, அழகோ பெருவிருந்தென்ற
காமுகர்களும், கலையுள்ளம் கண்டு மகிழும் அழகை
காமுகனாய் மனதில் சுவைத்த வேடதாரிகளும்
வேசி, விபச்சாரி என்று தூற்றித் தம்மை மறைத்தார்

விலைமாதை அறியாதவரும் , நிலை வாழ்விற்கு
வழிகாட்டும் இறைவாக்கினரோ?
மலையளவு ஐயம் சீமோன் மனதில் எழ-மனுமகன்
உரைத்தார்உவமையாய் கடன்பட்ட இருவர் கதை



தன்னிடம் வெள்ளி ஐம்பதும், ஐநாறும்
கடன் பட்ட இருவரை மன்னித்த கருணாநிதியை
யார் அதிகம் நேசிப்பான்?

இருவரில் பெருங்கடன் பட்டவனே-பேரன்பு காட்டுவான்
மறுமொழியை சீமோனும் மயக்கமின்றிப் பகர
சரியாய் பதிலுரைத்தீர் சீமோனே

உம் இல்லம் அழைத்த அதிதிக்கு நீரோ உள்ளம் மகிழ
நல்வரவு கூறவில்லை, நடந்து களைத்த பாதங்கள் குளிர
நீர் தரவில்லை, முறையறிந்து அன்பு முத்தமளிக்கவில்லை
நெறியறிந்த நீர் தலைக்கு எண்ணெய் தரவில்லை

கறைபடிந்தவள் என நீர் கூறும் இம்மாதோ கண்ணீரால் என்
பாதங்களைக் கழுவி, கூந்தலால் துடைத்து, நறுமண
தைலத்தால் காப்பு வைத்து, முத்தமிட்டு அன்பு காட்டினாள்
கறைபட்ட மாதின் அன்போ கடலிலும் மிகப்பெரிது

மன்னிக்கப்பட்டன மகளே உம் பாவங்கள்
அன்போடு அண்ணலும் இன்மொழி பகிர்ந்திட
விண்ணவனின்றி பாவங்களை மன்னிக்கும் மனிதர் யார்
இவர், மனம் வெதும்பிய பரிசேய மனங்கள்



உம் விசுவாசம் உம்மை மீட்டது அமைதியோடு செல்க
அளவில்லாக் கருணையோடு விடை நல்கிட
அமைதியான மனம் அன்பால் நெகிழ்ந்தது-அண்ணலை
வணங்கிய உள்ளத்திலோ ஆனந்தம் பொங்கியது

அஞ்சி வந்ததோ பாவை, ஆடிச் சென்றதோ தோகை
வஞ்சக நெஞ்சங்களில் பொறாமை, ஆற்றாமை,
கருணையின் உள்ளத்திலோ இறையாண்மை

வெறுமையில் தவித்த பரிமளம். கருணையின் திருப்பாதம்
வீழ்ந்து-நொந்து நொறுங்கி உடைந்து அர்ச்சனையானது
அமைதி வரமாக ஆனந்த நறுமணம் எங்கும் வீசியது
விலை மாதின் விலையில்லாத அன்பு
இறைமகளாக்கி மகிழ்ந்த தயாளனின் பேரன்பு

கொழுகொம்பின்றித் தவித்த முல்லைக்கு
பாவ மன்னிப்பைத் தேராய் ஈந்த பாரி
துன்பக் குளிரால் வாடும் தோகைக்கு
அன்புத் துகில் ஈந்த பேகன்

அநாதரவான ஏழைகளுக்கு-பொன்போல் அன்பை
அள்ளிக் கொடுத்த கன்னன், குடையும், கோலும்,
படையும், நாடுமில்லா மன்னவனோ-மாதவன்
நல்லோர் மனங்களில் வாழும் நாடோடிப் போதகன்



**எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023



# வெள்ளிப்பணமும், விலைமகள் அன்பும்

---

நீர் கொடாதோர் கல் நெஞ்சைப் புழுதிப் பாதங்கள் சொல்ல
நெய் கொடாதோர் வஞ்சத்தை வாடிய நீள் குழல்கள் சொல்ல
நிந்தை செய்யும் நீசரையும் அன்பு செய்யும் நிமலனைக் கண்டு
கலங்கினாள், காலுடைந்த தோகைபோல் வருந்தினாள் கோதை



பந்தியில் பெருவிருந்தாய் இறை விருந்து
பரிசேயருக்கு நிந்தையோ பெருவிருந்து
பாவிகளுக்கே இறை வார்த்தையே அருமருந்து




திருப்பாதம் சிரம் வைத்து திருவடி சரணம் என்ற நங்கை
மெய்கண்டான் திருவடி இறை சன்னிதி என்றே
மெய்யடியாளாய்த் தொழுத மங்கை

மங்கை கண்ணீர் மறையோன் கழல் கழுவ, அலை அலையான
நெடுங் கூந்தல், அமலன் பாதங்களை அணைத்துத் துடைத்திட
விலையான பரிமளம் வீடெங்கும் மணந்திட, வினை தீர்த்துக் காத்த
பெருமானின் பாதங்களில்“விமலினியின் பரிமள எண்ணெய்க் காப்பு”

பங்கயப் பாதங்களை தைலம் தழுவிட
எங்கும் பரிமளம் பரவி மங்கலம் சொல்லிட
குங்கும இதழ் பதித்து இதயத்தால் பூஜித்த மங்கை
மனதில் மங்கலம் பொங்கிட இன்புற்ற நங்கை

பக்தையாய் பாதங்களை முத்தமிட்டு
பரிமளமாய் அன்பைச் சொல்லிய
விலைமகள் அன்போ பொற்பு
திருமகன் கழல் சூடிய சிலம்போ பேரன்பு

மங்கையின் கண்ணீர் மஞ்சன நீராக
நொருங்கிய உள்ளம் பாதகாணிக்கையாக
பிழை பொறுத்து உயிர் காத்த தெய்வத்திற்கு-அன்புக்
கலையாய் விலைமகள் யாத்த பாத பூஜை

அன்பினால் இன்புற்ற அருள்நிதி
அருளிய ஆனந்த அமைதியோ பெருநிதி
அகமும், முகமம் மலர்ந்தவளோ ஆனந்தி

தையலின் அன்பில் “ஹிந்தோளம்” துதிபாட
தயாளனின் “கல்யாணி” கோதைக்கு இதமாக
அமைதி வாழ்நாள் இரட்சையானது-பெண்மைக்கு
குரு வழங்கிய திருவடித் தீட்சை சீடத்துவமானது

நெஞ்சுற்ற நீள்துயர் நீரோடு கரைந்து மறைந்திட
சருகான மலர் புதுமலராய்ப் பூத்து நறுமணம் வீசிட
பாதங்களை மடியேந்திப் பரிமளக் காப்பு வைத்த
பூங்கோதையோ பரிமள அன்பின் கீதை

விலைமகள் தைலம் முந்நூறு வெள்ளி, விற்று ஏழைகளுக்கு
கொடுத்திருக்கலாம், வீண் விரயம் தவிர்த்திருக்கலாம்
சீடர் பேசிய மொழியோ வரண்ட புரட்சி

பூஜித்த குருவைக் காட்டிக் கொடுக்க
சீடன் நிர்ணயித்த விலையோ
அடிமையின் விலை முப்பது வெள்ளி

இதயத்தை பாதகாணிக்கையாக்கிய இனியவள் அன்போ
பூவிலும் மென்மை, “மெய்” விற்றும் பொய் விற்றுப் பிழைக்காத
நங்கை , “மெய்கண்டான்” தாள்பணிந்து சரணடைந்த
பெண்மை, ஆனந்த அமைதி கண்டதோ உண்மை

“காசே கடவுளாக” பொய் விற்று
“மெய்யைக்” காட்டிக் கொடுத்த சீடனோ
அமைதியிழந்து அழிந்ததும் உண்மை

பூஜைக்கு வந்த மலர் பூச்சியன் சூட வாசமலரானது
விலை மகளை இறைமகளாய் மாற்றிய
தயாளம், பரிமளத்திலும் இனிய சுகந்தமானது
சீடனின் துரோகம் துர்க்கந்தமானது

தத்துவம், தர்க்கசாஸ்திரம் அறிந்த அறிவு மனம்
தகவல் அறிவால் தளும்பிய குறைகுடம், மீனவ,
லேவிய, சாமானிய சீடர்களிலும்-நான்
உயர்ந்தவன் என்னும் ஆணவமோ யூதாஸிடம்

அறிவு மனம் கழித்து-கண்ணாடிபோல்
சாட்சி பாவமாய்-உள்ளுணர்வால்  கணந்தோறும்
வாழும் குருவோ
வாழும் கலையின் மாகலைஞன்



அன்பே தெய்வம்-அன்பினால் அறியப்படவேண்டிய
சத்தியத்தை, அறிவினால், தர்க்கத்தால் தவறவிட்ட ஆணவம்
நொருங்குண்ட இதயத்தால் மனுமகனை
தேவனாய் பூஜித்த விலைமாதோ அதிசயம்

நொருங்கிய மனம் நொந்து தவிக்க
கருங்குவளை விழிகள் சிவந்து துடிக்க-நெடுந்
தாரையென சிந்திடும் கண்ணீர் பாதங்களைக் கழுவிட
பாவம் பொறுப்பாய் என இரஞ்சிய மனம்

கார்குழல் குழைந்து பங்கயப், பாதங்களை
பரிவோடு துடைத்து, பரிமளதைலத்தால் பாத பூஜை செய்த
மங்கை மனதிலோ அன்பின் நறுமணம்

விலைமகளாய் கண்ட பரிசேய மனம்
வீண் விரயம் என்ற சீடனின் வணிக குணம்
வாய்மொழியிலோ வரட்டு ஒழுக்கம், போலி இரக்கம்,
இறை வேண்டுவதோ நொருங்கிய உள்ளம்



விலைமகளாய் வாழ்ந்தவள்-மனுமகனைப்
பூஜித்து நறுமணம் திகழக் குலமகளானாள்
குறை கண்ட மனங்கள் குறைகுடமாய்த் தளும்பி
இறையன்பைக் காணாத அகக்குருடரானார்

பரிமளதைலத்தில் நறுமணமாய்க் கமழ்ந்ததோ
விலைமகளின் விலையில்லாத அன்பு
குறை கண்ட ஒழுக்கவாதிகள் மனதில்
துர்நாற்றமாய் மனுமகனை வாட்டியதோ வரட்டு நீதி

நன்மை தீமை, இருமை, ஒழுக்க நெறிகள் கடந்ததோ
தூய உள்ளுணர்வு, கருணையே விழிப்புணர்வின் குணம்
குற்றம் காண்பதோ ஒழுக்க மனம்

அறிவு கழித்து அறிதலால் வெறுமையான தூய மனம்
கணந்தோறும் வாழும், கண்ணாடி சாட்சியான பாவம்
அறிவைச் சேகரித்த வரட்டு மனம்
ஒழுக்கவாதியாய் தீர்ப்பிட்டு நாறிய குணம்.

திருச்சட்டமோ ஒழுக்க நெறி- அன்பினால்
திருச்சட்டத்தை நிறைவு செய்யும் இயேசுவோ
விழிப்புணர்வின் வழி



தைதலத்தின் நறுமணம்-தையலாள்
பூ மனதின் சுகந்தம் சொல்ல
பூவாய் தன்னைப் அர்ச்சித்து-பாத
பூஜை செய்த பூவை

பூமகளுக்கு பூமழைபோல் அமைதியை அருளி
நீதியிலும், இரக்கமே மேலானது
இறை இரக்கத்தைப் பறைசாற்றிய
கருணையோ இறைதன்மை

சிலுவையிலும் இயேசுவின்-புதுமை காணத்
துடித்த சீடர்களின் அறிவுமனம்
வதைப்போரையும் மன்னித்த பெருங்கருணையே
அரும் புதுமை அறிந்து இன்புற்ற அன்பு மனம்

உயிர்த்த இயேசுவை அறிய-அறிவு மனம்
சீடர்களுக்குத் தடையானது-மரியாளின்
அன்பு இதயம் மறுப்பின்றி ஏற்று
மகிழ்ந்து கொண்டாடியது.

வெள்ளிப் பணம் கொடுத்து உடலைத் தொட்டவருக்கு
மெல்லிடையான் உள்ளத்தை தொட ஏனோ வரமில்லை
நொருங்கிய இதயத்தால் மனுமகன் இதயத்தை தொட்டவளுக்கு
மனுமகன் அருளிய அமைதியோ சங்க நிதியான பெருநிலை

***எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-17-10-2023*

# புயலும் படகும்

---

வான் நீலத்தை வண்ணக் கலிங்கமென நீர் சூட, வெள்ளிப் பூண்கொண்ட
அலைகளெல்லாம் மான்களெனப் பசும் புல் தேடிக் கரை நாட-மீன்கள்
துள்ளி, விண்மீன்களுக்கு காதல் சொல்ல-அணியத்தில் கண்ணயர்ந்த
திருமகனை சுமந்த படகு, அன்னமென வானில் ஆடி அசைந்த நிலவு





அலையாட்டிடும் தொட்டிலாய்ப் படகாட- அணியத்தில்
அம்மான் மகன் களைப்பால் கண்ணயர
விளையாடும் மீன்களும், வீசும் தென்றலும் தாலாட்ட
சுகமான பயணத்தில் சோர்வு மறந்த சீடர்

காற்றாடிப் புயலாக, கடலாடிப் பேரலையாக
கார்மேகம் கூத்தாடிப் பெருமழை பொழிய
கவிழ்வதா, புரள்வதா எனப் படகாட-அஞ்சிக்
கலங்கிய சீடர்களோ அலைகடல் துரும்பானார்

பேரலைகள் எழுந்து படகை உடைக என மோதிட
பெருமழை பொழிந்து படகை அமிழ்க என அமிழ்த்திட
பெருங்காற்று மோதிப் படகை கவிழ்க என உருட்டிட
சிறுபடகும், சீடரும் பேதலித்தார், பெரும் பீதியுற்றார்

தந்தை ஒருவர் நமக்கிருக்க-தரணியெல்லாம்
உத்தமர் தாள் பணிந்தே தொழுதுதிருக்க
சிந்தையெல்லாம் அப்பா உன் சித்தம் என்றொலிக்க
நிர்ச்சிந்தையோடு உறங்கிய நேசர் மகன்

பாய் மடக்கித் துடுப்பெடுத்து நீர் இறைத்து
திறமையோடு படகோட்டியும், அலைக்கழிந்த படகு
அச்சத்தில் “ஆண்டவரே அமிழ்கின்றோம்” -கதறிய
சீடர்களின் நம்பிக்கையோ இயேசுவிடம் அடகு

அமிழ்க, அமிழ்க எனப் பெருமழை அச்சுறுத்த
புரள்க. புரள்க என சூறைக்காற்று அலைக்கழிக்க
கொட்டும் பறையும், வெட்டும் மின்னலும் பயத்தைக் கூட்ட
படகை வாரிச் சுருட்டிட வானுயர எழுந்த பேரலைகள்

ஊனொடுங்க உயிர் நடுங்க அஞ்சிக் கதறிய சீடரால்
கண்ணயர்ந்த மனுமகன் கண் மலர்ந்து எழுந்தார்
காற்றையும், மழையையும் நில் எனச் செல்லமாய்க் கடிந்து
அமைதி கொள் எனப் பணித்தார்



காற்றும், கடலும், மணாளனைக் கண்ட
மணமகளாய் நாணிட-அச்சமும்,
நாணமும் அணிகலனாய் சூடிய இயற்கை
இறை மகனைப் பணிந்து வணங்கியது

கனிந்த புன்னகை கமலக்கண்ணன் முகத்தில் தோன்றிட
வீசிய புயலும் தென்றலானது-ஆர்ப்பரித்துப் பொங்கிய
அலைகளும் ஆனந்தப் போதையில் அமைதியானது.

இயற்கையும் ஒடுங்கி ஒழுங்காகிட-இறைமகனும்
அதட்டினார் இயற்கையை 'இரையாதே சும்மாயிரு'
வியப்பினால் விறைத்த சீடரும் விசுவாசத்தில் செழித்திட
வினவினார் 'எங்கே உங்கள் விசுவாசம் ?

கூற்றுவன் கொடும்பறை இடியும், கூர்வாள் மின்னலும்
மறைந்திட, காற்றும் கனிந்து தென்றலானது, மழையும்
ஓய்ந்து மௌனமானதுஅலைகளும் அடங்கி அமைதியாக
இயற்கையும், இறைமகன் மொழியால் மகிழ்ந்து சாந்தமானது

இயற்கையின் சீற்றத்தில் இழந்த விசுவாசம், நிகழ்ந்த அதிசயத்தில்
புதிதாய்ப் பிறந்திட, வியந்த சீடரும் வினவினார் 'யாரிவர்?
காற்றும் கடலும் வார்த்தை கேட்டுப் பணிந்திட
கட்டளையிடும் மனிதர் யாரிவர்?



ஐம்பெரும் ஆற்றல்களும் அம்மான் மகன் வார்த்தைக்கு
அடிபணிந்து இன்புற-ஐம்புலனும், ஆறறிவும் கொண்ட மனிதர்
ஆசைப் புயலில் சிக்கி, ஆணவக் கடலில் ஆழ்ந்து துன்புற-
உள்ளத்தே உறங்கும் உயர் உள்ளுணர்வான இயேசு
சரணடைந்து எழுப்பிடு மனமே சாந்தி உனதே

**மனப்புயல் வீசிடும்போது-மனமே**
**மனத்துறங்கும் இறைவனை எழுப்பிடு**
**மனமழிந்த நிலையே இறைஅமைதி**
**மானுடா நீ அறிந்திடு**

**எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# பெரும்பாடுள்ள பெண்






உடல் நலிந்து ஒயில் இழக்க, இளநரை பூத்து
பூங்குழல் வெளுக்க, வாசமிழந்து, வண்ணம் நலிந்த பூவை
வாழ்வில் மங்கலம் காணாத கோதை

இளமையும், அழகும் நோயால் கருகிட, வனப்பிழந்து
வாடும் பூவாய் பாவை, இருந்த செல்வமும்
வைத்தியத்தில் கரைந்திட வண்ணமிழந்த ஓவியமாய் ஏழை

நீர் ஏந்தும் விழிகள், நிலையில்லா உலகில்
எல்லாம் மாயை என்னும் தீராத மன வேதனைகள்
இரத்தப் போக்கால் வருந்திடும் பெண்மைக்கு
தேய்பிறையான வாழ்வோ பெரும் சோதனை

வாடிய மலரோ?, வற்றிக் காய்ந்த நதியோ?
தந்தி அறுந்த மரகத வீணையோ?
சிதைந்து பொலிவிழந்த சிற்பமோ?
உருவழிந்து அழகிழந்து சருகான பூவை

நோய் அழித்த உடலும், நொந்து சலித்த மனமும்
நடைப்பிண வாழ்வுமாய்ப் பேதை-ஊரார்
சீக்காளி எனப் பச்சை குத்தி ஒதுக்கிட
ஆறுதலின்றித் தவிக்கும் கோதை



முடவர் நடக்கவும் , செவிடர் கேட்கவும்,
குருடர் பார்க்கவும், இறந்தவர் உயிர் பெறவும்,
நோயாளர் குணம் பெறவும்-ஒருவர்
இருப்பதாய்க் கதை பரவக் களித்த பக்தை

செவ்வியில் விழுந்த கதைகளால்
செத்த நம்பிக்கையும் புத்துயிர் பெற்றிட
பெண் மனதினில் புது வசந்தம்
கடல் நாடும் நதியின் பயணமோ சந்தம்

பெருமான் பெயர் கேட்டாள்-பெருமை கேட்டாள்-
வரும் பாதை கேட்டாள்-புரிந்த மா புதுமைகள் கேட்டாள்
நலிந்த மனதில் நம்பிக்கை பூங்கொத்தாய்ப் பூத்திட
மெய் சிலிர்த்து உள்ளம் பூரித்த கோதை

உள்ளம் குழற உருவழிந்த மெய் நடுங்க
தள்ளவிழி நீர் சிந்த,  நலம் தருவாய் பெருமானே
நமபிக்கையோடு துதித்து-குணம் தருபவர் வரும்
இடம் நோக்கி கடுகி நடந்த பெண்மை

அலைமோதும் கூட்டத்தே அண்ணலைக் கண்டாள்
அலைபாயும் நெஞ்சம் அமைதி காண-இறைமகனே
நின் திருவடி சரணமென்று மனதாரத் தொழுத நங்கை
பல்லாண்டு நோயால் வருந்திடும் பருவ மங்கை

எளிமையின் திருவுருவம், இளமையின் சௌந்தர்யம்
கண்டவர் மீண்டும் காணத் தவிக்கும் அன்புருவம்
நடமாடும் கருணையின் இறை வடிவம் கண்டே
கதிரவனைக் கண்ட பங்கயமமென மலர்ந்த பூவை



சூழ்ந்து வரும் கூட்டம்-கோட்டை அரணாக
கட்டிய மனக்கோட்டை கலையும் கனவாக
தொட்டால் போதும் குணமடைவேன் நம்பிய நங்கை
தொட முடியாத் தொலைவில் நின்று புலம்பிய மங்கை

சீக்காளி தன்னை அடையாளம் கண்டாள்-கூட்டம்
சீறிக் கல்லால் அடித்துக் கொல்லுமே-நலம்பெற
நாடிவந்த கனவும் பொய்க்குமே -அஞ்சி
போர்வையால் மறைத்து கூட்டத்தில் கலந்த வஞ்சி

அலை அலையாய் அசைந்து வரும் கூட்டத்தில்
அலையிடைத் துரும்பாய் நிலை மாறிட
அஞ்சிய மங்கை -பாதை ஓரம் தரையமர்ந்து
பயபக்தியோடு தவமிருந்த பக்தையாய் நங்கை

தூசு படிந்த ஆடையோடும், துயருற்ற நெஞ்சோடும்
கண்ணில் நீர் தாங்கி, கருத்தில் நம்பிக்கை ஒளி ஏற்றி
நேசர் வரும் வழியில்-தவமிருந்த கோதை

சிந்தையில் பெருமானை வைத்து-சேல் விழிகளில் நீர் வைத்து
வந்தனையை நொருங்கிய மனதில் வைத்து
வரும் பாதையில் தவமிருந்த மங்கை

புண்ணான நெஞ்சம் சாக்கடைபோல் நாறிட
நம்பிக்கை துளிர்த்த மனம், பூங்கமிழ் வாவிபோல் மணந்திட
பெருமானைக் காணப் பித்தான பாவை-ஐயன்
வரும் வழி பார்த்து அருந்தவமிருந்த சருகான பூவை

அலைமோதும் கூட்டம் அசைந்து நகர்ந்திட
அசையாத தவத்தில் நங்கை நிலைத்திட
நிலையான சுகம் தேடி நீட்டிய கரங்கள்
வெறுமையைத் துழாவி வறுமையில் தவித்ததே

கூடி நடந்த சூட்டத்தில் குணம் பெற யாருக்கும்
நாட்டமில்லை, நாட்டமிருந்தது, நல்நாதமிருந்தது-
பக்தையாய், மங்கை தொட்டிட நோயும் மறைந்தது
தோடி ராகம் நெஞ்சில் பிறந்தது

தவமாய் நீட்டிய கரங்களில் வரமாய்க் கிட்டியது
தவப்புதல்வனின் ஆடைத் தொங்கல்
தொட்ட கணத்தில் சுட்ட நோய் மறைந்திட
அழகு பூத்தாட மலர்ந்த சுந்தரியோ ஆம்பல்

தொட்ட கணத்தில் உயிர் மெய் சிலிர்க்க
உடலில் பாய்ந்த உயிர்ச்சக்தி
பட்ட கணத்தில் பருவம் மாறிட
இளமை தந்த இறை சக்தி



தந்தி அறுந்த வீணையில் பூபாளத்தின் ஆலாபனம்
தோகையின் நெஞ்சில் ஆனந்த நர்த்தனம்
சருகான மலர் மீண்டும் மலர்ந்திட வந்தது புது வசந்தம்
வற்றிய நதி பொங்கிப் பாய்ந்திட வந்ததோ புது வெள்ளம்

இசையோடு இதயம் துடிக்க மகிழ்ந்தாள்
உதயம் கண்ட புது மலராய்ப் பூத்தாள்
இறக்கைகள் இன்றி இதயம் எழுந்து பறந்திட
ஆனந்த கண்ணீர் சிந்தி அழுதாள் பேதை

தொட்டதை அறிந்தவர், தொடுகையைப் புரிந்தவர்
தொட்ட கரங்களைப் பலரும் போற்றிட
தோடி ராகம் பாடிடும் பூவையை வாழ்த்திட
என்னைத் தொட்டது யாரென்றார்?

சுற்றி நின்றவர் மறுத்திட-மக்கள் கூட்டம்
நம்மைச் சூழ்ந்து நெருக்குதே சீமோன் மொழிந்திட
ஒருவர் என்னைத் தொட்டதையும்
நலமாக்கும் சக்தி பாய்ந்தையும் நான் அறிவேன்

தொட்டவரைத் தேடி விழிகள் கூட்டத்தை துழாவிட
நம்பிக்கையோடு தொட்டுக் குணமான பாவை
தொழுதே நடந்த அரிய புதுமையை
எல்லோர் முன்னும் அறிக்கையிட்ட பூவை

அறியாப் பரம்பொருளே-புரியாப் பேருண்மையே
கருணை வடிவாய்-கண்முன் நிற்கக் கண்டாள்
தொட்டதும் குணமுற்றதும்-இறையே உன் கருணை
உம்மை ஒருபோதும் மறவாது என் இதயம் கரம் கூப்பி
மனம் வாழ்த்தி தன் கதை கூறி மனம் ஆறிய கோதை

பூவனமாய், சோபனமாய் மங்கை மாறிட
தேய்பிறையும் பௌர்ணமியாய் ஒளி வீசிட
கீர்த்தனம் பாடிய மனமோ கோகிலம்
நர்த்தனமாடிடும் மயில்போல் குதூகலம்

“மகளே உன் விசுவாசம் உன்னைக் குணமாக்கிற்று
அமைதியுடன் செல்க”
போற்றி மகிழ்ந்த மனுமகன்-மங்கை நெஞ்சில்
ஏற்றிய தீபமாய் இறைமகன்

காலங்கள் பல போனபின்
கல்வாரிப் பாதையில் கழுமரத்தோடு மனுமகன்,
கண்களைக் குருதி மறைத்திட-சிலுவைப் பாரத்தில்
கால்கள் தடுமாறிட மண்ணில் வீழ்ந்த திருமகன்




கண் மையும் கரைய, கார் கூந்தல் மலரும் உதிர
கண்பட்டதோ பொன்மேனி கழுமரம் சுமக்க
புண்பட்ட நெஞ்சம் அனலில் விழுந்த புழுவாய்த் துடிக்க
வெண் பட்டை ஏந்திக் கதறிய பூவை

மங்கலம் தந்த மன்னவன் அமங்கலக் கோலம் கண்டு
குங்குமம் கலைந்ததே எனக் கதறினாள்
பங்கமாய் பூத்த முகம் பாழ்படச் சிதையக் கண்டு
அங்கம் நடு நடுங்க அழுது குலைந்து மயங்கினாள்

நெஞ்சம் நடுநடுங்க, நீள் விழிகள் நீர் சிந்திக் கலங்க
பன்னிரண்டு ஆண்டுகள் பட்ட துயரிலும் பெருந்துயர் உற்றதென
மனம் படாத பாடு பட- தன்னை மறந்தாள்
கழுமரச் சிலுவையோடு மனுமகனை கண்ணுற்ற பாவை

விழுந்தவர் திருமுகத்தை-துணிந்து
வெண்துகிலால் துடைத்த கன்னி மனம்
வெண்துகிலில் வெகுமதியாய்
தம் திருமுகத்தை பதித்த அன்பு மனம்

வீழ்ந்தவர் எழுந்து நடந்திட-தொழுது
போற்றியவர் துயரம் நெஞ்சை வாட்டிட
சோகம் கூர்வாளாய் நெஞ்சைத் துளைத்திட
வெண்துகிலை நெஞ்சோடு சேர்த்து அழுத மங்கை

உள்ளம் புலம்பிட, உயிர் மெய் ஒன்றாய்க் கலங்கிட
மை எழுதிய விழிகள் கண்ணீரில் கரைந்திட
நெய்யில்லாத் தீபமாய் நடுங்கும் சுடர் கண்டு
மெய் நடுங்க கரங்கூப்பி தையலாள் தொழுதாள்




நலம் தந்த ஆடை வண்ணம்-புழுதியில் அலைய
அமைதி தந்த சொல் வண்ணம் மௌனத்தில் மூழ்க
வண்ண முகம் குருதியில் தோய-வாடி நின்றாள்
வண்ணம் குலைந்த ஓவியமாய் வண்ணச் சுந்தரி

**சூழ்ந்து நெருக்கிடும் கூட்டத்தே-இறைமகனை**
**விசுவாசத்தோடு தொட்டவளே குணமானாள்-மற்றவரோ**
**நெருக்கி நடக்கும் கூட்டமும் வெம்பிய கும்பலுமானார்**

**எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# ஜாயீர் மகள்-தலித்தாக்கும்



அன்னை மடியில் பூத்து, தந்தை தோளில் படர்ந்து
ஆனந்தத் தென்றலில் ஆடிமகிழ்ந்த தொப்பிள் கொடி
வாழ்வின் வசந்தத்தை நோய் அரிக்க-படுக்கையில்
வாடிக் கிடந்த வேரறுந்த சின்னப் பூங்கொடி

உற்ற ஒரு பிள்ளை உறவும் அற்றுப்போகுமோ?
அம்மா, அப்பா என்றழைத்த கிள்ளையும் செத்துப்போகுமோ?
உறங்கிப்போன இல்லத்தில் சோகத்தின் ஆட்சி
ஊமையான இதயங்களில் கவலையின் மாட்சி



தந்தை நெஞ்சம் பதைபதைக்க-
தாய் நெஞ்சம் பாலையாய்க் கொதிக்க-தென்றல்
தவழ்ந்த வீடு- இன்றோ கவலைப் புயல் வீசும் காடு

கொஞ்சிப் பேசிய சின்ன அஞ்சுகம்-குரழிழந்து துடிக்க
கூவிக் களித்த கோகிலம் பாடல் மறந்து வாடிக் கிடக்க
ஆடி மகிழ்ந்த தோகை முடமான அலங்கோலம்
ஆனந்தம் பூத்த இல்லம் பாழடையும் அவலம்

வேரறுந்த பூங்கொடியோ?, நீரிழந்த தாமரையோ?
வளர்பிறை, தேய்பிறையாக நோய் வாட்டிட
படுக்கையில் வாடிக் கிடப்பது-நிம்மதி இழந்து
பெற்றோர் மனங்களில் முகாரியின் ஆலாபனம்

அனலாய் உடல் கொதிக்-ஆறாத் துயரில் மனம் தவிக்க
துஞ்சுமோ எம் சின்ன அஞ்சுகம்-மீளாத்
துயில் கொள்ளுமோ எம் கோகிலம்-அஞ்சிய
இதயங்களில் சோகத்தின் அலங்கோலம்

பிஞ்சு மகளுக்கு செய்த வைத்தியம் வீணாக
நஞ்சான சேதி சொன்ன வைத்தியர்
அஞ்சிக் கண்ணீர்க் காடான வீடு-
காடு போக காத்திருக்கும் குட்டிச் செம்மறியாடு

வாழ்வே மாயம் என்ற உண்மை புரிந்திட
வரமாய் அன்பு மகளின் சுகம் வேண்டி
வல்லவனை தவமாய்த் தொழுத தந்தை
கண்ணீர்த் தவமிருக்கும் அன்னை



ஊர் வழியாய் வருகிறார் உத்தமப் போதகர்
உற்ற துயரெல்லாம் நீக்கும் தேவ மருத்துவர்
கூன், குருடு முடவர், செவிடர், குஷ்டரோகியை
குணமாக்கி புது வாழ்வளித்த அற்புதர்

சேதி கேட்டு, செத்த நம்பிக்கை துளிர்த்திட
பெற்ற பிள்ளை இனிப் பிழைக்கும் என்றே
உத்தமரைக் காண ஓடிச் சென்றார் தந்தை ஜாயீர்

அருமை மகள் சாக்கிடக்கின்றாள், ஐயனே, சுகம்
தர வேண்டும், மகள் நீடூழி வாழ வரம் தர வேண்டும்''
கண்ணில் நீர் வழிய, கரங்கள் கூப்பித் தொழ
மனுமகன் தாள்பணிந்து வேண்டிய தந்தை

ஆண்டுகள் பன்னிரெண்டு நோயுற்ற அபலை ஆழ்ந்த
விசுவாசத்தால், அண்ணலின் ஆடை விளிம்பைத் தொட்டுக்
குணமடைந்த கோதை பெருங்கதையாக-ஆனந்தம்
பூத்தாட அற்புதனை சூழ்ந்த பெருங் கூட்டம்

வருந்திச் சுமை சுமந்து கூனிய மானுடம் இளைப்பாற
வழியும் உண்மையும் வாழ்வுமான இறைநேசன்
தாமதிப்பாரோ அஞ்சிய தந்தை மனம் கெஞ்சியது

அச்சமும் உச்சம் பெற, ஓடிவந்த உறவுகளும்
ஒன்றாய் கூவியழுதே கூறின,
''உம் மகள் இறந்து விட்டாள்
உத்தமரைத் தொந்தரவு செய்யாதீர்''

என் நம்பிக்கையும் பொய்யோ-நாடி வந்த
தேவமைந்தனும்-வீடு வரத் தாமதித்ததால்
என் மகள் காடு போனாளோ?

காடு போகும் வயதில்லை என் கண்மணிக்கு
ஏனிந்த கேடு அப்பாவி எங்களுக்கு
சோகம் நெஞ்சைச் சுமையாய் அழுத்த
நொந்தழுதார் தந்தை ஜாயீர்.

தந்தையின் துயரை தன் துயராய்க் கண்டவர் மொழிந்தார்
''அஞ்சவேண்டாம் நம்பிக்கையோடிரும், உம் மகள் பிழைப்பாள்''
ஒப்பாரியும், புலம்பலும் இழவு வீட்டைப் பறைசாற்ற-தந்தை
ஜாயீரோடு வீடு வந்த நல்லாயன், துயர் நீக்கும் தேவன்

இழவு வீட்டில் சோகத்தின் ஆரவாரம் -சொந்த
பந்தங்களின் ஒப்பாரி, புலம்பலின் ஆலாபனம்
அஞ்ச வேண்டாம், வருந்தவேண்டாம்
“சிறுமி இறக்கவில்ல தூங்குகிறாள்”

அண்ணல் மொழி கேட்டு, நகைத்துப் பரிகசித்த
கும்பல்- பல்லாண்டு நோயுற்ற நங்கை
சுகமானதை அறியாத வெம்பல்

பிறப்பு இறப்பின் இரகசியமறியாது, பிறந்து,
நடைப்பிணமாய் வாழ்ந்து, இறக்கும் மானுடம்,
மூப்பு, பிணி, சாவு மாறாத நியதி-அழியாத ஆன்மாவை
இவர் அறியார், அறியாமையே இவர் உலகம்



கையளவு மனதை கடலளவு கவலைகள் அலைக்கழிக்க
ஆசையும், அறியாமையும் களையாய் முளைத்து நிலைக்க
ஆழியில் ஆடும் துரும்பான மானுட நியதி
அரிதானதோ இதயம் தேடும் நிம்மதி

வாடிக் கிடப்பது கொடிப்பூவோ ? வற்றிக் காய்ந்தது
கோட்டுப்பூவோ? சேற்றில் கிடப்பது நீர்ப்பூவோ?
படுக்கையில் கிடப்பது புதற்பூவோ?

வண்ணமிழந்த மலரோ படுக்கையில்
வாசமிழந்த பெற்றோர் மனமோ எரிநரகில்
வழியும், உண்மையும் வாழ்வுமான
வானவன் வார்த்தையோ மானுட உருவில்

பெற்றோரையும்-அன்புச் சீடர் மூவரையும்
தம்மோடு வரப்பணித்தவர்-சிறுமியின்
அருகில் சென்று கரம் பற்றி
அன்போடு “தலித்தாக்குமி” என்றார்

“செல்ல வெள்ளாட்டுக் குட்டியே விழித்திடு”
தூங்கிடும் தன்னைத் துயிலெழுப்ப , செல்லமாய்
மொழியும் அன்னையின் மொழி “தலித்தாக்குமி”
மகன் நெஞ்சில் மாறாத நினைவானது

தாயின் ஆனந்த நினைவில்-தனயனும்
மீளாத்துயில் கொண்ட-சிறுமி உயிர் பெற
கரம் தொட்டு கனிவோடு
தலித்தாக்குமி என்று அழைத்தார்

வாடிய பயிரை வான் மழை அணைத்திட
வற்றிய பூங்கொடியை வார்த்தை தட்டி எழுப்பிட
பூ விழி திறந்து ஆனந்தப் புன்னகை பூத்திட
சாவினில் நின்று வாழ்வுக்குள் மீண்டும் பிறந்த உறவு

பெற்றவர் மனதிலே மலைப்பு! உயிர்ப்பின் களிப்பு
சீடர் நெஞ்சிலே வியப்பு! உவப்பு-கேலி செய்து
நகைத்த மனங்களில் நாணத்தின் நகைப்பு

ஒப்பாரியும் அழுகையும் மங்களப் பேரிகையாய் மாறிட
இறந்து பிறந்தவளுக்காய்-இழவு வீடு விழாக்கோலம் பூண்டிட
வியந்து மகிழ்ந்து விம்மியழுத-தந்தை நெஞ்சிலே
உயிரளித்த மனுமகன் இறைவனே என்னும் பேரானந்தம்

சுற்றமும், சொந்தமும் மகிழ்ந்து கொண்டாட ,
கூப்பிய கரங்களோடும், கொட்டும் ஆனந்தக் கண்ணீரோடும்
குவலயம் ஆளும் இறைவனே குடிவந்தார் நம்மிடையே
குதுாகலத்தால் பொங்கிய பெற்றவர் நெஞ்சம்



நாதழுதழுக்க நன்றி ஐயனே நன்றி என்றே, மனுமகன்
கரம் பற்றி கண்ணில் ஒற்றி விம்மி, இறைவனை
நெஞ்சார வாழ்த்திய தந்தை, தஞ்சமென நம்பியவர்
இறைமகனே, துன்பத்தில் இறைவனை கண்ட விந்தை

"உண்ணக் கொடுங்கள் சிறுமிக்கு"
கண் விழித்த சிறுமியை -தாயாய்
கனிவோடு துாக்கி அரவணைத்து-தந்தையிடம்
விசுவாசப் பரிசாய் கொடுத்தே
வாழ்வும் வழியுமானவர் தம் வழி நடந்தார்.

***நடைப்பிணமாய்த் துாங்கிக் கிடக்கும் உயிர்களை***
***புது வாழ்வுக்குள் துயில் எழுப்பிட மனுமகன்***
***நம் வாழ்வில் வரவேண்டும்-நமக்கும்***
***கடுகளவு விசுவாசம் பெருவரமாய் வேண்டும்***

***எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-17-10-2023*

# நசரேத்தில் இயேசு





ஊர்கள் தோறும் தம் செய்தி, நற்செய்தி
அறிவித்து இன்பங் கண்ட அருட்ஜோதி
தம் சொந்த ஊரான நசரேத்துக்கும்-நற்செய்தி
அறிவிக்க ஆவல் கொண்ட ஆனந்தஜோதி

ஓய்வு நாள் வழக்கப்படி தொழுகை கூடத்திற்கு சென்றவர்
வாசிக்க எழுந்து நின்றார்-இறைவாக்கினர்
எசாயாவின் சுருளேட்டை-ஜெபகூடத் தலைவர்
வழங்கிட விரித்தவர் படித்தார்

“ ஆண்டவருடைய ஆவி என் மேலே-ஏனெனில்
அவர் என்னை அருட்பொழிவு செய்துள்ளார்
ஏழைகளுக்கு நற்செய்தியும், அறியாமை இருளில்
சிறைப்பட்டோருக்கு விடுதலையும் வரமாகும்

அந்தகர்க்கு பார்வையும்-ஒடுக்கப்பட்டோருக்கு
விடுதலை வாழ்வும் உரித்தாக-ஆண்டவர்
அருள்தரும் ஆண்டினை முழக்கமிட்டு அறிவிக்க-
அவர் என்னை அனுப்பியுள்ளார்”

அன்று உரைத்த இந்த மறைநூல் வாக்கு
இன்று நிறைவேறிற்று -இறைவாக்கினர் எசாயா
முன்னறிவத்தவர் நாமே என்றார்



மனுமகன் அருள் மொழிகள் -மழை காணாப்
பயிர்களுக்கு-கார்கால மழையானது
நம்பிக்கை துளிர்த்த நெஞ்சங்களில் ஆனந்தம்
பொங்கும் பூம்புனலானது, இறைவனுக்கு மாட்சியானது

வாய்மையும், மனத்தூய்மையும், எளிமையும் கண்டும்
ஞானமாய் உரைத்த மொழி கேட்டும்-ஊனமான மனம்
உண்மையைக் காணாத அந்தக இனம்-தச்சன்
மகனாய் கண்டு குறை குடமாய்த் தளும்பிய இழி குணம்

மன்னர் தாவீது குலத்தில் மெஸாயாய வருவார் என்னும்
மறை நூல் வாக்கும் பொய்க்குமோ? தச்சன் மகனாய்
மெஸாயா வரக்கூடுமே, சினம் பழுத்துக் கொதித்த நச்சு மனம்,
கொத்திட சீறி எழுந்த மதவாதக் கூட்டமோ நச்சரவம்



தச்சன் மகன் ஞானம்தான் என்ன?
தாய் மரியாளும் சகோதரரும் நம்மிடையே வாழ
தன்னைத் தானே இறைவாக்கினர் என மொழியும்
அகம்பாவம்தான் என்னே!-தூற்றிய வேதியர்

வார்த்தைகள் எதற்கு? வல்ல செயல்கள் புரிந்து-
இறைவாக்கினர் என எண்பியும் ஏற்போம்
கோபத்தால் வெம்பிக் கொதித்து கண்முன்
நின்ற உண்மையைக் காண மறுத்த வேதிய மனம்

இறைவாக்கினர் எவரும்-தம் சொந்த ஊரில்
ஏற்றுக் கொள்ளப்படமாட்டார் என்பது
இங்கும் இன்று நிஜமானது

ரிஷி மூலம், நதி மூலம் பார்த்து, ஞானியர்
சான்றோர் வாக்கை மீறிய மூடர்
சத்திய தரிசனம் காணத் தவமில்லாத குருடர்

மருத்துவரே உம்மையே நீர் குணமாக்கிக்கொள்ளும்
ஊரறிந்த பழமொழி நீங்களும் அறிவீர். பஞ்சம் நிலவிய
காலத்தே இஸ்ராயலிலோ பல கைம்பெண்கள்

இறைவாக்கினர் எலியாவைப் பராமரிக்க
சீதோனைச் சேர்ந்த சாரிபாத்தில் வாழ்ந்த
விதவையையே இறைவன் தேர்ந்த பெண்மை



இறைவாக்கினர் எலிசாவின் காலத்தே, இஸ்ராயேலில்
பல தொழுநோயாளர் -இருந்தும், சிரியாவைச் சேர்ந்த
நாமானே-தம் விசுவாசத்தால் நலம் பெற்ற புதுமை

இறைவாக்கினரே உங்கள் அவவிசுவாசத்திற்கு சாட்சி
இறைவாக்கினரைக் கல்லால் எறிந்து கொல்வதோ
கை வந்த கலை-கொலையும் இறை மாட்சிக்கே எனப்
பீற்றிக் கொள்வதோ திருச்சட்ட நீதியான அவல நிலை

காட்டுத் தீபோல் நெஞ்சில் கோபம் பற்றியெரிய
காழ்ப்புணர்ச்சி அணை உடைத்த வெள்ளமாய்ப் பெருக
ஊரமைந்த உச்சிமலை நின்று-
தள்ளிக் கொல்ல முனைந்த மதவாதக்கும்பல்

சத்தியமே என் வார்ததை , என்றுமுள்ள நித்தியமே
என் தந்தை, எந்நேரம் இன்னும் வரவில்லை மொழிந்தவர்
நிமிர்ந்த நெஞ்சும், நேரிய பார்வையுமாய்
குள்ளநரியிடையே அரிமாபோல் நடந்து சென்றா

ஆர்கலி அன்ன ஆர்ப்பரித்த கும்பல், அண்ணலை புதிய மோசேயாய்
கண்டு அஞ்சியது, அலை ஒடுங்கப் பிரிந்த செங்கடல் போல்
தன்னை, அறிந்தவர் தம் பணி தொடர்ந்திட வழிவிட்டு ஒதுங்கி
உண்மை அறியாத கும்பல் மனம் வெதும்பியது





இருமை கடந்த மனம்-எல்லோர் மேலும்
கருணை மழை பொழியும் இறை குணம்
திருச்சட்டமும் இறைவாக்கும்-ஒன்றாய் அன்பரில்
நிறைவுற -அகக் கிளர்ச்சியாளனாய் இயேசு

கல்லாய், முள்ளாய். பாறையாய், பாதையாய்
மாறிய மனங்களில் தூவிய விதையாய் வார்த்தை,
பன்றிகளுக்கு முன் முத்துக்களைப் போட்ட கதையாய்
மூடருக்கு உபதேசித்த அன்பின் கீதை

நல்லோர், தீயோர் கடந்த அன்பிறைவன்-நாளும்
எல்லோர் மேலும் கதிரவனை உதிக்கச் செய்யும் தூயவன்,
பருவத்தே மழை பொழியச் செய்யும் கருணாகரன்
இருமை கடந்த இருப்பாய் அன்பிறைவன்

தூய மனதிற்கே சத்திய தரிசனம்-இன்று
இங்கும் உண்மையானது, எளிய மனத்தவருக்கே
இறையரசு- என்றுமுள்ள மாறாத தர்மமானது

**எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# மூதாதையர் மரபு

ஆண்டுகள் நானூறு அடிமைகளாய் வாழ்ந்த இனம்
இறைவாக்கினர் மோசேயின் தலைமையில்
இறையருளால் விடுதலை பெற்ற யூத இனம்



"ஒன்றே குலம்-ஒருவனே தேவன்" வேதத்தின் மாறாத சாரமாக
பன்னிரு குலமான அடிமைகளை ஓரினமாக்கிப்-
வாக்களிக்கப் பட்ட தேசத்தை சுவீகரித்து ஆள
மோசே வழங்கிய திருச்சட்டங்கள்



நிலவை நோக்காது- காலவெள்ளத்தில், நிலவைச்
சுட்டிய விரலை நோக்கிய பார்வை, நிஜத்தை
மறந்து நிழலைத் தொடர உருக்குலைந்த மதம்-
மதவாதக் குறும் பார்வையால் குழியில் விழுந்த இனம்

பலியிலும் மேலானது இரக்கம், நொருங்கிய இதயமே
இறை விரும்பும் காணிக்கை, அன்பே இறைவன்-அவரே நம்
தந்தை, உண்மையின் பாதையில் அன்பை வாழ்வாக்கி
வாழ்தலே உண்மையான வழிபாடு

கல்லான திருச்சட்டங்களை, அன்பெனும் நெம்புகோலால்
புரட்டிப்போட்ட தனி மனித அகக்கிளர்ச்சி-நம்பிக்கை
நலிந்த மனங்களுக்குப் புத்துயிர் அளிக்கும் நற்செய்தி
பாராம்பரிய மதவாதத்தை சாடும் போதனையோ யுகப்புரட்சி

சட்டங்களை விரித்து, திரித்து
சடங்கும், முன்னோர் மரபுமாய் உருவழிந்து
மிருகபலியால் நாறிய மதம்-மதவாதச் சிறையில்
அடிமைகளாய் அப்பாவி யூத இனம்

உணவைக் கழுவிட ஓர் முறை
உண்ணும் கலங்களைக் கழுவிட ஓர் முறை
உடற் சுத்தம் பேணிட ஒரு சடங்காய்
கை, கால் கழுவும் முறை

அகத்தைக் கைவிட்டு, புறத்தைச் சுத்தமாக்கும்
வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகள்; உள்ளே
அழுகும் பிணமாய் நாறும் மதவாதம்
சட்டத்தை பற்றிப் பிடித்த குரங்குப் பிடிவாதம்



நாடோடிப் போதகரோடு நாளெல்லாம் நடந்து
நற்செய்திப் பணியாற்றிக் களைத்த சீடர்
கழுவாத கரங்களோடு உணவருந்திட
கண்ட பரிசேயர் குற்றம் சொன்னார்

கழுவாத கரங்களோடு உண்பதும், கதிர்களை ஓய்வு நாளில்
கசக்கி உண்பதும் முன்னோர் மரபிற்கும், திருச்சட்டத்திற்கும்
முரணானது, ஓதுவதோ இறை கீதம்- ஒழுகுவதோ
சாத்தானின் வேதம், சுரம் சேராத சங்கீதம் சபை ஏறாது

சினமுற்ற மனுமகன் செப்பினார், ஓ வெளிவேடக்காரரே!-
இறைவாக்கினர் இசையா உரைத்தது சரியே
வார்த்தையால் இறை புகழ் பாடி
வாழவால் அவரை இகழும் மக்கள் நீங்கள்

இறை அன்பைப் புறந்தள்ளி
மனிதக் கோட்பாடுகளை திருச்சட்டமாய்
மாற்றும் ஆசாடபூதிகளே-உங்கள்
வழிபாடும் பொய்யே, வாழ்வும் பொய்யே

பெற்றோரைப் பேணல் பிள்ளையின் பெருங்கடன், பேணாத
பிள்ளைக்கு மரணமே தண்டனை மோசேயின் நியாயப் பிரமாணம்,
பெற்றோருக்குப் பட்ட கடன் “கொர்பானி” இறை காணிக்கையாயிற்று
என்றால் பெற்றோரைப் பேணல் முற்றிலும் தீர்ந்த கடன்

பிரமாணங்களை வசதிக்கேற்ப மாற்றும் பிரமாணிக்கமில்லாத
ஊழியரே, அன்பே பிரமாணிக்கத்தின் அடித்தளம்-நீங்களோ
மோசேயின் வாரிசு, உங்கள் கைகளிலோ கள்ளத் தராசு
அனலான வார்த்தைகள் கனலாய்ச் சுட, ஓடி மறைந்த மதவாதம்

மக்கள் கூட்டத்தைப் பார்த்து, மனுமகன் மொழிந்தார்
உண்ணும் உணவோ, அருந்தும் பானமோ உங்களைத்
தீட்டுப்படுத்தாது, உள்ளத்திலிருந்து எழும்
தீய எண்ணங்களே உங்களைத் தீட்டுப்படுத்தும்

சுத்தம் சுகம் தரும், ஊன் வளர்க்கும் உணவோ சமீபாடடைந்து
சத்தகாகிட, எஞ்சியது மலசலமாய் கழிகின்றது.
மனித வாழ்வுக்கு உணவும், நீரும் இன்றியமையாதது

பரத்தைமை, களவு, கொலை, விபச்சாரம், பேராசை, தீச்செயல்,
வஞ்சகம், காமவெறி, பொறாமை, பழிப்புரை, செருக்கு, மதிகேடு
உள்ளத்தில் உதிக்கும் தீய எண்ணங்களே மனதைத் தீட்டுப்படுத்தும்

விழிப்பாயிருங்கள், உடல் தூய்மையிலும், உள்ளத் தூய்மை
மேலானது, தூய உள்ளமே இறையில்லம்-அறிவீர்
பலி அல்ல இரக்கமே இறை விரும்புவது
நொருங்கிய உள்ளமே உன்னத காணிக்கை

தனி மனிதக் கிளர்ச்சியாளன் வாழ்வும் போதனையும்
மதவாதக் கும்பலுக்குச் சவாலானது
நலிந்த மக்களுக்கு நல்லாசியும்
இறைவனுக்கோ புகழும், வழிபாடுமானது

வெங்கதிராலும் போகாது, விரி சுடராலும் நீங்காது
பொங்கும் நிலவொளிக்கும் போகாது நிலைத்த மதவாதம்
குணம் பெற- அறியாமை போக்கி, ஆணவக் கறை நீங்கிட
திருச்சட்டத்தை புடமிடும் ஞான வேள்வி அன்பின் புதுப் புரட்சி

நாயனமான வார்த்தையில் சத்தியத்தின் நர்த்தனம்
நலிந்த மனங்களுக்கு நலம் தரும் ஔடதம்
மதவாத நாகங்கள் அஞ்சி ஒடுங்கிட இடியொலி
வாழும் இறைவனுக்கு அர்ச்சனையான வாழ்த்தொலி

தம்மை வெறுமையாக்கி அடிமையின் கோலம் பூண்ட இறைமகன்
கூடும், வளையுமற்ற நாடோடிப் போதகன் -ஊரார் விரும்பிக்
கொடுப்பதை உண்டு குடிக்கும் எளியவர்

பசியால் கதிர்களை கசக்கி உண்ட சீடர்-பசி போக்க
உணவளியாது, சட்டம் பேசிய பரிசேயரோ மத வேசியர்
இரக்கமே இறை பண்பு என்ற ஞான தேசிகன்

***எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-17-09-2023

# காணமற்போன ஆடு



மதவாதம் கசந்து பழித்திட, எளிய மனங்கள் மகிழ்ந்து இன்புற
ஏழைகளின் நண்பனாய், பாவி, விபச்சாரி, லேவியரின் தோழனாய்
உண்டு குடித்து உறவாடும் நாடோடிப் போதகனோ, பாரம்பரியம்,
திருச்சட்டம், பழமைவாதம் தாண்டிய அகக்கிளர்ச்சியாளன்



பாவிகளோடு சம பந்தி, சம போஜனம் இராபாய்க்கு அழகல்ல
பரிசேய, மறைநூல் அறிஞர் எமக்கோ உம் செயல்
அருவெறுப்பு, முனுமுனுத்து அதிருப்தியை வெளியிட்ட வேதியர்
மனங்களிளோ, உயர் குடி நாம் என்ற மதவாதப் செருக்கு

இறை படைப்பில் ஏற்றத் தாழ்வுகளில்லை
ஒன்றே குலம்- ஒருவனே தேவன்
நோயற்றவருக்கு அல்ல-நோயுற்றவருக்கே மருத்துவன்
நேர்மையாளருக்கு அல்ல பாவிகளுக்கே என் பணி

மந்தையிலோ நூறு ஆடுகள்-எண்ணிய ஆயன்
மனதிலே ஒன்றைக் காணோம் எனும் தீராத கவலை
தொன்னூற்று ஒன்பதையும் விட்டு விட்டு
ஒன்றுக்காய் நல்லாயனின் ஓயாத தேடல்



மந்தையை விட்டுப் பிரிந்ததை-கொடிய மிருகங்கள்
கொன்று உண்ணலாம், அச்சம் ஆட்டுவிக்க
மீண்டும் மந்தை சேரும் வழி குட்டிக்கு கனவாகலாம்-
பசும் புல்லின்றிப் பட்டினியால் மடியலாம்



நல்லாயன் ஓய்வாரோ-கண்டு பிடிக்கும் வரை, நாற்புறமும்
தேடி அலைவாரே-கண்டவர் மகிழ்சி கொண்டாட்டமாய் மாறிட
தோள் மீது போட்டு-வீட்டுக்கு வந்து தோழர்களை அழைத்து
விழா எடுப்பாரே-விருந்து கொடுப்பாரே



பத்து வெள்ளிப் பணம் உள்ள ஏழை
எண்ணிப் பார்த்து ஒன்ற குறைய ஏங்கினாள்
ஏற்றிய விளக்கோடு வீட்டைப் பெருக்கித் தேடிட-கண்ட
ஏந்திழையாள் நெஞ்சில் களிப்பாய் மாறியதோ கவலை

கண்டு பிடித்தவள் தம் தோழியரையும்,
அண்டை வீட்டாரையும் அழைத்துத்
தம் மகிழ்வைக் கொண்டாடி மகிழ்ந்தாளே

தொலைந்துபோன ஆட்டைத் தேடிடும்
நல்லாயன் இறைவனோ ஆண்
தொலைந்த நாணயத்தை தேடிடும்
இறைவியாய்ப் பெண்



ஆண், பெண் பாலினம் கடந்த இறைவன்
தம் சாயலாய், ஆணும், பெண்ணுமாய்
மானிடரைப் படைத்த அர்தநாரிஸ்வரன்



பெண்ணியத்தை ஆணுக்கு நிகராக்கி, பெண்மையை
ஏற்றிப் போற்றிய புரட்சி, ஆணிய மதவாதிகளுக்கு
ஏற்கவும், மறுக்கவும், முடியாத -ஆன்மீகக்
கிளர்ச்சியாளனின் சமுதாய மறுமலர்ச்சி

நல்லாயனுக்கு ஆடும்-ஏழைப் பெண்ணிற்கு வெள்ளி
நாணயமும் பெருநிதியே-மனம் மாறத் தேவையில்லாத-
ஒன்று குறைய நூறு நேர்மையாளர்களை விட-
மனம் திரும்பும் ஒரு பாவியால் இறைவனுக்கோ பெருமகிழ்ச்சி

இழந்துபோனதைத் தேடி மீட்கவே மனுமகன் வருகை
ஏழை, பாவிகளின் நண்பன்
நோயுற்றவருக்கு மருத்துவனான அன்பன்



மதவாதமே மானுடம் இறைவனைத் தன்னிலும்,
அயலானிலும் காணத் தடையானது
இறை இரக்கத்திற்கு நிந்தையானது
அன்பே கடவுள் அறிய இரும்புத் திரையானது

**எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra-17-10-2023*

# ஊதாரி மைந்தன் – விழிப்புணர்வு





உள்ளம்தான் பனிபோல் உருகித் தந்தையின்
அன்பை நினைந்திட-கண்ணீர் வெள்ளம்தான்
செவ்விழி நின்று பெருகிக் இமைக்கரை
உடைத்திட நொந்தழுத பிள்ளை மனம்

சொல்லத்தான் முடியாத பெருஞ்சோகம்
கலைமானை விழுங்கிடும் மலைப்பாம்பென
மனதை விழுங்கிட -நிலை குலைந்து
புழுதியில் விழந்த ஊதாரி மைந்தன் நான்.

சொத்தைப் பிரித்து என் பங்கைத் தாரும்,
பந்தப் பாசம் தூசி எனத் துறந்த பிள்ளை
ஊதாரியாய் வாழ்ந்து, நாதாரியாய் மாறி-படரக்
கொழுகொம்பின்றிப் பாதையில் கிடந்த முல்லை



அப்பா என்ற சொல் பொருளிழக்கும்
அண்ணன் எனும் அழைப்பு மௌனிக்கும்
செல்ல மகனே என்னும் உறவு நிறமிழக்கும்-மகனே
என் இதயம் நொருங்கும் எம்மைப் பிரியாதே

உறவு சிதைய அன்பு பொய்க்கும், வீடு களையிழக்கும்
இளையவனே, நீயின்றி என் நெஞ்சம் துடிதுடிக்கும்
பிஞ்சு நெஞ்சில் ஏனோ பிரிவினை எனும் ஆலகால நஞ்சு

கெஞ்சி மன்றாடியும் இரங்காத பிள்ளை மனம்
அன்பைப் புறந்தள்ளி சொத்தை நாடிய ஆணவம்
ஊதாரியாய் செல்வம் இழந்து-உயிர் பிழைக்க
நாதாரியாய் மாறிட விழித்த ஞானம்

பன்றிகளுக்கும் பசியாறப் போதிய உணவிருக்க, கல்லினுள் உறையும்
தேரைக்கும், கடல் வாழ் உயிரினத்திற்கும் இறைவன் உணவளிக்க,
புள்ளினங்ளுக்கும் களைப்பாறிப் பசி போக்க கனி மரங்களிருக்க,
குடலைப் பிடுங்கும் கோரப்பசியால் வருந்திய செல்வச் சீமான் மகன்

செல்லப் பிள்ளையாய் வாழ்ந்த மகன் வாடினேன்
வெள்ளம், புயல் ஒன்றாய் வீழ்த்திட வந்தாலும்
வேரும், விழுதுமாய் விழாது காத்திடும்-தந்தையின்
அன்புக் கரங்களை உதறித் தள்ளிய நீசன் புலம்பினேன்

அநாதையாய் மாற்றுடைக்கும், பிடி சோற்றுக்கும் அல்லாடி
பசிப்பிணி, பெருநோயாய் வாட்டிட வருந்தி, ஆணவம்
அழிந்து, அறிவு தெளிந்திட எழுந்து விரைந்து -ஈசனான
ஆருயிர்த் தந்தையைத் தேடி ஓடிய நேசன் நான்

வளமான வாழ்வும் கனவாய்க் கலைந்திட, வறுமையும், வெறுமையும்
வெள்ளமாய்-என்னை வாழ்வின் அந்தத்திற்கே அடித்துச்சென்றிட
தன்னிலை அறிந்து விழிப்புற்றேன், தந்தையின் அன்பு புதுத்தெம்பளிக்க
வீடு திரும்பிடப் பாதை மாறிய புதுப் பயணியானேன்



எந்தையின் இல்லத்தில் -ஏவல் புரிந்திடும்
பணியாளருக்கோ எக்குறையுமில்லை,
வாட்டிடப் பசியோ, வருத்திடச் சோகமோ இல்லை
யாதுமாய் தந்தையிருக்க யாவருக்கும் இன்பமே

சிந்தை வருத்திடப் பசி வாட்டிட –நைந்த
கந்தையோ நாறித் தூற்றிட குமுறி அழுதேன்
எந்தையும் தாயுமானவன் மாசற்ற அன்பை
தூசெனக் கருதி உதறித் தள்ளிய நீசன் நான்.

தந்தையின் இல்லத்தில் பணியாட்களோ நூறு
உருசியோடு பசியாறிட அறுசுவையோ நாளும் விருந்து
உடுத்து மகிழ்ந்திடப் பட்டாடைகளோ பல நூறு
உருவழிந்த பஞ்சப் பரதேசி நானோ வற்றிய ஆறு

அன்று அன்புத் தந்தையின் அரவணைப்பில்
வாழ்வும் வசதியும் ஒன்றான அதிசயங்கள்
இன்றோ கனவாகிப் பழங்கதையாகிப் பசியும்,
பஞ்சமும் வாட்டிட ஆண்டியான நிஜங்கள்



தேகத்தின் பசியெல்லாம் தீராப் பெருநோய்களே
மூப்பு, பிணி, சாவை முனைப்போடு நாடும் வழிகளே
புலன்வழி இன்பமெல்லாம் வெறும் பொய்யே
பொன்மானைத் துரத்தியதும் என்தன் மடமையே

காமமும், களியாட்டமும்,
ஒட்டுண்ணிபோல் சேர்ந்த போலி நண்பரும்
செல்வத்தோடு, செல்வோம் என்றே ஓடி மறைந்திட,
செல்லாக்காசாய் மதிப்பிழந்த மூடன் நான்.

அலைக்கழித்த மாய இன்ப அலைகள் ஓய்ந்திட-
***அறிவு தெளிந்திட உண்மை புரிந்தது,***



நெஞ்சில் அமைதி பிறந்திட *"விழிப்புணர்வு உதித்தது*
*வீடு நோக்கிப்"-பாதை மாறி-வந்த வழியே*
அன்புத் தந்தையைத் தேடி ஓடினேன்

களிந்தது இளமைக் களிமயக்கம்-அணைந்தது
வாட்டிய காமுறு மங்கையர் காம வெப்பம்,
ஓய்ந்தது மனப்புயல், ஒழிந்தது மமதை,
தெளிந்தது மதி மயக்கம் ஒரு நெறி நின்றது உள்ளம்

வாழ்வெனும் குறுந்தூரப் பயணத்தில் -வெளியில்
இன்பத்தை யாசிப்பவன் வறியோன், அறிவிலி
தன்னுள் "உலவாக்கிழியைக்" கண்டவனே ஞானி

அனலிடை மெழுகாய் உள்ளம் உருகிட
அன்புத் தந்தையைக் கானும் தவிப்போ
அடியவன் நெஞ்சைத் தணியாத தாகமாய் வாட்டிட
அப்பா!, தந்தாய் எனக் கதறினேன்

கொடுவெயிலும், நெடும்பயணமும், தீராப் பெரும் பசியும்,
தாகமும்-தந்தையின் அன்பை எண்ணிட மறைந்து போனது
பாதை மாறிய பயணத்தில்-அன்றோ
வந்த வாய்ப்பும், வசதியும் கானல் நீரானது

கடலைத் தேடிய நதியின் பயணமும் களிப்பாய்
முடிந்திட, வாரி அணைத்த அலைக் கரங்களும்
அன்புப் பிணைப்பால் இன்புற-ஒன்றோடு
ஒன்றான உறவுகளின் ஆனந்தச் சங்கமம்

இதயம் குமுற, இரு விழிகளும் நீர் சிந்திக் கரைய
ஐயா சரணம் என்றே , ஐயன் திருப்பாதம் பற்றி
எந்தையே என் பெரும் பிழை பொறுத்தருள்க என்று
மன்னிப்பை அழுது இரந்தேன்

சொத்தைப் பிரித்து பாகப்பிரிவினை நாடியவன், சொந்த
பந்தங்களின் சுகதுக்கங்களில் தன்னை அந்நியனாக்கியவன்
ஒட்டியும், ஆம்பலுமாய் ஒன்றிணைந்த உறவை
ஒட்டுண்ணியாய்க் கருதி ஒதுக்கிட்ட மூடன் உருகி அழுதேன்.

சொத்தோ மலையளவு பெரிதாக, அரிய சொந்தமோ
கடுகிலும் சிறிதாக முத்தான தந்தையின்-பெருஞ்
சொத்தான அன்பைப் புறந்தள்ளிய மூடன்



பெற்ற மனம் பித்தாக- பிள்ளை மனம் கல்லாக,
கத்தும் கடலலைபோல் தந்தை உள்ளம் குமுறியழ,
சிற்றின்பச் சுகம் தேடி அலைந்த பித்தன் புலன் பாயும்
திசையெங்கும் பொருளிறைத்து இன்பம் தேடிய புல்லன்

போலி நண்பரும் பல நூறாயப் பெருகிட
ஒட்டுண்ணிபோல் செல்வத்தை உறிஞ்சிக் கொளுத்திட
மதுவிலும், மாதிலும் மயங்கிய பேதை

செல்வமும், செல்வோம் எனச் சென்றிட
பொன் பெற்ற மாதரும் போ, போ என்றே விரட்டிட
போகமும் திசை மாறி ஏழ்மை உறவாடிட
போலி நண்பரும் வழி மாறிடத் தடுமாறினேன்

விதி வழியே பொன்மானைத் தேடிய
புது ராமனாய்க் கலங்கினேன்
கணை பட்ட மான்போல் துன்புற்றேன்
காமக் களியாட்டம் மெய்யென்ற பொய்யன்

தந்தையின் வரமான பேரன்பை உதறிய ஊதாரிக்கு
பன்றி மேய்க்கும் நாதாரி வாழ்வு சாபமானது
பஞ்சம் பிழைக்க வழியானது-மனம் திரும்பிட
ஞான உபதேசம் செய்த குருவானது

மெய்யின் பசியெல்லாம் பொய்யே
மூப்பும், பிணியும் , சாவும் கொள்ளையிட
மெய்யே பொய்யாகும், மேனிச்சுகங்களும் கனவாகும
வாழ்வின் ஒளி உன்னுள்ளே-தேடிக் கண்டுபிடி

பெண்ணின்பம் பேரின்பம் பொய்யே, வாழ்வும், நீர்க்குமிழியான
நிலையே, பசியும், காமமும் மெய்யின் தீராப் பெருநோய்களே,
உண்மையின் ஒளி உள்ளத்தில் உதிக்க-தந்தையின்
அன்புத் தோளில் தலைசாய்த்து அழுதிடத் துடித்தேன்.

வழிமேல் விழிவைத்து-அப்பா எனும் இளையவன்
மொழிமேல் செவி வைத்து, பாசத்தை நெஞ்சில் வைத்து-வரும்
வழி பார்த்திருக்கும் தந்தையைக் கண்டேன்

கவலையும், முதுமையும் காலத்தே வாட்டிட , காணத்தவித்தவன்
தொலைவில் வரக்கண்டார், பெருநிதிக்குவை கண்ட ஏழைபோல்
வேகமாய் ஓடி என்னைக் கட்டியணைத்து அன்பு முத்தங்கள் கோடி
கார்கால மழையெனப் பொழிந்தார் என் தந்தை

பால் முட்டி முலைகள் வருத்தக் கன்றைத் தேடி கதறும்
தாய்ப் பசு- பசி வருத்த தாயைத் தேடி"அம்மா" என்றே
கதறும் கன்று ஒப்ப எம் நிலை, பிரிந்தவர் கூடிடப் பேசவும்
வேண்டுமோ? என்னே இன்பம் நாம் உற்ற பேரின்பம்

பொன் மானைத் தேடி புலன்வழி ஓடி, புலம் பெயர்ந்து ஏமாந்த மூடன்
அம்மானைக் கண்டேன்-அன்பு நெஞ்சத்தின் அருஞ்சுவையை
அணைப்பில் கண்டேன், அமுதாய் உண்டே இன்புற்றேன்
உருகிக் கரைந்து உள்ளம் வெதும்பிட குற்றம் பொறுத்திட இரந்தேன்

மகிழ்ந்தே-என் தந்தையும் இறந்து பின் உயிர்த்த
என் மகன் வரவிற்காய்-எல்லோர்க்கும்
அறுசுவை விருந்து-திருநாளாய்க் கொண்டாடுவோம்
உவகையோடு உரைத்த பெருந்தகை

சேற்றில் உழன்ற கால்களுக்குப் புதுச் செருப்பு, நாறிடும்
கந்தையை மாற்றிட நறுமணப் பட்டாடை, வரண்டு
சிக்குண்ட முடிக்கு வாசனைத் தைலம்-வாஞ்சையோடு
என் மகன் இவன் எனச் சொல்லிட முத்திரைமோதிரம்-

ஒன்றிணைந்த உறவுகளால் பூத்ததோ ஒப்பில்லாப்
பேரின்பம், பிரிந்தவர் கூடிடப் பேசவும் வேண்டுமோ?
கன்றும், பசுவும் ஒன்றிணைந்த இன்பம், கம்பனாலும்,
காளிதாஸனாலும் சொல்ல இயலாப் பேரின்பம்

இசையும் பாட்டும், நடனமும், கொண்டாட்டமும்
இணைந்த உறவின் பேரானந்தத்தைப் பறைசாற்றிட
வயல் நின்று உழைத்துக் களைத்து வந்த அண்ணனோ
வசை பொழிந்து, வரட்டு நீதி பேசி முகம் வாடி நின்றார்

என் சீமந்தப் புத்திரன் நீ-எனக்குரியதெல்லாம்
உனக்குரியதே-இவனும் என் பிள்ளை
உன் செல்லத் தம்பி-செய் பிழை பொறுத்து
மன்னிப்பது மூத்தோன் அண்ணன் உன் கடன்

வழி தவறிய ஆடு வந்து சேர்ந்தது வீடு
அகமகிழ்ந்து கொண்டாடு-கல்வி
கற்றுத்தராத பாடத்தை அனுபவத்தால்
கற்றறிந்த தம்பியை ஏற்பது நீதி

மன்னித்தால் நிலைக்கும் உறவு
தண்டித்தால் உறவும் வெறும் கனவு

குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை
கூடி வாழ்ந்தால் கோடி இன்பம்-நாயனமான
வார்த்தையில் நலம் பெற்ற அண்ணன்
அரவணைத்தே பாசத்தை சொல்லிய தகப்பன்

மது போதையும் விடியும் வரைக்கும்-விலை
மாதர் சுகமும் பொன் உள்ள வரைக்கும்
புண் மொய்க்கும் ஈக்களாய் உறவாடும் -போலி
நட்பும் பொருள் இருக்கும் வரைக்கும்



புலன் வழி சென்றால் வாதையே,
என்றும் தீராத உபாதையே
மனமே தனித்திரு, விழித்திரு,
தந்தை அன்பில் என்றும் நிலைத்திரு.

அன்புத் தழுவலில் ஆறாத்துயரங்கள் ஆறிட
வடியும் விழி நீரில் பட்ட அவலங்கள் கரைந்திட
இன்பமே இனி என்றும் இன்பமே எனப் பிரிந்த
இதயங்கள் கூடிக் களித்திட ஆனந்தம் பிறந்தது.

***“தன்னை அறிந்த அறிவு ஒளிகாட்ட” தந்தையைத் தேடி மகனும்***
***“வீடு திரும்பிட” தேடலாய் தொடங்கிய வாழ்க்கை வட்டமும்***
***தன்னை அறிந்த மெய்யறிவால் பூரணமானது***
***தன்னை அறிதலே மனம் திரும்புதலானது***

வாழ்வெனும் யாத்திரையில் வழிப்போக்கர் நாம்
உலக சத்திரத்தில் மாயச் சுகங்களோ கோடி
பொன்மானைத் தேடி, கானல் நீரை நாடி
வாடி வருந்தும் வாழ்வோ நீர்க்குமிழி

தேகம் விழுமுன், வெள்ளிக்கயிறு அறுமுன்
நம்மை நாம் அறிதலே மெய்யறிவு-***விழிப்புணர்வு,***
***இறவாப் பெருநிலையே நம் சொந்த இயல்பு***

பெற்ற பெருஞ் செல்வமெல்லாம் இழந்து, உற்ற நண்பரும்
போலியென அறிந்து, உலக இன்பமும் மாயை எனத் தெளிந்து
பஞ்சம் பிழைக்க பரதேசியாய் சிறுமையுற்றவன் விழிப்புற்றான்

இழந்த பின் புரிந்தான் இழப்பின் அருமை
துன்பத்தின் சிகரத்தில்-தன்னை அறிந்தவன்
ஆத்மஞானம் பெற்றான்
ஆணவம், துன்ப வேள்வியில் ஆகுதியானது

ஆனந்த விழிப்புணர்வோ
பரிபூரண சரணாகதியில் உதயமானது-மனந்திரும்பி
வீடு நோக்கிய பயணம் ஆனந்த வேள்வியானது

அறம் மறந்து, பொருள் இழந்து, இன்பம் மறைய
எரி நரகான துன்பத்தில் விழிப்புற்றேன் வீட்டை அடைந்தேன்
என் சிலுவையைச் சுமந்து வீடு சேர விழிப்புணர்வே பாதையானது-
வற்றாத தந்தையின் அன்போ ஞான ஒளியானது



***மனம் மாறிய ஊதாரி மைந்தன் விழிப்புணர்வு பெற்றான்
அண்ணனோ வரட்டு நீதி பேசி அன்பினை இகழ்ந்தான்
விழிப்புணர்வைத் தேட மறந்தான்***

அன்புதான் தந்தையாய் அனைத்தையும் படைத்திட
ஆணவத்தால் மானுடமோ பாவத்தில் வீழ்ந்திட
விழிப்புணர்வே நிலை வாழ்வின் வழி
வீடு சேர வழி என்றார் அருட்பொழிவு பெற்றவர்

உழைத்துத் தேடிய செல்வம் ஏதுமில்லை, உழைக்காமல்
கிடைத்த உரிமைச் சொத்தும்  ஊதாரி வாழ்வால் நாசமானது
பஞ்சமும் பசியும் வாட்டிட-பன்றி மேய்க்கும் நாதாரி வாழ்வு
பரதேசிக்கு ஞான உபதேசமானது

தன்னையறிந்தவன் வீடு நோக்கிப் பாதை மாறி
பணியாளாய் ஏனும் பணிபுரிய சரணாகதியடைந்தான்-
மனந்திரும்பிய ஊதாரியை மகனாய் ஏற்றுப் போற்றிய
அன்புத் தந்தை-வரட்டு நீதி மொழிந்த அண்ணன்



பாகப் பிரிவினை கேட்டு கதிராய் ஒளிர்ந்த
தந்தையின் முகத்திலோ அன்று சூரிய கிரகணம்-
பௌர்ணமி நிலவான தனயனுக்கோ சந்திர கிரகணம்
இன்று நிலைமை மாறிட-அன்பு அரவணைத்திட
எல்லோர் உள்ளத்திலும் பேரானந்தம்

என் சித்தமன்று, தந்தையே, உம் சித்தம் என்றே
வாழ்ந்த மகனும்-கழுமரத்தில் தந்தையைக்
கூவிக் களைத்தார் -துன்பத்தின் சிகரத்தில்
பரிபூரண சரணாகதியில் ஞானம் பெற்றார்

அன்பு மன்னிக்கும், நீதி தண்டிக்கும்
அன்பே இறைவன், மன்னித்தால் நிலைக்கும் உறவு
தண்டித்தால் உறவும் கலைந்த கனவு

அறிவுக்கனியுண்டு ஆணவம் விழிக்க-
ஆதாம் வீட்டை இழந்தான்-பரிபூரண சரணாகதியில்
இயேசு, கிறிஸ்துவாய் மலர்ந்து-நானும் தந்தையும்
ஒன்றென்று வீட்டைத் தம்முள் அடைந்தார்

ஆதாமையும்- கிறிஸ்துவையும் இணைக்கும்
அற்புதப் பாலமே இயேசு-உள்ளுணர்வின்
அடியும், முடியுமாய்
இரு துருவங்களாய் ஆதாமும், இயேசுவும்

வீட்டை இழந்தவன் மீண்டும் வீட்டை அடைந்திட
வட்டம் பூர்த்தியாகும் வாழ்வே-நிலை வாழ்வு-நம் சிலுவை
நாம் இறைமகனாகிட இறை தந்த பெரும் கொடை
பரிபூரண சரணாகதியே வீடு சேரும் பாதை

**எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra-17-10-2023*

# தேவ பராமரிப்பு



***வருந்திச் சுமை சுமந்திருப்போரே***
***வாருங்கள் என்னிடம்–உங்களை***
***நான் தேற்றுவேன், இளைப்பாற்றுவேன்***
***என் நுகம் இனிது–என் சுமை எளிது***

ஆறுதல் தரும் வார்த்தைகள்-சூழ அமர்ந்திருந்த
மக்களின் உயிர், மெய்யை சீதளத் தென்றலாய்த் தழுவிச்
சீராட்ட, வாழ்வின் பெரும் சுமைகளால் தள்ளாடித்
தவித்த, மானுடம் அமைதி கண்ட ஆனந்தப் பொழுது.

வறுமையும், வாட்டும் பிணியும் வறியவருக்குப்
பரம்பரைச் சொத்தானது, வாழ்வே சிலுவைச் சுமையாக
ஏழைகளுக்கு, ஆறுதல் எட்டாத நிலவானது
கிட்டாத கனவானது

இயேசுவோ கிட்டிய சுகமாக, பெரு நிதியாக
செய்யாத தவத்திற்கும்-நூற்காத நோன்பிற்கும்
இறைவார்ததை ஆன்மாவிற்கு உணவானது
அப்பம் உடலுக்கு ஆகாரமானது.

கல்லும், முள்ளும் கடந்து, கருணை வடிவானவரை
தொடர்ந்த கால்களில் பாதணிகள் இல்லை, காய்ந்த
வயிறுகளில் பசித் தொல்லை, வஞ்சமில்லா நெஞ்சங்களின்
வாழ்வில் பஞ்சத்திற்கு குறைவேயில்லை

அறிவைக் கழித்த மானுடர்க்கு இதயம் மலர்ந்திட
இறைமகன் அழைப்பு ஆறுதல் ஈந்திட
***சத்சங்கமாய்*** அவரோடு அவர்தம் இருப்பு

மதியம் தாண்டி நீடித்த மனுமகன் படிப்பினையும்,
குணமாக்கலும் அருட்பொழிவாக, பூரித்த
மனங்கள், பசியால் களைப்படைந்த முகங்கள்

பார்த்தவர் மனம் நெகிழ்ந்தார், எளியோர்
பசியறிந்தவர் சீடர்களிடம் மொழிந்தார்
மக்கள் பசியாய் இருக்கின்றார்-உண்டு பசியாற
இவர்களுக்கு உணவளியுங்கள்

கூட்டம் பெரிது, ஐந்நூறு தெனாரியத்திற்கு
அப்பம் வாங்கினாலும் ஐயனே, மக்கள் பசி தீராது,
ஏது அவ்வளவு பணம் எம்மிடம்?
எளியவர் பாடலில் ஏழ்மையின் இராகம்

ஐயனே இங்கொரு பையனிடம்-ஐந்து
வாற்கோதுமை அப்பங்களும், இரு மீன்களும் உண்டு
உரைத்த சீடர் மொழியில் ஊசலாடும் நம்பிக்கை
உத்தமர் முகத்திலோ பூத்த குறும்புன்னகை



மக்களைப் பந்தியமர்த்திட சீடரை வேண்டியவர்
ஐந்து அப்பங்களையும் இரு மீன்களையும் கையிலேந்தி
வான்நோக்கி தந்தையை வாழ்த்திக் கொடுத்தார்
தம் சீடரிடம் வயிறாற உண்ணப் பரிமாறுங்கள்.

அப்பங்களும், மீன்களும் பல்கிப் பெருக
அட்சய பாத்திரங்களாய் கூடைகள் மாறி-உணவை
அள்ளிப் பொழிய அதிசயித்த சீடரும், பசியாறிய மக்களும்
ஐயனைப் போற்றித் தொழுத நேரமது.



பொன், மண், பெண் இன்பம் கொண்டவர்
தேடாத இறைவனை, எளியோர் தேடிட-ஏழையரைத்
தேடிவந்த இறைமகனும்-அன்பால், அடியார்களைப்
போஷித்த பொன்மாலைப் பொழுதது



பொருட்செல்வம் தேடுவோர் உலகில். அருட்செல்வம்
தேடி வந்த மக்களை, அரவணைத்த அன்புக் கரங்கள்
அணைத்துக் களித்து, ஆறுதல் மொழிந்து, உணவளித்து
தந்தை தாயாய்ப் போஷத்த அன்பின் அழகிய நிகழ்வு

***மனிதன் அப்பத்தினால் மட்டுமல்ல-***
***இறை வார்த்தையினாலும் வாழ்தலே பேரின்பம்***
***வார்த்தைக்குச் சான்றான அதிசயம் -உள்ளதை***
***இல்லாதவரோடு பகிர்ந்திட பெருகிய பேரின்பம்***

***எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-17-10-2023*

# விழிப்புணர்வு-சீமோனின் அறிக்கை



தன்னை அறியும் அறிவே மெய்யறிவு, மற்றெல்லாம் தகவலறிவே
விவாதமும், தத்துவமும், வேதாந்தமும், உண்மைக்குப் பாதையல்ல
சத்தியமோ தரிசனம், வார்த்தைகளால் சொல்லமுடியாத
சொந்த அனுபவமே உண்மை-*தாவோ*




என்னை யாரென்று மக்கள் சொல்கின்றார்? சீடர்களின்
புரிந்துணர்வை அறிந்தும், அறியாதவர்போல் குருவின்
கேள்வி, தம்மை வெளிப்படுத்தி விசுவாசத்தை
உறுதிப்படுத்திட, தம்மை அறிந்தவரின் ஞான வேள்வி

எலியாவோ, ஜெரமாயாவோ, இறைவாக்கினரோ, உயிர்த்த
யோவானோ நீரே என்பதே மக்கள் நம்பிக்கை, பாரம்பரியம்,
பழமைமை சார் எண்ணங்கள் உண்மையை அறியத் தடையானது
கண்முன் மெய் இருந்தும், காண அக ஒளியில்லாத நிலையானது

என்னை யாரென்று நீங்கள் அறிவீர்கள்?
தன்னை அறிந்த குரு தன் சீடர்களை வினவிட
விடை தேடி அலைந்த மனங்கள்-கரை காணாக் கடலையோ,
விசும்பையோ கண்டதெனச் சொல்வாரோ?



***"நீர் மெஸாயா வாழும் இறைவனின் மகன்"***
அருளாளன் சீமோனிற்கு-இறையருள்
வரமானது-சத்தியம் தரிசனமானது

கடந்த காலத் தெய்வங்கள்-காலத்தோடு
மறைந்திட, காலம் கடந்த இருப்பே இறைவன்
"நீர் வாழும் இறைவனின் மகன்"
நிகழ்கால இருப்பின் வெளிப்பாடாய் இயேசு

மனுமகனைக் கண்டவர் -இறைமகனைக் காணவில்லை
இறைமகனைக் கண்டவர் மனுமகனைக் காணவில்லை
***சாயலில் மனுமகனாய், உள்ளுணர்வில் இறைமகனாய்***
ஒன்றானவரோ இரண்டுமாயிருந்தார்




இருளும், ஒளியுமாய், ஆழ்மனமும், சுயவுணர்வுமாய்
தர்க்கம் கடந்து, அறிவுக்கு அப்பாற்பட்ட
இருமைகளின் சந்திப்பில்-தோன்றிடும்
முரண்பாடுகளின் சங்கமம் இயேசு

எப்போதும் இருப்பது நிகழ்காலம்
காலம் கடந்த நிகழ்காலத்தின் இருப்பாய்
உள்ளுணர்வின் உன்னதமாய் இறைவன்

**வாழும் இறைவனின் மகன் நீர்**

சீமோனின் பதில் சத்தியத்திற்கு சாட்சியமானது
அறிவைக் கழித்த இதயத்தின் விடை
வரமாய் கிடைத்த இறைகொடை

இறந்த காலத்தின் நகல் அல்ல புரட்சி மனம்
அது நிகழ்காலத்தின் புத்தொளி-சத்தியம்
அறிவு கடந்த தூய மனதின் தரிசனம்




பழமையைச் சார்ந்த கண்ணோட்டம்
மக்களது, உண்மையைக் காண, அறியாமையும்
ஆணவமும் தடையானது.

பழமையும், பாராம்பரியமும் கடந்த
புரட்சியும், கன்னித் தன்மையுமான
புதுமையின் பரிணாமமாய் - விழிப்புணர்வாய்
பிரக்ஞசையின் சிகரமாய் இயேசு

பிரக்ஞானம் பிரம்மம்-மகாவாக்கியத்தின் சாட்சியமாய்
அவதார புருஷர்கள்-சுயவுணர்விலும், விழிப்புணர்விலும்-
அவர்தம் இருப்போ நிலைக்குத்தானது.

மானுடர் வாழ்வோ கிடையானது
விழிப்புணர்வற்ற தூக்க நிலையை குறிப்பது-

காலம் நித்தியத்தை சந்தித்த குறியீடாய் சிலுவை
நித்தியமே இறைவன்-மனமே காலம்,
சடமாய்-கிடையாய் விழிப்புணர்வற்ற நிலை
சூனியமாய், நிலைக்குத்தாய்- விழிப்புணர்வு நிலை

இயேசுவின் கரங்கள் கிடையாய் -செயலாற்றும் நிலையைக் குறிக்க-
நிலைக்குத்தான உடல் செயல் அற்ற இருப்பு நிலையைக் குறிக்க
பழமையின் பிரதிபலிப்பல்ல இயேசு, அகக்கிளர்ச்சியின்
உருவம், தூய மனமான சத்திய தரிசனம்




தீர்கதரிசிகளின் பரிமாணத்தில்-சீடர்களின் அறிவு
உள்ளுணர்வின் உச்சமாய்- தூய மனமாய்-
பிரம்மமாய் -நிலைக்குத்தாய், சீடர்களின்
உணர்வுறுநிலை கடந்த இருப்பாய் இயேசு

ஒரு துளியும் கடலே
துளியும், கடலும் இணையும் புள்ளி
கிடையும், நிலைக்குத்தும் சந்திக்கும் புள்ளி
காலம் நித்தியத்தை சந்தித்த குறியீடு சிலுவை

முடிவும், முடிவிலியும், சந்திக்கும் புள்ளி
மனுமகனும், இறைமகனும் இணைந்த கோட்பாடு
கிறிஸ்து, எல்லைகள் கரைந்திட, சடமும்,
சூனியமும் சந்திக்கும் இடம்




ஆணவத்தின் சாவும், தூய மனதின்
பிறப்புமான சங்கமம், இருமை சந்தித்து
ஒருமையாகும் சத் சித் ஆனந்தம்

அறிவு கடந்து இறையருளின் வெளிப்பாடு
***விழிப்புணர்வின் உச்சமாக***
உண்மை ஒரு தரிசனமாக –மகிழ்ந்த குரு

யோனாவின் மகனாகிய சீமோனே-நீ பேறுபெற்றவன்
வானகத் தந்தையே இதை உனக்கு வெளிப்படுத்தினார்
***“இருப்போ” விழிப்புணர்வு அறிவாய்***

விழிப்புணர்வின் அடையாளமாய்
உன் பெயர் இனிப் பேதுறு (பாறை)
***விழிப்புணர்வே திருச்சபையின் அடித்தளம்***
***இயேசு மெஸாயா என்பது சத்தியம்***

விழிப்புணர்வே விடுதலை-
***விழிப்புணர்வே மோட்சத்தின் திறவுகோல்***
***மனமழிந்த நிலையே சுதந்திரம்–அதுவே மோட்சம்***




இறையருளால் வரமான விழிப்புணர்வு
இயேசு மெஸாயா என மொழிந்த
சத்திய தரிசனத்தின் ஆனந்த நிகழ்வு

பாடுகளை குரு முன்னறிவித்தபோது, பாதை மாறிட
வேண்டிய கூற்றோ, தன்னுணர்வற்ற சீமோனின் வெளிப்பாடு
என் கண்முன் நில்லாதே சாத்தனே
வன்மையாகக் கண்டித்த இயேசுவின் நிலைப்பாடு

தன்னை மறுத்து, தன் சிலுவையைச் சுமந்து-
என் பின்னே வராதவர் எவரும் என் சீடர் அல்ல
விழிப்புணர்வே இறையுணர்வு-தன்னுர்வற்ற நிலையே-
இருள் சூழ் அலகையின் உலகு.

இறை வார்த்தையையும், அலகையின்
வார்த்தையையும், பகுத்தறியும்
ஆற்றல் பெற்றவரே மெய்யான குரு.







விழிப்புணர்வு நிலையில் பேதுருவாய், விழிப்புணர்வற்ற
நிலையில் அலகையாய் சீமோனின் நிலை மாற்றங்கள்-
எழுச்சியும், வீழ்ச்சியுமான மானுடத்தின் இரு அவத்தைகள்.
செங்குத்தும், கிடையுமான நிலைகள்.

ஆன்மீகத்திற்குப் பாரம்பரியமில்லை
வாரிசுமில்லை, தேடலாக்கிக் கண்டவருமுண்டு
இறையருளால் பெற்றவருமுண்டு, நூற்காத தவத்திற்கு
சீமோனுக்கு கிடைத்த வரம் பெரிது

அன்பினால் என்னை அறிந்தீர்கள், உண்மையைத்
தரிசித்தீர்கள், அன்பினால் அறிந்ததை, அன்பே புரியும்
அன்பு இதயத்தின் மொழி -வார்த்தை கடந்த இசை
அறிவோ மனதின் மொழி -தர்க்கத்தின் வழி

முத்தைப் பன்றிகளுக்கு முன் எறியாதீர்கள்
செவிடருக்குமுன் சாஸ்திரிய சங்கீதம் இசைக்காதீர்
புரியாதார் உங்களை இகழ்வார், புண்படுத்துவார்
எவருக்கும் இந்த உண்மையைச் சொல்லாதீர்கள்
அறியாதவர் உங்களைத் துன்புறுத்துவார்

சத்தியம், வார்த்தை கடந்த அகதரிசனம்
சாட்சிபாவமான தூய மனத்திற்கே சாத்தியம்

**எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# உருமாற்றம்

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

வெண்மேகம் விளையாடும் மலைச்சிகரம் நாடி, மனுமகனும்
அடியெடுத்தார், சீடர் மூவரைக் கூட்டி: அனுபூதியில் இறைமகனைப் புரிந்திட
ஆணிவேராய் விசுவாசம் வேரூண்றி நிலைத்திட, அனுக்கிரகமான
உருமாற்றம், மனுவுருவான வார்த்தையின் நிஜத்தோற்றம்

***இங்கிருப்போர் சிலர் –இறையரசைக் காணுமளவும்***
***மரண சுவை அறியார், அன்றுரைத்த வார்த்தை*** இன்று
நிறைவேற, வரமான அவர் உருமாற்றம்-மனுவுருவான
வாழ்வளிக்கும் வார்த்தையின் நிலை மாற்றம்

காற்றிலாடும் பூவினங்கள் நல்வரவு சொல்லிட
கால்பட்ட இடமெங்கும் களிப்புற்ற புல்லினங்கள்
தொட்டது எம்மை தொழத்தக்கவர் திருப்பாதம்
புல்லரித்து ஆனந்த ஆலாபனை செய்தன

புள்ளினங்கள் பூபாளம் பாடிட, தென்றலும் இதமாய்த் தழுவி
இன்புற, கதிரவனும் கனல் தணித்து கதிர் குவித்து தொழுதிட
மலையுச்சி வந்தடைந்த மனுமகன்
மண்ணுயிர் மீட்க வந்த மாதவன் திருமைந்தன்

களைப்புற்ற சீடர்களும் இளைப்பாற, களிப்புற்ற
மகன் தந்தையுடன் உறவாட, உருமாறிய
திருமேனி கண்டு மலைப்புற்ற சீடர், எலியாவும்
மோசேயும் உறவாடக் கண்டு வியப்புற்றார்

வெண்பனி நாணிடும் தூய வெண்துகில் ஆடையாக
செங்கதிர் கூசும் பேரொளி, மேனி சிந்தும் வண்ணமாக
தந்தையும் மேகமாய்த் தனயனை அணைத்து இன்புற
தன் பணி தந்தை பணி எனத் தாள் பணிந்தவர் தோற்றம்

மனுவுரு மாறித் தபோர் மலையில் இறையுருவாக
காண்பது கனவா? நனவா? கண்டவர் மயங்கினார்
தன்னிலை மறந்து பேச்சிழந்தார்

வெண்கதிரோ இல்லை விண்மீனோ? முழுநிலவோ
இல்லை முத்துச்சுடரோ?
கண்ணுற்ற கதிரவனும் இன்புற்றுக் களிப்புற
திருமேனி உருமாறிப் புதுக்கதிராய் ஒளிர்ந்தது

உமக்கொன்றும், எலியாவுக்கொன்றும், மோசேக்கு ஒன்றுமாய்
கூடாரம் மூன்றமைத்து -கூடி நாம் வாழ்வோம் திருமகனே
அச்சமும், வியப்பும் ஆட்கொள்ள அருமைச் சீடர்
சீமோன் பரவசத்தில் அறியாது மொழிந்தார்

கூடிவந்த வெண்மேகம் இயேசுவின்மேல்
வெண்கொற்றக் குடையாக
குலாவி நின்றவர்கள் மறைந்திட-இடியாய்
ஒலித்த இறைகுரலோ இசையான கட்டியம்

***'இவரே என் பிரிய மகன்
நான் தேர்ந்து கொண்டவர் இவரே
இவருக்குச் செவிகொடுங்கள்'***

மெய்கண்டான் மெய் வடிவை-சீடர்
மெய்யாய் கண்டார்-மெய்யடியார்களாய்
மெய்யப்பனைத் தொழுது இன்புற்றார்

கண்ட காட்சியை யாருக்கும் உரைக்காதீர்
கண்டிப்பாய் கட்டளையிட்ட மனுமகன்
காலம் வரும் நீங்கள் உண்மையைப் பறைசாற்ற
காத்திருப்பீர் அதுவரை என்றார்

இறைவாக்கும், திருச்சட்டமும் இவரிடம் நிறைவுற
மனுவுருவான வார்த்தை, மானுடம் நிலை வாழ்வு பெற
வழியும், உண்மையும் வாழ்வும், " நானே"
வாழ்வும், போதனையும் ஒன்றான அன்பின் கீதை

***எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்
எல்லாப் புகழும் இறைவனுக்கே
இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-17-10-2023

# நல்ல சமாரித்தன்



ஆன்ம லயம் பெறும் ஆலயம், கள்வர் குகையாய்
சீரழிந்து லயம் பிறழ, ஆகமமும், திருச்சட்டமும்
நிறையிழக்க, ஓதிடும் வேதம் சாரமற்ற உப்பானது
வாழ்வு சுருதி தப்பிய சுரமானது



அன்பு வழி துறந்து ஆகாமிய வழியில், ஆசாரியர்களின்
ஆஷாடபூதித்தனம், குருடருக்குக் குருடர் வழிகாட்ட
குழியில் விழும் மதவாத இனம்

பரிசேய, சதுசேய, மறை நூல் அறிஞர்
வகுப்பைத் தாண்டி-சூத்திர தச்சன் மகனாய்
மெய்ஞானி இயேசு

ஓய்வு நாள் மனிதனுக்கேயன்றி-மனிதன் ஓய்வு
நாளுக்கல்ல, கண்ணிற்கு கண் என்றால் உலகே குருடாகும்
பல்லிற்கு பல் என்றால் பொக்கை வாய்களே மிஞ்சும்

அன்பே தெய்வம், எதிரிக்கும் அன்பும்
பலி அல்ல இரக்கமே இறை விருப்பம்
நொருங்கிய மனமே இறை விரும்பும் காணிக்கை

மதப்போலிகளை நிர்வாணமாக்கி
ஏழைகளின் உரிமைக் குரலை நீதியாக்கி
அகக்கனல் மூட்டும் புதுப் புரட்சி



அன்பின் ஆனந்தக் கீர்த்தனை எளிய மனங்களுக்கு
ஔடதம், அண்ணலின் பிரசன்னமோ சத்சங்கம்
மதப் பாரம்பரியத்திற்கு அதிர்ச்சி வைத்தியம்-இறைவனுக்கோ
வார்த்தையானவரின் போதனை-இனிய நைவேத்தியம்

விபச்சாரி, பாவிகளோடு உண்டு, குடித்து
விருந்தாடும் இளம் போதகனோ -ஏழைகளின் தோழன்
திருச்சட்டத்தை அன்பினால் புடமிடும்
அகக்கிளர்ச்சியாளனோ-மதவாதத்தின் காலன்

நெஞ்சிலே நஞ்சை வைத்து நாவிலே தேனை வைத்து
போதகரே, நிலை வாழ்விற்கு வழி என்ன?
கேள்வியால், அன்பு வேள்வியைச் சீரழிக்க வினவிய
மறைநூல் வல்லுனனோ கபடன்

*திருச்சட்டம் கூறுவது என்ன?*
*எப்படிப் புரிந்து கொள்கின்றீர்? இயேசு வினவிட*

உன் கடவுளாகிய ஆண்டவரை, உன் முழு உள்ளத்தோடும்,
உன் முழு ஆன்மாவோடும், உன் முழு ஆற்றலோடும்
அன்பு செய்வாயாக, உன்னைப்போல் உன் அயலவனையும்
அன்பு செய்வாயாக, பதிலுரைத்தான் சட்ட வல்லுனன்



உத்தமமான பதில் உரைத்தீர்
உம் வார்த்தை உம் வாழ்வானால்
உமக்கும் நிலை வாழ்வு உரித்தாகும்

நீதிமானாய்த் தன்னை எண்பிக்க விரும்பியவன்
எழுப்பிய வினாவோ யார் என் அயலவன்?

ஜெருசலேமிலிருந்து ஜெரிக்கோ பயணித்த யூதரை
வழியில் திருடர் வழிமறித்தார்
ஆழ்கடல் பயணம் சென்ற சிறு கலத்தை
கடும் புயல் புரட்டிய கோரத்தை அனுபவித்தார்

உடைமையெல்லாம் கொள்ளையிட்ட திருடர்
குற்றுயிராய் அவரைப் பாதையோரம் விட்டுச்சென்றார்
மதுகாரி மதுமலரைச் சிதைப்பதில்லை-அமுதோ விருந்து
பொருள் பறிக்கும் திருடருக்கு மனித உயிரோ துரும்பு



ஆலயம் செல்ல, அவ்வழியே வந்த குருவோ உதவிக்கரம்
நீட்ட மனமின்றி விலகிச் சென்றான், அவ்வாறே
பின்னால் வந்த லேவியனும் செய்தான், காணாத இறைவனை
துன்புறும் அயலானிடம் காணாத மனோபாவம், அகம்பாவம்

தொழுதிட ஆலயம் செல்லும் குரு குலத்தவர்
தீட்டுப்பட்டவன் தீண்டத்தகாதவன் என்றே
காயமுற்றவனுக்கு உதவ மறுத்து
இரக்கம் மறந்து “சடங்காய்த்” தொழுதார்

அவ்வழி வந்த பண்பட்ட சமாரியனோ
புண்பட்ட மனிதனைக் கண்டு மனமிரங்கி
காயங்களைக் கழுவி-எண்ணெயிட்டுக் கட்டி
கழுதையில் ஏற்றிச் சத்திரம் சென்றார்

இரவு முழுவதும் பராமரித்தவர்-மறுநாள்
இரு வெள்ளி நாணயங்களைச் சத்திரக்காரனிடம் கொடுத்து
இவரைக் கவனித்துக்கொள்ளும்-மேலதிகச் செலவை
திரும்பி வரும்போது செலுத்துவேன் என்றார்.

துன்புற்ற மனிதனுக்கு இவர்களில் யார் அயலவன் ?
சமாரியன் எனக் கூற மனமில்லாத மதவாதி
அவனுக்கு இரக்கம் காட்டியவனே என்றான்
நீரும் அவ்விதம் செய்யும் என்றார் இயேசு.

ஆலயத்தில் தொழுத வேதியரோ-அன்பைப் புறந்தள்ளி
ஆண்டவனைக் கடனுக்காய்த் தொழுதார்
உதவிக்கரம் நீட்டிய சமாரியனோ, அநாதரட்சகன்,
அன்பை பகிர்ந்து இதயத்தால் இறைவனைத் தொழுதான்

ஆண்டவனைத் தொழுத மனங்களோ பாலைவனம்
அன்பு நடமாடும் சமாரியனோ சோலைவனம்
துன்புறும் மனிதனில் இறைவனைக் கண்ட ஞான குணம்
கடனுக்காய்த் தொழுத வேதியருக்கோ கல்மனம்

சமாரியனை அயலவனாய் ஏற்காத ஆணவம்
சமாரியன் எனப் பெயர் கூறாத மனோபாவம்
சட்ட வல்லுனனுக்கு வேதம் தகவல் அறிவு
சமாரியனுக்கு மதத்தன்தை வாழும் பண்பு

மனிதன் இறைவனாகும் மார்க்கமே ஆன்மீகம்
காணாத இறைவனை துன்புறும் அயலானில்
கண்டவன் கருணையே மெய்யான தொழுகை

மனிதனோ இறை சாயல், உன்னைப் போல
உன் அயலவன், அன்பே சட்டத்தின் அடித்தளம்,
அன்பை பகிரும்போது அன்பு பெருகி ஆணவம்
மறைகின்றது, இறைதன்மை மனிதனில் இன்புறுகின்றது

கட்டளைகளின் சாரமோ அன்பு
அன்பே தெய்வம்-ஒரே மையம்
சார்ந்த பல வட்டங்களாய் கட்டளைகள்
அன்பு சார் கோட்பாடுகள்

துன்புறும் அயலவனை அன்பு செய்பவனால் மட்டுமே
காணாத இறைவனை அன்பு செய்ய முடியும்
சட்டம் சார்ந்த கேள்விக்கு அன்பு சார்ந்த விடை
அறிவு சார்ந்த வினாவிற்கு இதயம் சார்ந்த பதில்

அறிவைக் கழித்திட அன்போ இதயத்தின் பரிபாஷை
இனம், மதம், மொழி, நிறம் கடந்த மனிதநேயமே மதத் தன்மை
வாழ்வும், வழிபாடும் ஒன்றான சமாரியனோ மனித நேயன்
வாழ்வும், வழிபாடும் வேறான வேதியரோ மதவாதி

யூதர், சமாரியர் எனப் பிளவுபட்டு மதவாதம்
அன்பே இறைவன் -அன்பிற்கு ஜாதி, மதமில்லை
அன்பே உயர் வேதம் -உண்மையே உயர் நெறி
அகப்புரட்சியாளராய் மனுமகன்

அன்பைப் புறந்தள்ளி-தொழுகையைத் தேர்ந்த குரு, லேவியனாய்
யூதர்களைக் காட்டி, அன்பே தெய்வம் என வாழும் மனித நேயனாய்
திருச்சட்டமறியாத ஒதுக்கப்பட்ட சமாரியனை, அயலவனாக்கி
மதங்கடந்த அன்பே ஆன்மீகம் மொழிந்த அகக்கிளர்ச்சி

மனதால் புரியும் தீமையே பாவம், செயலாய் புரியும் தீமையோ குற்றம்
துன்புறும் மனிதன் துயர் துடைக்க மறுப்பதும் குற்றமென்றார்
***திருச்சட்டத்தை வாசிப்பதும்,***
***அன்பினால் புரிவதும் வேறென்றார்-இயேசு***



அரிய உண்மையைப் புரிந்தவன், சமாரியன்
எனப் பெயர் கூறாமல்-சாதுரியமாய்
பரிவு காட்டியவனே எனக்கூறி நாணி மறைந்தான்

அன்பே இறைவன் அன்பிறைவனே நம் தந்தை
இறை மக்கள் நீங்கள், அப்பா! தந்தாய் என்றழையுங்கள்
அன்பினால் உண்மையை வாழ்வாக்கி வாழ்தலே வழிபாடு

வாழ்வும், வழிபாடும் இரண்டல்ல
மதமல்ல, மதத் தன்மையோ இரக்கம், கருணை
பலி அல்ல இரக்கமே இறை விருப்பம்

காவியணிந்தவர் எல்லாம் குருவல்ல, சத்தியத்தின்
சுவாலையை -ஒரு யுகத்திலிருந்து மறு யுகத்திற்கு
கொண்டு செல்லும் -அகக்கிளர்ச்சியாளரே மெய்யான குரு
அவரே இருள் போக்கும் ஒளி, சத்திய நெறி

மதம், இனம், மொழி கடந்த மனித நேயனாய்
நல்ல சமாரியனைக் காட்டி, அன்பே சிவம்
அன்பே நிலை வாழ்வுக்கு வழி
அன்பைத் தவமாக்க அழைக்கும் மனுமகன்
சிலுவையிலும் கருணை மழை பொழிந்த கருணாகரன்

***எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-17-10-2023*

# விருந்தும் அருமருந்தும்

நலமும், நற்செய்தியும், இறை நம்பிக்கையும் நல்கும் நற்போதகர்
நல்லுணவுண்டு மாதங்கள் பலவாயின, ஊர் ஊராய் அலைந்து
நற்செய்தி வழங்கும் நாடோடிப் போதகரும், சீடர்களுமோ ஏழை
சேதியறிந்து வாடிய மனங்களிலோ தாய்மையின் கவலை





தாய்மையின் அன்போடு-குரு சீடர்களை
தம் இல்லம் வந்து நல்விருந்துண்டு -இளைப்பாற
அழைத்த மார்தா, மரியாள் சகோதரிகள்
இறை மகனை பெருவிருந்தாய்க் கண்ட பக்தையர்

அண்ணலும், அன்புச் சீடர்களோடு இல்லம் வந்திட,
இறை விருந்தே, அருமருந்தே இல்லம் வந்ததென்று
அகமும், முகமும் மலர வரவேற்று பூரித்த மங்கையர்

மனுமகன் காலடியில் அமர்ந்து-வார்த்தையை
விருந்தாய் உண்டு இன்புற்ற தங்கை மரியாள்
துணையின்றிச் சமயலறையில் தனியே -விருந்து
சமைத்துக் களைத்த அக்கை மார்த்தாள்

உதவியின்றித் தவித்தவளும்அண்ணலை வேண்டினாள்
"ஐயனே! மரியாளை எனக்கு ஒத்தாசை புரிய
ஒரு வார்த்தை சொல்லும்"

" உத்தம பங்கை- உம் தங்கை தேர்ந்தாள்
சத்தியமாய் அது அவளிடமிருந்து எடுபடாது"
உயிர் தரும் இறைவார்த்தை-உணவிலும் மேலானது
மரியாளைப் புகழ்ந்த மனுமகன்



உண்டு சுவைத்திட உணவோ அறுசுவை
உத்தம சகோதரிகள் அன்போ ஏழிசை
கண்டு சுவைக்க மனுமகனோ தாயுமானவன்
வார்த்தைகளோ வாழ்வளிக்கும் அமுதச் சுவை

காரிருளில் இருந்த மக்கள் பேரொளியைக் காண-வாழ்வை
வேள்வியாக்கி தம்மை ஆகுதியாக்கிய இறை மகனோ
வழியும், உண்மையும், வாழ்வுமான அருஞ்சுவை
நாடோடிப் போதகனோ நடமாடும் இறைவனின் பேரவை

நல்விருந்தாய் தன் மகனைக் கொடுத்து அன்பைப் பகிர்ந்த
இறைவனோ நம் தந்தை, மனிதன் அப்பத்தினால் மட்டுமன்றி
இறைமொழி ஒவ்வொன்றாலும் உயிர் வாழ்கிறான், வாழ்வும்
போதனையும் ஒன்றானவரோ மனுவுருவான இறை வார்த்தை



அன்று மொழிந்தவர்-இன்றும் மொழிந்திட, ஊன் வளர்க்கும்
உணவுக்கும், உயிர் தரும் வர்த்தைக்கும்- மார்த்தாள் இல்லத்தில்
இன்றுமோர் சோதனை, அன்பு இதயங்கள் விழிப்புணர்வில்
நிலைத்திட என்றும் மாறாத மனுமகன் போதனை

அதிதியை, இறைமகனாய் கண்ட மரியாளோ, இறைவார்த்தையை
பெருவிருந்தாய் உண்டு விருந்துக்கே விருந்தான மகிமை,
இறைமகனை பெருவிருந்தாய் கண்ட மார்த்தாளோ
விருந்தோம்பலில் தன்னை மறந்த பெருமை.

வானவன் மகனே விருந்தாய் வந்ததென்று மகிழ்ந்தாள்
அமுதும், அருமருந்துமான வார்த்தையை விருந்தோம்பி
இறைவார்த்தையை விருந்தாய்ச் சுவைத்த
மார்த்தாள் மனதிலோ தாய்மையின் நிறைவு

உள்ளினாள், உள்ளத்தில் உவகை-யோர்தான்
வெள்ளம்போல் பெருக்கெடுக்க மான்போல் துள்ளினாள்
வான் விருந்தே எம் விருந்தாய் வந்ததென்று-அருஞ்சுவை
அன்னம் படைத்து தாயாய் மகிழ்ந்த அம்மை

அன்னையாய்த், தங்கையாய் அண்ணலையும், சீடர்களையும்
விருந்தளித்து உபசரித்த மேன்மை அம்மையருக்கு
வார்த்தையை விருந்தாக்கி-தம் பிரசன்னத்தை சத்சங்கமாக்கி-
அன்புச் சகோதரிகளுக்கு விருந்தான கருணை இறைமகனுக்கு




**எங்கும் இறைமயம், எல்லாம் இன்பமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# பரலோக தந்தையே

*~Pax Christy- Peace of Christ~*

---

God is not a person

But

The Presence

என்னை “நான்”(I -EGO) அறியாத
அகங்கார இருளில் மூழ்கித் தவிக்க
(Not knowing my true self)
இறைமகனாய்த் தன்னை அறிந்த தூயமனம்
(Christ Consciousness)
கடந்தும் எங்கும் நிறைந்திருக்கும்
(Transcendental)(The unchanging, self-existent- God)
பிரபஞ்ச இருப்பை (Universal Existence)
சுத்த சைதன்யத்தை-சின்மயத்தை
(Pure Existence or Consciousness))
(SAT CHIT ANAND) (Existence-Truth-Bliss)
அப்பா தந்தாய் என்றழைத்தே (Our Father)
என்னைத் தன் சகோதரனாக்கியது.
(Brother Hood) (Unity)



There is only
One Awareness
One Consciousness
One Life
One Creator
Exploring, Experiencing and
Knowing ItSelf.
The One reading these words is the
same One who has written them.

Daily Contemplation

© 2011 Jon Shore

www.lifesanswers.org

தன்னை அறிந்த மெய்யறிவால் (Self-realization)
அது இறைமகனானது ( Son of God)
பிரக்ஞானம் பிரம்மம் சத்தியமானது

There is no other greater ecstasy than to know who you are

-OSHO-

இறைவன் நம் தந்தை, நான் உன் சகோதரன்
ஒரே குடும்பம் நாம், அன்பு உறவே மதம்.

ஆணவம் கழித்து, என்னை நான் அறிந்திட
வழியும், உண்மையும், வாழ்வும் “நானே”
சத்திய கீதையும், கீர்த்தனையுமானது
(I am the way, truth and the Life) (Pure Consciousness)
(Renunciations of ego is the path to life)

நானும் தந்தையும் ஒன்றே- தூய உணர்வே நான்
அயம் ஆத்மா பிரம்மம், அஹம் பிரம் அஸ்மி-தத் த்வம் அஸி
மகா வாக்கியங்களை அனுபூதியில் அறிந்துணர
இயேசு விடுக்கும் அழைப்பு.

புழுதியில் கிடந்தவனை, இறைமடியில்
அமர்த்திடும் அற்புதம், அன்போ தெய்வீகம்



"நான்" என்னும் ஆணவத்தால்
(Ego) Adam's Consciousness-Naked);
இருண்ட பள்ளத்தாக்கில் என் இருப்பு (ID & Ego)
இறையோ உயர்ந்த தூய பிரக்ஞை
(The Highest Universal Consciousness)
பிரபஞ்சமாய் அதன் உருவக இருப்பு
(Who art in Heaven)

தாழ்ந்த இருப்பு(ID) பரிபூரண சரணாகதியில்
(Total surrender of the self)
இறைவனை-இருப்பை ( I am Who I am )
பரலோக தந்தையே என்றழைக்க (Our Father) (Providences)
முழுமையும், தூய்மையுமானதை (Whole and Holy)
பரிசுத்தம் என்று பக்தியோடு துதிக்க (Hallowed be thy name)
(blessed are the poor in spirit,the Kingdom of God belongs to them)
ஆணவம் மடிந்திட- என்னுள் மலரும் இறையரசு
உம் இராட்சியம் வருக என அழைக்கின்றது
(Thy kingdom come)

பூரணத்திடம் பரிபூரண சரணாகதியடைந்திட
ஆணவம் கழிந்த தூய மனம் ஒளிர்கின்றது
விழிப்புணர்வே தூய மனம் -துரியாதீதம்(Pure mind)
என் சித்தமன்று -உம் சித்தம் நிறைவேறுக
என்று சரணடையும் தூய மனம்
(Thy will be done)
தந்தையும், நானும் ஒன்றென்று பூரிக்கும் அத்வைதம்
(I and Father are ONE)

என் புனித இருப்பை என்றும் காத்திட (Godliness)
விழிப்புணர்வில் கணம் தோறும் வாழ்ந்திட (Mindfulness)
அன்றாட உணவாய் இறைவார்த்தையை வாஞ்சிக்கின்றது
(Give us thy word as our daily bread)
(Fulfilling thy will is my food)

காலம் இல்லாக் காலத்தில் -கணந்தோறும்
நித்தியத்தில் வாழும் தூய மனம்,
நேற்று, நாளை என்பது அங்கில்லை
இருப்பதோ நிகழ்காலம்

Before Enlightenment
You are the Infinite, Immortal
Sea of Consciousness.
After Enlightenment
You are the Infinite, Immortal
Sea of Consciousness.
There is no other Identity.
© 2012 Jon Shore
www.lifesanswers

நன்மை, தீமை (good and evil), நண்பன், எதிரி என்ற
இருமை கடந்து (Transcend the Dualism) (heaven & hell)
கருணையால் ஒளிர்கின்றது. (Compassionate)
(Forgive our trespasses, as we forgive those
Who trespasses against us)

தந்தையே தாம் செய்வது இன்னதென்று
இவர்கள் அறியார்-இவர்களை மன்னியும்
தூயமனமே மனம் வேண்டுகின்றது
(Father forgive them)
ஆணவமழிந்த தூயமனமே மன்னிக்கும்

மீண்டும் ''நான்'' என்ற ஆணவ சோதனைக்குள்ளாகாமல்
(Lead us not into Temptation)
இருமையின் இருளுக்குள் ஆழ்ந்து
( Knowing Good and Evil)
தூய மனதை இழந்து
( Loosing Christ Consciousness and falls
down to Adam's Consciousness)
தீமை கடந்து (deliver us from Evil)
விழிப்புணர்வில் நிலைபெற
(State of Awareness) (Christ Consciousness)
அருள்தருவாய் இறைவா என்றே.
தன்னை அறிந்த தவத்தால் வரமாய் வேண்டுகின்றது.
(Father and I are one)- (Thou art Thee-)

'' நான்'' எனும் ஆணவமே சோதனை-
Lucifer –சாத்தான் என்பது ஆணவத்தின் குறியீடு
ஆணவம் வீழ்ச்சி பெறும் என்பது லூசிபரின் உருவகமே
நம் அகங்காரமே சாத்தான்-ஆணவமே
எல்லா துன்ப நிலைக்கும் காரணகர்த்தா

ஆணவ நிலையில் சுயநலம் தோன்றிட
நாம் அறியாமை இருளுக்குள் வீழ்த்திட
ஆணவமே நம்மைச் சோதிக்கின்றது
ஆணவமே சோதனை-ஆணவமே அலகை

முழுமையும் முடிவிலியுமான இருப்பாய்
(Whole and Eternal)
பரமாத்தா நீ ( I AM WHO I AM)
ஆணவ இருப்புமாய் ஜீவாத்மா ''நான்''

கடல் நீ--துளி நான், கலந்திடப் பிறக்கும் நிலைவாழ்வு,
பிரபஞ்ச பேரின்ப இருப்பின் சங்கமத்தில்
என் புதுப்பிறப்பு (Born Again)
நானில்லை எல்லாம் நீயே என்ற (Thou art thee)
விழிப்பில் ஆனந்த பேரின்பக்களிப்பு (Enlightment)

தீமை நிலைமாற்றம் பெறத், தேவையாய் உள்ளார்ந்த வீரியம்
கணந்தோறும் வாழும் தூய மனம்
அனுதின உணவை எங்களுக்கு இன்று அளித்தருளும்
தீமையிலிருந்து இரட்சியும் என வேண்டுகின்றது

To the Seeker

The Void, Nothingness, Consciousness, Emptiness is infinite.
Without beginning and without end.
It is alone and only. One Mind. One Life. One Being.
There is nothing beyond the Infinite Void.
It is not created nor can It be uncreated.
It is the sole and only Creator and creation.
It is the One Observer.
You are Its observing.
There is no real me or we that seeks or awakens.
There is no reaching a state of Enlightenment since there is no real me to be enlightened.
Relax into this. Surrender into this. Dissolve into this.
Until there is nothing left of you.

© 2021 Jon Shore

மீண்டும் மீண்டும் ஆணவ நிலைக்கு தாழும்
அவல நிலையிலிருந்து என்னை காத்திடும் -மெய்யறிவு
அதுவே தன்னை அறிந்த விழிப்புணர்வு

எப்போதும் இருப்பதோ (Nothingness) சத்-சித்-ஆனந்தம்.
*(Pax Christy-Peace of Christ) (Existence- Truth-Bliss)*
*The Transcend of Adam's consciousness*
*Into Christ Consciousness is Peace*
*Pax Christy*

*Self-begets selfishness.*
*There is no evil but what flaws from evil*
*Self is the tempter, the evil doer,*
*The creator of mischief.*
*The Consciousness of self-dims the eyes of the mind*
*And hides the truth, it is the origin of error.*
*It is the source of illusion,It is the germ of evil*

**எங்கும் இறைமயம், எல்லாம் இன்பமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# கூனல் மங்கையும் கோணல் சட்டமும்

---

அன்பினால் இன்புற்ற மனிதன்- இறைவனோடு
அப்பா தந்தாய் என இதயத்தால் உறவாடும்
மகத்தான அன்புறவே ஜெபம்

சடங்கு, பலி, காணிக்கை, பாரம்பரியம், என நிறுவனமாய்
மதம் நாறிட, அகநிர்வாணியாய் மனிதன் ஏமாறிட
அன்புறவைச் சீரழிக்கும் மதவாதம்
நடைப்பிணமாய் மனிதனின் விகாரம்





***தனி மனிதத் தேடல் அரிய தவமாகிட***
***அன்பே சிவமாய்-வாழ்வைத் தவமாக்கும்***
மதம் கடந்த ஆன்மீக புருஷர்கள்
தம்முள் இறையரசைக் கண்ட தேவர்கள்

மத அரியணையில் வேதியர் செங்கோலோச்சிட
மன்னரும் தலை வணங்கிட, கட்டளைகள், திருச்சட்டங்கள்
வேதங்கள் என மதவாதக் கற்பனைகள்

அன்பு, கருணை, இரக்கம் அரிதாகி, மனிதம் மறைந்து
நம்பிக்கை நலிந்திட, நடைப்பிண வாழ்க்கை சாபமானது
சாதியமும், பாவி என்னும் பட்டப் பெயரும்-
ஏழைகள் முதுகில் சூட்டுக் குறியானது



பதினெட்டு வருடங்கள் கூனால் வருந்தி, குனிந்து
நடந்து, நிமிர்ந்து விண் பார்க்க-மனுஷியாய் நடக்க
மாது புரிந்த தவமெல்லாம் வீணானது

கண்ணில் நீர் திரள-மொழியில் சோகம் நிலைக்க
கவலையால் மனமோ திரிந்த பாலானது
உடலோடு ஒட்டிப் பிறந்த கூனோ -இறக்க முடியாத
ஊனச் சுமையானது-கூனி நிலைத்த பெயரானது

முதிர் கன்னிக்கு வாழ்வோ கானல் நீரானது
பற்றறுத்த மனதிற்கு தெய்வமே கதியானது-அம்மையோ
மண் பார்த்து நடக்கும் கூன் விலங்கு-உயிர் மெய்யோடு
இணைந்த கூனோ பெண்மைக்கு இரும்பு விலங்கு

புலரும் பொழுதிற்கு நாளும் புள்ளினத்தின் கீதாஞ்சலி
பூக்களின் மலரஞ்சலி-நம்பிக்கையோடு இறைவனைத் தேடி
ஜெபகூடத்தில் நாளும் தவமிருக்கும் கூனி மனமோ,
சோகத் தீயில் எரிந்து மணக்கும் தூபாஞ்சலி

நீட்டி நிமிர்ந்து உறங்கிட கூனும் தடையானது
நிமிர்ந்து வான் பார்த்து இறை புகழ் பாடிட
இதயச்சுமையோ பெண்மைக்குத் திரையானது
மணவாழ்வும், மங்கலமும் வெறும் கனவானது

பூக்கத் தவிக்கும் கருகிய மொட்டாய் -அம்மை
துளிர்க்கத் தவிக்கும் பட்ட மரமாய் பெண்மை
நாளும் கூனல் சுமக்கும் கழுதை-வாழ்வோ
சிலுவைப் பாதையான கொடுமை

வனிதையின் உயிர் மெய்யில் கலந்த பெரும் சுமையை
வாழ்வளிக்கும் வார்த்தையும் கண்டார், பரிவோடு குனிந்து-
விழியோடு விழி கலக்க, கருணையினால் நிறைந்து
கூன் தொட்டு-அம்மா நலம் பெறுக என்றார்

கதிர் பட்டு கண் மலர்ந்த மொக்கு
புது மலராய் இதழ்விரித்து வான் நோக்க
வண்ணமும், வாசமும் வாழ்வளிக்கும்
வார்த்தையால் துளிர்த்த அதிசயம்தான் என்னே!

வாழ்வில் முதன் முறையாய் நிமிர்ந்தவள்
வான்னோக்கிடக் கண்டதோ வானவன் மகனை
முத்துநகை பூத்து, பன்னீர் துமிக்க-மனுமகன்
அரவணைப்பில் ஆனந்தக் கருணை

அணைத்தவள் அணைப்பு நன்றி மொழிய
பொங்கிய ஆனந்தக் கண்ணீர் இறை புகழ்பாட
அழுதாள், சிரித்தாள்-முதுகைத் தொட்டு முகம்
மலர்ந்தவள் இறைமகனைப் போற்றிப் புகழ்ந்தாள்

இதழ் விரித்து மலரும் மணம் பரப்ப-இறக்கை
விரித்து குஞ்சும் சிறகடிக்க-தாயுமானவன்
நெஞ்சில் பரமானந்தம்-எளிய மனங்களிலோ
இறைவாக்கினரைக் கண்ட பேரின்பம்.

பணி செய்ய ஆறு நாட்கள் உண்டு-இறை பணிக்கே
ஓய்வு நாள், திருச்சட்டத்தை  மதியாதோர் பாவிகளே-
இரைந்து கடிந்த மதவாதியோ, ஜெபக்கூடத் தலைவன்

வேதியனே, தீவனமும், நீரும்-கால்நடைக்கு வைக்க
ஓய்வு நாளில் இடமுண்டு, பதினெட்டு ஆண்டுகள் கூனால்
கட்டுண்டு வனப்பிழந்து, நாளும் கசப்பைச் சுவைத்த
அம்மையை குணமாக்கியதில் என்ன குற்றமுண்டு?

அனலான வார்த்தை அக்கினி அம்பாய்
இதயத்தை தைக்க கூனிக் குறுகிய மதவாதி
கூனல் குணமான மங்கை நிமிர்ந்து நோக்கிட
எளிய மனங்களுக்கு வார்தையோ திரு விருந்து

மனிதநேயமில்லா சட்டங்கள் கற்பலகைகளே
வாழ்வளிக்கும் வார்த்தை இறை கருணையே
ஓய்வு நாள் மனிதனுக்கேயன்றி, ஓய்வு நாளுக்காய்
மனிதனல்ல அறிவாய் மதவாதியே

இரக்கமே இறைவிரும்பும் பலி
மன்னிப்பே கருணையின் வழி



கூன் மறைந்து குணமாக-குனிந்த
உடல் நிமிர்ந்து நேராக
கோணல் மனம் குளிர்ந்து நலமாக
வனிதை வாழ்வில் மலர்ந்த புது வசந்தம்

உள்ளம் குளிர-உடல் நிமிர-ஆனந்த
வெள்ளமென விழிகளில் நீர் ததும்ப
குனிந்து திருப்பாதம் தொட்டாள்-கண் மலர
விண்ணோக்கி கருணையைத் தொழுதாள் அம்மை

இராமாயணக் கூனியோ-சிறுவன்
இராமனால் புண்பட்டாள், நற்செய்திக் கூனியோ
இறைமகனால் நலம் பெற்றாள்

ஆணவ மனமோ கூனல்
அன்பிற்குச் செவிமடுக்காத மதவாத மனதில்
இரக்கமோ கானல்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்**

*Pax Ravichandra-17-10-2023*

# பொற்தட்டில் ஒரு பூமாலை

வெண்மணற் காட்டில் விழிப்படைந்த தன்னுணர்வு
விண்ணவன் தாள் பணிந்து மண்ணோர்க்கு உரைத்தது இறைவாக்கு
வானுறையும் தேவர்தம் வழியை சீர் செய்யுங்கள்-மானிடரே
மனம்மாறி, பாவ மன்னிப்பின் நல்முழுக்கைப் பெற்றுக்கொள்ளுங்கள்





குன்றும், மலையும் தாழ்வுற, கோணலும் நேராய் மாறிட,
பள்ளமனைத்தும் நிரப்பியே பரமன் பாதையைத் திருத்துவீர்
என்றும் இருப்பவர் வருகின்றார், இல்லம் நம்மிடை கொள்கின்றார்
மகிழ்க மானிடரே, மீட்பு வந்ததென்று உள்ளம் மகிழ்க

மெசியா அல்லேன், இறைவாக்கினர் அல்லேன்,
எலியாசும் நானல்லேன், இறைவாக்கினர்
இசையாவின் பாலையில் ஒலிக்கும் கூக்குரல் நானே
மனம் திரும்பிட மானிடரே, பாவமன்னிப்பை வேண்டுவீர்

வருபவரோ மிகப் பெரியவர், வாழும் இறையின் திருமகன்,
இறைமகன் பாதணியை அவிழ்க்க எளியோன் தகுதியற்றோன்
நீரால் கொடுப்பது நானளிக்கும் திருமுழுக்கு-அக்கினியும்
ஆவியுமோ ஆதியின் மகனளிக்கும் அருள் முழுக்கு

சுளகெடுத்து களம் தூற்றி-சுந்தரேசன்
விளைச்சலைத் தரம் பிரிப்பார்-கோதுமையோ
களஞ்சியத்தில் குதூகலிக்க-கோபாக்கினையின்
செந்தணலில் பதர்களோ பரிதவிக்கும்



உள்ளவர், இல்லாதவரோடு பகிர்க, ஊதியம்
போதுமென்றே படையினர் பணிபுரிக-விதித்த
அளவுக்கே ஆயக்காரர் வரி பெறுக-மானுடரே
அன்பே தெய்வம் அறிந்து வாழ்க

இட்ட கோடாரி அடிமரத்திலே-இறைவன்
மூட்டி வளர்த்த தீயோ எரிநரகிலே
பட்ட உழைப்பிற்கு பலனில்லையேல்-விருட்சங்களே
வெட்டி எரிப்பார் வேரோடு வெஞ்சினத்திலே

முட்டி அழுதும் பலனில்லை பரிசேயரே, சதுசேயரே
முழுதாய் வேதம் அறிந்தும் மீட்பில்லை-விரியன் குட்டிகளே,
அவியாத அக்கினி தேவனின் கோபாக்கினை, தந்தை ஆபிரகாம்
சந்ததி நாம் தண்டனை எமக்கில்லை என்பது மாயக்கற்பனை

அறிக மூடரே ஆபிரகாம் தந்தை என்பதால்
விண்ணகம் நமதென்பது மடமை-இறைவன்
நினைத்தால் இந்தக் கற்களும் பிள்ளைகளாக
ஆபிரகாமிற்கு சந்ததியாக நடக்கும் வல்ல புதுமை

***ஓடிவரும் ஓராயிரம் ஆம்பலிடையே***
***நாடிவந்த அற்புத பொற்றாமரையைக் கண்டார்***
***தேடி நான் அலைந்த திருமலரே என்னிடம்***
***திருமுழுக்கு நீர் பெறுதல் எங்ஙனம் என்றார்?***

நியமங்கள் நிறைவுறட்டும், நம் தந்தையின்
திருவுளம் நிறைவேறட்டும்-நயமாய் செப்பியே
***நாயகனும் திருமுழுக்குப் பெற-வானம் திறந்து வாழ்த்தினார்***
***தேவர்- என் பிரிய மகன் இவரே என்று***

இறை ஆவியும் புறா வடிவாய் அன்பரில் இறங்கிட
அன்புமகன் இவரேயென்று தந்தையும் வாழ்த்திட
பாவிகள் நடுவில் தூயவர் கண்டே-துள்ளியது
புது வெள்ளம்போல் யோவானின் உள்ளம்

கடுந்தவத்தால் முற்றிக் கனிந்த மனம்
சுடுமணல் சுட்டுச் செழிந்த உடல்-உடுத்தியதோ
ஒட்டகமயிருடையோடு இடையில் வார்க்கச்சை
உட்கொண்டதோ வெட்டுக்கிளிகளோடு காட்டுத்தேன்

சின்னஞ்சிறு விளக்கு இது, செங்கதிரோன் அல்ல,
பாலையின் கூக்குரலிது-பரிசுத்தரின் வாக்கு அல்ல
மானுடன் இவன் மணவாளன் அல்ல-அவர் வளர்வதும்
இவன் குறுகுவதும் இறை வகுத்த நீதி

சத்தியமல்ல சாட்சியிவன், நித்தியத்திற்கும்
நிலைத்திருக்கும் இறைமாட்சி இறைமகனே-உத்தமர்
வரவினால் அன்னை உதிரத்தில் துள்ளி மகிழ்ந்தவன்
மனுவான தத்துவத்தின் மகிமையை வியந்து போற்றுபவன்

சூழ்ந்து நின்ற சீடரும் நிலைவாழ்வைச் சுவைத்திட
அகமகிழ்ந்து சுட்டினார் இயேசுவை -அறிக
வாழ்வு தரும் தேவசெம்மறி இதோ-நித்தியமும்
நிறை வாழ்வுமான உத்தமர் இவரே, பின் செல்க

செப்பிய மொழியைச் செவிமடுத்து சீடரும் சென்றிட
சுற்றமாய் தனிமையும், சொந்தமாய்ப் பேரமைதியும் நிறைந்திட
ஒப்பில்லா மாமணிக்கு உவந்து சீடர்களையும் அர்ச்சனையாக்கி
ஒன்றுமில்லா வெறுமையில் நிறைவு கண்ட-உத்தமர் யோவான்



தாயின் முதுமையில் பிறந்தவன்-பாலையின்
வெறுமையில் வளர்ந்தவன்-மனித வாழ்வு உய்வுற
மாதவன் பாதை செப்பனிட்டவன்-இன்று
சீடர்களுக்கு தேவ செம்மறியைச் சுட்டிய கைகாட்டி

முறையன்று பிறன்மனை நயத்தல் முறையன்று, மன்னா
அதிலும் பெரும் பிழை சகோதரன் மனையாளைக் கவர்தல்
குறை கழைந்து மனம் திரும்புவீர், கடிந்திட்ட தவமுனியை-ஏரோது
சிறை வைத்து துர்மதி ஏரோதியாள் பகையுள்ளம் குளிர்வித்தான்

அகவையின் நிறைவை அரசனும் கொண்டாட,
உவகையின் விழாவும் உயர்குடியால் சிறப்புற
மகளை ஆடவிட்டாள்-அவையை அசைய வைத்தாள்
மன்னவன் மனமாளும் மோகினி ஏரோதியாள்





இடை மின்னலோ? நடை அன்னமோ?
இவள் மோகனத்தின் உயிர்ப் பிம்பமோ?
ஆடை வெண்மேகமோ?-விண்மீன் வானமோ?-தேகம்
அழகு நிலா ஒளிந்து விளையாடும் தேவலோகமோ?

விழி கயலோ? மொழி குயிலோ?, ஆடுவது
வண்ண மயிலோ?-இல்லை ஆழியில் இரைந்தாடும்
நீலத்திரையோ?, சபை ஆட சதிர் ஆடினாள் சலோமி

பூங்கமிழ் வாவியில் பூத்த செம்பங்கயமோ? புள்ளுறை
சோலையில் பாடும் கோகிலமோ? கார் கண்டாடும்
வண்ண மயிலோ?-காளையர்
கண்பட்டு ஏங்கிட ஆடிக் கமழ்ந்த பூங்கொடி

பூந்தேகத்தில் வாச மலர்களின் நறுமணம், மின்னலிடை
கண்களைப் பறிக்க, குலுங்கும் செங்கலச மார்பும்,
கொவ்வைச் செவ்விதழ் தேனும் வா அருந்து
காமன் விருந்து அழைப்பு விடுக்க ஏங்கிடும் ஆண் மனம்

வேலும் விழியாகி, வில்லும் புருவமாகி-மனதை தைத்த
காமன் கணை, பார்த்த அழகில் நெஞ்சைப் பறிகொடுத்து
கணை பட்ட மான்களாய் விழுந்த ஆண்கள்தான் எத்தனை?



மண்ணிலும் போதையுண்டு, பொன்னிலும் போதையுண்டு
மதுவிலும் போதையுண்டு மயங்கிடாத மன்னன் ஏரோது
கண்ணுண்ட மாதின் நடனத்தில் கருத்தழிந்து பேதையாக
மன்மத கானமான கன்னியோ கவர்ச்சியின் பூங்காவனம்.



மலர்க்கணை தைத்த மன்னன் மனம் அறிவிழக்க
காமன் படைககலமாய்க் கன்னி உருவெடுக்க
கன்னிமயிலே கேள் பாதி அரசனென்றாலும்
உவந்தளிப்பேன் உறுதி என்றான்

மன்னன் மொழியை, மகளும் அன்னையிடம் கூறிட
எண்ணம் நிறைவேற ஏற்ற தருணம் கண்டாள் துர்மதியாள்
வண்ணமும் வனப்பும் பொங்கி நின்ற மகளை வாழ்த்தி
சித்தன் சிரசை பரிசாய் கேள் என்றாள் சிங்காரச் சதிகாரி

இரை விழுங்கக் காத்திருந்த மலையரவம்
நிரை விலகிச் சிறைப்பட்ட மான் கண்டு மகிழ்ந்தது
தரையொட்டித் தவமிருந்தது விலகட்டும் வேடன்
விரைந்து உடன் விழுங்குவோம் இரை என்று



குழிமுயலின் சிறுகுழியில் மன்னன் ஏரோதும் வீழ்ந்திட
மலையரவும் இரை விழுங்கத் தரை தாண்டி ஊர்ந்திட
வழிகாட்டும் சுடர் விளக்கை அணைத்திட வழிகண்டே
பரிசாய் தவமுனியின் சிரசை கேள் என்றாள் கெடுமதியாள்

செவ்வாய் துப்பிய மொழிகள் செந்தணலாய் செவிகளில் விழ
கழுவாய் தேடி வழி ஏதும் காணாத காவலன் கலங்கிட
ஈவாய் மன்னா, இச்சபைமுன் செருக்கோடு செப்பிய நின்மொழி
காப்பாய் தவமுனியின் சிரம் தந்தே என்றாள் விநாசனி

காமப் புதைகுழியில் மூழ்கிச் சுகித்தவன் கரை சேரப், பழுதையெனப்
பற்றியதோ பாம்பு, கொட்டியபின்-கொடு நாகம் பற்றியவன் பட்டதுயர்
‘கணம்’ ஏரோது பட்டான், மன்னவன் கொஞ்சிய மாசுணத்திலோ
ஆலகால நஞ்சு, காமுகனை வீழ்த்திய மோகினியோ விஷக்குஞ்சு

காற்றில் ஆடாத நாணல், மென்துகில் அறியாத தேகம்-
யோர்தான் ஆற்றில் ஓடிய புதுவெள்ளம் வற்றியதுமேனோ?
சிரமிழந்து குருதி சிந்தி வாடியதுமேனோ?

பாலையில் பூத்தமலர் வாடவில்லை, சிறையிருந்தும் வாசம் இழக்கவில்லை,
புல்வெளிப் பூ மனித வாழ்வு-இன்றோ சிரமிழந்து உதிர்ந்த மலர்
விண் போனது, நேசத்தால்  வானவன் சூடிட பாச மலரானது

வானவர் மகனுக்காய் வனமொலித்த மோகனமோ? கட்டியமோ?,
கடுந்தவத்தின் கனற்பிழம்போ?-இன்று பணிமுடித்து இறைமடியில்
பேரின்ப சுகம் காணப்போனது? வாழ்வோ மலரஞ்சலி, வார்த்தையோ
கீதாஞ்சலி, தன்னை எரித்து மணந்திட இறைவனுக்கோ தூபாஞ்சலி

பாலையில் பூத்த மலர், கூற்றுவன் கொய்திட
பொற்றதட்டில் சருகான மலர், சத்தியத்திற்கு கட்டியமாய்
ஓங்கி ஒலித்த குரல்-கொடூரமாய் மாண்டு
மௌனத்தில் நிலைத்திட எங்கும் அராஜகத்தின் இருள்

பொங்கிப் பாயும் ஜோர்தான் -முகம்
மங்கி நலிந்தே பாய்ந்தது-பாலையில் ஒலித்த கட்டியம்
மௌனத்தில் ஆழ்ந்திட, இயேசுவின் இதயத்தில்
கூர் வாள் பாய்ந்தது.

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-17-10-2023*

# கடுகு விதை

கடுகோ சிறிது, காரமோ பெரிது, கடுகு விதை போன்றதே
இறையரசு, மண்ணில் சிறு விதை மடிந்து முளைத்திட
விண்ணோக்கி எழும் பெருமரம், எண் திசை நின்றும்
இளைப்பாறுதல் நாடி வரும் பறவையினம்





விதை மடிந்திட விருட்சத்தின் தோற்றம்
ஆணவம் மடிந்திட தூய மனமாய்,
ஆன்மாவாய் நம் மாற்றம

நீங்களோ அமைதியின் தூதர்
சமாதானத்தின் புத்திரர் -எளியோர் தேடி வந்தே
உறவு கொண்டு இன்புறுவார்
இறைவனைப் போற்றிப் புகழ்ந்திடுவார்

உடல்களில் சங்கமத்தில் பிறப்பது உடலே,
ஆவியால் பிறப்பது உள்ளார்ந்த சுயமே
உடலோ மரணத்தின் பிடியில் , அழியாத ஆன்மாவோ
அமரத்துவம் , இறை சன்னிதானம்



கட்புலனாகாத விருட்சம் சின்னஞ் சிறு கடுகு விதைக்குள்
மறைந்த இரகசியம், அருவமான இறைவன்
மனிதனுள் மறைந்த அதிசயம், தூய மனத்தவருக்கே
சத்திய தரிசனம், எளிய மனத்தவருக்கே இறையரசு

***விதையாய் சீடர் -விருட்சமாய் இயேசு***
***ஆணவத்தை ஆகுதியாக்குதலே மெய்யான வேள்வி***

இறை வார்த்தை புளிப்பு மா போன்றது,
உங்களை மாற்றியது
உலகையும் மாற்றிடும் அற்புதமாய் அது

ஆணவம் மடிந்திட, தூய மனத்தவராய் எம் பிறப்பு
அன்பினால்  இன்புற்று சகோதரத்துவம் பெருகிட
இறைவன் நம் தந்தை-நாம்  அவர் குழந்தைகள்,
அனுபூதியில் அறிந்திட ஆனந்தத்தில் நம் நிலைப்பு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-10-2023

# இரக்கமுடையோர் இரக்கம் பெறுவார்

---

பட்ட கடன் வட்டியோடு குட்டி போட்டு மலைபோல் வளர-வாழ்வோ
அதலபாதாளத்தில் வீழக், கடன் அடைக்க வழியின்றி
கை கட்டி, வாய் பொத்தி, கூனிக் குறுகி, நெடுமேனி வாட
கோடிஸ்வரன் முன் நின்ற உயர்குடியோ ஊதாரி, உல்லாசி





உன் உடைமை, உறவு எல்லாம் விற்று கடனை அடைத்து விடு,
இல்லையேல், எஞ்சிய நாளைச் சிறையில் கழித்து விடு
நீதியாய் தீர்ப்பிட்டான் பெருநிதி

கதியில்லை, பட்ட கடன் அடைக்க வழியில்லை, கருணை
காட்டும், காலம் தாரும், பட்ட கடனை அடைத்து, கடனாளிப்
பழியைத் துடைத்து விடுவேன், கலங்கிய நெஞ்சம் இரந்து நின்றது
கண்ணீர் பெருக கைகூப்பித் தொழுது நின்றது

உள்ளதெல்லாம் விற்றாலும் தீர்க்க முடியாத பெருஞ்சுமை
உல்லாசியாய் வாழ்ந்த உயர்குடி, உத்தமன் கால்களைப்
பற்றி இரந்திட-மன்னித்து கடனைத் தள்ளுபடி செய்த கருணாநிதி

பெருங்கடன் பட்டவனோ-தன்னிடம் சிறு கடன் பட்டவனை
வழியில் கண்டு, கடனைச் செலுத்து, காலவகாசம் உனக்கில்லை
பணம் இல்லையேல் சிறை-கெஞ்சியும் இரங்காத கல்நெஞ்சன், ஏழையைச்
சிறையிலிட்டான், இரக்கம் பெற்றவனோ இரங்க மறுத்தான்




கண்டவர் கொதிப்புற்றுக்-கயவனின் கொடுஞ் செயலை
கருணாநிதியிடம் முறையிட, உன் பெரும் கடனை மன்னித்தேன்-
உன்னிடம், சிறுகடன் பட்டவனை மன்னிக்க உன்னால் முடியாதா?

சினந்தவன் கல்நெஞ்சக்காரனைச் சிறையிலிடுங்கள்
சிந்தை தெளிந்து தவறை உணரட்டும்
வழுவாநீதி உரைத்தான் அதிபதி

மன்னியுங்கள் நீங்களும் மன்னிக்கப்படுவீர்கள்
இரக்கமுடையோர் பேறு பெற்றோர்-ஏனெனில்
இரக்கம் பெறுவார்-என்றுமுள்ள மாறாத தர்ம நீதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17-10-2023

# வறுமை, செழுமை இறை கருணை

---

பட்டுடுத்தி-பரிமளம் மணக்க, பெருமிதம் நாறிட, உறவோடும்
நட்போடும் நாளும் விருந்து கொண்டாடும் போகி
எழில் நங்கையோரோடு கூத்தாடும் சம்போகி
இறைவனைத் தேட குறையேதுமில்லாத உல்லாசி






நொருங்கிய உள்ளம் குமுற, புண்ணான மேனி நாற
பொங்கிய விழிகளோ கண்ணீர்ப் பொய்கை
அடிவயிற்றில் பசியோ அணையாத் தீ-ஆண்டவனை
இரந்திடும் மனதில் என்றும் நிலைத்த அமைதி

உண்டு பசியாற ஒரு பிடிச் சோறில்லை
இரத்தலைத் தவிர வேறு வழியில்லாப் பாலை,
துன்பத்திலும் இறைவனை மறவாத நெஞ்சத்தில்
துயரம் தவிர ஏதுமில்லாத நாதியற்ற ஏழை

செல்லப்பிராணி நாய்களும் செல்வராய் வாழ
மூவேளையும் உண்டு குடித்து-எஜமான்
உறவு கொண்டு வாலாட்டி மகிழ-துன்புறும் ஏழை
கண்டும் செல்வனுக்குத் துளியும் இரக்கமில்லை

நாய்களுக்கோ வர்க்கபேதம் தெரியவில்லை
இலாசரும் நண்பன் என்றே வாலாட்டி
நக்கி அன்பு சொல்லி மகிழும் விலங்கிடம்
ஆணவம் துளியுமல்லை



பசியாற கஞ்சோ, கூழோயில்லை-எஞ்சிய
உணவைக் கொடுத்து மகிழ-மிஞ்சிய
எச்சில் சோற்றையேனும் ஏழைக்கு ஈந்திட
கல்நெஞ்சனுக்கு கடுகளவும் மனமில்லை.

மூப்பும் பிணியும் உறவாடி உயிரைக் களவாட,
ஏழை, செல்வன் பேதம் மரணத்திற்கில்லை-இருவரும
ஒன்றாய் ஒரு நாள் மரித்திட-செல்வனுக்கோ
ஆடம்பரக் கல்லறை, ஏழைக்கோ அநாதைப் புதைகுழி

இலாசரோ தந்தை ஆபிரகாம் மடியில் இளைப்பாற
செல்வனோ நரகத்தீயில் வெந்து மனம் வாட
தொன்று தொட்டு இருந்து வரும் என்றும் வழுவாத நீதி

உள்ளம் குமுற- உடலோ எரிநரகின் தனலில் தீய
விழிகளில் நீர் பொங்க-இலாசரின் இன்பநிலை கண்டு
கடுந்துயரில் கல்நெஞ்சத்து கயவன் கதறினான்
தந்தை ஆபிரகாமே ஏனிந்த இழிநிலை எனக்கு?

இன்புற்று உலகில் நீ வாழ்ந்தாய்-துன்புற்று
இலாசர் வாழ்ந்தான்-பெருந்துன்பத்திலும்
இலாசர் இறைவனை மறக்கவில்லை-இரங்கிட
நீயோ ஏழையை நினைக்கவும் இல்லை

***நன்மை தீமை கடந்த தர்மம் நீதியானது***
***எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது***
***எது நடக்கின்றதோ அதுவும் நன்றாகவே நடக்கும்***

துன்பத்திலும் இறைவனே தஞ்சம் என்று வாழ்ந்த ஏழை
இன்று என் மடியில் இன்புற- அன்று இறைவனை மறந்து
எள்ளளவும் ஏழைக்கு ஈய மறுத்து இரக்கத்தைப் பழித்தாய்
எரி நரகை உனக்கு நீயே படைத்தாய்

இரக்கமே இறை வகுத்த நீதி -உல்லாசி,
ஊதாரி அதை மறந்து வாயில் கிடந்த
ஏழை இலாசருக்கு இழைத்தது அநீதி

தந்தையே, இலாசரின் சுண்டு விரல் நுனியால்
ஒரு சொட்டு நீரை, என் நா சுவைக்க வரம் தாரும்
வாட்டும் நரக வேதனையைத் தாங்கமுடியவில்லை

ஏழையை அறிந்திருந்தும், பெயரைத் தெரிந்திருந்தும்,
எந்நாளும் தீ எரியும் எரிநரகைப் படித்தறிந்தும் நெஞ்சில்
ஈரமின்றி, கருணை கடுகளவுமின்றி இருப்பதில்
கடுகளவேனும் ஏழைக்கு ஈயாத சம்போகி

ஈரமில்லாப் பாலை நெஞ்சோ-நெருஞ்சி முட்காடு
மனமே விருந்தாடு, கன்னியரோடு மகிழ்ந்தாடு
கருணையில்லா மூர்க்கன் வாழ்வியல் நிலைப்பாடு

சுயநலமே வாழ்வாகச் சுகம் தேடியவன்
***அழியும் செல்வத்தை கொண்டு***
***அழியாச் சுயத்தை தேட மறந்த மூடன்***

புண்பட்ட ஏழை எரிநரகில் வாட-ஈயாது இரங்காது
வாழ்ந்த செல்வன் வாழ்வோ மண்ணில் சொர்க்கம்-
மாண்டபின் நிலை மாற-ஆண்டவன் நீதி விளங்க, ஏழையோ
சொர்க்கத்தில், இரக்கமிலா அரக்கனோ எரி நரகத்தில்

மகனே எமக்கும் உமக்கும் இடையே
பெரும் பாதாளம் உள்ளது
வாழ்வில் புரியும் அன்புச் செயல்களே
நாம் தேடிடும் அழியாச் செல்வம்

***நிலையற்றதை கொண்டு நிலையானதைத் தேட***
***நீ மறந்தாய்-பகிர்ந்து வாழ மனமின்றி***
நாளும் மதுவிலும். மங்கையர் சுகத்திலும்
விருந்தாடிச் சுயத்தை இழந்தாய்



வளத்தோடு இங்கு வாழும் இலாசரும், வறியோனாய்
நரகில் துன்புறும் நீயும் வாழ்வியல் உண்மைகள்,
விதைத்ததை அறுத்தீர்கள், அவன் வயலில் கதிர்கள்-
உன் கழனியில் பதர்கள், முட்கள், களைகள்.

தந்தை ஆபிரகாமே என் தந்தை வீட்டில் எனக்கோ
சகோதரர் ஐவருண்டு, இலாசர் சென்று நடந்ததைக்
கூறினால் அவர்கள் மனந்திருந்திட வாய்ப்புண்டு

ஆகமும், இறைவாக்கினரும் அங்குண்டு அவர்களுக்கு
செவி கொடாதோர் இலாசர் சென்று சொன்னாலும் நம்பமாட்டார்
உலகின்பம் பெரிதென்று வாழ்வோர் இறைவனைத் தேடார்,
இருப்பதை பகிர்ந்து ஏழைகளின் துயர் துடையார்

துன்புறும் ஏழையர் எல்லாம் தம் நண்பர் எனக் கூற
ஏழைக்கு தன் நன்பன் இலாசரின் பெயரை வைத்தார்
***அநாமதேயனாய் செல்வனை அழைத்து***
***அழியும் செல்வத்திற்கு அடையாளமாக்கினார்***

சந்ததியற்ற செல்வனின் வாழ்வு சாபமானது
ஆபிரகாம் நம் தந்தை-வானகம் எமது உரிமை
யூதர்களின் கனவைக், கற்பனையை இயேசு
வன்மையாகச் சாடிய உவமையானது

ஏழை வயிறு குளிர ஒரு பிடி அன்னமோ
நா குளிர ஒரு கிண்ணம் நீரோ ஈயாத கஞ்சன்
வடியும் சீழையும், குருதியையும் துடைக்கவோ, நிர்வாணம்
மறைக்கவோ கந்தையும் கொடாத கல்நெஞ்சன்

நாளும் பட்டு உடுத்தி, பரிமளம் பூசி
உண்டு குடித்து விருந்தாடிய போகி
காமக்கடலில் நீராடி இறைவனை மறந்த சம்போகி
துளி நீருமின்றி எரிநரகில் வாடி நின்ற பாவி

தர்மம் தலைகாக்கும் நீதியாக, செய்த
பாவங்களுக்காக, செல்வன் தண்டிக்கப்படவில்லை
தன் பாவங்களால் தன்னையே தண்டித்தான்

**இரக்கம் உடையோர் இரக்கம் பெறுவர்**
**எளிய மனத்தவருக்கே இறையரசு**
**தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்**
இன்றும் இறை நீதியானதே

பலியை அல்ல இரக்கத்தை விரும்பும் இறைவன்
பாவிகளை நாளும் தேடி அலையும் நல்லாயன்

அன்பே சிவம், வாழ்வே தவம்
நம் தந்தையும், தாயுமான தெய்வம்

உலகம் ஒரு சத்திரம், எல்லாம் மாறும் உலகில் ஏது நிரந்தரம்?
இரக்கமே தலை காக்கும் மந்திரம், பகிரும் வாழ்வில்
குறைவில்லை, அன்பே சிவம் பொய்யில்லை

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-17-10-2023

# தொழு(ம்) நோயாளி

---



நோய் குலைத்த உடலும், நொந்து சலித்த நெஞ்சும்-பிறர்
வாய்ப்பழிச் சொல்லும், நடைப்பிண வாழ்வும்
நாளும் தீய்க்கும் கொடிய நரக வேதனையானது
வாழ்வோ சாபம் என்றானது

அழுகி நாறும் மெய்யும், விகார உருவும் ஆறாத்துயரில் ஆழ்த்திட
ஊறும் கண்ணீரும், ஒழுகும் குருதியும், ஊர் ஒதுக்கிய வாழ்வும்
சுமையாய் வருத்திட, சுகம் தேடி, வரம் நாடி, ஒன்றாய் அலைந்தார்
ஒன்பது யூதரும், ஒரு சமாரியனுமாகப் பத்து தொழுநோயாளர்

யூதன், சமாரயின் பேதம் கடந்து, அகம் மலர,
முகம் மலர்ந்து, நலம் அருளும் இயேசுவை தேடி-
அவர் பாதாரவிந்தம் நாடி ஒன்றாய் அலைந்தார்

வணங்கிடும் இறை ஒன்று, வேண்டிடும் வரமொன்று
எல்லோர் உள்ளத்தையும் அழுத்திடும் பாரச்சுமையொன்று
கரைந்திடும் ஊனொன்றும், கசிந்திடும் உதிர நிறமொன்று
யூதர் சமாரியரென்று சாதி பிரித்தவர் வாட்டிடும்
நரகவேதனையில் கண்ட சமரசமோ மேன்மையானதொன்று

தொட்டவர் சுகம் கண்டார்-போர்வை
பட்டவர் நலம் பெற்றார்-வார்த்தை
சுட்டவர் புடம் பெற்றார்-வரம்
பெற்றவரோ முடிவில்லா வாழ்வு பெற்றார்

தேடிய திரவியம் கண்டு தொலைத்தவர் களிப்புற
வாடிய பயிர் மழை கண்டு களிப்புற, ஓடி வந்தவர் உள்ளம்
கரைந்தே உரக்கக் கதறினார் தொலைவில் நின்று
இரங்கும், இயேசுவே ஏழை எம்மேல் மனமிரங்கும்

வாட்டிடும் நோயோ இறை சாபமாக
கிட்டிடும் சுகமோ இறைமகன் ஆசிராக
பத்து தொழுநோயாளிகளும் பரிதவித்தே கதறினார்
இறைமகனே எம்மேல் இரக்கமாயிரும் என்று

காற்றில் வந்த வார்த்தை, கனத்த நெஞ்சங்கள்
காற்றாய் மாற, தொட்டுக் குணமாக்கியது-ஆற்றில்
பாயும் புது வெள்ளம் என நெஞ்சம் மகிழ்ந்து கூத்தாடியது

கரைந்தவர் குரலில் கரையாத வேதனையைக் கண்டார்
இரப்பவர் தொனியில் இறை நம்பிக்கையின் ஒலி கேட்டார்
உரைத்தார் உள்ளமுருகியே உடல் நலம் பெறுக-இன்றே
சென்று காட்டுங்கள் உங்களைத் திருப்பணியாளரிடம் என்று

உரைத்தவர் திருமொழியோ உருவழிந்தவர்க்கு புதுவாழ்வளித்திட
காப்பவன் அரும்பணியை திருமகனும் கருணையால் புரிந்திட
விரைந்தவர் வியந்தார் உடலூற்ற உருமாற்றம் கண்டு
மகிழ்ந்தவர் தொடர்ந்தார் பயணம் -செய் நன்றி கொன்று

குணமான நோய் கண்டு-நெஞ்சு கொண்டாட
கனமான சுமை நீங்கிக் காற்றாடியாய் மனமாட
மணமகன் மலரடி தொழுதிட சமாரியரும் விரைந்தோட
உள்ளமும் உவப்பால் துள்ளியதே நன்றி-நன்றி என்று

எட்டாத் தொலைவில் நின்று இரங்கிடக் கூவியழைத்தவர்
கிட்டவந்து இறைமகன் மலரடி தொழுதார்
இருவிழிகளிலும் ஆனந்த நீரோடை பாய
இருகரம் கூப்பித் துதித்தார் நன்றி நன்றி என்று



குணமடைந்தவர்களோ பத்துப் பேர்-மனமுவந்து
கனம் புரிந்தவரோ அந்நியர் ஒருவரே
மனமகிழ்ந்த இயேசு, மனமும் வருந்தினார்
அழைக்கப்பட்டவர்களின் அசட்டை கண்டு

நலம் பெற்றவர் நன்றி மறந்திட-நலமோடு
குணம் பெற்றவரோ களிப்போடு கடவுளைத் துதித்திட
வளமான உம் விசுவாசம் புது வாழ்வளித்தது
மகிழ்வோடு செல்க, உளமார வாழ்த்தினார் இயேசு

நோயிலும், நலத்திலும் இறைவனைத் தேடியவர், நலம் பெற்றபோதும்
நன்றி மறக்கவில்லை, எல்லாம் அவன் செயல் எனக் கண்டவன்
இறைவனைக் கண்டான்-இன்புற்றான் உடலும் உள்ளமும் சுகமானவன்
***"சுயம்" கண்டான் ஆன்மலயம் கொண்டான்***

நோயில் இறைவனைத் தேடியவர்களே-நலத்தில் நன்றி மறந்தே,
குருக்களை நாடிச் சென்றார், சடங்கினை முடித்து சமூகத்தில் ஒன்றாக.
மதமே இறைவனைக் காணத் தடையான அவலம்.
வெற்றுச் சடங்கோ முதன்மையான துயரம்.

சாத்திரம் ஓதிச் சடங்கினை முடித்திட -குருக்களைத் தேடி
யாத்திரை போனவர்கள் கண்ணெதிரே குணமளித்த குணவான்
இறைவனாய் இருக்கக்கண்டும் காணாத குருடனான அவலம்,
செய் நன்றி கொன்ற துயரம், அறியாமை வாழ்வான அவலம்

மதம் கடந்த மனிதனோ-மாதவனாய் மனுமகனைக்
கண்டான், மனுமகன் தந்த வரம் மாபெரிதேன்று
மனமாற ஆண்டவனைத் தொழுதான்
நன்றி சொல்லிப் புகழ்ந்து மகிழ்ந்தான்.



நோயோ சாபம்-நலமோ இறை வரம்
நம்பியவர்-நலம் பெற்ற பின்னர் நன்றி மறந்து
திருப்பணியாளரைத் தேடிச் சென்ற பாவம்-திருச்சட்டம்
பெரிதென்ற யூத மதவாதம், தீராத ரோகம்

நலமானது வெறும் உடலானது,
தொழுநோயுற்றதுபோல் நாறியதோ
நன்றி மறந்த மனமானது!

உள்ளம் குளிர-தொழுநோய் மறைய
உடல் புது மலர்போல் பூத்தாட
நீர் பூத்த விழிகளில் உவகை-ஆனந்தம்
பூத்த இதயமோ பூங்கமிழ்ப் பொய்கை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

*Pax Ravichandra-17-10-2023*

# இறை வேண்டுதல்

இறைவேண்டுதல் செய்திட-இறையில்லம் சென்ற இருவரில்
ஒருவரோ, ஆயக்காரரோ-நித்தம் சமூகம் நிந்திக்கும் மனிதன்
மற்றவரோ மறையறிந்த மாந்தர் போற்றிடும்
மறையவர் சமூகத்துப் பெரியார் பரிசேயர்



மறையறிந்த பரிசேயனோ, மமதையுடன் தூயகம்
முன்சென்று சுயதுதி பாடினான்
திருச்சட்டம் அறிந்தவன் "நான்"-திருமறையை
முறையாய் கடைப்பிடிப்பவன் "நான்"

இந்த ஆயக்காரன் பாவிகள்போல் "நாமல்லோம்"
வஞ்சனை, சூது, விபச்சாரம் "நாமறியோம்"-வாரம் இருமுறை
உடல் வருந்திட, உண்ணா நோன்பிருக்கின்றோம்-வருவாயில்
பத்திலொரு பாகம் திருச்சபைக்களிக்கிறோம்

பட்டும், பருத்த தொந்தியும் பகட்டைப் பறைசாற்றிட
கொட்டும் பறையென ஒலிக்கும் குரலில் வரட்டு ஆணவம்
தலை விரித்தாடிட, எளியோனைத் தாழ்த்தி-வலியோன் தன்னைத்
தானே உயர்த்தியவன் இறைவனைத் துதிப்பதாக எண்ணினான்

தாழ்ச்சியும் சாந்தமும் அறியாத அகங்காரன்
ஆணவத்தோடு இயம்பிய வார்த்தைகள்
அமலன் சந்நிதி சேராமல்-மலமாய்
அலையுண்டு காற்றில் மறைந்தன.

தம் உள ஏழ்மையை அறிந்த எளியவரோ
தூயகத்தின் வாயிலில் மண்டியிட்டு மனம் நொந்து
செய்பிழையெல்லாம் மனக்கண் நிறுத்தி
மார்பிலறைந்து கண்ணீர் மல்கிடக் கரைந்தழுதார்

இறைவா என் பாவம் பெரிது, என்னை மன்னித்தருளும்
இறையிரக்கத்தை இரஞ்சினார்
***"எளிய மனத்தோர் பேறுபெற்றோர்-ஏனெனில்***
***விண்ணரசு அவர்களதே"***

ஏழையின் வேண்டுதல் இதயகீதமானது, இன்புறும்
கீதாஞ்சலியானது, எளியவர் மனதில் அமைதி தென்றலானது
ஆனந்தராகம் ஆயக்காரார் சொந்தமானது




ஆணவ மனிதனின் அலங்காரச் செபம்
மமதையின் வடிவாக வெற்றுக் கூச்சலானது
ஏற்பதற்கும், கேட்பதற்கும் எவருமின்றி
ஏகாந்தத்தில் அலைந்து கரைந்தது

மாதவன் முன் தாள்பணிய மனமின்றி
மன்னிப்பை வேண்டிட மனத் தாழ்ச்சியுமின்றி
மாறாத அகங்காரம்-மமதையோடு
வந்த வழியே திரும்பிச் சென்றது

வாதமாய் வாட்டும் மதம், மதவாதிக்குத் தெரியவில்லை
மதவாதமோ அகங்காரம்-பரிசேயனுக்கு
மதம் வெறும் அலங்காரம்

தன்னிலை உணர்ந்த ஆயக்காரர், தாழ்ச்சியோடு
மாட்சிமிக்க இறைவனிடம் மனதார மன்னிப்பை வேண்டினார்
நொருங்குண்ட மனம் குணமானது
இறை சன்னிதியில் மணம் வீசும் வண்ண மலரானது

***தன்னை உயர்த்துகிறவன் தாழ்த்தப்படுவான்***
***தன்னை தாழ்த்துகிறவனோ உயர்த்தப்படுவான்***
***என்றுமுள்ள தர்மம் நீதியானது.***

தாழ்த்தி, செய்பிழையெல்லாம் மனக்கண் நிறுத்தி
மன்னிப்பை இறைஞ்சிய எளிய உள்ளத்திற்கு அமைதி
வரமானது, எளிய மனத்தவருக்கே இறையரசு
நல் மனத்தவருக்கே அமைதி நிதரிசனமானது

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-18-10-2023

# குழந்தைகளை என்னிடம் வரவிடுங்கள்





புத்தம் புதுமலர்போல் அண்ணல் அமர்ந்திருக்க, அருமைச்
சீடர்கள், அல்லியும், ஆம்பலுமாய் சுற்றிப் பூத்திருக்க
விழிகாண வியப்பான பூங்கமிழ் பொய்கை அழகு
மொழி பாட உவப்பான புள்ளூறை சோலையழகு

பூத்த பொன்னந்தி மாலைப் பொழுதோ வாழ்த்தி
மனுமகனைப் போற்றும் அழகு, வணங்கிட
இறையில்லம் வந்த-எளிய உள்ளங்களோ பேரழகு

அண்ணலின் ஆசி பெற, வண்ணமலர்களாய் குழந்தைகளை
ஏந்தி வந்த அன்னையர் முகங்களிலோ பேரானந்தம்-குழிவிழும்
கன்னங்களோடும், குவளைப்பூ விழிகளோடும் -மடி பூத்த
இன்பத்திலே மாதவனைக் கண்டோம் என்ற பேரின்பம்

அன்னையர், தந்தையர் கைத்தலம் பற்றி
கதைபேசி களிப்போடு தளிர் நடைபயின்ற
பூ முகங்களிலோ பொங்கும் குதூகலம்
தம்பதியர் முகங்களிலோ இல்லறத்தின் மங்கலம்

"ஐயனைத் தொந்தரவு செய்யாதீர்" அன்னையர்
நோக்கறிந்த அண்ணலின் சீடர், அதட்டிட
சினமுற்றுச் சீடரைக் கடிந்த மனுமகன்



"குழந்தைகளை என்னிடம் வர விடுங்கள்
அவர்களைத் தடுக்க வேண்டாம்
இறையரசு இத்தகையோரதே"

"நீங்களும் குழந்தைகள்போல் ஆகாவிடில்
இறையரசில் நுழையமாட்டீர்கள்-இருமை கடந்த
கள்ளங்கபடற்ற குழந்தை உள்ளம் படைத்தவருக்கே
"இறையாட்சி- இறையரசின் வாரிசு அவர்களே"

மலரோ?, நிலவோ? வாசம் வீசும் அன்புக் குழந்தைகள்,
யாழினும், குழலினும் இனிய மழலை மொழி
பூ விழியில் காண்பதெல்லாம் புதுமை-
புன்னகையில் மழலைகளோ தங்கப் பதுமை

கொஞ்சும் மழலைகள் அஞ்சுகங்கள்போல் கதைபேச
பொங்கிய இன்பம் நெஞ்சில் தேனாய், அமுதாய் இனிக்க
பால் மணம் மாறாச் சேய்களோடு பாசத்தோடு உறவாடி-
பரிவோடு கதை பேசி மகிழ்ந்த தாயுமானவன்



குழந்தைகளோடு, குழந்தையாய் அண்ணலும்
கூடி மகிழ்ந்து கொண்டாட-ஆனந்தப் பூ மழையில்
அன்னையர் நெஞ்சங்கள் நீராடி மகிழ்ந்திட,
பொங்கும் பூம்புனலாய் பெருக்கெடுத்த இன்பம்

அன்னையரோடு அன்புறவு கொண்டாடி, குழந்தைகளை
பாசத்தோடு அள்ளி அணைத்து ஆசை தீர முத்தமிட்டு
மழலை இன்பத்தை மகிழ்வோடு-தந்தையானவன்
தாயுமானவனாகிச் சுவைத்த இன்பப் பொழுது

கொஞ்சும் மழலையர் நெஞ்சம் மலர
மடியில் இருத்தி கதைபேசிக் களித்து
வாஞ்சை பொங்க அணைத்து முத்தமிட்டு
வாழ்வு மலர ஆசிர் வழங்கிய பெருமான்

இறையாசி நாடி வந்த அன்னயைரோ இறைமகனோடு
தம் மழலைகள் உறவாடி மகிழக்கண்டு உள்ளம்
பூரித்தார், உளமார இறைமகன் ஆசிர் வழங்கிட
மனதார மனுமகனைப் போற்றிப் புகழ்ந்தார்.

பன்னீர் துமித்த அன்னையர் விழிகளும் பரிசுத்தர்
அன்பால் நெகிழ "**உம்மை சுமந்த உதரமும்**
**நீர் பாலுண்ட மார்பும் பேறுடையதே**"
இறைமகனை வாழ்த்திப் போற்றினார்

இன்றும் குழந்தைகளை அனுப்பிடும், இறை அன்பிற்கு
குறைவில்லை, ஆணவம் கழிந்த தூய மனம்
குதூகலிக்க, ஆசீர் பெற்று நிலை வாழ்வைச் சுவீகரிக்க
அன்பே தெய்வமான வாழும் இறைவன்



***அன்னையைப்போல் தெய்வம் இல்லை***
***குழந்தைகள்போல் செல்வமில்லை***
***மனுமகன்போல் இன்பமில்லை***

பெற்றவர் உற்ற இன்பம் பேரின்பக் கடலாக
தாயுமானவன் கண்ட சுகம் முக்கனிச் சுவையாக
ஆணவம் கழிந்திட குழந்தைகள் போலாகும்
ஆனந்தமே நம் சுயம், அதுவே சச்சிதானந்தம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-18-10-2023*

# நிலை வாழ்வும்-நிலையில்லாச் செல்வமும் (Mark-10:17-22)

பரிவாரம் புடை சூழப் பகட்டோடு வந்த பெருஞ்செல்வர்
பணிந்தே வினவினார்-நற்போதகரே
நிலைவாழ்வை உரிமையாக்கிட வழி கூறும்?



மானுடப் புகழ்ச்சிகளைப் புறந்தள்ளிய மனுமகன்
என்னை நல்லவர் என்பது ஏனோ?
இறைவன் ஒருவரே நல்லவர்

விபச்சாரம், கொலை, பொய், களவு தவிர்த்து
பெற்றோரைப் பேணி, பிறர் உடைமையை விரும்பாது
வாழும் கலையை, கட்டளைகளை அறிவீரா?

இளமை முதல் கட்டளைகளே தவமாக
நிலை வாழ்வே வரமாக-என் வாழ்க்கை

பலி, சடங்கு, சட்டம், மூட நம்பிக்கைகளால் உருவழிந்த சமயம்
நடுவே-திருச்சட்டம் தாண்டி மெய்வழியைத் தேடலாக்கிய
முதல் மனிதனின் குரல், இன்னிசையாய் ஒலித்திட-மகிழ்ந்தவர்-
அவரை அன்பொழுகக் கூர்ந்து நோக்கி உரைத்தார்

குறைவாயிருப்பதும்-நிலை வாழ்விற்குத் தடையாயிருப்பதும்
ஒன்றே-செல்வப்பற்றே மண்ணகச் செல்வத்தை விற்று
ஏழைகளுக்கு கொடும் விண்ணகச் செல்வராவீர்-மனம்
மகிழப் பின்னர் வந்து என்னைப் பின் செல்லும்

இருப்பதை இல்லாதவரோடு பகிர்ந்து வாழும் தன்னலமற்ற
அன்பே -நிலை வாழ்வின் வழி, மண், பெண், பொன் ஆணவத்தின்
தளைகளாக, ஆண்டவனை அடையும் வழிக்குத் தடைக்கல்லாக
அனைத்தையும் துறந்து என் சீடனாய் வாரும்

நிலை வாழ்விற்கான அழைப்போ அனலாய்த் தகித்திட,
எரிநரகாய் வாட்டிட, இடியோசை கேட்ட நாகம்போல் நடுங்கி
முடியிழந்த மன்னன்போல் வாடினான் செல்வன்

இருப்பதை துறந்து இரந்து வாழ்வதா? பொருள் இல்லார்க்கு
இவ்வுலகில்லை அருள் நிறைந்தவரோ அங்குமிங்கும்
நாளும் அலையும் நாடோடி, நாளைய நிலைவாழ்விற்காய் -
இருக்கும் பெருஞ்செல்வத்தை உடன் இழப்பதா?

நிலை குழைந்து மனம் நடுங்கிட ஏங்கினான்
மனம் இரங்காதா? மருவினான்-வேறு
வழி இல்லையா? கலங்கினான்-கோடீஸ்வரன்

வாழ்வளிக்கும் ***திருவருட் செல்வனின்*** வார்த்தையோ இருபுறம் கருக்குள்ள
வாளாய் இதயத்தை அறுத்திட, நிலைவாழ்விற்கான வழியோ
மனதை வருத்திட, வாடி வந்த வழி திரும்பினார்- நிலைவாழ்வை தேடி
சுகபோக வாழ்வை துறக்க மறுத்த ***பொருட் செல்வன்.***

களஞ்சியங்களோ தானியங்களால் நிறைந்திருக்க, கருவூலமோ
பொன், வெள்ளியால் பூரித்துக்கிடக்க, கடவுளைத் தொழுதும்
கனியாத மனம், இருப்பதை பகிர்ந்து ஏழையர் துயர் துடைக்க
கல்நெஞ்சக் கருமியின் கரமோ முடம்



உன்னைப்போல் உன் அயலவனை நேசி, திருச்சட்டத்தை
புறந்தள்ளிய மதவேசி, பொய்யரைக்க அஞ்சாத கஞ்சனோ
பொன், பொருளுக்குத் தாசி -லோகாயவாதி

மண்ணுலகச் செல்வத்தில் மயங்கிய நெஞ்சம்-
"***வழியும் உண்மையும் வாழ்வுமான***" விண்ணகச் செல்வம்
கண்முன் இருக்கக் கண்டும் அகக்குருடனான அவலம்
வாழ்வு தரும் வார்த்தைகளைக் கேட்டும் செவிடனான துயரம்

செல்வத்தில் திளைத்தும், போகத்தை சுவைத்தும் இருப்பதில்
சிறிதேனும் பகிர ஈரமில்லாக் கஞ்சன், நிலையற்றதை நிலையானது
எனப் பற்றிய மூடன், சீடத்துவ அழைப்பை நிராகரித்து
வந்த வழியே திரும்பிச் சென்ற வறிஞன்

ஊசியின் காதில் ஒட்டகம் நுழைவது எளிதானலும்
செல்வர் இறையாட்சிக்கு உட்படுவது எளிதல்லவே!
திருச்சட்ட வழி நடந்த ஒழுக்கவாதி-***வார்த்தையை மறுத்து***
வந்த வழியே தம் வழி திரும்பிய சுயநலவாதி

மரணத்திலும் எடுத்துச் செல்லமுடியாத செல்வங்களோ
புறஞ்சார்ந்த உடைமைகள்-கைமாறத்தக்கவை,
இன்று ஒருவருடையது-நாளை வேறொருவருடையது
செல்வனோ பொருள் முதல்வாதி இறைமகனோ ஆன்மீகவாதி

நிலைவாழ்வோ அகஞ்சார்ந்த ஆன்மீகச் செல்வம்
உரிமையாக்கிட உலகச் செல்வமுமல்ல
வெற்றிக் கொள்ள இராட்சியமுமல்ல

**தன்னை வென்றவன் தனதாக்கும்**
**தன்னுள் இருக்கும் உள்ளார்ந்த பொக்கிஷம்**
உள்ளிருப்போடு ஒன்றான சுயமே
மடிந்தாலும் உடன் வரும் பெரும் செல்வம்

சட்டங்களால் உயர்ந்த ஒழுக்கவிழுமிய சமுதாயத்தை
உருவாக்கலாம்-ஆனால் அன்பினால் மட்டுமே
அகஞ்சார்ந்த, நிலைவாழ்வை ஒருவர் தனதாக்கலாம்

சட்டமோ சமுதாயத்தின் அடிநிலை, அன்போ
ஆன்மீகத்தின் உயர் நிலை, தன்னுணர்வு
அற்றவருக்கோ சட்டம்
தன்னுணர்வு உள்ளவருக்கோ அன்பு



மதம் சட்டமல்ல-அன்பு ,
அன்பின் முழுமையே இறைவன், சட்டத்தை அமுலாக்கலம்
அமுலாக்க முடியாத அன்போ சுயமானது
அன்பு ஒழுக்கம் சாராத விழுமியம்
சட்டம் ஒழுக்கம் சார்ந்த விழுமியம்

அன்பு பொறுப்புணர்வு சார்ந்து
அன்பானவன் சுதந்திரமானவன்
உள்ளுணர்வே ஒழுக்கத்தின் உரைகல்

சட்டம் பின்பற்றக் கூடிய செத்த மார்க்கம்
உயிர்தன்மையான வாழ்வோ அன்பு

சட்டத்திற்குப் பயிற்சி தேவை, அன்போ வாழ்ந்தறியும்
அனுபவம், சட்டங்களால் புரட்சி இல்லை
அன்போ புரட்சியின் புது நெருப்பு

சட்டத்தால் மனிதன் மாறுவதில்லை
அன்போ மனிதனைப் புடமிட்டு
பசும் பொன்னாக்கும் அக நெருப்பு

சட்டம் பகிராது, அன்போ தன்னைப் பகிர்ந்திடப்
பலமடங்கு பெருகும் பெருநிதி
அள்ள அள்ளக் குறையாத அட்சய பாத்திரம்

சமுதாயம் உருவாக மோசே சட்டங்களைத் கொடுத்தார்
சமுதாயம் இறை மக்களாக-ஆன்மீகத்தின்
மேல்வரிச் சட்டமாய் அன்பை முன்மொழிந்தார் இயேசு




ஆன்மீகம் தருவதோ உள்ளர்ந்த அமைதி
சட்டங்களோ சமுதாய அமைதிக்கு வேலி
செல்வன் அறிந்ததோ கட்டளைகள்

அனுபூதியில் அறியாததோ-அன்பின் வழியே
நிலைவாழ்வைத் தனதாக்கும் ஒரே வழி
அன்பே ஆன்மீக வாழ்வின் நெறி
செல்வமோ லோகாயவாத வழி

உடைமைகள் பெருக அன்பு குறுகும் நிதரிசனம்
அன்பு பெருக மனம் அள்ளி வழங்கும்
இன்பம் பெருகும் தேவதரிசனம்

இறைவனோ ஆதி அந்தம் அற்ற முடிவிலி
சட்டத்தால் அமைந்த மனிதக் கட்டமைப்போ சமுகம்
சமுதாயமாய் வாழச் சட்டம் தேவை
இறைவனோடு வாழ அன்பே தேவை

அன்பே மதச்சாரம்-அன்பின்றி வாழ்வில்லை-
அன்பின்றி இறைவனுமில்லை
அன்பே உச்சக் கட்ட கருதுகோள்
(SUMMUM BONUM)




பசியும், பிணியும் ஏழைகளை வருத்த
பசிப் பிணியால் வறியவர் வாடி மடிந்திட
வாழ்வின் நிலையாமை அறியாத-செல்வனின்
அறியாமை கண்டு மனுமகன் வருந்தினார்

பட்டும் பீதாம்பரமும் உடுத்தி, அறுசுவை உணவோடு
திராட்சை மதுவருந்தி தினமும் விருந்தாடும் போகி-நாளும்
மும்முறை கடவுளைத் தொழுது -எந்நேரமும் செல்வத்தை தொழுது
காசேதான் கடவுள் என்னும் கபடவேடதாரி

வெளிமுக வாழ்வோ பற்று, உள்முக பார்வையோ பற்றின்மை
பற்றோ, துறவோ, உடன்பாடு , எதிர்மறை கழிந்த
வாழ்விற்கான இயேசுவின் அழைப்பு பரிபூரண சரணாகதி

பற்றின்மையே அனாகசத்தி, அதுவே நம் உள்ளாந்த சுயத்தின் நிலை
பற்றும், துறவும் கழித்த-பற்றின்மையை அடைய, இயேசு விடுத்த
அழைப்பின் அருமை புரியாது, நிலையில்லாச் செல்வத்தை
பற்றிப்பிடித்து நிலைவாழ்வை இழந்த அஞ்ஞானி







கட்டளைகளை கடைப்பிடியாது
கழுமரத்தில் தொங்கிய நிலையில்-
நம்பிக்கையால்-நிலைவாழ்வைப் பெற்ற
நல்ல கள்வனோ ஞானி

இருப்பதில் சிறிதேனும் பகிராது-செல்வத்தை சேர்த்திடும்
செல்வனும் கள்வனே, இறக்கும் நிலையிலும்
நிலைவாழ்வை, வரமாய்ப் பெற்ற கள்வனின் நம்பிக்கை
அழியாப் பெருஞ் செல்வமே

கட்டளைகள் எல்லாம் அன்பின் சாரங்களே
இருப்பதை இல்லாதவரோடு உவந்து பகிர்தலே ஈகை
அன்பே இறைவன், ***அன்பு மயமாதலே நிலைவாழ்வு***
***பலியை அல்ல இரக்கமே இறை விருப்பம்***

தன்னை மறுத்து, இருப்பதை துறந்து, தன் சிலுவையைச்
சுமந்து , தன் முழு இருப்பையும் காணிக்கையாக்கி
அன்பினால் இயேசுவின் பின் செல்ல-ஆழமான
***அன்பு வேண்டும், அளப்பெரிய தைரியம் வேண்டும்***

இருப்பதில் பகிர்ந்து, ஏழைகளை கைதூக்கி
விடுவதன் வழியாய், வறுமை ஒழிப்பிற்கான அழைப்பு
ஈகையால் சகோதரத்துவம் நிலைக்க, ஏழை செல்வன்
வர்கபோராட்டம் மறைய அமைதியோ ஆனந்த வரம்

***தன்னை தான் விடுவிப்பதே மிக உயர்ந்த விடுதலை***
***அதுவே மெய்யான சுதந்திரம்***

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-18-10-2023

# கபோதி

விழியிரண்டும் ஒளியிழந்து குழிகளாக-மொழியோ இரத்தலின்
அவலத் தொனியாக-கழியோ வழி நடத்தும் துணையாக, குளிருக்கும்
மழைக்கும் கொண்ட போர்வையோ சொத்தும், சொந்தமுமாக-ஆலய
வாயிலில் ஏழையின் தவம், கொடுப்பதும் மறுப்பதும் பக்தனின் வரம்



ஏழையிட்ட நாணயத்தால்-யாதுமான ஏகன் இறைவனும்
கரைந்துபோனான், கண்களைப் பறித்தாலும்-நின் காலடியில்
காலமெல்லாம் ஏழையென்னை ஒரு பூவாய் சூடி மகிழ்ந்தாயே
இறைவா, கபோதியும் பக்தியால் கரைந்தழுதான்



பாதை வழியே போனவரைப்- பக்தனாய்க் கூவியழைக்க-
பரமனும் பக்தனுக்கு பார்வையளித்து மகிழ்ந்த கருணை
இறைவனுக்கே உரித்தான மகிமை

போர்வையும், கழியும் கழிந்திடப், பார்வை பெற்றவர்
மகிழ்ந்தே  இறை மகனைப் புகழ்ந்திட, விழிகள்
கண்டதோ-மானுடம் காணாத இறைமகனை,
மொழிகளும் துதித்ததோ வாழும் இறைகருணையை.

காணா முடியாதவரைக் காணவோ, கடவுளும்
பார்வையைப் பறித்தார் கண்டு களித்து-விசுவாசத்தில்
நிலைக்கவோ இறைமகனும் பார்வையளித்தார்



இதயம் பண்பாட, உதயம் கண்ட மலராய் விழிகள் பூத்தாட
இருவிழிகளிலும் துமித்த ஈரத்தில் ஆனந்தம்
நன்றி!, நன்றி என்றே விம்மிய மனதில் பேரின்பம்

இருண்ட வாழ்வில் நம்பிக்கை ஒளியேற்றி தீபம்
நாறிய வாழ்வை நறுமணமாக்கிய தூபம்
இரந்து வாழ்தலை ஒழித்து, உழைத்து வாழ
விழிதந்த மனுமகனோ வாழும் இறை கருணை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-18-10-2023*

# சக்கேயு-மனமாற்றம்

------------------------------------------------------------



கதைகள் பல கேட்டு இதயம் எழுதிய பெருங்காவியம்
காணத் தவமிருக்கும் உயிரோவியம்-பாவி என்னையும் தேடி
வருகின்றார் இவ்வழி -எண்ணமே இன்பமாக, இதயம்
சிறகுவிரித்துப் பறந்தது வானில் வண்ணப் பறவையாக

சிந்தை எங்கும் அமுத வெள்ளம் பாய
செவிகள் இரண்டிலும் இன்னிசை கானம் ஒலிக்க
நிந்தைகள் கேட்டு நாளும் புண்ணாண நெஞ்சம் மகிழ்ந்தது
எளியோர் அன்பர், வந்தனைக்குரியவர் வருகிறார் இவ்வழி

உருவமோ குள்ளம், உடமையோ பெருஞ்செல்வம்
ஆயக்காரன் பாவி-ஏகாதிபத்தியத்தின் கைக்கூலி
அருவெறுத்த சமூகம் சக்கேயுவிற்கு வழங்கிய நீதி
வெறுமையில் வாடி வெம்பிய இதயம் தேடுவதோ நிம்மதி

மடை திறந்த வெள்ளம் போல் மக்கள் கூட்டம் அலைமோத
கரை ஒதுங்கும் சிறு துரும்பாய் சக்கேயுவின் நிலை மாற
விடை கண்டான் காணத்தவமிருந்தவரைக் காண ஓடிச்சென்று
காட்டத்தி மரத்தில் ஏறி உயரத்தில் தவமிருந்தான்

வெண்ணாடை காற்றாட, விரிகுழல் தோளாட
எளிமையின் பேரழகோ மனுவுருவாக-பசும்
பொன்மேனி எங்கும் கருணை வழிந்தோடக் கண்டான்
காணத் தவமிருந்தவரைக் கண்குளிரக் கண்டான்

சோதியோ, சுந்தர ஒளிச்சுடரோ, வேதத்தின்
மறைபொருளோ, ஆனந்த சௌந்தர்யமோ-ஆதியோ
அரிய மீட்பைத் தரும் இறை கருணையோ-இன்று
மனுவாகி மானிடர் நடுவே நடமாடுவது

பண்படக் காத்திருக்கும் புண்பட்ட மனம், மரத்தில் காயாய் ஒட்டி
கனியக் காத்திருக்கக் கண்டார்-காணத்தவமிருந்தவன் நேயம்
கண்டு, கனிவோடு சக்கேயுவே உன் விருந்து நாம், உம் நோய்க்கு
அருமருந்தும் நாம், விரைந்து கீழே இறங்கி வாரும் அழைத்தார்

இறைமகன் திருமொழியால் இதயம் எங்கும்
பூமழை பொழிய-உதயம் கண்ட தாமரைபோல்
உள்ளம் மலரக் கீழே குதித்தான் சக்கேயு

லேவியின் வீட்டில் குருவிற்கு விருந்தோ? பாவியின்
இல்லம் ராபிக்கு உறைவிடமோ? முணுமுணுப்பும்
சலசலப்பும் முகமனைப் பழித்திட, ஆலைவாய்க்
கரும்பானான்-அனலில் விழுந்த புழுவானான்



முணுமுணுப்பையும், சலசலப்பையும் சட்டை பண்ணாமல்
முறுவலோடு இயேசு சக்கேயுவை அழைத்து அணைக்க
அறுசுவையிலும் பெருஞ்சுவையை ஆன்மா ருசிக்க
மானம் காத்தவரை மனதால் பூஜித்த மனிதன்

இன்றே என் சொத்தில் பாதி ஏழைகளுக்குச் சொந்தம்
எவருக்கும் அநீதி இழைத்திருந்தால் பரிகாரம்
நான்கு மடங்கு, இது உறுதி, மகிழ்ச்சி பொங்க
இழந்ததைத் தேடிடும் மீட்பவரிடம் இயம்பினான் சக்கேயு

இதயம் செப்பிய மொழிகள் இன்னிசையாய் ஒலிக்க
ஏழைகள் நெஞ்சில் பூமழை பொழிய-
இனிய சுகந்தமாய் ஈதலின் சிறப்பு எங்கும் கமழ,
மீட்பு வந்தது இன்று, இவரும் ஆபிரகாமின் குமாரனே
நம் சகோதரனே வாழ்த்தினார் இயேசு



சுட்ட பொன்னில் மாசு ஒட்டுமோ?
முற்றிய புளியம் பழமும் ஓடு பற்றுமோ?
சுட்ட நீறும் தீப்பற்றுமோ-இறைகுமாரன்
அருள் பெற்றவரிடத்து இருள் நிற்குமோ?

***காணத் தவமிருந்து கண்டதுவும்- பின்***
***கதைகள் பல பேசி மகிழ்ந்ததுவும்***
***விருந்தை விருந்தோம்பி விருந்தாய் உண்டதுவும்***
***மாதவமே, வானவன் அருள் வரமே***

தவறுகள் கோடி புரிந்தாலும்-தடைகள் ஆயிரம் இருந்தாலும்
தவமாய் அழைத்தால், மனுமகன் வருகையோ பெருவரம்
முன்னே ஓடி, உயர ஏறித் தவமிருக்க, வரமான தரிசனம்-அரிய
அழைப்பால் வாழ்வு மாறிட, பணிந்து-இருப்பதை பகிர்ந்து
நண்பனாய் மாறி விருந்தோம்பிய சற்குணம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-18-10-2023*

# அப்பா! தந்தாய்!

எல்லாம் வல்லவராய்-Omnipotent, எங்கும் நிறைந்தவராய்
-Omnipresent, எல்லாம் அறிந்தவராய்- Omniscient
எட்டாத வானகத்தே வாழும் அந்நியனாய்-impersonal
அறிவுக்கெட்டாதவராய்-Transcendental இறைவன்



இறைவனை, அப்பா, தந்தாய் என்றழையுங்கள்
இறைவன் நம் தந்தை -இறை குடும்பம் நாம்
நீங்கள் என் சகோதரர்-நாம் தெய்வங்களே
உறவாட கற்றுத்தந்த உன்னத குரு இயேசு




கடவுள் எனும்போது இறைவனோ தத்துவம்
தந்தையோ நம் இரத்த உறவு
இயேசு நம் சகோதரன், நாமும் இறை மக்களே

பரிபூரணத்தின் நாமம் பரிசுத்தம்
பரிசுத்தமே பரிபூரணம்.( God is whole & holy )

தந்தையும் தாயுமானவனாய் மெய்பொருள்,
பக்தி மார்கமே எளியோருக்குப் பாதை
அம்மை, அப்பன் என்றழைத்து இன்புறுங்கள்
இறை குடும்பம் நாமே என்று பண் பாடுங்கள்

உள்ளம் பெருங்கோயில், ஊனுடம்பு ஆலயம்
நல்மனத்தவருக்கே அமைதி, என் சித்தமன்று,
உம் சித்தம் என்னும் பரிபூரண சரணாகதியே
ஆணவம் கழித்திடும் அரிய வழி

உண்மையை அன்பால் ஓதுதலே வாழ்வு
ஆணவமழிந்த பரிபூரண சரணாகதி
சச்சித் ஆனந்தமே நம் பெருநிதி

இறை வார்த்தையே -வாழ்வுதரும் அன்றாட உணவு
இன்றைய நாளை, வாழ்வதற்கான ஆற்றலை
அன்றாட உணவாய் தந்தையே எமக்கருளும்
கணந்தோறும் விழிப்புணர்வோடு வாழ்தலே வாழும் கலை

இறைவார்த்தையை வாழ்வாக்கிட
***-இம்மானுவேலாய் கடவுள் நம்மில் வாசம்***
இறைமக்களாய் எம் உருமாற்றம்,
ஏதேன் நம் சொந்தம்.

தூய மனமே-அன்பில் நிலைத்து, இருமை கடந்து -நான், நீ,
எதிரி நண்பன் கழித்து குற்றங்களை மன்னிக்கும்
மன்னிக்கும் மனமே தெய்வீகம்
மன்னிக்கும் மனமே இறை மன்னிப்பை பெறும்

ஆணவமே சோதனை, செயல் கழித்து
மனமழிய- சும்மா இருத்தலே பேரின்பம்.
விழிப்புணர்வே வரம்

அறிவு மனமே இருமையின் இருப்பிடம், இருமை கழிய
ஒருமை பிறக்க, ஆணவ "நான்" அழியத் தோன்றும்
தூய மனதிற்கே சத்திய தரிசனம்
ஆணவ மனமே நரகம்-தூய மனமோ மோட்சம்

நான் நீ என்ற பேதங்களில்லை, இருப்பது ஒன்றே
அதுவே தெய்வீகம், அஹம் பிரம்ம அஸ்மி-தத்துவமஸி
நானும் தந்தையும் ஒன்றே, அனல் ஹக் எல்லாம் நாமே
***வாழ்வே தவமாக இயேசுவின் ஜெபம்.***

***நம்மை வெறுமையாக்கி, இறைவார்தைக்கு***
***செவிமடுத்தலே ஜெபம்.***, மனம் கழித்து,
அறிவு கடந்த இதய கீதமே -ஜெபம்.

இறையியலுக்குள் அடங்க இறைவன் பாடமல்ல
தத்துவமல்ல விவாதிக்க-சத்தியம் தரிசனமே
சச்சித் ஆனந்தம் அதுவே-அதுவே நாம்
தூய உணர்வு நிலையே இறைவன்

கேளாதீர்கள் எல்லாம் இங்கே
தட்டாதீர்கள் எதுவும் பூட்டப்படவில்லை
தேடாதீர்கள் எல்லாம் உங்களுக்குள்ளே
கண்டு கொள்ள-கட உள்ளே-கடவுள் நீங்களே

விழிப்புணர்வே திறவுகோல்
கேட்கச் செவியுள்ளவர் கேட்கின்றார்
காண விழியுள்ளவர் காண்கிறார்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-18-10-2023

# சீடத்துவம்

***விழிப்புணர்வே குரு,*** அருட்கொடையாய்
விழிப்புணர்வை, தம் இருப்பால் -சீடருக்கு
அருளக் காத்திருக்கும் திரு





விழிப்புணர்வால் கவரப்பட்ட சீடர்-தம் இருப்பின்
மையத்தை  காணிக்கையாக்கி, அன்பினால்
அவர் இருப்பில் ஒன்றாகி, ஆழ்ந்த நம்பிக்கையோடு
அவர் ஒளிக்காய் இதயங்களைத் திறந்து காத்திருப்பார்

குருவும், சீடர்களுமான உறவு , நதியோரத் தோப்பாய்ச்
செழிக்க-அவர், இருப்பில் ஆனந்த சத்சங்கம் பிறக்க
குருவே சீடர்களைத் தெரிந்தார்-கூழாங்கற்களை
வைரமாக்கி, ஞானசித்தன் அற்புதம் புரிந்தார்.

அறிவும், அறிதலும் மாறுபட்ட இரு துருவங்கள்
அறிவோ தகவலைச் சார்ந்தது-இயந்திரத்தனமானது
அறிதலோ தனித்துவமானது
அனுபவம் சார்ந்தது-புரிதலைச் சார்ந்தது



குருவோ அறிவு மனம் கழித்த சூனியம்
குருவோடு ஒன்றான இருப்பில்-அறிவு
மனம் கழிந்து. -தூய மனம் பிறந்திட
"அறிதலில் ஒன்றாகிட மெய்ஞானம் கிட்டிடும்"

ஆசிரியரிடமிருந்து மாணவன் கற்றுக்கொள்கிறான்
தகவல் அறிவால் தன்னை நிரப்புகிறான்
சீடனோ குருவிடமிருந்து அறிவைக் கழித்து
மனதை அழிக்கக் கற்றுக்கொள்கிறான்

அறியவேண்டியது உண்மையே-கற்றறியும் பாடமல்ல-
உண்மை, அறிவு கடந்த இருப்போ உண்மை-
ஆணவ மனம் கழிந்திட -இருப்போடு, இதயம்
கொள்ளும் உறவே உண்மையை அறிந்திட வழி

இறைவனைத் தேடும் மனிதனை
இறைவனும் வாஞ்சையோடு தேடுகிறார்
தூய மனதிற்கே சத்திய தரிசனம்
எளிய மனதிற்கே இறையரசு

அறிவுமனம் கழித்து ஆணவம் ஒழிந்திட
தூய மனதில் நிலைப்பு-சத்தியம் தரிசனமாகிட
ஆனந்த இருப்போடு ஒன்றான களிப்பு
அறியவேண்டியதை அறிதலே மெய்ஞானம்

அறிவு மனம் கழித்திட தன் சத்சங்க இருப்பால்
அருள் புரியும் குரு, சீடனுக்கு-இருப்பை வரமாக்கும் திரு
சீடனும் குருவும் உள்ளுணர்வில் ஒன்றான உன்னதம்



எழுபத்திரண்டு பேரை தெரிந்தவர்-தாம்
செல்லவிருந்த ஊர்களுக்கு, இருவர் இருவராய் அனுப்பி-தம்
வருகைக்காய்த் தயார் செய்யப் பணித்தார்

அறுவடையோ மிகுதி-வேலையாட்களோ குறைவு
அறுவடைக்குத் தேவையான பணியாட்களை அனுப்பும்படி
உரிமையாளரிடம் மன்றாடுங்கள்

ஓநாய்களிடையே ஆட்டுக்குட்டிகளாய் நீங்கள்
தோற்றத்தில் மற்றோர் உங்களில் மயங்கிட இடங்கொடாதீர்
எவரும் காணாதிருக்க-ஏழைகளாய் உருமாறுங்கள்
உண்மையில் நீங்கள் மகாராஜாக்களே

பணமோ, கோலோ, பாதணிகளோ இன்றிப்
பரதேசிகளாய் பயணியுங்கள் அனுதாபம் கொண்டேனும்
யாரேனும் உங்களை அதிதியாய் அழைப்பார்



வழியில் எவருக்கும் வந்தனம் கூறாதீர்
செல்லும் நோக்கை மறந்திடுவீர்
விழிப்புணர்வோடு பயணம் தொடரட்டும்

உங்களை விருந்தாய் ஏற்கும் வீட்டிற்கு அமைதி உண்டாகுக
என வாழ்த்துங்கள், அமைதி விரும்புவோரிடம் அமைதி தங்கும்-
அமைதியே ஆன்மீகத்தின் தாரக மந்திரம்

அமைதியின் அதிர்வுகளை அனுபவிக்கும் வீட்டார்
ஆதரவு நல்குவார் எங்கும் பரவிடும் அமைதியே நற்செய்தி
உங்கள் வழியாக-என் பிரசன்னம், அமைதியாய், அங்கிருக்கும்

வீட்டார் தருவதை உண்டு குடியுங்கள், வேலையாள்
தம் கூலிக்கு உரித்துடையவர், வீடு வீடாகச் செல்ல வேண்டாம்,
நலமளித்து, இறையரசு நெருங்கி விட்டதை அறிவியுங்கள்
நலமான மனமே நற்செய்திக்கு செவிமடுக்கும்

ஏற்காத ஊரில், ஒட்டியிருக்கும் கால் தூசியையும்
எதிராய் உதறிவிடுங்கள்-ஆயினும் இறையரசு
நெருங்கி விட்டதை அறிவியுங்கள், ஏற்காத ஊர்
உங்களுக்கு புறம்பாகட்டும்-அந்நிய தேசமாகட்டும்

ஒருவர் என்பது தனிமை-மூவர் என்பது கூட்டம்
ஒருவருக்கு ஒருவர் உறுதுணையாயிருப்பீர்
எனவே இருவராகச் செல்லுங்கள், இருவர் சொல்லும்
இறையரசு பற்றிய சாட்சியம் ஏற்புடையது

என்னைப் பின்பற்றிய-உங்கள் உள்ளங்களில் வாழ்வு
பொங்கி வழிகின்றது-அகமகிழுங்கள்
அறிவைச் சுமக்காதீர், வீண் தர்க்கத்திற்கு இடமளிக்கும்
அனுபவத்தைப் பகிருங்கள், இறையரசுக்குச் சாட்சியமாகும்.



அன்பும், உண்மையும் பொங்கிடும் கள்ளங் கபடமற்ற
ஆட்டுக்குட்டிகளே பொய்மை நிறைந்த உலகில்
பகைக்கும் ஓநாய்களே அதிகம்-

உங்களுக்குத் துன்பமுண்டு-ஆயினும் கலங்காதீர்
எதை செய்தாலும் இறைவனுக்கே அதை செய்கிறீர்கள்
ஒருவரை வெறுத்தால் இறைவனையே வெறுக்கின்றீர்கள்.
ஒருவரை நேசித்தால் இறைவனையே நேசிக்கின்றீர்கள்.

என்னைப் பின்பற்ற விரும்பும் எவரும், தன்னலம் துறந்து
தம் சிலுவையை-நாள்தோறும் சுமந்து என்னைப் பின் தொடரட்டும்
ஏனெனில் தம் உயிரைக் காத்துக் கொள்ள விரும்புவர்
அதை இழந்துவிடுவார்-என் பொருட்டுத்-தம் உயிரை
இழப்பவரோ அதைக் காத்துக்கொள்வார்

ஒருவர் உலகம் முழுவதையும் தமதாக்கிக் கொண்டாலும்
தம்மையே இழப்பாரெனில் அவருக்கு கிடைக்கும் பயன் என்ன?
ஆணவம் மடியும் வரை-அனுதினமும் தன் சிலுவையைச் சுமந்து-குருவை
பரி பூரண நம்பிக்கையோடு பின்பற்றுவதே சீடத்துவ அழைப்பு

ஆணவமே துன்பம், ஆணவமே சிலுவை, கணந்தோறும்
வாழும் வாழ்வு, சீடன் தன்னை அறியும் வரை தொடரும் பயணம்

ஆணவத்தை வெட்டி வீழத்துபவரே குரு, குருவின்
அருளால், அமைதியால் அன்பால் சீடனின் புதுப்பிறப்பு
தன்னையறியும் மெய்யறிவு-அதுவே ஞானம்

வித்து மடிந்திட, மரம் முளைத்திடும், பழையன கழிந்திட
புதியன மலர்ந்திடும், பழைய நம்பிக்கைகள், தகவல் அறிவு
கருத்து, தர்க்கம் அனைத்தும் அழிந்திட மனம் அழிந்திட-
தூய மனம் பிறந்திட-வானகம் திறந்திட- இறையாவி
சீடன் மீது தங்கிட, புத்தொளியாய் புதுப்பிறப்பாய் வாழ்வு

தன்னை அறிந்திடும் மெய்யறிவு மலர்ந்திட
அதுவே இரண்டாம் பிறப்பு-இறந்தகாலம் கழிந்திட
என்றும் நிகழ்காலத்தில் வாழ்வு

தன்னை அறிந்திட உலகைத் துறத்தலே வழி
"நான் எனும் ஆணவமே உலகம்"
உலகு மறைந்திட, பிரபஞ்சத்தோடு ஒன்றான இருப்பு-



நான் என்பதே பொய்-நான் மடிந்திட
இயேசு என்னில் பிறந்திடும் புதுப்பிறப்பு-
சீடன் குருவாகும் அற்புதம்

மகத்தான பணி செய்து, மகிழ்வோடு திரும்பி வந்த
சீடர் உரைத்தார், ஆண்டவரே உம் நாமத்திற்கு
தீய ஆவிகளும் அடிபணிந்தன.

தீய ஆவிகள் பணிந்ததை எண்ணி அகமகிழவேண்டாம்-
அகமகிழுங்கள், உங்கள் நாமம் வானகத்தில் எழுதப்பட்டுள்ளது

நெஞ்சுற்ற உவகை பெரிதாக-நேசமனம் தந்தையை போற்றியது-
என் தந்தையே ஞானியரும், அறிஞரும் அறியாததை-
குழந்தைகள் அறிந்திடப் புரிந்த உம் கருணைதான் என்னே!

தந்தை எல்லாவற்றையும் என்னிடத்தில் ஒப்படைத்திருக்கின்றார்
தந்தையைத் தவிர வேறு யாரும் மகனை அறியார், மகனே
தந்தையை அறிவார் மகன் யாருக்கு வெளிப்படுத்துகிறாரோ
அவரே தந்தையை அறிவார்

என்னைக் காணும் கண்களும், என் மொழிக்கு செவி கொடுக்கும்
இதயங்களும் பேறுபெற்றவை, மன்னரும், இறைவாக்கினரும்
காணவும், கேட்கவும் விரும்பியதை-என் சீடர்களே,
நீங்களோ, காணவும், கேட்கவும் பேறுபெற்றீர்கள்

தந்தையையும், உங்களையும் இணைக்கும்
உறவுப் பாலம் நானே-என்னை மாட்சிப்படுத்தும்போது
தந்தையே மாட்சிப்படுத்தப்படுகின்றார்

என்னை அறிந்தவர் தந்தையை அறிகின்றார்
உங்களில் இறைவனும்- இறைவனில் நீங்களுமாய்
பங்கு கொள்ளும்போது-ஆழ்ந்த உறவுச் சங்கமத்தில்
இறைவனை நீங்கள் அறிவீர்-ஆனந்தம் கொள்வீர்.



நல்லாயனைப் பின் தொடரும் செம்மறிகள்போல்
இயேசுவை பின்தொடர்ந்த சீடர்கள், பசும்புல் வெளியும்,
நீரோடையுமாய், வாழ்வளிக்கும்
மனுமகன் வார்த்தைகள்

சூனியமே முழுமை
முழுமையின் இருப்பாய் இறைவன்



**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-18-10-2023

# அழைப்பும் மறுப்பும்

கடலைத் தேடும் நதியின் பயணம் வேள்வியாக, அறியாத
பாதையில், அதன் தேடல்: அந்தத்தில் பொங்கிப் பூரித்த
அலைக்கரங்களோடு அணைக்கக் காத்திருக்கும் ஆழியில்-
தன்னை ஆகுதியாக்கி நதியின் ஆனந்தக் கூடல்



பூரண சரணாகதியில்-கடலோடு
நதியின் ஆனந்தச் சங்கமம்
தன்னையே ஆகுதியாக்கி -நதி
கடலாகும் சம்பூரணம்

உலகின்பம் மெய் என்ற மாயையில் மனிதன்
மூப்பு, பிணி, சாவு வாழ்வை அலைக்கழிக்க-துக்கத்தில்
விழித்த மனிதன், அறம், பொருள், இன்பம் கடந்து
வீட்டைத் தேடலாக்கும் சித்தார்த்தன்

வீடு தேடும் மனித வாழ்வோ முடியாத தீர்த்த யாத்திரை
ஓடும் நதியாய் மனிதனின் ஓயாத பயணம்
நாடோடிப் போதகன் வாழ்வோ
வீடு திரும்பும் அகப்பயணம்

இயேசுவை வழியில் கண்டவர் ஒருவர் மொழிந்தார்
***ஆண்டவரே எங்கு நீர் சென்றாலும்***
***உம்மைப் பின்பற்றுவேன்***

விழிப்படைந்த குருவின் இருப்போ
மானுடரைக் கவர்ந்திழுக்கும் காந்தப்புலம்
இருப்பின் ஈர்ப்பு-இதயத்தைக் கவர்ந்திட
இயம்பிய வார்த்தை அவர் இருப்பை கடந்த ஒன்று

விழிப்புணர்வின் உயர் தளத்திற்கு
ஒரு கணம் உயர்ந்தவர் -சீடத்துவத்தின்
ஆழம், விசாலம், அகலம் அறியாது உரைத்தது
புரிந்துணர்வில் பிறக்காத கூற்று

சுந்தர விழிப்புணர்வில் சொந்த பந்தம் துறந்த
சுதந்திர புருஷரின் அகமுக யாத்திரை-வீடு என்று
ஓரிடமில்லாத இருப்போடு ஒன்றான பெருநிலை

மனம் கழித்து, அழியாத ஆன்மாவாய்த்
தன்னைக் கண்ட கோடிஸ்வரன்
உலகமெல்லாம் ஆதாயமாக்கி கொண்டாலும்
தன்னை இழக்காத மாபுருஷன்

யான் பெற்ற இன்பம் பெறுக வையகம் என்றே
பொங்கிப் பாய்ந்த கருணை வெள்ளம்
மணம் வீசும் தேன்மலரைக் கண்டு-
மதுகாரியாய் மயங்கிட்ட மானுட உள்ளம்



உள்ளம் மகிழ, உடல் புல்லரிக்க
விழிகளில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுக்க
தன்னை மறந்தவர் இயம்பினார்-ஆண்டவரே
எங்கு நீர் சென்றாலும் உம்மைப் பின்பற்றுவேன்

யாரையும் ஆண்டவர் என்றழையாதவர்
இறைமகனின் தரிசனம் காந்தமாய் ஈர்க்க
தன்னை இழந்தவர் பரவசத்தில்
ஆண்டவர் என்று அழைத்தார்

இயேசுவின் பயணமோ கல்வாரிப் பாதை
"உன் சிலுவையைச் சுமந்து என்னைப் பின் செல்"
நாடோடிப் போதகனின் மாறாத கீதை

ஆணவத்தின் இறப்பில் தூய உள்ளுணர்வின் பிறப்பு
இருப்போடு ஒன்றாகும் ஆனந்த நிலைப்பு
தக்க காலத்தே இயேசுவாகும் அகமாற்றம்
சீடன் குருவாகும் அற்புதம்

ஈர்ப்பால் பிறந்த கூற்று
ஆழ்ந்து, சிந்தித்து விளைவுகளை
ஆராயாமல் மொழிந்த பரவசப்பேச்சு

நரிகளுக்கு வளைகளும், வான் பறவைகளுக்கு
கூடுகளுமுண்டு, மனுமகனிற்கோ தலைசாய்க்க இடமில்லை
எதையும் எதிர்பார்த்து என்னைப் பின்பற்றாதே
ஏதுமில்லாத சூனியம் நான்

வளை தோண்டி, கூடு கட்டி
உலகே நிரந்தரம் எனும் மாயையில் விலங்கின வாழ்வு
உலகம் ஒரு சத்திரம்-பயணிகளோ நாம்
வீடில்லா மனிதன் வீடு தேடும் பயணமே வாழ்வு

வீடு தேடுதலே மதம்
வீடு தேடும் வாழ்வோ தீர்த்த யாத்திரை
வீடில்லா மனிதன்-ஏதேன் திரும்பிட
வாழ்வால், வார்த்தையால் இயேசுவின் அழைப்பு

மனுமகன் எனும்போது மானுடத்தில் ஒன்றானவர்
இறைமகன் எனும்போது உள்ளுணர்வில்
இறைவனோடு ஒன்றானாவர்-
இயேசு இரண்டுமானவராயிருந்தார்
***மனிதனாய் அவர் சாயல்-இறைவனாய் அவர் இருப்பு***
மானுடம் புரியாத இரகசியம்

தம்மை அறியாதவர் வாழ்வோ
குடியிருக்க கூடும், வளையும் தேடும்
நரியும், பறவையுமான விலங்கின வாழ்வு
உலகே மெய் என ஏமாந்த கனவு

இறைவனாகும் அகமுகப் பயணத்தில் இயேசு
திசை கடந்த பயணியின் அகமுக யாத்திரை
திசைகளற்ற, பரிமாணமற்ற இருப்பை-சூனியத்தை
நோக்கிய பயணம் இடம், காலம் கடந்த யாத்திரை

வீடில்லாத நாடோடி -நானோ
விழிப்புணர்வை நோக்கிய பயணி -நீ தேடும்
உலகு சார் இளைப்பாறுதல் என்னிடம் இல்லை




முடியாத பயணமாய் என் வாழ்வு
காண்பவை கடந்து, காணாதவை தேடும்
யாத்ரிகன் நான்-இதனைப் புரிந்திடும்
மனப்பக்குவம் உன்னிடம் இல்லை

***கடவுள் என்பது முழுமையின் மாற்றம்***
விழிப்புணர்வாய் பிறக்கும் இரண்டாம் பிறப்பு
***வணங்கப்படுவது கடவுள் அல்ல- அது சடங்கு,***
***வாழ்ந்தறியும் சத்தியமே இறைவன்***

என்னுள் இருக்கும் எல்லையற்ற இருப்பே இறைவன்
புதுப் பிறப்பளிக்கும் விழிப்புணர்வின் அகமாற்றம்
உன் கடவுள் வணங்கப்படுவது
என் இறைவன் வாழ்ந்தறியும் உண்மை

என் சித்தம் அன்று-எப்போதும் நின் சித்தம் எனும்
பரிபூரண சரணாகதி என் வாழ்வின் தத்துவம்
வெற்றுப் புல்லாங்குழலில்-இறைவனின்
வேனுகானமே நான்

ஆணவத்தை பூரண சரணாகதியில்
ஆகுதியாக்குவதே உண்மையான வழிபாடு
மொழிந்தவருக்கு விடை பகிர்ந்தவர்
முடியாத பயணம் தொடர்ந்தார்

“என்னைப் பின்பற்றி வாரும்” வழியில்
கண்டவருக்கு- சீடத்துவ அழைப்போ வெகுமதி
மாண்ட தந்தையை நல்லடக்கம் செய்திட
சீடன் கேட்டதோ அனுமதி



நடைப்பிணமாய் வாழும் மக்கள்-இறந்தோரே
இறந்தோரைப் பற்றிக் கவலை வேண்டாம்?
இறந்தோரை இறந்தோரே அடக்கம் செய்வார்
நீர் போய் இறையரசு பற்றி அறிவியும்

நிலையற்ற வாழ்வை
நினைவுகூர விடுக்கும் அழைப்பு மரணம்
தந்தை தாய் உடலைத் தருகின்றார்
***ஆன்மாவை தரவல்லவரே மெய்யான தந்தை***
***உடலுக்கே மரணம்-ஆன்மா அழிவற்றது***

வாழ்விற்கும் சாவுக்குமான தேர்வு உம்முன் உள்ளது
உடலைத் தருபவரால் நிலைவாழ்வை தரமுடியாது
ஆன்மாவைத் தரவல்லவரே
நிலைவாழ்வு தரும் மெய்யான தந்தை

பிறப்பவர் இறப்பது திண்ணம்-அறிந்தவன்
உனக்கேன் இன்னும் தயக்கம்? உறவின் மரணம்-
உன்னை இறைவனிடம் திருப்பிடும் அழைப்பு
தவறவிட்டால், வாழ்வோ பேரிழப்பு

மரணம் பெரும் அதிர்ச்சி வைத்தியம்-குணமானோர்
விண்ணரசில் இன்புற, நோயுற்றோர், மண்ணரசில் துன்புற-
உறவு துறந்து, உண்மையைப் புரியும் பக்குவம் உனக்குண்டு-
சென்று, நற்செய்தியை அறிவியும்-குருவின் கட்டளையானது

பெற்றோர் உடலைத் தந்திட-தன்னைத் தானே
ஆன்மாவாய் பெற்றெடுப்பதே இரண்டாம் பிறப்பு
தயாரான சீடனுக்குத் தரிசனமான குரு
சீடத்துவத்தை வெகுமதியாக்கி மகிழ்ந்த அருட்திரு




தந்தை, தாய், சகோதரம்,பொன் விலங்கான
இரத்த பந்தம்-துறந்து என்னைப் பின் செல்
எல்லைகளற்ற இருப்போடு பந்தம்
முழு உலகே உறவாகும் சகோதரத்துவம்




உறவும், உடைமையும் துறந்து
தன்னை வெறுமையாக்கி-
உள்ளுணர்வில் உயரும் மேன்மை-
இருப்போடு ஒன்றாகும் ஒருமை

முன்னையவரோ உள்ளீடற்ற பதர்
பின்னையவரோ முற்றிய நெற்கதிர்
மரணத்தின் வழியாய் அவருக்கு
மனுமகனின் சீடத்துவத்திற்கான அழைப்பு

மரணத்தை அறிந்தவனே வாழ்வைப் புரிந்து கொள்கிறான்
தன் பாதையை தெரிந்து கொள்கிறான்-இயேசுவை
பின் செல்ல தகுதியுள்ளவனாகிறான்

*ஆண்டவரே உம்மை பின்பற்று முன்*
*வீட்டாரிடம் விடை பெற்றவர அனுமதியும்*
மூன்றவது மனிதனின் கோரிக்கை

***கலப்பையின்மேல் கைவைத்தபின்-திரும்பிப் பார்பவர்***
***எவரும் இறையரசுக்கு தகுதியற்றவர்***

கலப்பையின்மேல் கை வைத்தபின்
திரும்பிப் பார்த்திட உழுதால் -உழவு தவறாகும்
உழவுசால் கோணாலாகும், விளைச்சல் பாதிக்கப்படும்

இறந்த காலம் பழங்கனவு, செத்த நினைவு
எதிர்காலமோ வெற்று நம்பிக்கை, பகல் கனவு
மனித மனமோ ஆசை வானில் உலவும் நிலவு
நிகழ்காலமோ நாம் வாழும் உலகு

இறந்தகால நினைவுகள் கழிந்திட
எதிர்காலக் கனவுகளின் வேர்கள் அறுந்திடும்
மனம் நிகழ்காலத்தில் விழித்திட-கடந்த காலம்,
எதிர்காலம் எனும் இருமை மறைந்திடும்

காலம் மறைந்திட மனதில் தியானம் பிறந்திடும்
கதவுகள் திறந்திட-இறையரசு மலர்ந்திடும்
உலகம் கடந்த உள்முகப் பயணம்-ஆனந்தமாகும்

எப்போதுமிருப்பது நிகழ்காலமே
காலம் கழிந்த இறைவனோ நித்தியமே
நிகழ்காலத்தில் கணந்தோறும் வாழ
விழிப்புணர்வே தேவை

விழிப்பாயிருங்கள் குருவின் மாறாத அறிவுரை
தன்னை அறிந்து, மெய்யறிவில் நிலைத்திட
குருவின் அழைப்பு

இறந்த காலத்தை சுமப்பவர் நிகழ்காலத்தில் வாழத்தகுதியற்றவர்
கடந்து வந்த பாதையையும், பாலங்களையும் தகர்த்தவன்
திரும்பிப் போவதில்லை முன்னோக்கிய பயணத்தில்
முடிவான அவன் தீர்த்த யாத்திரை

சீடனாகத் தகுதியற்றவர் -குருவைப்
பின் தொடர்ந்தும் பயனில்லை-உறவுத்
தளைகளைத் தகர்த்து சிறை கதவுகளைத் திறந்து
கடந்து உள்ளே போ- கடவுளாவாய்

குருவே சீடனைத் தெரிகின்றார்-
சீடன் தயாராகும்போது-குரு தோன்றுகின்றார்
குரு-சீடன் உறவின் மகத்தான உண்மை

உலகோ சாலை, உலகே சத்திரம்
வீடு நோக்கிய பயணமே வாழ்வு
விழிப்போடு இருங்கள்-விழிப்புணர்வே பாதை
நினைவில் இருத்துங்கள்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-18-10-2023*

# அறிவற்ற செல்வன்

மண்ணாண்ட மாமன்னரும்-பொன் கொண்ட குபேரரும்
பெண்ணே பேரின்பம் என இன்புற்று ஏமாந்த யயாதி,
சலோமோன் மன்னர்களும் வாழ்ந்த உலகில்- மண்ணும்
பொன்னாய் பெருவிளைச்சலைத்தர அகமகிழ்ந்த செல்வன்





இருக்கும் களஞ்சியங்களோ சேமிக்கப் போதாது, இருப்பதை
இடித்து பன்மடங்கு பெரிதாய்க் கட்டுவேன், உயர் விலைக்கு
விற்றுப் பெரும் பொருள் ஈட்டுவேன்- மனமே மகிழ்ந்திரு
நாளும் திருவிழா வாழ்வை உண்டு, குடித்துக் கொண்டாடு

இறைவனோ நகைத்தார்-மூடனே, இன்றிரவு
உன் உயிர் பறிக்கப்படும், நீ தேடியவை உன்னைக்
காக்காது, உன் ஆயுளின் ஒரு நொடியையேனும்
உன்னால் கூட்ட முடியாது

“காதற்ற ஊசியும் வாராதே காணும் கடைவழிக்கே”
நிலையற்றதை தேடி இன்புற்ற மூடன்
காலன் வரும் நேரமறியாது-பொருளின்பம் தேடி
பொன்னான வாழ்வை மண்ணாக்கிய மடையன்

இருப்பதை இல்லாதவரோடு பகிர்ந்து
இரக்கத்தை வாழ்வாக்காதவன் ஏழையே
மனிதன் உலகெல்லாம் தனதாக்கிக் கொண்டாலும்
தன்னை இழந்து விடுவானாகில் என்ன பயன்?

காலச்சக்கரம் யாருக்கும் காத்திருப்பதில்லை
விழிப்புணர்வு பெற்றவர் நீந்திக் கடந்தார்
குருடரோ மூழ்கிக் கருப்பை குழிக்குள்
மீண்டும், மீண்டும் விழுந்தார்.

நிலையற்ற மண்ணக வாழ்வோ நீர்க்குமிழி
நிலையான விண்ணக வாழ்வோ ஆனந்தப் பெருவெளி
நிலையற்ற செல்வம் கொண்டு நிலையானதை தேடுங்கள்
நிலை வாழ்வு உங்களதே

இருப்பதை இல்லாதவரோடு பகிர்ந்து
இற்றுப்போகாத பணப்பையையும்,
குறையாத செல்வத்தையும் -
விண்ணுலகில் தேடிக் கொள்ளுங்கள்

அங்கே திருடனும் அனுகான்,பூச்சியும் அரிக்காது
உங்கள் செல்வம் எங்குள்ளதோ-அங்கே
உங்கள் உள்ளமும் இருக்கும்

உயிர் பிரிய, ஊனுடல் அழிய -தேடிய
உடைமைகள் வேறொருவர் சொந்தம்
உடல் அல்ல நீங்கள் அழியாத ஆன்மா
அழியாத செல்வம் உங்களுக்குள்ளே

தர்மத்தில் நிலைத்து தானத்தை தவமாக்கி
விண்ணகத்தை வரமாக்குங்கள்
இறைமக்கள் நீங்களே

குருடருக்கு குருடர் வழி காட்ட-கருப்பைக்
குழியில் விழும் வாழ்வு துன்பசாகரம்
கர்மத்தை யோமாக்கி, காலத்தை பொன்னாய் கருதி
விழிப்புணர்வோடு வாழ்ந்தால் வாழ்வே யோகம்

ஆசையே தளை, ஆணவமே நரகு,
விழிப்புணர்வே பாதை-உலகின் ஒளி நீ
உனக்கு நீயே ஒளியாகிப்போ

இல்லாதவரோடு பகிர்ந்து இன்புற்று வாழ அழைப்பு
துன்புறும் ஏழையரை அன்பு செய்து இன்புற்றால்
இறையரசு உனது-வாழ்வோ யாகம்
அன்போ தெய்வீகம்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-10-09-2023

# இறை வெகுமதி-விழிப்புணர்வு



பூத்துக் காய்த்துக் கனிந்து
பூப்பெய்திய மங்கையாய்த் திராட்சைத் தோப்பு
அழகு குலுங்கிட-ஆனந்தம் பொங்கிட
நிலக்கிழார் மனமோ வண்ணப் பூந்தோப்பு

அறுவடைக்கு ஆட்களைத் தேடி அதிகாலை
அம்பலத்தடி சென்று-ஒரு தெனாரியம் நாட் கூலி
பேசிப் பணியாட்களை வேலைக்கமர்த்திய
நிலக்கிழாரோ தயாநிதி

பரந்து விரிந்த தோட்டத்தின் பணி முடிக்க
பணியாட்கள் போதாமையால்
ஒன்பது, பன்னிரெண்டு, மூன்று மணிக்கும்
பணியாட்களை வேலைக்கு அமர்த்திய பெருநிதி

மாலை ஐந்து மணிக்கும் அம்பலத்தடியில்
வேலையற்று வாடி நின்ற கூலிகளைக் கண்டு
இரக்கமுற்றுப் பணிக்கழைத்த அருள்நிதி

மாலையானதும், வேலைகள் முற்றாய் முடிவுற்றதும்
எல்லோருக்கும் ஒரு தெனாரியம் கூலி கொடும்
மகிழ்ந்து மேற்பார்வையாளரிடம்-உரைத்த கருணாநிதி

மழைக்காலம் தொடங்கு முன், அறுவடைய
முடியவேண்டும்-கவலை வருத்திய மனதிலே
ஆனந்த நிம்மதி, மனதிலே இறை துதி

பிந்தி வந்த ஏழைகள்-நெஞ்சிலோ பெருமகிழ்ச்சி
கும்பி காயமால் குடும்பத்தைக் காத்த பெருமானை
நன்றிப் பெருக்கோடு வள்ளல் வாழ்க
வாழ்த்திய மனதிலே நன்றியின் நெகிழ்ச்சி

சுடு வெயில் தாங்கி, பெருவியர்வை சிந்தி
பல மணி நேரம் கடுமையாய் உழைத்த எமக்கு
பன் மடங்கு ஊதியம் கிடைக்கும்-மனமே அகமகிழு
முந்தி வந்தவர் மனதில் பேராசையின் சகதி

கூலி ஒரு தெனாரியமாக-கூலியாட்கள் குறை கூறினார்
என்ன நீதி இது? காலை முதல் மாலை வரை கடுமையாய் உழைத்த
எமக்கும், மாலையில் சில மணித்துளிகள் வேலை செய்தவருக்கும்
ஒரு நாட் கூலி -எம்மோடு அவரை ஒன்றாக்கியது அநீதி

மாறாப் புன்னகையோடு அருள்நிதி உரைத்தார்
நண்பர்களே பேசியபடி ஊதியம் தந்தேன், மகிழ்வோடு
பெற்றுச் செல்லுங்கள், ***வேலைக்கேற்ற கூலி உங்களுக்கு***
***தேவைக்கேற்ற கூலி அவர்களுக்கு***



ஏழையருக்கு நான் கொடுப்பது, ஏன் உங்களுக்குப்
பிடிக்கவில்லை? என் செல்வத்தை பகிர்வது
என் விருப்பம், நான் நல்லவனாயிருப்பது குற்றமா?
வீணாய் ஏனோ இந்தக் கோபம்? தர்க்கம்?

***ஆதிக்கிறிஸ்தவர் நாம் என்போருக்கும்***
***ஆபிரகாம் நம் தந்தை என்போருக்கும்***
***அந்தி நேரத்தில் மனம் மாறிய நல்ல கள்வனுக்கும்***
***இறை வெகுமதி ஒன்றே***

காலக்கணக்கு கடவுளிடமில்லை, காலம் கடந்த
நித்தியமே கடவுள், நல்லோர், தீயோர் கடந்து-
எல்லோருக்கும் உதிக்கும் சூரியின், பொழியும் மழை
இருமை கடந்த இருப்பில் என்றும் பாகுபாடில்லை

***சொர்க்கம், நரகம் மனதின் தொல்லை***
***இருப்பது இரண்டும் கடந்த மோட்சமே***
***ஊதாரி மகன் வீடு வந்து சேரும் வரை***
***காத்திருக்கும் அன்புத் தந்தையே கடவுளே***



இருமை கடந்த தெய்வீகம், இருப்பவர் நாமே
என்ற சௌந்தர்யம், சத்தியும், சடமுமான சத்தியம்
அந்தர்யாமி-எல்லோருள்ளும் உள்ளது.
கண்டு கொள்ளத்தான் காலம்
பாவிகளுக்கும் பவித்திரமான தரிசனம்.

இறையரசை தம்முள் கண்ட ஞானிகளுமுண்டு
இறை கருணையால் வரமாய் பெற்ற கள்வனுமுண்டு
கருணை மழை பொழிகின்றது-விழித்திருந்தவர்
பெறுகிறார்-தூங்குபவர் ஏமாறுகிறார்

வாளி நமது-வற்றாத கிணறாய் ஜீவ தண்ணீர்
ஓட்டை வாளி ஜீவ தண்ணீரைக் கொள்ளாது
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-18-10-2023*

# இரண்டாம் பிறப்பு–நிக்கதேமு

ஆணும், பெண்ணுமான தன் அழகின் சாயலில்-அனகன்
மானுடத்தைப் படைத்திட, ஆணுக்குள் பெண்ணும்-
பெண்ணுக்குள் ஆணும், மறைந்த கதையை மறந்த மானுடம்,
அர்தநாரீஸ்வரனாய், உமையொருபாகனாய்
மஹாதேவனின் ஈஸ்வர சொரூபம்



அறிவுக்கனியால் ஆணவம் தோன்றிட
ஆண்டவனாய் விண்ணிற்கும் உயராமல்
விலங்காய் மண்ணிற்கும் தாழாமல்
இரண்டிற்கும் நடுவே அல்லாடும் மனித இனம்

களங்கமில்லாத் தன்மை அறிவுக்கனியால் களங்கமுற
குழந்தை உள்ளம் உடலால் பிளவுபட
ஆணவ ஆதாம் மனதில்-
ஆண், பெண் எனும் “இருமைத் தோற்றங்கள்”

ஆண், பெண் இருமையே கிளர்ச்சி, காமமே கிளர்ச்சிக்கு
ஆதாரம் , காமத்தை விட போதை தரும் மது ஏதுமில்லை
காமத்தால் பிறப்பது பிறப்பு, இறப்புச் சுழலில் சிக்கிட
பிறப்பறுக்காத வாழ்கை பெருந்துக்கம்

மனிதன் ஒரு காமப்பிறப்பு-ஆணவம் கழித்து
மீண்டும் பிறந்திட இயேசுவின் அழைப்பு,
***சுயத்தால் பிறப்பதோ இரண்டாம் பிறப்பு***
***ஆணவம் கழிந்த தூய மனமே மெய்யான பிறப்பு***

இருவர் மூலம் பிறப்பவர் இருவராகின்றார்.
தன் சுயத்தால் பிறப்பவர்-தனக்கே
தந்தையாகி இயேசுவாகின்றார்-இதுவே
இயேசு கன்னியிடம் பிறந்த இரகசியம்

ஆண், பெண்ணான அக வட்டம் பூர்த்தியாகாதவரை
உடலால் பிளவுபட்டு, குழந்தை உள்ளம்
மறைந்து ஆணவம் தோன்றிட
ஆண், பெண்ணாய் மனதின் உருவகங்கள்

காமம் கடந்தால் கடவுள், இருமை மறைந்திட பேரின்பம்
தன்னுள் மறு பாதியைக் கண்ட மனம், தன் சுயத்தில் ஒன்றாக,
ஆதாம் மனம் மடிந்து -இயேசு மனம் மலர்ந்திட, இரண்டாம்
பிறப்பான நிகழ்ச்சி கொண்டாடி மகிழத் திருநாளான நிகழ்ச்சி

ஞானி குழந்தையாகும் அற்புதம்
இயேசு நிக்கோதேமிவிற்கு மொழிந்த வேதம்
மதவாதம் புரியாத அதிசய ராகம்
மெய்ஞானிகள் பாடும் அபூர்வராகம்



இரண்டை ஒன்றாக்கி-அகம் புறமாக, மேல் கீழாக-
ஆண் பெண் ஒன்றாக, ஆணுமின்றிப், பெண்ணுமின்றிப்
பாலினம் கடநது சுக- துக்கம் -இருள், ஒளி எனும்
இருமை கடந்த சச்சிதானந்த நிலை, ***ஆண்டவனின் அண்ணக நிலை*** , இயேசு ம***னதின் நிலை***

தொடக்கமும், முடிவும் ஒன்றாக கள்ளம் கபடில்லாக
குழந்தை நிலையாக, குழந்தையாய் பிறந்து-மனமழித்து
குழந்தை உள்ளம் தோன்றிட ஆனந்தம்,
தூய மனமான மலர்ச்சி அற்புதம்

இருப்பு ஒரே தளமாக-அலையும், கடலுமற்று,
மலையும் பள்ளத்தாக்குமற்ற உன்னத நிலை
மனமழிந்த நிலையே ஆனந்தம்.
சும்மா இருக்கும் நிலையே தியானம்

நல்லவராய், அப்பாவியாய், அறிந்தவராய்
புரிந்தவராய் இயேசுவின் ஆதரவாளராய்
பரிசேயரான நிக்கேதேமு.

மனுமகனுடனான சந்திப்பை-திருச்சங்கம்
அறிந்தால்-அங்கத்துவம் பறிபோகும், வாழ்வோ
இருளாகும, கசப்பான எதிர்ப்பே உறவாகும்

அஞ்சிய மனிதர் யாருமறியாமல் இரவில் வந்தார்
ஆற்றும் அருங்குறிகள் -ஐயனே, இறைவன் உம்மோடு
என்பதற்குச் சான்று, வாழும் இறைவாக்கினர் நீர்
வாஞ்சையோடு வாழ்த்தினார் நிக்கதேமு



தம் சுயவுணர்வுக்குள் நுழைந்து
விழிப்புணர்வாய் மீண்டும் பிறந்தவரே
இறையரசைக் காண்பார்
தன்னை அறியும் மெய்யறிவே ஆனந்தம்

ஆண் பெண் உறவினால் பிறப்பது உடலே
தன்னைத் தாமே விழிப்புணர்வால் பிறப்பித்தலே
மெய்யான பிறப்பு-இரண்டாம் பிறப்பு, ஆணவம்
அழித்து தூய மனமாய் மீண்டும் பிறவாவிடில்
இறையரசுக்குள் நுழைய முடியாது

ஆணித்தரமான ஐயன் கூற்று வியப்பளிக்க
அருந்தவமின்றி புரிந்திடாத கூற்றை, அசடனாய்ப்
புரிந்தவர் வினவினார், முதுமையில்-தாயின்
வயிற்றில் நுழைந்து மீண்டும் பிறப்பது எங்ஙனம்?

மெய்யறிவே பெருநிதி-ஓதுவதை நாளும் ஓதி
உண்மையை அனுபூதியில் அறியாத பரிசேய மனமோ
வரண்ட சட்டத்தால் வற்றிக் காய்ந்த நதி
குறை குடமாய்த் தழும்பி-நிறை குடத்தை வியந்து
வினவிய பரிசேயரோ அப்பாவி

ஆணவத்தின் குறியீடாய் அறிவுக்கனியுண்டு
கடவுளைப்போல் ஆகிட முயன்ற ஆதாம்
சுயவுணர்வற்ற குழந்தை, வீட்டை இழந்த நிந்தை

பாதி சுயவுணர்வில் மனுமகனாய் ( consciousness)
பாதி விழிப்புணர்வில் இறைமகனாய் இயேசுவின் இருப்பு (awareness)
பூரண விழிப்புணர்வில் கிறிஸ்துவாய் (Christo genesis) மலர்ந்திட
சிலுவை மரணமே இறை அருளிய வரம்
ஆதாமையும் கிறிஸ்துவையும் இணைக்கும்
அற்புத பாலமான இயேசுவின் வாழ்வோ அருந்தவம்



இயேசு உலகில் இறந்து
கிறிஸ்துவாய் இறைவனில் பிறந்தார்
ஆதாம் இறைவனில் இறந்து
ஆணவ மனிதனாய் உலகில் பிறந்தார்

ஆதாமின் -முதலாம் கபடின்மை இறைவனின் வெகுமதி
" நான்" எனும் ஆணவமே பாவம்
அறிவுக்கனியுண்டு வெகுமதி இழந்தவன்
தன் அகநிர்வாணம் அறிந்து வெட்கினான்

அத்தியிலை உடுத்தி ஒளிந்து தன்னை மறைத்தான்
ஆணவமனதின் இறப்பும், தூய மனதின் பிறப்புமாய்
இரண்டாம் கபடின்மை -மனிதனின் சுயமுயற்சி
சுயவுணர்வுடன் நாம் அடைவதே நம் சொந்த இயல்பு

அளவிடமுடியாத விழிப்புணர்வில், ஆழ்ந்த தியானத்தில்
நிகழ்வதே நம் இரண்டாம் பிறப்பு-***நமது இருப்பில்***
***இறைவனை உருவாக்குவதே இரண்டாம் பிறப்பு***

நம்மை நாம் பிறப்பிக்க பரி பூரண சரணாகதியே வழி
பரிபூரண சரணாகதியில்-சிலுவையில் இயேசு
கிறிஸ்துவாக மலர்ந்தார்.

“ *வழியும் உண்மையும் வாழ்வும் நானே*”
மூன்றையும் உள்ளடக்கிய ***விழிப்புணர்வே***
இறையரசிற்கான இயேசுவின் ***அற்புதத் திறவுகோல்***

ஆணவ “நான்” கழித்து
ஆண்டவனின் உன்னத “நான்”மலர்ந்திட
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்

ஆதாமில் ஒரு விதையாய் இறைவன்
இறைவனில் முழு மலர்ச்சியாய் கிறிஸ்து
இதுவே இரண்டாம் பிறப்பு



***மனித வாழ்வில்-ஆணவ மனதாய்***
***அறிவுக்கனி சுவைத்த ஆதாமாய்-“நான்”*** (Ego)
என்னில் “நான்” எனும் ஆணவநிலை (I) – Ego
சுயவுணர்வுநிலை (Consciousness)
விழிப்புணர்வு நிலை (*Awareness*)-
**என மூன்று நிலைகள்.**

மனந்திரும்புங்கள் இயேசுவின் அழைப்பானது
நான் எனும் ஆணவம் கடந்து-உன்னை நீ அறிய
உன்னுள் உன் உள்முக ஆன்மீகப் பயணமே
சுயவுணர்வு நிலையை அறியும் ***வழி***

மதம் கடந்த பேருணர்வே ***சத்தியம்***
சத்தியம் ஓர் அக தரிசனம்-“நான்” என்பதே சத்தியம்

நீயே இறுதி இலக்கு-சேருமிடமும் நீயே
முதலும், நடுவும், முடிவும்
ஆதாமும், இயேசும், கிறிஸ்துவும் நீயே
ஒன்றுக்குள் மூன்றான அழகு

நான் எனது சுயவுணர்வு நிலைக்கு நுழையாதவரை
எனது நானில் (I am-ness) நுழையாத வரை
இறைவனை அடையமுடியாது

தனது சுயவுணர்வு நிலைக்குள் செல்லமுடியுமானால்
சுயவுணர்வு நிலையை தரிசிக்க முடியுமானால்
அதுவே பாதை-பரிபூரண சரணாகதியே வழி
நான் யார் என்ற கேள்வியே வழியாக மாறும்

அத்வைதம் நீயே கடவுள் என்கின்றது
இறையரசு நம்முள்ளே என்கின்றார் இயேசு
யார் ஒருவன் தன்னைத்தானே, தன்னுள்ளே
நான் என குரல் தருகின்றானோ,அதுவே வழி




சுய உணர்வு நிலையில் உண்மை உள்ளது.
சுய உணர்வு எய்யும்போது சத்தியமாகின்றோம்
"தத் த்வம் அஸி"- நீயே அது

அறிவுக்கனி உண்ட ஆணவ ஆதாம் நான், ஏதேன் தோட்டம்
நின்று வெளியேறிட, என் சித்தமன்று நின் சித்தம் என்று
பரிபூண சரணாகதியில் இயேசு, ஏதேன் தோட்டத்தை அடைய
வாழ்க்கை வட்டம் பூர்த்தியானது

பரிபூரண விழிப்புணர்வு நிலையே
கள்ளங்கபடற்ற ஞானியின் நிலையே
***அத்வைத நிலையே இரண்டாம் பிறப்பு***
***அஹம் பிரம்ம அஸ்மி –சத்திய தரிசனம்***

விரும்பிய திசையில் வீசும் காற்று-ஓசை கேட்டாலும்-
வந்த இடமும், போகுமிடமும் யாருமறியாத அதன் போக்கு
விழிப்புணர்வால் பிறந்தவர் வந்தவிடமும், போகுமிடமும்
ரிஷி மூலம், நதி மூலம் கடந்த அறியாப் பெருவெளி
அறிந்தவர் அவரோ அணையாத ஞான ஒளி

ஆபிரகாமின் சந்ததிக்கே இறையரசு, யூத முரசு
எளிய மனத்தவருக்கே இறையரசு
தூய மனத்தவருக்கே சத்திய தரிதனம்
ஆணவம் கழித்த பிறப்பே இரண்டாம் பிறப்பு
மதங்கடந்த மாமனிதன் இயேசுவின் பரிசு

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-18-10-2023

# அலையும் கடலில் இயேசு

---

காரிருள் சூழ்ந்த இரவின் நான்காம் சாமம், வெள்ளியலைகள்
துள்ளி விளையாட, வீசு தென்றல் கடலில் தவழ்ந்து நீராட
வான்மதி உலா வரும் பாதையெங்கும் மின்னும் நட்சத்திரத்
தோரணங்கள், அசைந்தாடும் கொடிகளாய் வெண்மேகங்கள்



பாய் விரித்த படகு நீர் கிழித்து ஓட
தாய் பிரிந்த சேயென குருவின்றி சீடர் முகம் வாட
கதைபேசியவர், சிலர் கண்ணுறங்கியவர் சிலர்

வானில் மேகங்கள் அசைந்தாட, நிலவோ நடைபோட
அலைகள் படகில் மோதி ஆனந்த மேளம் கொட்ட
நச்சரவமாய் படமெடுத்த கார்மேகம்
உச்சத்தில் பெருமழை பொழிந்த ஆகாயம்



இடி மின்னலோடு பெருமழை இசைந்தாட
படமெடுத்த நாகம் என உயர்ந்து கடலாட
இரையும் பேரொலியோடு புயலாட
இசைந்தாட முடியாது அல்லாடிய படகு

அலையாடும் கடலில் படகு அல்லாட
கவிழ்வதா உடைவதா எனத் திண்டாட
பயமும், பீதியும் மனதில் எழுந்தாட-அச்சத்தால்
இறைமகனை கூவியழைத்த சீடர்கள்

விழிப்புணர்வான குரு தனிமையில்
தந்தையோடு உறவாடிக் ***கரையில்*** இருந்தார்
சீடர்களோ அக்கரை சேரும் ***பயணத்தில்***
கடலில் தத்தளித்து நின்றார்

அல்லாடும் படகில் விசுவாசம் தள்ளாட, அபயக்குரல்
ஐயனை அழைத்திட, சீடர் துயர் கண்டு கரைந்தவர்
பொங்கும் கடலும், பொழியும் மழையும், சீறிச் சினந்து
வீசும் புயலும் ஒதுங்கிட கடல் மீது நடந்தார்

மண்ணும் திருப்பாதம் தொட்டு மகிழ்ந்திருக்க
குன்றும் திருவடி பட்டுப் புல்லரிக்க
எழுந்தாடும் கடலும், இரைந்தாடும் புயலும் பணிந்திட
கடல் மீது தென்றலாய் அம்மான் மகன் நடந்தார்

அலை மீது அடி வைத்து அற்புதன் நடந்திட
அலையும் தொழுது மகிழ்ந்திட
மழையும் மகிழ்ந்தே பூந்தூறலாய் மாறிட
அஞ்சிய சீடர் ஐயோ! பூதம் என்றலறினார்



**நான் தான் அஞ்சவேண்டாம்,** குரு மொழி கேட்டு
அச்சம் மறைந்திட, அருள் மொழியால் ஆனந்தம் பிறந்திட,
ஆண்டவரே நீர்தான் என்றால் கடல் மீது நடந்து, உம்மருகில்
வரக் கட்டளையிடும் தவமாய் வேண்டிய சீடன் சீமோனுக்கு
வரமாய் "***வா*" என்றார் –குரு**

அலையும் கடலும், இரையும் காற்றும்-காரிருளும்,
இடி மின்னலோடு பெருமழையும் பொழிய,
குருவைக் கண்டு துணிந்து நடந்தார்-பார்வை விலக
பயங்கரம் புரிய, துணிவு நலியத் தடுமாறினார்

இட்ட அடி சறுக்க, எடுத்த அடி நடுங்க , விசுவாசம்
நிலை குலைய, குருவைக் காணாது, அஞ்சி மூழ்கியவர்
அலறினார், ***ஐயனே! என்னைக் காப்பாற்றும்***

அணைக்கும் கரங்களால் பற்றித் தூக்கியவர்
அற்ப விசுவாசி என அன்பாய்க் கடிந்தார்



காற்றும், கடலும் அமைதி கொள்ள, மழையும்
மறைந்து ஓய்ந்திட, நிலவும் மலர்ந்து புன்னகை பூத்திட
புண்ணியன் இருக்கப் பயமேன் புகழ்ந்து தொழுத சீடர்கள்

ஆன்மாவின் இருண்ட பொழுது நான்காம் சாமம்
உள்ளக் கடல் கொந்தளித்துக் குழம்பி புயலாய் உருவெடுக்க
விசுவாசத்தோடு குருவை அழைக்கும் சீடனுக்கு
குருவின் பரிபூரண அருள் கிட்டும் நேரமது

காரிருளில் கடும் புயல் மழையில்-குருவைக் காணாமல்
கததறி மூழ்கிட-குருவின் அருள் பெறும் அரிய வாய்ப்பு
நழுவிப்போனது. உள்ளத்தில் நடந்தேறிய காட்சி
உவமையாய் உருக்கொண்ட நிகழ்ச்சி

அறியாமையின் உச்சத்தில், ஆன்மாவின் இருளுக்குள்
தடுமாறும் விசுவாசியான அன்புச் சீடனுக்கே குருவின் ஆசி
தவமின்றிக் கிடைத்த வரத்தை-அஞ்சித் தவறவிட்ட
சீடனோ அற்பவிசுவாசி

இட்ட அடி நிலைக்க, எடுத்த அடி சறுக்க, அறியாமை இருள்
புயலும், கடலுமாய் அச்சுறுத்த, அஞ்சி மூழ்கிய சீமோனோ
அற்ப விசுவாசி, கடுகளவு விசுவாசம் கடல் மேல் நடக்கப்
போதும், காத்துக் காட்டிய குருவோ ஞான உபதேசி



சந்தேகம் மூழ்கடிக்கும்-விசுவாசம் காக்கும்
மனம் இருக்கும் வரை காலம் இருக்கும்
அவவிசுவாசம் காலத்தை சிருஷ்டிக்க-கடவுள்
மறைந்துபோனார், கரையும் மறைந்து போனது

மணாளனை எதிர்கொண்டு-ஆகுதியாய்
தன்னை அர்ப்பணிக்கும் மணமகள் வாழ்வே
காதல் வேள்வி

உலகில் வாழுங்கள், உலகம் உங்களுக்குள் வாழாது
உங்களைக் காத்துக்கொள்ளுங்கள், கடல் மீது நடந்தும்
ஈரம் தொடாத பாதங்கள், நீரில் மலர்ந்தும் மூழ்காத தாமரை

வாழும் உலகிற்குள் மூழ்காமல் "வாழும் கலையை"-
சீடரும் அறிய கடல் மீது நடந்து கற்பித்த குரு
வாழும் கலையின் கற்பகதரு



***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-18-10-2023*

# இலாசரே, வெளியே வா

நலமிழந்து வாடுகின்றார்-நண்பர் இலாசர், நற்குருவே
விரைந்து வரவேண்டும், நலம் அருளி உயிரைக் காக்கவேண்டும்
பூ மனங்களுக்குள் சோகப் பூநாகம் குடியிருக்க-பதறி
மனுமகனை மன்றாடி அழைத்த சகோதரிகள்

பூ விழிகளிலோ கண்ணீர் வெள்ளம்-
பூபாளம் பாடிடும் மனங்களிலோ முகாரியின் ஓலம்
இதயத்திலோ ஓயாத கவலையின் பேரலைகள்
உதயம் காணாத இருளாய் கழியும் நாழிகைகள்

சாவோடு போராடும் சகோதரன் துயர் கண்டு, தீ சுட்ட மலராய்
சகோதரிகள் வாடித்தவிக்க, ஆடை தொட்டுக் குணமானவரும்
பாடையில் போனவர் உயிர் பெற்றது புது நம்பிக்கை அளிக்க
இறைமகனை அழைக்கும் பூ மனங்கள்

சோதியானவரிடம் சேதியனுப்பி-வைகறை
காணாத மொட்டுக்களாய்-வழிமேல் விழி வைத்து
இறை மகன் வரவுக்காய்-தவமாய்
காத்திருந்த மார்த்தா, மரியாள் சகோதரிகள்

குவளைவிழி பூத்த கண்ணீர்ப் பூக்கள் உறைவதா? உதிர்வதா?
என மயங்கி நிற்க, கவலை வாட்டும் மனதில்-நம்பிக்கை
துளிர்ப்பதா?, மடிவதா? எனத் தயங்கி நிற்க, விரித்த
கரங்களோடு புரியும் வேண்டுதல் இறைவனைக் கூவியழைத்தது

ஆனந்த உறவாய் மலர்ந்தவன்-அக்கா, தங்கை எனச் சொந்தம்
சொல்லி மகிழ்ந்தவன் அனலாய் கொதிக்கும் உடலோடு
வாழ்வா? சாவா? எனப் போராடித் தவிக்க, சாவும் வந்தது
சகோதரன் பிரிவும் கொடுந்துயரென சடுதியாய் நிகழ்ந்தது.

இறப்புக்கன்றி-இறை மகிமைக்கே இலாசரின் பிணி
பிணி நீக்கி, மனுமகனும் மகிமையுறுவார்
சேதியறிந்த சோதி-செப்பினார் தம் சீடர்களிடம்.

இரு நாள் கழிந்தபின் இறைமகன் இயம்பினார்
வாருங்கள் போவோம் பெத்தேனியாவிற்கு
தூங்கும் இலாசரை துயில் எழுப்பி
துயருறும் சகோதரிகள் துயர் தணிப்போம்

தூங்கினால் நலமடைவான் இலாசர்
தூயவர் சீடர் மொழிந்திட-இலாசர் இறந்துவிட்டான்
இறக்கும்போது நான் இல்லாதது நலமே
உங்கள் விசுவாசம் வளம்பெற -இதுவும் வரமே

பூவிழிகள் நீர் சிந்திச் சிவக்க-பொன் மனங்களை
கவலைக் கறையான் அரிக்க-பூங்கமிழ் வாவியை
மூடிய சோகத் தாமரைகள்-புள்ளூறையும்
சோலையிலோ ஒலிக்கும் அவலப் பாக்கள்

உயிர் காக்க யாத்த செப தபங்கள் ஊனமாகிட
உயிர் மூச்சும் அடங்கிட பொய்யாகிப்போன மெய்
வீடு துறந்து, கல்லறைக்குள் அடங்கிய மெய்
சோகத்தில் மூழ்கிய சொந்தங்களுக்கு பந்தமோ பொய்

மனுமகன் வந்தால் சுகமான இலாசர் வாழ்வு மலரும்
வழிமேல் விழி வைத்து நம்பிக்கையோடு காத்திருந்த -உறவும்
ஊராரும் ஏமாறக் கல்லறைக்குள் அடங்கிய சொந்தம்
தீராத சோகத்தை சுமந்து நடைப் பிணமான பந்தம்

காடுபோன தன் ஆட்டை மீட்டிட
கடவுளின் மகிமையை உணர்த்திட-நாட்கள்
நான்கு கழிய நல்லாயன் வந்தார்

அண்ணலைக் கண்ட மார்த்தா மனதிலோ ஆறாத்துயரம்
ஐயனே, இங்கு நீர் இருந்திருந்தால்-என் தம்பி
இறப்பின் கசப்பை சுவைத்திருக்கமாட்டான்
தாள் பணிந்து அழுதவள் மொழியிலே தீராத அவலம்

இப்போதும் நீர் கேட்பதை இறைவன் அருள்வார்-
இல்லையென்பது இறையிடம் இல்லை
நீரோ அவர் ஒரே அன்புப் பிள்ளை-

உம்மைத் தவிர வேறு நம்பிக்கை எம்மிடம் இல்லை-
நீர் ஒருவரே எம் அன்புத் துணை –செவ்விழிகள்
நீர் சிந்த செவ்வாய் மொழி புலம்பிட-ஆறுதல்
சொல்ல வந்த ஊராரும் விம்மிட, அழுதாள் மார்த்தா

மார்த்தா கலங்காதே , மாண்ட உம் சகோதரன்
உயிர்த்தெழுவான், கருகிடும் பூங்கொடிக்கு நம்பிக்கை
நீர ஊற்றித் தேற்றிய மனுமகன்
வாழ்வு தரும் வார்த்தையான இறைமகன்

இறந்தவர் இறுதி நாளில் உயிர்த்தெழுதல்
இறை ஈந்த வரம்
இறைமகனே அடியாளும் அறிவாள் இதனை

***உயிர்ப்பும் வாழ்வும் நானே-என்னில்***
நம்பிக்கை கொள்வோர் இறப்பிலும் வாழ்வார்
வாழும்போது என்னிடம் நம்பிக்கை கொள்வோர்
என்றுமே சாவைச் சுவைப்பதில்லை

மார்த்தா இதை நம்புகின்றாயா?

ஆண்டவரே நம்புகின்றேன் -இறைமகனும் நீரே
எதிர்பார்த்திருந்த மெசியாவும் நீரே-



மொழிந்தவள் விரைந்தோடி-மரியாளிடம்
மாதவன் வரவைச் சொல்ல-ஓடி வந்த மங்கையோ
உருக்குலைந்த சித்திரம்- சோகத்திலும்,
இறை நம்பிக்கையில் நிலைத்த மனமோ பவித்திரம்

உள்ளம் குமுற, மொழி குழற, பூங்குழல் குலைய
வெள்ளமென சேல் விழிகள் நீர் சிந்திச் சிவக்க
மனுமகனைத் தொழுத மங்கை-தாள் பற்றி
பூங்கரங்கள் நடுங்கத் தவமிருந்த நங்கை

உருகும் விழிகளோ துயரத்தைப் பெருக்க
நரகிலும் கொடிதான அன்பின் பிரிவை
நல்லாயன் நெஞ்சும் அறிய-உறவு சொல்லி
உள்ளம் குமுறி இயேசுவும் அழுதார்

ஊராரும் உறவுகளும் ஒன்றாய் அழ
உள்ளம் குமுறி கலங்கிய இறைமகனும்
எங்கே வைத்தீர் இலாசரை?

ஆண்டவரே வந்து பாரும் என்றவர்கள்
எத்தனை பிரியம் இலாசர்மேல் இயேசுவுக்கு
அந்தகர்க்குப் பார்வையளித்தவர்-அன்பன்
இலாசர் இறப்பை தடுத்திருக்கலாம் என்றார்

வாடி நிற்கும் சகோதரிகள் விசுவாசம் வளர்ந்திட
கல்லறையை வந்தடைந்தவரும்-மூடி வைத்த கல்லைப் புரட்டி
கல்லறைக்குள் நாறிப்போனவனை எழுப்பிட
கல்லறையைத் திறவுங்கள் என்றார்

நாறுமே ஆண்டவரே நண்பன் இலாசர் இறந்து
நான்கு நாட்களாயிற்றே மார்த்தா மொழிந்திட
நம்பினால் மார்த்தா நீ -நலம் பெறுவாய்
இறை மகிமையைக் காண்பாய் என்றார் இயேசு

இறந்தவனை எழுப்பிட வல்லவருக்கு,
கல்லை புரட்டிட ஒரு சொல்லே போதும்
இருந்தும் மானுடர் விசுவாசம் கொண்டு-இறைபணியில்
பங்குகொள்ள கல்லைப் புரட்டுங்கள் என்றார்

வளரும் பயிராய் வந்த இன்பம் கருகிய பயிராய் மாறிட
மங்கையர் துயர் மனுமகன் கனிநெஞ்சை முள்ளாய் வருத்திட
தொழுது பணிந்தே தூயவரை -அழுத விழிகளோடு
அண்ணலும் வேண்டினார் அன்பன் உயிர் பெற.

விண்ணோக்கி விழிகளை உயர்த்தியவர்
நன்றி தந்தையே-எப்போதும்
என் வேண்டுதலை நீர் கேட்பதற்கு
இப்போதும் கேட்பதற்கு

என் வேண்டுதல் இவர் பொருட்டே
என்னை நீர் அனுப்பியுள்ளீர்-என்பதை
இவர்கள் அறியவே -தந்தையைத் துதித்தவர்
"***இலாசரே வெளியே வா***" அழைத்தார்.

காற்றில் கலந்து கல்லறைக்குள் கானமாய் ஒலித்த
வார்த்தையோ பூபாளம்
மரணத் துயில் கொண்ட இலாசரை எழுப்பிட
மனுமகன் வார்த்தையோ உயிர் தரும் தேவாமிர்தம்

உற்று நோக்கிய விழிகளில் வியப்பு-
உடலிலோ ரோமாஞ்சனத்தின் சிலிர்ப்பு
பயமும், பரவசமும் பார்த்தவர் நெஞ்சை நிறைக்க
கட்டுக்களோடு எழுந்து நடந்த வந்த மனிதன்

உயிர் தரும் வார்த்தைகள், உயிரிழந்தவனை எழுப்பிட
கருகான மலர் மீண்டும் மலர்ந்திட , இலாசர் புதுவாழ்விற்கு
எழுந்து வரப், பார்த்தவர் விழிகளில், வியப்பு, அச்சம்,
ஆனந்தம், பரமனைத் தொழுத பக்திப் பரவசம்,

உயிர், மெய் என இரண்டான உறவை, உயிரும் மெய்யும்
ஒன்றாகி உயிர் பெற்றெழ, உயிர்ப்பும் உயிரும் "நானே" -என்னில்
விசுவாசம் கொள்பவன் இறப்பிலும் வாழ்வார், உயிர் மெய்
கடந்த உண்மை அழைத்தது "***இலாசரே வெளியே வா***"



ஆதியின் ஜோதி -உயிரளிக்கும் ஓங்கார நாதம்
சடமும் சக்தியும் கடந்து எரியும் முட்செடியில்
"இருப்பவர் நாமே" என மோயீசனுக்கு இயம்பிய
இருப்பின் கீதம், இறந்தவனை எழுப்பிய உதய கீதம்

எங்கும் பேரமைதி நிலவிட
எல்லோர் கண்களும் கல்லறையை நோக்கிட
பிணமும் பெயர் கேட்டு எழுந்த அதிசயம்
புது விடியல் காண பூத்த மலரான உற்சவம்

ஆசை கட்டவிழ்த்து புதுவாழ்வு வாழ
***அவன் கட்டுக்களை அவிழ்த்து போகவிடுங்கள்***
பாவக் கட்டவிழ்த்து விடுதலையளிக்கும்
இறைமகன் மொழிந்தார்

***ஆசைக் கட்டுக்களால் கட்டுண்டு***
***அறியாமைக் கல்லறைக்குள் அடங்கிட்ட***
***நடைப்பிணமான மானுடம்***



***ஆசைக் கட்டுகள் அறுபட்டுச்***
***விழிப்புணர்வோடு சுதந்திரமாய் வாழ***
***இன்றும் அழைக்கின்றார் இறைமகன் இயேசு***
"***இலாசரே வெளியே வா***"

பூத்த மலர் மணம் வீசி, காயாகிக், கனிய முன்னர் உதிர்ந்திட-
கனிந்த மனம், புத்துயிரளித்து புது வாழ்வு வாழ வரமளித்தது
வழியும், உண்மையும், வாழ்வும் நான் என ஊரறிய
மடிந்தவனை எழுப்பி உறவுகளின் கண்ணீர் துடைத்தது

மனமே காலம், மனமே மரணம்
மனதில் வாழ்ந்தால் மரணத்தில் வாழ்கிறாய்
மரணமற்ற நிலைவாழ்வு வாழ
இலாசரே வெளியே வா-குருவின் அழைப்பு

பிரபஞ்சக் கருப்பையில்
ஓங்காரத்தின் அதிர்வுகளால் புதிய படைப்புக்கள்
கருப்பையும், கல்லறையும் இறைமொழிகேட்டு
உயிர்பெறும் அதிசயங்கள்.



விழிப்படைந்தோர் இறப்பதில்லை-வியப்படைவதற்கு ஏதுமில்லை
மண்ணலானது மண்ணைச் சேர-விண்ணாலானது
விண்ணைச்சேர-உடலின் இறப்பு இறப்பன்று-
உண்மையை அறிந்தவர் மகிழ்கின்றார்.

விழிப்புணர்வே ஆன்மீகம்-விழித்தெழுந்து
உடல் பிரக்ஞை எனும் கல்லறை விட்டு
புது வாழ்வு வாழ வாருங்கள் மானுடரே
இறை வார்த்தை இன்றும் அழைக்கின்றது

***இறையின்றி வாழ்வில்லை-இறையும் வாழ்வும் ஒன்றே***
***வாழ்வு தரும் இறைவார்த்தையே மனுவுருவானது***
***மானுட மீட்பிற்காய்த் தம்மைப் பலியாக்கியது.***

துயரக் கண்ணீர் ஆனந்தக் கண்ணீராக
பூபாளம் ஒலிக்க, பூந்தென்றல் தழுவ-
நாறிய மணங்களில்-நறுமண சுகந்தம்-
வாடிய பயிர்களுக்கு அன்பு மழையின் அபிஷேகம்

கல்லறை போன உறவை கட்டியணைத்த சொந்தங்கள்
காலனைக் கடிந்து வாழ்வு தந்த இறைமகனை
தாள் பணிந்து வாழ்த்திப் போற்றிய உறவுகள்

திராட்சை மது தீர்ந்திட, மங்கல வீட்டின் மணவிழாவும்
வனப்பிழந்து வாடிட, வாழ்வுதரும் வார்த்தையை கேட்டு
நீரும் மதுரசமாய் மாறி மங்களம் சொன்னது அங்கு,
கல்லறையில் பெயர் கெட்டு பிணமும் வாழ்வுக்கு எழுந்து வர
பிண வீடும், மண விடாய் மாறிடப் பொங்கும் மங்கலம் இங்கு

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-18-10-2023

# பத்து கன்னியர்-விழிப்புணர்வு

மெய்யறிவைத் துறந்து, மண், பொன், பெண் இன்பம் சுவைத்து,
புலனின்பச் சேற்றில் உழலும் மாந்தர், மீண்டும், மீண்டும் பிறந்து
முப்பிணியால் வாடி துன்புற்றும், பிறப்பறுத்து நிலைவாழ்வைத்
தேடாத மடையர் சுயத்தை அறியாத மூடர்



மணவாளன் வருகைக்காய் காத்திருந்த பத்துக்
கன்னியரில்-வருமுன் காப்போராய், விளக்கோடு
எண்ணெய்யும் எடுத்து வந்த ஐவரோ விவேகிகள்



இருளில் தடுமாறும் நிலை மறந்து, ஏந்திய
விளக்கில் எண்ணெயின்றி வந்தபின் பார்ப்போம்
என்ற ஐவரோ அறிவிலிகள்

மணவாளன் வருகை தாமதிக்க -பத்துக் கன்னியரும்
தூங்கிக் காலம் கழிக்க, மணவாளன் வருகின்றார்
மங்கையரே எதிர்கொள்ள வாருங்கள்
நள்ளிரவில் ஒலித்த கட்டியம்

ஏற்றிய விவேகிகளின் தீபங்கள் எண்ணெயால் மகிழ்ந்து
ஒளிர்ந்திட, எண்ணெயின்றி அறிவிலிகளின் தீபங்கள்
கருகிப் புகைந்து அணைந்திட,
எண்ணெய்க்காய் கை ஏந்திய அறிவிலிகள்

பகிர்ந்திடப் போதாது எண்ணெய்-விரைந்து
கடைக்குச் சென்று வாங்கிடுவீர் -அறிவிலிகளுக்கு
அறிவுரை மொழிந்த விவேகிகள்

மணவாளன் வந்திட-ஏற்றிய விளக்கோடு
காத்திருந்த விவேகிகள்-மணவாளனோடு
நுழைந்து மணவிழா கொண்டாட
தாளிட்ட மணமகளின் கதவு

தாமதித்து வந்த அறிவிலிகள்-தாள் திறக்க வேண்டிட-
தாளிட்ட கதவு தாமதித்து வந்தவருக்குத் திறவாது
விழிப்போடு இருந்தவருக்கே மணவிழாவில் சிறப்பு

வீணாய் தொந்தரவு செய்யாதீர், அறியேன் உங்களை
மணவாளன் பதிலானது-அழுகையும்
புலம்பலும் அறிவிலிகள் உடைமையானது

மணமக்களோடு மணவிழாவைக் விவேகிகள் கொண்டாட,
தாளிட்ட கதவை நோக்கித் அறிவிலிகள் தவமிருந்து வாட
விழிப்புணர்வில் நிலைத்தவருக்கு பேரானந்தம்
நடைப்பிண மாந்தருக்கோ பெருந்துன்பம்

மணவிழாவும் களை கட்டிட, ஒளியும், இருளுமான
மனங்கள், சுயமே ஒளியாய் ஒளிர
சத்தியம், சிவம் சுந்தரமாய் விழிப்புணர்வு

புலனின்பத்தில் மூழ்கிய அறிவிலிகள்-நிலை வாழ்வை இழந்தார்
ஐம்புலனின்பம் கடந்த விவேகிகள் விழிப்புணர்வில் நிலைத்து
பேரின்பத்தை தம்முள் கண்டார்

விழிப்புணர்வே, வழியும், உண்மையும், வாழ்வுமானது
தூக்கமோ துன்பமும், சோதனையுமானது.
உலகின் ஒளி நீங்கள், உங்கள் ஒளி இருளாகாதபடி
மணவாளனை எதிர்கொள்ள, எந்நேரமும் விழிப்பாயிருங்கள்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

Pax Ravichandra-18-10-2023

# விதவையும் அநீத நடுவனும்

பூக்கோலம் கொண்ட மங்கையின் மணக்கோலம்
மணாளன் பிணக்கோலம் கண்டு, திருக்கோலம்
கலைந்து விதவைக் கோலமாகிட
அம்மையின் வாழ்வு கண்ணீர்க் கோலமானது.

சொத்தெல்லாம் உறவுக்கோலம் பூண்ட கயவர்
களவாடிச் செல்ல-அநாதை வாயிலில் நாளும்
வறுமைக் கோலம், வாழ்வில் துயரத்தின் அலங்காரம்

சுமைதாங்கி இல்லாத சோகச்சுமை தாங்கி
உயிரும், மெய்யும், மனமும் களைத்திட, இளமையில்
வந்த முதுமைக் கோலம், அபலையோ அநாதைக் கோலம்

நீதி வேண்டி, சொத்தை மீட்க, விதவை பூண்டதோ
போர்க் கோலம், சட்டத்தை, நீதியை மதிக்காத
நடுவனோ அநீதியின் அலங்கோலம்

நடுவன் வீட்டை நாளும் நடந்து, கால்கள் போட்ட
நடைக்கோலம், கடவுளை வேண்டி-நீதிக்காய்
இதயம் போட்ட கண்ணீர்க் கோலம்

மனிதனை மதியாத மனக்கோலம், இறைவனுக்கும்
அஞ்சாத ஆணவக் கோலம், நீதிக்கு பதியானவன்
அலங்கோலம், நீதி தேவதையோ அந்தகியான அவலம்

காலத்தின் கோலத்தே-நாளும் காட்சியாய் வாயிலில்
விதவையின் கண்ணீர்க்கோலம், நாளும் காணச் சகியாத
கோலத்தைக் கலைத்திட, அநீத நடுவனும் நீதி வழங்கி
அம்மை நெஞ்சில் இட்டதோ ஆனந்தக் கோலம்

அநீத நடுவனும் தன் அலங்கோலத்தை மாற்றிட
இருவர் நெஞ்சிலும் இன்பக் கோலாகலம்

இறைமக்களே உங்கள் ஜெபக்கோலங்கள் வீண்போகாது
தீப, தூப, மலர்க் கோலங்களாய் அவை கருணைக்
கோலத்தைச் சேர, தக்க காலத்தே-
தந்தையும் அமைதிக் கோலத்தை அருள்வார்.

அநீத நடுவனும் நீதி வழங்கினான் என்றால், இறையன்பின்
திருக்கோலங்களே-உங்கள், பூக்கோலம் கலைவதை
இதயம், கண்ணீர்க் கோலமிடுவதை -நம்
வானகத் தந்தை பொறுப்பாரோ?

அன்பின் அழியாக் கோலங்களே-மனம் தளராதீர்
தளராத மனம் நம்பிக்கையின் பூக்கோலம்
இறையன்பால் போடும் ஜெபக் கோலங்கள்
இறை சந்நிதியில் என்றும் அழியாத கோலங்களே!



நீதி நிலை நாட்டும் வேட்கை கொண்டோர்
பேறுபெற்றோர், ஏனெனில் அவர்கள் நிறைவு பெறுவர்

மனந்தளராது விழித்திருந்து-ஜெபத்தில்
நிலைத்திருக்க-மனுமகனின் போதனை
நம்பிக்கையே சரணாகதி
நம்பியவருக்கு இறைவனோ பெருநிதி

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

*Pax Ravichandra-18-10-2023*

# முத்து வணிகன்





அழியும் இன்பம் தேடி அலையும் உலகில், அழியாச் செல்வம்
தேடும் மாந்தர் அரிதானார், விளைச்சல் பெருகிட
தானியங்களைச் சேர்த்துவைக்க, இருந்த களஞ்சியங்களை
இடித்துக் கட்டும் செல்வர்களோ மூடர்களானார்

அழியும் செல்வம் தேடி வாழ்வை அநீதியாய்ச் செலவிட்டவர்
தம் இருப்பைத் தொலைத்திட-வாழ்வு மரணத்திற்கான
வெறும் காத்திருத்தலானது, ஒரு கணம் இருந்த
உயிர்-மறு கணம் பிரிந்திட, எல்லாம் மாயை என்றானது.

***நல் முத்தாய் தன் இருப்பை கண்ட முத்து வணிகனோ***
***தனக்குள்ளதையெல்லாம் விற்று-நிரந்தரத்தை***
***தன் உள்ளே தேடிக்கொண்டான்.***

எண்ணங்கள் உள்ளவரை காலமிருக்கும்
மனமழியக் காலமழியும்-மனமே காலம்
காலமின்மையே நிரந்தரம்
காலம் கடந்த வாழ்வே அமரத்துவம்



உள்ளிருப்பான உயர் முத்தை-நம் சுயத்தை
உரிமையாக்கும் சுதந்திரமே வாழ்வு
மற்றெல்லாம் பற்றை வளர்க்கும் அடிமைத்தனமே

சொந்த வீட்டைத் தேடாமல், இரவல் மாளிகையில்
நம் வாழ்வு? வாழும் உலகோ சத்திரம்
கள்வர் திருட, கறையானும். பூச்சியுமரிக்கும்
செல்வங்களோ தரித்திரம்

மரணத்தில் உடல் அழிய, மையத்தில் நாம் மடிவதில்லை
மலைகளும், முகில்களும் மறையலாம்
வானம் மறையாது.-மறையாத வானமே நாம்-
சூனியமாய் நாம்-எல்லாம் அதுவே!

உன்னுள் நிகழ்வதெல்லாம் உன் சுயத்தில் நிகழ
வெளியே நடப்பதெல்லாம் வீணாய்க் கழிய
தன்னையறியும் அறிவே மெய்யறிவு- ஞானம்
அதுவே அரிய விலைமதிப்பில்லாத பெருமுத்து

ஆணவத்தை கழித்து, பரமானந்தத்தை உன்னுள்ளே தேடு
கட உள்ளே, தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்,
எளிய மனத்தவருக்கே இறையரசு
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

*Pax Ravichandra-18-10-2023*

# மருந்தும் நல் விருந்தும்

---



உண்டு குடிக்க நேரமின்றி, ஊருக்கு நல்லுபதேசம் செய்யும்
நாடோடிப் போதகருக்கு நல் விருந்தளிக்க மனமுவந்த
நற்பரிசேயர்- தம் இல்லம் வந்து விருந்துண்ண
ஓய்வு நாள் ஒன்றில் அழைத்த நல்மனத்தவர்-

இறை வார்த்தையை. நல் விருந்தாய் அளிக்கும்
மனுமகன், அன்போடு அழைப்பை ஏற்று-தம்
இருப்பை சத்சங்கமாக்கிய திருமகன்




இல்லம் வந்தவரும் நீர்க்கோவையால் வாடும்
நல்லுள்ளத்தவர் ஒருவரைக் கண்டார்
ஓய்வு நாளில் குணமாக்குவது உத்தமா?-மௌனம்
சம்மதமாக நலமளித்து மனம் மகிழ்ந்தார்

உங்கள் குழந்தையோ இல்லை கால்நடையோ
கிணற்றில் வீழ்ந்தால் -ஓய்வு நாள் என்றாலும்
தூக்கி, காக்க மறுப்பீரோ? வினவியதற்கு
விடை ஏதுமின்றி வேதியர் நாணினார்

விருந்தில் முதன்மையான இடம் தேடும் மனிதர்களைக்
கண்டவர் உரைத்தார்-உங்களை விருந்திற்கு
அழைத்தால், முதன்மையான இடத்தில் அமராதீர்

உங்களிலும் மதிப்பிற்குரியவர் வரும்போது
அழைத்தவர் உங்களை வேண்டிட, நீங்கள்
இடம் விட்டு-பின்னிருக்கையில் அமர நேரிடும்
உங்கள் நிலை வெட்கக் கேடாகும்

நீங்கள் பின்னிருக்கையைத் தேர்ந்தால்
அழைத்தவரோ வாரும் நண்பரே-
வந்து முன்னிருக்கையில் அமரும் வேண்டினால்
உங்களுக்குப் பெருமதிப்பாகும்

தம்மைத் தாழ்த்துகிறவர் உயர்த்தப்படுவார்
தம்மை உயர்த்துகிறவரோ தாழ்த்தப்படுவார்
ஆணவமே தம்மை உயர்த்தும்
தாழ்சியுள்ள மனமோ தம்மைத் தாழ்த்தும்



விருந்தளிக்கும் போது-உறவுகளையோ, நண்பரையோ,
அண்டை வீட்டாரையோ, செல்வரையோ அழைக்க வேண்டாம்-
அழைத்தால், பதிலுக்கு அவர்களும் உம்மை அழைப்பார்
அதுவே நீர பெறும் கைமாறு

மாறாக நீர் ஏழை எளியோருக்கும், அங்கவீனருக்கும்
விருந்தளித்தால் நீர் பேறு பெற்றவராவீர்-ஏழை எளியவரிடம்
உமக்கு கைமாறு செய்ய ஏதுமில்லை-நல்மனதின் வாழ்த்து
நலம் தரும், நல்லோர் உயிர்த்தெழும் நாளில்
நீர் பெறும் கைமாறு பெருவரமாகும்

ஆணவம் கழித்திட தோன்றும் நல்மனதின் பிறப்பே
உயிர்த்தெழுதல், இறை தரும் இணையில்லா
அமைதியே நீர் பெறும் கைமாறு

அன்பு. கருணையை வாழ்வாக்குங்கள்
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு

ஓய்வு நாள் மனிதனுக்கேயன்றி-மனிதன் ஓய்வு நாளுக்கல்ல-
அன்பினால் திருச்சட்டத்தை புரிந்துகொள்ளுங்கள்
அன்பே சிவமென அனுபூதியில் அறிந்தால்
இறை தரும் அமைதி உங்கள் வரமாகும்

விருந்தோம்பலின் நற்பண்பிற்கு இறை கீர்த்தனை
ஏழை எளியவரில் இறைவனைக் காண-விருந்துக்கே
நல்மருந்தான மனுமகனின் போதனை
இருப்பதை இல்லாதவரோடு பகிர்வதே ஈகை
அன்பின் சாதனை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-18-10-2023*

# இறை மாட்சி



இறைமகன் வழியை ஆயத்தம் செய்ய
விருத்தாப்பியரான பெற்றோருக்கு
இறை வரத்தால் பிறந்த கட்டியக்காரன்

ஒட்டக மயிர் உடை உடுத்தி, காட்டுத்தேனும், வெட்டுக்கிளியும்
உணவாக பாலையில் வளர்ந்த தவசி-காலம் வந்தபோது
பாலைவனச் சிங்கமாய் கர்ச்சித்து, ஆஷாடபூதிகளை
விரியன் பாம்புகள் என விமர்சித்த ஞான உபதேசி

மது இல்லை, மாதில்லை, விருந்தில்லை,
கடும் தவமான வாழ்வில் குறையேதுமில்லை
ஏரோது-ஏரோதியாள் முறையற்ற உறவைக் கண்டித்து
சிறையிருந்த நீதி-முடிவில் சிரம் தறித்த அநீதி

எளியோனாய் தொழுவத்தில் பிறந்து ஏழை, பாவி,
விபச்சாரிகளோடு உறவாடி உண்டு, குடித்து விருந்தாடி, நற்செய்தி
பகிர்ந்து எதிரிக்கும் அன்பு இறை நீதி என முரசு கொட்டி
அன்பே சிவமாய் வாழ்ந்த நாடோடியோ கர்மயோகி

கள்ளர் குகையான ஆலயத்தை சாட்டையால்
கும்பாபிஷேகம் செய்து -கல்லின் மேல்
கல்லிராதபடி இடிபடச் சபித்த பக்தியோகி
தந்தையும், நானும் ஒன்றென்ற அத்வைதவாதி




ஆபிரகாமிற்கு முன் “நான்” இருக்கிறேன் என்ற
ஆன்மீக கிளர்ச்சியாளனோ யூதம் அறியாத ஞானயோகி
சிலுவை மரணத்தை தந்தை சித்தம் என ஏற்ற இராஜயோகி

எம் சித்தம் அன்று , உம் சித்தம் நிறைவேறுக-
வரமான பிறப்பு, சத்தியத்திற்கு சாட்சியமான
தவமான வாழ்வு இளமையில் துர்மரணச் சாவு
எண்ணித் துடிக்கும் மனது

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-18-10-2023

# யார் என் தாய்? யார் என் சகோதரர்?

---

அலையாடும், கயல் விளையாடும் கலிலேயாக்
கடலில், நீராடிய சீதளத் தென்றல்-நேசமாய் மனுமகன்
தேகத்தை தழுவிச் சீராட்ட சுரிகுழல் ஆடக்
களிகூர்ந்த சுந்தரன் முகத்தில் மாறாத புன்னகை





கூட்டமாய் வந்த மக்கள், குழுக்களாய் அமர்ந்து
நல்லுபதேசம் கேட்க, ஆனந்த சத்சங்கமாய் அவர் இருப்பு
நலமற்றோர் நலமடைய-நம்பிக்கை நலிந்தோர்
உள்ளம் குணம் பெற,  வார்த்தையோ அருமருந்து

அன்னையும், சகோதரரும் ஐயனைத் தேடிவர
அனுகமுடியாது கூட்டம் அரணாய்ச் சூழ்ந்திருக்க
சேய் வீடு வந்து உணவருந்தி ஓய்வு கொள்ள
சேதி அனுப்பி காத்திருந்த அன்புத் தாய்

தகவல் அறிந்தவர் இதயத்தில், தாயின் அன்பு முகம்
தோன்றிட, மனதில் தன்னை இறை அடிமையாக்கி
வாழ்வைத் தவமாக்கி வாழும்
உத்தமியைப் போற்றியவர் உரைத்தார்



யார் என் தாய்? யார் என் சகோதரர்? தம் சீடர் பக்கம்
கரங்களை நீட்டியவர் இறைவாக்கை கேட்டு அதை
வாழ்வாக்கி என் தந்தையின் திருவுளத்தை
நிறைவேற்றுபவரே என் தாயும், சகோதரரும்

மண்ணைச் சார்ந்தவர் உறவோ உடல் படைக்க-
விண்ணரசைச் சார்ந்தவரோ, விழிப்புணர்வால்
தம்மை தாம் படைக்க, விண் படைத்த உறவுக்கு
மண் படைத்த உறவேது? சகோதரமேது?

அன்பினால் அம்மையப்பன் படைத்த ஊனுடல்
ஒரு நாள் அழிவது திண்ணமே,
மண்ணால் உருவானது மண்ணிற்கே போகும்
அப்பத்தால் வாழ்வது புழுக்களுக்கு உணவாகும்

தம்மைத் தாம் பிறப்பித்தவருக்கு இறப்பேது?
இனி ஒரு பிறப்பேது?
ஆணவம் கழித்த மனம் இறையில்லமே
அன்பின் அகக்கிளர்ச்சியே அவன் வாழ்வு

உண்ணும்போது உண்டு, உறங்கும்போது உறங்கி
உழைக்கும்போது களிப்போடு உழைத்து
கடமையை செய்து பலனை எதிர்பாராத
கணந்தோறும் வாழும் கர்மயோகி அவன்

மதமும், சமூகமும் தந்த நம்பிக்கையும், அறிவையும் கழித்து
சத்திய தரிசனத்தில் நாளும் வாழும் அகக்கிளர்ச்சியாளன்
உண்மையின் சங்கமத்தில் உறவுகள் மலர்ந்திட
பரந்து விரிந்த பிரபஞ்ச இருப்பில் அவன் இருப்பு



நடைப்பிணமாய் வாழும் உலகில்-மரித்தோர்
மரித்தோரை அடக்கம் செய்து புலம்புகின்றார்-
நாளை நமக்கும் இக்கதி மூடர் அறிவதில்லை

விழிப்புணர்வின்றி குருடர் -மீண்டும், மீண்டும்
கருப்பைக் குழிக்குள் விழுந்து பிறந்து இறந்து
முடிவில்லாத் துயரில் வாழ்வைத் தொடர்கின்றார்

வழியும், உண்மையும், வாழ்வையும்
தன்னுள் கண்டவன் தேடல் முடிகின்றது
தட்டுதல் ஓய்கின்றது-எல்லாம் திறந்திருக்கின்றது
கேட்பதற்கு ஏதுமில்லை-தேவையுமில்லை

தன்னுள் பெருமுத்தைக் கண்ட வணிகனாய்
அவன் பேரானந்தம், அழியும் செல்வத்தைக் கொண்டு
அழியாச் செல்வத்தை வாங்கி மகிழும் பேரின்பம்



தூய மனமே துணிவு கொள்ளும்-உண்மையைத் தேடும்
வாழ்வு தனி மனித ஆன்மீகக் கிளர்ச்சியாகும்
நல்ல நிலமாய் அவன் தூய மனம்-பன் மடங்காய்
இறை வார்த்தை பலன் தர ஆனந்த அமைதி பெருநிதியாகும்

பாதை, முள், கற்பாறை மனங்களில்
இறைவார்த்தை விழுந்தாலும் எப்பலனுமில்லை.
செவிடன் காதில் ஊதிய சங்கோசை கேட்குமோ?
விழலுக்கு இறைத்த நீரும் பயன்தருமோ?

கேட்கச் செவியுள்ளோரே கேளுங்கள்
காண விழியுள்ளோரே காணுங்கள்
விழிப்புணர்வு பெற்றவனுக்கு இறைவனே தந்தை-
இறைவனே குரு, இறைவனே ஆசிரியர்

உடல்களில் சங்கமத்தால் பிறப்பது ஊனுடலே
ஆணவம் கழிந்திட பிறப்பது விழிப்புணர்வே!
அதுவே இரண்டாம் பிறப்பு-ஆணவ மனமழிய
கிடைக்கும் விடுதலையே பூரண சுதந்திரம்.

நம்முள்ளே இறையரசு-ஆணவ
"நான்" மறைய—மனமழிய- அது ஒளிரும்
இறை மக்கள் நீங்கள், நீங்களும் தெய்வங்களே!
இறைவன் நம் தந்தை-நீங்கள் என் சகோதரரே

கள்வர் திருடக், கறையான் அரிக்கும் செல்வங்கள் வெளியே-
கள்வரும் திருடமுடியாது, கறையானும் அரிக்க முடியாத
அழியாச் செல்வம், தூய மனமே, அதுவே ஆன்மா,
ஆன்மாவிற்கு அழிவில்லை

சுற்றமும், சொந்த பந்தமும் படைத்த உறவு கடந்து
இறைவார்த்தையை, வாழ்வாக்கும் உறவுகளே
தம் சொந்தமென-குடும்பம் எனும் குறுகிய வட்டம் தாண்டி
முழு உலகையும் சொந்தமாக்கிய மாமனிதன் இயேசு

எந்நேரமும் விழிப்பாயிருங்கள்-எஜமான்
வரம் நேரம் தாமதிக்க-உண்டு, குடித்து விருந்தாடி
உடற் சுகங்கள் தேடாதீர், மூப்பு, பிணி. சாவு உடலுக்கே

உழுவதற்கும், மேய்பதற்கும், ஊழியனை வைத்திருக்கும்
எஜமான், நாள் முழுதும் உழைத்த ஊழியனை தம்மோடு
உணவருந்த அழைப்பாரோ? பலனை எதிர்பாராது-
விழிப்பாயிருங்கள், விழிப்புணர்வே பெருநிதி, பெருங்கொடை

உறவுகளால் பந்தப்படவேண்டாம், உண்மையின் சகோதரத்துவமே
நிலையானது,-குரு எனும் செந்தாமரையிடம்-சீடர்கள்
தேன் சுவைத்து, தேனீக்களாய் இன்புறுகின்றார்
உண்மையின் சத்சங்கமத்தில் துன்பமில்லை

சேற்றில் நிலைத்தாலும்-தாமரை சேற்றில் உழல்வதில்லை
நீரில் வாழ்ந்தாலும் மூழ்குவதில்லை, நனைவதுமில்லை,
ஆன்மீகச் சின்னமாய் அது

பற்றற்றவராய் விழிப்புணர்வோடு வாழுங்கள்-
எதுவும் நிலையில்லை
என்றுமுள்ள தர்மமே நிலையானது
அதுவே இறைவன்



அருள் மரியே வாழ்க! அன்னையைப் போற்றிய வானவர்
அண்டவருடைய தாய், பெண்களுள் பேறுடையவள்
நீரே என வாழ்த்திய அம்மை எலிஸபெத்

தந்தையின் வார்த்தைக்குத் தன்னை அடிமையாக்கி
என்னை உதரத்தில் தாங்கிய பெண்மை
அன்பே சிவமாக, வாழ்வே தவமாக-அம்மா
என்றழைக்க எனக்குத் தாயான அம்மை

இரத்தபந்த உறவல்ல, இறை தந்த அன்புறவு
பெண்களுள் பேறுடையாளாய் தந்தை தேர்ந்த மங்கை
என்றும் எனக்காய் வாழும் அம்மை-தாய்மைக்கே
என் தாயால் மேன்மை, அன்பே வடிவான பெண்மை

வார்த்தையைக் கேட்டு வாழ்வைத் தவமாக்கி
தாயானவள் என் தாய், தாயாவது வரமே
இறைமகனுக்கு தாயானது, இறைவனின் அரிய வரமே,
என் அன்னை இறையன்பின் திருக்கரமே

இறையடிமை நான் உம் வார்த்தையின்படி எனக்காகட்டும்
தன்னை வெறுமையாக்கி இறைவன் கையில் வேயங்குழலாய்
என் தாய், மயக்கும் வேனுகானமோ இறை சங்கீதம்

என் அன்னையோ இறை மீட்கும் தேவராகம்
அடியார் குறை தீர்க்கும் அதிசய ராகம்
நலம் தரும் அபூர்வ ராகம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra- 18-10-2023*

# தாலாந்து உவமை

பெருங்குடி மகனுக்கு, மணிமுடி கிடைத்திட, அருநெறி கடந்து
தலைநகர் செல்லுமுன், தம் பணியாளர் மூவரை அழைத்தவர்-
முறையே ஐந்து, இரண்டு, ஒன்று எனத் தாலந்துகளை
அவரவர் திறமைக்கேற்ப அளித்தார்



நான் வரும் வரை-இதனைக்
கொண்டு வணிகம் புரிக-பணித்தவர்
நெடும் பயணம் தொடர்ந்தார்



மாதங்கள் பல கடந்து மன்னனாய் வந்தவர்
தம் பணியாளர்களை அழைத்து
பாத்தியதையோடு கணக்குக் கேட்டார்

பத்து மாதம் சுமந்து பெற்றவள் உற்ற மகிழ்ச்சி எனக்கு
உம் ஐந்து தாலாந்தோடு மேலும் ஐந்தைச் சம்பாதித்தேன்
இதோ பத்து தாலாந்துகள் உவப்போடு காணிக்கையாக்கிட
அகமகிழ்ந்த தலைவர் பாராட்டி மொழிந்தார்

நல்ஊழியனே, பத்து நகரங்களுக்கு அதிபதி நீர்,
உம் தலைவனாகிய என் மகிழ்ச்சியில், வாரும் வந்து
பங்கு கொள்ளும், உள்ளம் குளிர, நெஞ்சம் நிறைய
உத்தம ஊழியனைப் புகழ்ந்தார் தலைவன்

இரண்டு தாலந்து பெற்றவரும்- நான்கு
தாலாந்துகளைக் கொடுத்து மகிழ்வோடு உரைத்தார்
இரண்டு தாலங்துகளை மேலும் சம்பாதித்தேன்

நல் ஊழியனே-சிறியவற்றில் நம்பிக்கைக்குரியவராய்
இருந்த உம்மிடம் பெரிய பொறுப்புக்களை ஒப்படைப்பேன்
உம் தலைவனாகிய என் மகிழ்ச்சியில் பங்கு கொள்ளும்
உள்ளம் குளிர, நெஞ்சம் நிறைய புகழ்ந்தார் மன்னர்

ஒன்றைப் பெற்றவரோ-இதோ உமது தாலாந்து
மாடாய் உழைத்து ஓடாய்த் தேய்ந்து, ஒன்றை இரண்டாக்கிட
எனக்கோ மனமில்லை, கடின உள்ளம் படைத்தவர் நீர்
விதையாத இடத்தில் அறுப்பவர்-தூவாத இடத்தில் சேகரிப்பவர்

உமக்கஞ்சி மண்ணில் புதைத்து வைத்திருந்தேன்
சினமுற்ற மன்னன் சீற்றத்தோடு உரைத்தான்
உன் வார்த்தைகளைக் கொண்டே
உனக்குத் தீர்ப்பு வழங்குவேன்

நான் விதையாத இடத்தில் அறுப்பவன், தூவாத இடத்தில்
சேகரிப்பவன், அறிந்திருந்தும் நீ என் பணத்தை
வட்டிக் கடையில் வைப்பில் இட்டிருந்தால், வட்டியோடு
நான் பெற்றிருப்பேன், உன்னை வாழ்த்தியிருப்பேன்

சோம்பேறியைப் புறம்பே தள்ளுங்கள்
அழுகையும், அங்கலாய்ப்பும், ஆழ்துயரும்
அவனுக்குத் தண்டணையாகட்டும்

இவனிடமிருக்கும் பணத்தை -பத்து தாலாந்து உள்ளவரிடம்
கொடுங்கள், ஏனெனில் உள்ளவனுக்கு கொடுக்கப்படும்
இல்லாதவனிடத்தில் இருந்து
உள்ளதும் எடுக்கப்படும் என்றார்

இறை வரங்களாய் நம் திறமைகள்
இறை மகிமைக்காய் பயன்படுத்துபவன்-தன்னோடு
பிறரையும் வாழவைக்கின்றான்
இறைவனையும் மகிமைப்படுத்துகின்றான்

விதைப்பின்றி அறுப்பில்லை, உழைப்பின்றி வெற்றியில்லை
சுயநல சோம்பேறி துயரத்தை விதைத்தான், துன்பத்தை
களஞ்சியத்தில் சேர்த்து வாழ்வை எரிநரகாக்கினான்

விருத்தி செய்பவனே திருப்தியடைகிறான்
விருட்சமாகி பலன் கொடுக்கிறான்
புதைத்து வைத்தவன் புதைந்து போகிறான்
விருட்சமயாய்ப் புலராமல் மடிகிறான்

விழிப்பாயிருங்கள், விழிப்புணர்வே ஒளி
இறை தந்த வரமே வாழ்வு-தவமாக்கி
இறை புகழ் பாடுவது நம் தலையாய கடனே

அருநெறி: பாலைவனம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

Pax Ravichandra-24.11-2023

# புழுதியில் விழுந்த பூச்சரம்





வறுமைச் சேற்றில் பூத்த வண்ணமலர்-நீரின்றி
வாடிச் சோர்ந்து-காற்றினில் ஆடி
கருவண்டுகள் அரிக்க- பிடிச் சோற்றுக்காய்
சேற்றினில் விழுந்தது ஆற்றாமையால் இன்று

கொல்லுமோ?, கோரப்பற்கள் , பூவுடலைக்
குதறிக்கிழிக்குமோ?-குருதியை மதுவென
ருசித்துப் பருகுமோ?,மெல்லுமோ?, விழுங்குமோ?,
மென்தசையை இன்சுவையென உண்ணுமோ?

மான்விழி மருள, மலர்மேனி நடுங்க,-அஞ்சினாள்
கரம் பற்றிக் கலைந்த பூங்குழல் மலர் சிந்தி வாட
செவ்வாய் புலம்ப, கூப்பிய கரங்கள் வணங்க
சிற்றிடை ஒடிய தரைபணிந்து கெஞ்சினாள் தெரிவை

அள்ளிப் போர்த்திய கலிங்கம் அழகு நிலாவைப் பிரிவதோ?,
காப்பதோ? எனப் பீதிப்புயலில் குழம்பிடக் கலங்கிய ஆயிழையாள்
துரத்திவரும் திரள் நரியிடை-அஞ்சி நடுங்கும்
புள்ளிமான்போல் அடைக்கலம் தேடி ஓடிய தெரியிழையாள்



கூச்சலும், குழப்பமும் ஊனையும், உயிரையும் உருக்கிட
ஓநாய்கள்போல் சுற்றி வளைத்த கூட்டம் கவ்விக்
கடித்துக் குதறிடத் துடிக்க, பெண்மான்போல் அஞ்சினாள்
பெருமூச்செறியக் கெஞ்சினாள் கதறினாள்-மாது

சினம் பழுத்து எரிநரகெனச் சிவந்த விழிகள்-கொடும் புலி வாழும்
வனமென இருண்ட மனங்கள், பிணம் தேடும் கழுகெனக் குறை
காணும் குணம், விலைமகளிவள் விபச்சாரம் புரிந்தாள்
மரணமே நீதி என்ற வழுவாத திருச்சட்ட இலக்கணம்

உள்ளம்தான் குழையாதோ -நெஞ்சந்தான் இரங்காதோ,
வெள்ளம் எனக் கண்ணீர் பெருக-வாழ வழியின்றி
நல்குரவால் எளியவள் செய்த பிழை பொறுப்பீரே,
இருகரம் கூப்பி இரந்த ஏந்திழையாள்

இரந்தாள், இருகரம் கூப்பிப் தொழுதாள், பொன்மேனி
கறுக்கப், பூவண்ணம் கரைய மெலிந்தாள் கரைந்தாள்,
கல்லும் உருகக் கண்ணீர் மழை பொழிந்தாள்
செல்வருக்கு விருந்தான தேன்கரும்பு

அஞ்சன விழிகள் அழுது சிவந்திருக்க, காஞ்சன மேனி
புழுதியால் புண்பட்டிருக்க, கூப்பிய கரங்கள் தொழுது அபயம்
என்றே இரஞ்சிட-ஈரமில்லாக் கல்நெஞ்சங்கள் எறிந்து கொல்ல
எடுத்ததோ கல், பெண்மையைப் பழித்ததோ கொடுஞ் சொல்

இருளில் இன்பம் துய்த்த காமுகரும்
ஒளியில் கல்லெடுத்தார் -இவளைக் கொல்வதற்கு
மறை நூலில் சொல்லெடுத்தார்- தம் செயல்
நீதி, நியாயம் என்று சொல்வதற்கு

கல்லெடுத்த கூட்டம் பின்தொடரக்- திருச்சட்டத்தில்
சொல்லெடுத்த மறைநூல் அறிஞரோ கடுகி முன் நடக்க,
மழுவினில் விழுந்த புழுப்போல் மனம் துடிக்க- புழுதியில்
இழுபடும் பூமாலைபோல் அல்லலுற்ற அழகோ முழுநிலவு

வழுவா நீதி, நெறிமுறை சொல்லும்-மனுமகன்
வார்த்தையில் வழுகண்டு, குழகு காரிகையை
கழுவில் ஏற்றிட, குறுக்கு வழிதேடியது இழிஞர் கூட்டம்

திங்களும் நாணும் திருமுகம் அழகு,-பூத்த
செங்கமலம் எனத் திருப்பாதம் அழகு,
மங்களம் சொல்லிடும் பூ விழிகள் அழகு-பொங்கிடும்
கருணையிலோ மனுமகன் தாய்மையின் பேரழகு

ஆனந்த சௌந்தர்யம் அமர்ந்திருந்த இடம் நாடி
அழகு குலைந்து தோகையின் கால்கள் தள்ளாட
சுரம் கலைத்து பூங்குயிலின் கானம் அபசுரமாக
பெண்மானைக் கவ்வி வந்த ஓநாய்க் கூட்டம்

வருந்திச் சுமை சுமப்போருக்கு வாழ்வளிக்கும் வார்த்தை
இரக்கமில்லா மதவாதத்தின் பேரவலம் கண்டார்
கண்களில் நீர் எழுதி, கருத்தினில் மனம் நொந்து
வாடும் காரிகையையும் கண்டார், கருணை கொண்டார்

புயல்போல் வந்தவர் புழுப்போல் நெளிந்து வழுகாண வினா
தொடுத்தார்-போதகரே, விபச்சாரத்தில் கையும், மெய்யுமாய்
பிடிபட்ட கணிகை இவள், கல் எறிந்து கொல்லுதல்
மோசே வகுத்த நீதி- உம் பதில் என்ன?

குற்றம் கண்டு மனுமகனைக் கொத்திட படம் எடுத்த நாகமோ
நயவஞ்சகம், கல் எடுத்து, மறை நூலில் சொல் எடுத்து-விலை
மாதிவளை கல்லெறிந்து கொல்லுதல் இறை நீதி , மும்மலமும்
மலமாய் நாற- கொக்கரித்த மதவாதிகள் சிறையில் அஞ்சுகம்

சினம் பழுத்துச் சிவந்த விழிகள், குணம் வெம்பிக் காய்ந்த
பாலை மனங்கள், தினம் தொழுதும் கனியாத கல்நெஞ்சங்கள்-
மறை வல்லுனராய் வினாத் தொடுத்து ஓதிய வேதத்தில்
கருணை, இரக்கத்திற்கோ பெரும் பஞ்சங்கள்



தொடுத்தவர் வினாவில் விரித்த வலையும்-எடுப்பார்
கைப்பிள்ளைகள் ஏந்திய கற்களும்-வாடிய
கமலத்தில் வழிந்தோடும் கண்ணீரும்-இருண்ட மனங்களின்
கொடுமையைச் சொல்லிட வருந்திய பூ மனம்

காணாதவராய் ஏதும் கேளாதவராய் வாழாவிருந்தவர்
இளகாத இரும்புமனங்களை, விழிப்புற்ற மனச்சாட்சியில்
புடம் போட, மாயோர் செய் தீமைகளை, மண்ணில்
பொன்விரலால் எழுதி, நெஞ்சில் தீ மூட்டினார் மனுமகன்

மண் தரையில் பொன்விரல்கள் பொறித்தவை
மாண்ட மனச்சான்றை உயிர்ப்பித்து, முழங்கின
***அன்புதான் தெய்வம், இரக்கம்தான் தேவநீதி,***
***மன்னிப்பதே மாண்பு, தேவகிருபையே மானிடத்தின் மீட்பு***

புரிந்தும் புரியாமல் நின்றவரிடம்-***உங்களில் புனிதன்***
***வனிதையின்மேல் முதல் கல் எறிக உரைத்***தவர் -இதயம்
மரித்தோராய் வாழ்வோரை ஏறெடுக்க மனமின்றி
இறுதி நாளில் இவர் தீர்ப்பையும் எழுதினார் மண்ணில்

கல் எறிந்து கொல்லுதல் பிழை எனில் திருச்சட்டத்தை
அவமதித்த நிலை-சரியெனில் அன்புப் போதனை பொய்யான நிலை
வஞ்சகர் விரித்த வலையில் வஞ்சகம் வீழ்ந்திட
அஞ்சுகம் வாழ்ந்திட மனுமகனின் இறைஞானம்



உயிர்த்த மனச்சான்று ஈட்டிபோல் உயிரைத் துளைத்திட
புரிந்த பாவங்கள் நச்சரவங்கள்போல்
மனக்கண்ணில் நெளிந்திட, இழிநிலையைக் காட்டும்
நீதித்தராசு, இதயத்தை தீய்க்கும் எரி நரகு

இறை நீதி கல்நெஞ்சங்களைச் சுட்டிட
ஏந்திய கற்களும் கரங்களைச் சுட்டுக் கை நழுவிட
வஞ்சியை மறந்து வந்த விடயம் துறந்து-நின்ற
இடம் தெரியாது கண் மறைந்த வஞ்சகம்

புடமிடும் தணல்போல் வார்த்தை சுட்டிட-சுட்ட
கல்லும் நழுவிடக் கால்களும் கடுகி அயலிடம் நடத்திட-
வஞ்சகர் வலை விலகச் சிறகை விரித்து- தஞ்சம்
என்றே இயேசுவிடம் சரணடைந்த அஞ்சுகம்

விழித்த மனம் ஏந்திய கல்லைப் பழித்திட-தீ
வினை செய்த மனம் தவறினை உணர்ந்து அஞ்சிட
அழிவு காணக் கூடி வந்தவர் தம் இழி நிலை கண்டு நாணி
நழுவிட-நீதியாய் அங்கிருந்தது இறைகருணை ஒன்றே

ஓதுவது வேதம், உள்குதலோ காமம்
செல்வக் காமுகனை விட்டு, விட்டு-ஏழையை
விபச்சாரி எனக் கைது செய்த திருச்சட்ட நீதி
அன்பினால் விளங்கிடாத அநீதி



அபயம் என்றே அபலை இதயம் கெஞ்சிட, செவ்வேல்போல்
சிவந்த விழிகள் பரிதவித்து, பட்டுப்போன பாவ வாழ்விற்காய்
நொந்தழு, கொட்டிய கண்ணீரும், கோமகன் பாதம் பட்டு
நெஞ்சிற்கு நிம்மதி தருக என்று இரஞ்சின

கண்ணீர் சொல்லும் அவலக்கதையை-கால்கள்
கனி நெஞ்சுக்குச் சொல்ல-அண்ணலும்
அஞ்சாதே மகளே எனத் தஞ்சமளித்து
நெஞ்சுக்கு நிம்மதியளித்தார்

சொல்லால் சுட்டுக் கல்லால் எறிந்து
கொல்ல வந்த கூட்டம் காணமற்போயிட
காத்து இரட்சித்த அநாதரட்சகனை
கரம் கூப்பி மனமுருகித் தொழுத மாது

அம்மா! எங்கே அவர்கள்? எவரும்
உனக்குத் தீர்ப்பிடவில்லையா?
இல்லை ஐயனே மொழியிலே நன்றியின் நாதம்
விழியிலே வாழும் தெய்வம் நீயே எனும் கானம்

செய் பிழை உணர்ந்து மனம் திரும்பினீர், தீர்ப்பிடேன்
அமைதியோடு செல்க, பாவம் செய்யாது வாழ்க, பரிவுடன்
பகர்ந்தவர் கனிவுடன் புன்னகை பூத்திட, சருகான மலர்
புதுமலராய்ப் பூத்திட, மான்போல் துள்ளிய மங்கை மனம்



பாலை மனமும் பூஞ்சோலைபோல் மாறிட
இறைமகன் வார்த்தைகள் தேன்போல் இனித்து
தென்றல்போல் பாவை நெஞ்சைத் தழுவிட
வஞ்சியின் வாழ்வில் வந்த புது வசந்தம்

அமாவாசை நிலவிற்கு ஆனந்தப் பௌர்ணமி
வற்றிய நதியிலே புது வெள்ளத்தின் ஆர்ப்பரிப்பு
கண்ணீர் பூத்த விழிகளில் களிப்பின் உதிப்பு-இதயத்தில்
கண்டேன் கருணைத் தெய்வத்தை என்ற அக்களிப்பு



பசியை மறைத்தது அபலையிவள் பாவம், பசியில் மறைந்தது
பேதையிவள் பாவம், பசியை மறைத்தது பரிசேயர் குருட்டு நீதி
பசிக்காய் ஒலித்ததோ பாவமன்னிப்பிற்கான
பார்முதற் பூதத்தின் தயாளம்

தந்தை ஆபிரகாம் வழி மரபினர் நாம்-
திருச்சட்டமே மோஸே வகுத்த மேல் வரிச்சட்டம்-
ஆணவ மனங்கள் அறியாமையால் புரியவிருந்த
கொலையைத் தடுத்து காத்த கருணை

கொலையைத் தடுத்து -விலை மாதிற்கு மறுவாழ்வளித்த
கருணாகரன், கொலைப் பழியினின்று-மதவாதிகளைக்
காத்து மன்னிப்பருளிய தயாபரன், தம்மை கொல்வோரையும்
மன்னிக்க, இறை தந்தையை வேண்டிய கிருபாகரன்

அன்பால் திருச்சட்டதை புரிந்திட அகப்பார்வை
கொடுத்த கருணாநிதி, கருணையோடு மன்னித்து-
கணிகையும், புதுவாழ்வு வாழப் புதுமை புரிந்த தயாநிதி



விலைமகளோ பாவி -தண்டிக்க கல் எடுத்த
திருச்சட்ட நீதி, காமுகனை, விலைமகனை தப்பவிட்ட
ஆணாதிக்க நீதி-*விபச்சாரகுலச் சந்ததி*
***மன்னியுங்கள் நீங்களும் மன்னிக்கப்படுவீர்கள்***
***வாழும் இறை நியதி***

மதவாதிகளுக்கு நோன்போ வருடத்தில, சிலநாள்,
கொண்டாடத் திருநாள், ஏழையருக்கு நோன்போ வருடத்தில்
பலநாள், கரிநாள், வயிற்றுப் பசி போக்க,
காமப் பசி தீர்த்த ஏழை

வரட்டு ஒழுக்க நீதியோ திருச்சட்டம்,
அன்பு, இரக்கம் இறைவனின் மேல்வரிச்சட்டம்
அன்பே மன்னிக்கும், நீதியோ தண்டிக்கும்
அன்பே சிவம் மாறாத சத்தியம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra-18-10-2023*

# நீ இல்லாத உலகத்திலே

சுரிகுழலில் வண்ணப் பூச்சூடி-சுந்தரப் பிறை நுதலில்
பொட்டு வைத்து, செவ்வாயில் முத்துப் புன்னகை அணிந்த
வண்ண நிலா, சாயலில் தோகை, நடையில் அன்னம் என
மண் உலவும் மங்கையோ அழகு நிலா





மதி முகம், மையளாவிய விழி, நெய் தடவிய
பூங்குழல், மென் முலை, பவளச் செவ்வாய்,
புங்கய வண்ணம், கவிதை மொழியாகச் செல்வி
பூவும் விழியாக, புருவம் வில்லாக அழகி,

கண்டு மயங்க அழகின் ஓவியம், காதலாகிச் சுவைக்க
கன்னியோ காவியம், மும்மகளும் ஒன்றான பெண்மை
முத்தமிழின் இனிமை, சப்தஸ்வரங்களின் ஆலாபனை

இடை மின்னலோ?, நடை அன்னமோ?, பூ மேனி பொன்
வண்ணமோ? காண்போர் மனதைக் கொள்ளை கொள்ள
முல்லையும், மல்லிகையும் பூ மேனி மணம் சொல்ல, அணங்கிற்கு
கட்டியம் சொல்லும் அழகு, காதல் தேவதையாய் ஆரணங்கு

படித்துச் சுவைக்க பூவையோ காவியச்சுவை
பார்த்துச் சுவைக்க அழகோ ஓவியச்சுவை
இரசித்துச் சுவைக்க கன்னியோ முக்கனிச் சுவை
அறிவில் முத்தமிழ் வாழும் பாண்டியன் அவை-



வேலோ, கயலோ விழிகள் கண் வியக்க, இடை மின்னலோ,
நடை அன்னமோ, மனம் ரசிக்க, யாழோ, குழலோ மொழிகள்
செவி சுவைக்க,  வான் நிலவோ, தேன் மலரோ
காண்போர் மயங்க காமன் மலர்கணையாய் இவள்

நீயின்றி வாழ்வில்லை, நீயில்லா உலகோ
நிலவில்லாத வானம்-வாழ்ந்தால் உன்னோடு-
இல்லையேல் மரணம் என்னோடு, காதற் காமத்தால்
வெந்த காளையர் மனம் பாடும் கவிதை

காமன் கணை பட்டு, வேடன் வலை பட்ட
கலைமான்போல் மனம் தவிக்க- கண் வரைந்த ஓவியமோ,
நெஞ்செழுதும் காவியமோ, காதல் கவி பாடிக்களிக்க
அழகிலும், பேரழகாய் மதலேன் மரியாள்

செங்கனிவாயும், செவ்வாழைத் தொடைகளும், பூங்குழலும்,
முத்துப்பற்களும், மோகனச்சிரிப்பும் பேரழகைச் சொல்ல,
அள்ளிக்கொள், ஆசை தீர அணைத்துக் "கொல்", காதல்
கொள் எனச் சொல்லும் பேரழகு, காமன் கணையாய் வருத்தும்



மையிட்ட விழிகளில், மையலும், மலர்க்கணையும் நின்றாட,
தையலின் தேன்மொழியில் குயிலும், பைங்கிளியும் பண்பாட
காண்போர் உள்ளம் காமன் கணைபட்டுப் புண்ணாக, கனவும்,
நனவும் காமினி என்றாக, பரிசேயரையும் வாட்டிய காதற்சுரம்

அஞ்சுகமும் மொழி பயில இல்லத்தில் வாழும், கானக்குயிலும்
கீதம் பயில மாடத்தில் கூவும், கலாபமயிலும் நடனம் கற்க
முற்றத்தில் ஆடும், அணி நடை அன்னமும் மணி நடை பயில வீட்டை
நாடும், நிலவும், மலரும் அழகில் மயங்கித் தேய்ந்து வாடும்.

நீலநயனங்களோ நெஞ்சில் கோலமிட
கோலமயிலின் குறுநகையில் மனமோ தாளமிட
நனவிலும், கனவிலும் வருத்தும் காதல் தீ
காளையர் மனங்களில் காதல் வேள்வியின் ஆகுதி



மோட்சம் இன்பமோ? பொற்பின் மோகன பிம்பமோ?
காமவேதமோ? காதல் தீட்சையின் மந்திரமோ?
காதலின் அட்சய பாத்திரமோ?
கன்னியிவள் காதலிற்கு மூவுலகும் ஈடாகுமோ?

காமதேனுவும், கற்பகதருவும் கன்னியின் சுகம் தருமோ?
எண்ணித் துடிக்கும் இதயம்-ஏந்திழையாள் காதலுக்கு ஏங்கித் தவிக்க,
காளையர் மனமோ காதற் காமம் வருத்தும் துன்பக் கேணி
தேவதையோ வரமிருந்தும் கிட்டாத காதல் கனி

இடைதொட்டு நடையோடு பூங்குழல் சதிராட, மதி நுதலில்
பூத்த திலகம் பௌர்ணமி என்றே கூத்தாட, முத்துப்
புன்னகையும் திரண்ட இளமுலைகளும் பூத்த காமன் சோலை
காதல் வைபோகத்தின் வண்ண மலர் மாலை

மோட்ச இன்பம் இவள்தானோ? நெஞ்சை வாட்டும்
காதற் காமத்திற்கு தொட்டணைத்தாலே தீரும் சஞ்சீவினி
பாமினி, மதலேன் மரியாள்தானோ?

கானம் பாடும்போது குயிலின் கோலம், நடனம் ஆடிட
தோகையின் ஜாலம், காளையர் நெஞ்சிலே காதலின் கோலம்
கன்னியோ அழகின் அமுதகானம்

மோகமுள் தைத்து இதயம் நோக, காமன் கணைபட்டு
கல் மனமும் வேக, அலை கடல் துரும்பாய் வாடிய ஆண்கள்
காதற் காமத்தில் ஆகுதியான மோக மனங்கள்

கண் பட்டு, காமன் கணைபட்டு புண்பட்ட வேதியர்
கடைக்கண் பார்வைக்குத் தவமிருந்து ஏமாந்த காமுகர்
எட்டாக் கனியான கன்னிக்கு கண்ணி வைத்தார்-பரத்தை,
விபச்சாரி அபாண்டமாய் பழி சுமத்தி வஞ்சம் தீர்த்தார்





இறக்கையிழந்த வண்ணமயில் பறக்கத் துடிக்க
கானம் மறந்த புள்ளிக்குயில் கேவிக் களைக்க
வேடன் வலைபட்ட புள்ளிமான் அஞ்சி நடுங்க
சுந்தரியைச் சுற்றி வளைத்த ஓநாய்க் கூட்டம்

மையேந்தி ஆடிய பூவிழிகள் நீர் சிந்தி வாட
வளை ஏந்தி ஆடிய பூங்கரங்கள் சிறைப்பட்டு நோக
மலர் ஏந்தி ஆடிய சுரிகுழல் புழுதி பட்டு வருந்த-கார் கண்டு
ஆடிய தோகை-காலன் வரவு கண்டு முடமான பாவை

பூங்குழலோ கயவர் கரம்பற்றிக் குலைந்திருக்க, பூந்துகிலோ
கைபட்டு நொந்து கிழிந்திருக்க, பூவிழி வாட, தேன் மொழி குளற,
அச்சத்தில் நடுங்கிச் சோர்ந்த அழகு மயில்-உச்சத்தில்
அன்ன நடை பின்னிட மண்ணில் வீழ்ந்த பெண்ணோ ஓயில்



மலர்முகம் மண் பார்த்துச் சோர்ந்திருக்க-பூ மனதை
மரணபயம் சூழ்ந்திருக்க, காக்க, காக்க என்றே கடவுளைக்
கூவிய பைங்கிளி, சோகச் சிறையிருக்கும் சோகவனத்து
மைதிலி, துச்சாதனன் கைப்பற்றிய புதிய திரௌபதி

விம்மிடும் மார்பில் பெருமூச்சின் அவலம்
விழிநீர் மலர்களில் கங்கையின் ஈரம்
கலைந்த கலிங்கத்தில் பாஞ்சாலியின் துயரம்
இராகமாலிகையில் வஞ்சகரின் அபசுரம்

கரம் பற்றிக், குழல் பற்றிக், கலிங்கம் பற்றிக் மண்ணும், புழுதியும்
மலர்மேனியைப் பற்ற காமத்தீப் பற்றிய ஓநாய்க் கூட்டம், கன்னியை
தரதர என் இழுத்து வர, காலுடைந்த சின்னப் புள்ளிமான்
கதறியது, சிறகொடிந்த வண்ணப் புள் கேவியது

குபேரருக்கு மஞ்சம் விரித்த விலை மாது, குற்றம் சுமத்திக்
கூட்டம் சேர்த்தார் திருச்சட்டத்தை ஆயுதமாக்கி -திருமகளை
விலைமகள் என குற்றம் சொன்னார் வஞ்சகப் பரிசேயர்

ஒரு கல்லால் இரு மாங்காய்களை அடிக்க
ஒரு சதியால் இருவரையும் வீழ்த்த
அன்னை மகன் முன்-அணங்கை நிறுத்திய
அடங்காக் காமத்தால் துன்புற்ற அசடர்



நெஞ்சமோ வஞ்சிக்கு மஞ்சம் விரிக்க, கண்களோ கட்டழகை
மேய்ந்து காமப்பசி தீர்க்க, கரங்களோ பற்றிய மேனிச்சுகத்தில்
சுகம் காண, உத்தமராய் வேதமோதும் வெளிவேடக்காரர்
சத்திய சீலனிடம் குற்றம் காண -போலி வினயத்தோடு வினவினார்

கையும் மெய்யுமாய் விபச்சாரத்தில் பிடிபட்ட விலைமாது-
கல்லெறிந்து கொல்லுதல் திருச்சட்ட நீதி-போதகரே
உம் பதில் என்ன? நீரோ அன்பின் வழுவாத நியதி
திருச்சட்டத்தை அன்பால் புடமிடும் இரஸவாதி

அமலனைக் கண்ட விழிகள் ஆறாத் துயரில்
கண்ணீர் பொழிய, மொழி கேவ, அபயம் என்றே
நிமலன் பாதம் சரணடைந்த பேதை-நெஞ்சில்
கோடிச் சோக அம்புகள் தைக்க வாடிய கோதை

பார் பூத்த இறை வார்த்தை-இளங்கதிர்போல் ஒளிர, பார்த்த விழிகளில்
பரிவும், பாசமும் இழையோட கருணை பொழியும் எழில் முகம்
அபயமளித்து ஆறுதல் மொழிய, நீர் பூத்த விழிகள் மலர்ந்து சிரிக்க
நெஞ்சில், நிம்மதி நிலவிட, அமைதி கண்ட மங்கை




கார்குழல் தோளாட-கருவிழிகள் சுடர் வீச, வாழ்வுதரும்
வார்த்தை மௌன மொழி பேச, சாந்தமும், தாழ்ச்சியும் ஒன்றான
சாந்தரூபன், மண்ணமர்ந்த அழகு, மனதை மயக்க-வார்த்தை
மனுவுருவான கோலம் நங்கை கண்ட திருக்கோலம்

வாழ்வளிக்கும் வார்த்தையை, ஓங்கார நாதத்தை, ஆதியோடு ஆதியில்
ஒன்றான சச்சித்தானந்தத்தை பரிபூரணனை, அநாதரட்சகனை
சுத்த சைதன்யத்தை கண்டாள், எளிமையின் திரு, கருணையின்
வடிவாய் தரையில் அமர்ந்திருக்க நெஞ்சில் அமைதி கொண்டாள்

சத்தியமாய், சாந்தியாய், ஆனந்தமாய் அமர்ந்திருந்த அழகு
நெஞ்சுக்கு நிம்மதி தர, பார்க்கப் பார்க்கப் பரவசம் தரும் அழகை,
இளையவள் ஈரவிழிகளோடு வியந்து பார்த்தாள்

சுட்டும் சுடர் விழிகள் அருள் பொழிய, சுந்தரேசன் இருப்போ அபயம்
மொழிய, மண்ணமர்ந்த சௌந்தரராஜனின் திருக்கோலம்,
சுந்தரியும் அதிசயிக்க அடியார்க்கினியனோ, அடைக்கலநாதன்

“மேனி அழகைக்” கண்ட கயவர் “மெய்மையின்”
பேரழகைக் காண உள்ளத் தூய்மை இல்லாப் பாவம்,
குற்றம் காணும் இதயத்தில் இருளே எந்நாளும் வாழும் சாபம்

நொருங்கிய உள்ளம் உருகிக் கரைய-தேடிடும் தெய்வமும்,
தேவமகனும் இவர்தான் மனம் சொல்ல, உயிரும் மெய்யும்
ஒன்றாய் அக்களிக்க, அன்பர்கன்பனிடம்
அபயம் என்றியம்பி அமைதி கண்ட அபலை மனம்






வெற்று ஆடம்பரம் வீணே, விரயமே
அழகும் அழியும் என்பது நிஜமே-உண்மை சுட,
நெஞ்சைத் தொட அழுதாள் பேதை

மெய்யப்பன் காட்சி மனதிற்கு அமைதி தர
பொய்மையின் சூழ்ச்சி பொய்யாகும் மனம் சொல்ல
ஐயப்பன் கண்களும் பரிவோடு ஆறுதல் மொழிய
ஐயன் திருவடி அபயம் என்று சரணடைந்த பக்தை

பார்த்த விழிகள் பாவையின் பரிதாபத்தைப் புரிந்திட
நீர் பூத்துச் சிவந்த சேல்விழிகள் அபயம் என்றே கெஞ்சிட
வஞ்சம் பூத்த நெஞ்சங்களின் வெஞ்சினம் அறிந்தவர்
கல்மனங்களின் மனச்சாட்சி விழித்துப் பழிக்க
கயவர்தம் தீர்ப்பை மண்ணில் எழுதினார்



நல்லவராய் நயவஞ்சகர் ஆடும் நாடகம் நாறிட
காமுகர் மனம் மாறிக் காரிகையின் துயர் ஆறிட
கரம் பற்றிய கற்களும் நழுவிட-
“*உங்களில் குற்றமில்லாதவர் கல் எறியட்டும்*”

மனம் வெம்பிய கும்பலைப் பார்க வெறுப்புற்றவர்
குனிந்து மணலில் மீண்டும் எழுதினார்
குருட்டு நீதி பேசும் மானுடர் இறுதித் தீர்ப்பை

கல்லில் பொறித்த எழுத்தாய்-அன்புக் கட்டளைகள், காலமெல்லாம்
வாழ்வில் நிலைத்திருக்க, அன்பினால் இன்புற்று ஒரே குடும்பமாய்
வாழப் பணித்தவரைப் புறந்தள்ளி, காலவெள்ளத்தில் பலி,
சட்டம், சடங்காய் சீரழிந்த மதம், கள்வர் குகையான ஆலயம்

மண்ணால் ஆனவர் தீர்ப்பை மண்ணில் எழுதிட
மனச்சான்றும் விழித்தே மண்ணவரைப் பழித்திட
கல்லும் கனலாய் சுட்டுத் தகித்து கை நழுவிட
வெட்கி, விரைந்து மறைந்த விபச்சார குலச்சந்ததி

கொலைவெறி தணிந்து கூட்டம் மறைந்திட
கூற்றுவன் துரத்திய கோதை மனமும் ஆறிட
அச்சம் மறைந்திட, ஆனந்தி மனதிலே நிம்மதி

உந்தன் சந்நிதியில் நான் கண்டேன் நிம்மதி
இறைமகனே, நீயே நான் தேடும் பெருநிதி
காற்றாய் மாறிப் பூவாய் மலர்ந்த உள்ளம்
கன்னி நெஞ்சுக்குள் பூத்த ஹிந்தோளம்





*"அம்மா உன்மீது குற்றம் சுமத்தியவர்கள் எங்கே?*
*யாரும் உன்னைக் குற்றவாளி எனத் தீர்ப்பிடவில்லையா?*
இல்லை ஐயனே மொழிந்தவளுக்கு, நானும் தீர்ப்பிடேன்
அமைதியோடு செல்க, பரிவுடன் மொழிந்தவர் பாதம் தொழுத பூவை

பாவிக்கு வாழ்வு தந்தவர் பரமனோ?, தேவன் உண்டென்பதற்கு
திருமகனே சாட்சி, கூப்பிய கைகள் தொழுது பணிய
அஞ்சிய நெஞ்சில் அமைதி பூத்தாட, பாவம் பொறுத்து
வாழ்வளித்த தெய்வத்தை, தொழுதாள் கொழுநன் தொழாள்



தொழத்தக்க தூய்மையின் பேரழகை,
ஊர் போற்றும் பேரழகு கண்டு வியந்தது
வாழ்வு தந்த தெய்வத்தை, அழகும்
கண் கண்ட தெய்வமாய்ப் போற்றி மகிழ்ந்தது



அழியும் ஊனழகிற்காய் அலைபாயும் உலகு, அன்போ
அழியாப் பேரழகு , காக்கும் கருணையோ இறையழகு
உடைந்த உள்ளம் உணர்ந்து, உவகையோடு நன்றி சொல்லி
தேவப்பிரியனை பிரிய மனமின்றிப் பிரிந்தது

பொய் வாழ்வு வாழ்ந்தவள் மெய்வழி கண்ட பெருநாள்
மரண தண்டனைக் கைதி புதுவாழ்வு வாழ
மாகருணை உயிர்ப் பிச்சை ஈந்த திருநாள்

பரிதவித்து வந்தவளோ, பொய்யும் புரட்டும் புகையாய்
கலையக் கண்டாள், புடமிட்ட பசும் பொன்போல்
உள்ளம் ஒளிர, புண்ணியனே இனி உன் அடிமை நான்
என் வாழ்வும் வளமும் -உனக்கே காணிக்கை என்றாள்.

விழிகண்ட மன்னவனை -விலைமகள் எனப் பழி சுமந்த
பேதையைக் காத்த இரட்சகனை உயிரும் , மெய்யும்
வாழ்த்திப் போற்ற, எண்ணி களிக்க-இளையவள் நெஞ்சில்
இளமுல்லையாய் பூத்த முதற்காதல்

கார் கண்ட தோகையென மனம் ஆட, கண் பெற்ற
அந்தகன்போல் விழிகள் பூக்க, மழை கண்ட பயிர்போல்
மனம் செழிக்க-காதல் சிறகை காற்றினில் விரித்து-
வானவீதியில் பறந்த தோகை-கானக்குயிலான பாவை



எண்ணும்போதும், எழுதும் போதும், இதயம் துள்ளிக் குதிக்க,
நாணித் தவிக்க, மையிட்ட சேல்விழிகள் மயங்க, மனம்
ஒற்றைகுயிலாய் பண்ணிசைக்க, பசி மறந்து, பஞ்சணை துறந்து
கனவும் நினைவும் அவராகிக், காதலாகிக் கனிந்த கன்னி மனம்

அலைகடலாய் மனம் எழுந்து வீழ்ந்து தவிக்க-இதுவரை
அறியாத சுகமும், வெறுமையும் நெஞ்சைக் கவ்வ
மயங்கி நின்ற நங்கை, காதல் இதுதான் என்ற மங்கை

யாதுமாகி நின்றென்னைக் காத்தாய் , யாதுமானவனே,
என் மன்னவனே, இனி யாதும் நீயே எனக்கு, என்னுயிரும்
உடமையும் உனக்கே, மைவிழியும், பூ மனம் பூத்துக்குலுங்க
காதலாகிக் கரைந்து நின்றாள் பூங்கோதை

மன்னவனை எண்ணங்களால் கவிதையாக்கி வண்ணங்களால்
சித்திரமாக்கி-சித்திரப்பாவையும், காதல் சித்தப்பிரமையில்
வாடினாள் இதுதான் காதலா?, இதயத்தின் தேடலா?
உள்ளமுருகப் பாடினாள் பூங்கோதை



மெல்லிடை மெலியக் -கோவை இதழ் வெளிறக், குவளை விழிகள்
சிவக்க, மதி முகம் கறுக்க, தூக்கம் துறந்து வாடுகிறேன்,
உயிர் மெய் ஒன்றாய்ச் சோர, மூச்சும் பெருமூச்சாகிப் பூ இதயம்
கொதிக்க, பொன்மேனி வண்ணம் குன்றிடச் சோருகிறேன்

ஒரு தலைக் காதல் வருத்த, காமண் கணை பட்டு காதல் நோயுற்றேன்,
தேன்வண்டுக்காய் மதுமலரே ஏங்க, என் தேவனிடம் , அன்னமே
தூது செல்லாயோ? பூங்குயிலே கோமகனிடம் என் காதலைக்
கூவிச்சொல்லாயோ? மெய் மெலிந்து, உயிர் நலிந்து சோர்ந்த பூவை

மையல் கொண்ட தையலாள் மைவிழிகள் மனுமகனைக் காணாது
கண்ணீரில் கரைய, மதுமலர் கூந்தல் நெய்யிழந்து வாட-மலரின்றிச் சோர,
நெஞ்சும் நினைந்துருகிக் கரைய, கைவளையும், கால் கொலுசும்,
தளிர் நடையோடு காதலியாள் சோகம் சொல்லிப் புலம்பியதே

எண்ணி ஏங்கி அழுதவள்-பசியும்
மறந்தாள் பஞ்சணையும் துறந்தாள்-நெஞ்சில்
இறைநேசரைக் காதல் கொண்ட தோகை

கதிர் காணாக் கமலம்போல் மலர் முகம் வாட, இணையின்
இசைக்கோலம் கேளாமல், கோகிலத்தின் பூஞ்செவிகள் சோரக்
கார் காணாது கலாபமயிலும் ஏங்க, பாலும் கசந்து-மலர்ப்
பஞ்சணையும் நொந்திட, தேய்பிறையான பால் நிலவு

என் தலைவனோ எளிமையின் வடிவம்
எல்லோரும் நலம் வாழ நல்வழி காட்டும் நல்லாயன்
மழையும் , வெயிலும் வாட்ட-பசியும் குளிரும் தீய்க்க வாடும்
எளியோன், கூடும், வளையும், வீடுமில்லாத நாடோடிப் போதகன்




வண்ணமலர்கள்தான்-அந்தி வந்ததென்று வாடி உதிர
வாசமுல்லைதான் கொழுகொம்பின்றிப் புழுதியில் அலைய
என்னுள்ளத்தின் ஏக்கம்-இறைமகனே அறியாயோ? கண்ணீர்
துடைத்து காதல் பிணி போக்க கண்ணாளனே வாராயோ?

சின்னக் குயிலும் துணை தேடிக் கரைய, சந்திரனைக்
காணமால்  அல்லி மலர் வாட, என் வான்மதிக்கு
அமாவாசை என்று தேம்பிய மதுமதி

மாதவனைத் தேடி மனம் ஒற்றைகுயில்போல் கரைய, விழிப்பிலே
நினைவாகி, துயிலிலே கனவாகி என்னைத் துன்புறுத்தும்
காதல் தீ அணைக்க என்னை கட்டித் தழுவ வாராயோ?

கடித்துச் சுவைத்து இதழ் விடாய் தணிக்க, கிளர்ந்து
குமைந்து குதுாகலித்து, உன்னைச் சேரத் துடிக்கும்
என் உயிர், அமைதிகொள்ள காதல் தருவாயோ ?
பாடி அழைத்து சூடத் துடித்த ஆண்டாள்



உன்னை எண்ணிப் பொன்னுடலும் வாட, உன்னுயிராய்
மாறி என்னுயிரும் தவிக்க, தனிமை என்னைத் தீய்க்க
உன்னைப் பிரிந்து தவிக்கும் இளமனசு

கயல் விழிகளுக்கு இனி மையில்லை, பூங்குழலிற்கு மலரில்லை,
வாச நெய்யில்லை, பூங்கரங்களுக்கு வளையில்லை-பூவைக்குப்
பட்டில்லை, பிறை நுதலிற்குப் பொட்டில்லை-பாதங்களில்
சிலம்பில்லை, பாவை உறங்கிடப் பஞ்சணையில்லை

அறுசுவை உணவிருந்தும்
அன்னம் துறந்து, அன்னம் மெலிந்தாள்
பதிவிரதையாய் நோன்பிருந்து
பத்தினியாய் காதல் தவமிருந்தாள் மாது

பொன்மேனி தழுவாமல் பூமேனி வாட, கொழு கொம்பின்றி காதற் புயலில்
பூங்கொடி வருந்த, முத்த விடாய் கொண்டு செவ்வாய் தகிக்க,
நெஞ்சம் கொதிக்க, மோகத்தீ எரிக்க, கட்டியணைத்து காதல் தீ
அணைப்பாயா?-முத்த மழையால் காதல் விடாய் தணிப்பாயா?



உன் அழகைக் காணமல், என் விழிகளும்-இமைக்கதவை
மூடாது, விழித்தே தவமிருக்கும், வாட்டும் காதற் காமம்-
கண்ணாளனே உன்னைக் காணாமல் குணமாகாது
கொதித்தே என்னை எரித்திருக்கும்

உன் இதழ் கொண்டு என் இளமேனி அளப்பாயா?
உன்னை நினைந்து மெலிந்த நூலிடையையும்
பொற்கரங்களால் தழுவி நலமளிப்பாயா?

காற்றையும். கடலையும் அடக்கி, சீடரைக் காத்த பெருமானே,
பூ நெஞ்சைப் புண்ணாக்கும் என் காதற் புயலைக்
கட்டி அணைப்பாயா? காதல் மொழிந்து அடக்குவாயா?

காமன் கணைபட்டு, பசலை நோயுற்று, விரகதாபத்தால்
உள்ளம் வாட, பூ மனதில் சோகப் புயல் வீச,
சேல் விழிகளிலோ கண்ணீர் வெள்ளமிட, மனதிற்கும்,
உடலிற்கும் மருந்து இன்றி மயங்கி நின்றாள் மாது

நோயுற்ற மாது -உன் ஆடைத்தொங்கலைத் தொட்டுக்
குணமானாள், பசலை நோயுற்று விரகதாபத்தால் வாடும்
மனதும்-உன்னைத் தொட்டணைத்தாலே குணமாகும்

வசைகேட்டு வாடிய சிந்தையும்
செவிகளும் குளிர-வாசத்தைலத்தால்-
கருங்குழலை அபிஷேகித்தேன்

புழுதியால் வாடிய உன் பொற்பாதங்களை, கண்ணீரால் நீராட்டி,
முத்தமழையால் பாத பூஜை செய்து, நறுமண தைலத்தால்
காப்பு வைத்து, கார் குழலால் துடைத்து, காதலால் உன்னைச்
சேவித்தே, என்னைக் காணிக்கையாக்கி நின்னடி சரணம் என்றேன்

கண்ணீரால் என் காதலுக்கு அங்குரார்ப்பணம், பாத பூஜையால்
என்னையே உனக்குச் சமர்ப்பணம், காதல் மொட்டவிழ-தேன் சிட்டாய்
என்னைப் பருகி- என் விடாய் தணிப்பாயா? சருகான மலர் மீண்டும் மலர
காதல் மழையால், ஆயிழையாளுக்கு புத்துயிர் அளிப்பாயா ?
கண்ணாளனே!. பாவி என் காதலுக்கு தடை சொல்வாயா?

பரம்பொருளே, இறை மகனே-உன்னைக் கண்டு மலர்ந்த
என் இதயமும் காதலாகித் தவிக்க, வானமுதே உன்னை
உண்டு தவிக்க, என் சித்தம் நினைப்பு செய்கை எல்லாம் உனதே
அடிமையை ஆட்கொண்டு, எனையாள்வாய் என் பெருமானே.



உன் பொற்பாதம் பூஜித்து என் உள்ளமும் உன் வசமானது.
உன்னைத் தொட்டதனால் உள்ளம் குணமானது
விழிநீர் சிந்தி பொற்பாதம் கழுவியதால் புனிதவதியானேன்
உன்னைத் தொழும் பாக்கியவதியானேன்.

நினைப்பதற்கு உனையன்றி நினைவில்லை, உண்மையாய்
என்னை நேசிப்பதற்கு, உன்னைத் தவிர எனக்கோ யாருமில்லை
என் உடல், பொருள், ஆவியும், உடைந்த  காதல் இதயமும்
பெருமானே உனக்கே அர்ப்பணம்

நதியாய் ஓடி கடலே உன்னோடு என் காதல் சங்கமம்
மழையாய் வீழ்ந்து –செம்புலப் பெயல் நீர்போல்
மண்ணே, உன்னோடு என் ஐக்கியம்

பூவாய் மலர்கின்றேன்-சூடிக்கொள்ளாயோ?
அமுதாய் இனிக்கின்றேன்-என் காதலே
அருந்தி என்னை ஆட்கொள்ளாயோ?



என் மலரளந்த கார்கூந்தலில் -மாமலராய்
உன்னைச் சூடக் கண்டேன்-மாசறு
உன் திருமேனியில் வாசச் சந்தனமாய் எனைப் பூசி
நான் மணந்தேன், உள்ளம் குளிர்ந்தேன்

கொஞ்சிப் பருகும் காதல் மதுவாய் உன்னை நெஞ்சில்
ஊற்றிக்கொண்டேன், மையணிந்த என் சேல்விழிகள்
மெய் காண காதலாகிப்- பேதை
உன்னை மெய்காட்சியாய் கொண்டேன்-

நேசரின் அணைப்பின்றி பஞ்சணையும் பாலையாய் கொதிக்க
இனியவர் இதழமுதம் பருகாமல் செவ்விதழ்களும் காய்ந்து கறுக்க
பொன்மேனி தழுவாமல் நூலிடையும் நொந்து மெலிய
திருவடிவம் காணாமல் சேல்விழிகளும் மங்க வாடினாள் பூவை

அன்பரின் அணைப்பின்றி கிளர்ந்து குமைந்து பொங்கிய
செங்கலசக் கொங்கைகளும் சோர, கூப்பிய மலர்கரங்களும்
கொழுநன் தாள் தொழத்தவிக்க, பாலும், மலைத்தேனும்
பாகாய் கசக்க, உயிர் வாடி, உடல் மெலிந்த திருப்பாவை

பூ உள்ளமும் வாடுதடி உயிர்த்தோழி, பூ மஞ்சமும் காயுதடி
-நீயேனும் என் காதலுக்கு தூது செல்லாயோ?
சொல்லி மாய்ந்தாள்-விரகதாபத்தால் வாடி
பசலை நோயுற்று வருந்திய காதலி

செவ்வாய்ச் சுவை தெள்ளமுதோ? மலைத்தேனோ? பொன்மேனி
வாசம் அகிலோ? சந்தனமோ? இவர் அணைப்பின்றி அணையுமோ
என்னைத் தீய்க்கும் ஆனந்த உணர்வு? எண்ணும்போதே என்
சுவாசத்தில் பூவாசம், என்னுள் காதல் பூம்புனல் பாயும் பரவசம்



அங்கமெல்லாம் பூத்துக்குலுங்கும் அழகை
அர்ச்சனை மலராய்த் திருவடி கொட்டத் தவிக்கின்றேன்
சூடிக்கொடுத்த மலர்மாலை-நீ சூடாமல் வாடிக்கிடக்க
பூங்கோதை மனமும் காதற் காமத்தில் வேகிக்கருகுதே

பொன்மேனி தழுவாமல்-பூவை என் கொடியுடல் வாட
உன் பூ முத்தம் சுவைக்காமல் காதல் தேனீ நான் வருந்த
என் இதயக்கோயிலும்-தெய்வமே நீ இன்றிப் பாழ்பட,
ஒற்றை குயில்போல் கரைந்து- உனைத் தேடி காற்றினிலே வரும்
என்தன் காதல் கீதம் கேளாயோ? மனம் இரங்காயோ?

என் இதயப் பூவனமும்-கதிரே உன் உதயமின்றிக்
கறுத்திட, வாட்டும் காதலால்-கண்ணாளனே
வாடும் மலரானேன், காயும் நதியானேன்.
கருணை காட்டு என் காதலனே, கண்ணாளனே



என் காதல் நிலவே, நீயில்லா என் மனவானில்
அழகில்லை, எந்நாளும் அமாவாசை இரவே
உன்னை காணாத கண்களில் ஒளியில்லை
அந்தகனின் அழியாப் பேரிருளே-

உன் மொழி கேளாத செவிகளில் யாழும், குழலும் பாகாய் கசக்க
உன்னோடு காதல் மொழி பேசாமல்-என் கனி மொழியும்
கவித்துவம் இழக்க, கானம் மறைந்து ஊமைக் குயிலான பாவை
அன்ன நடையும் முடமாக நடைப் பிணமான வண்ணத் தோகை

எரியும் என் இதயமோ தீபாஞ்சலி, காதல் இசை பாடும்
மனமோ கீதாஞ்சலி, கொதிக்கும் என் சுவாசமோ தூபாஞ்சலி
மங்கை நானோ உனக்கு மலரஞ்சலி

என் இதயத்துடிப்பும் என்னவனே கேட்கவில்லையா?
என் இதய கீதமும் மன்னவனே உன்னைச் சேரவில்லையா?

ஒரு தலைக் காதலால் வாடும் என் நெஞ்சில், கசை வதைத்து,
வசை சிதைக்க, கழுமரம் சுமக்கும் துயர் என்றுதான் மாறுமோ?
காதலும் எனக்கு சிலுவைதானா? கல்வாரிப் பாதைதானா?

பேதை நெஞ்சமும் உன்னைச் சேரவே தவிக்கும்
சின்ன இதயமும் உன் பெயர் சொல்லியே துடிக்கும்
என் சித்தம், நினைப்பு செய்கை எல்லாம்
உன் அன்பிற்காய் எந்நாளும் தவமிருக்கும்.



நீரைத் திராட்சை மதுவாக்கி மணவீட்டின் மங்களம் காத்தாய்
நிலை குலைந்த காற்றையும், கடலையும் சீராக்கி-அன்புச்
சீடரை மீட்டாய்- தீய ஆவிகளைத் துரத்தி பேரானந்தம் ஈந்தாய்
காதலாகிப் பொங்கித் தவிக்கும் பேதை மனம் அடங்கிட
அணைப்பாயா? ஆனிப்பொன்மேனி அமைதிகாண
காதல் வரம் அருள்வாயா? கண்ணாளனே

பால்போல் பொங்கிப் பௌர்ணமி நிலவுபோல் பூரிக்கும்
என் காதல் மனம் பாராயோ? உன்னை எண்ணிட
பொன்மேனி எங்கும் நாணம் போடும்-காதலின்
வண்ணக்கோலங்களை நீ காணாயோ?

அர்ச்சனை மலராய் உன்னைச் சேர ஆசிக்கின்றேன்
அணைத்து என்னையும் அர்ச்சனையாய் ஏற்பாய்
காதல் வேள்வியில் ஆகுதியாய் எந்தன் சமர்பணம்
ஆட்கொண்டு காப்பாய் அன்பனே! எனையாளும் ஆண்டவனே

தொழுநோயாளியை, பரிவோடு தொட்டுக் குணமளித்தாய்,
காதல் காமத்தால் நலியும் என் கட்டுடலை
கட்டியணைத்து காதல் சுகம் தருவாயா?



உன் கனிரச முத்தங்களால், வற்றி தீர்ந்த காதல்
மதுவையும், என் இதழ்களில் வற்றாமல் காப்பாயா?
உன் காதல் இன்றி எரிநரகில் வேகுகின்றேன்
காதலா, காதலாகி என்னை மீட்பாயா?

நல்ல கள்வனுக்கு ஈந்த பரகதியை நாதனே உன்னை
எண்ணி ஏங்கும் அபலைக்கு , உன்னோடு எந்நாளும்
வாழ அருள்வாயா? உன் இதயத்தில் இடம் தருவாயா?

இறந்து அடங்கிட்ட இலாசரும் எழுந்து வாழ
வரமளித்தாய், இழிந்த வாழ்வில் நிலை குலைந்த
அபலைக்கும் புனர் வாழ்வு அளிப்பாயா?

என் உள்ளம் காதல் கொள்ள-ஆணாய், உனையன்றி
எவருமில்லை, என் ஆனிப்பொன்மேனியும், ஆவியும்
ஈசனே, உனக்கே என் தன் காதல் காணிக்கை
ஏற்று என்னை மீட்டருள்வாய் என் பெருமானே



சுந்தரனோ?, இளஞ்சூரியனோ? என் இதயத்தை வாட்டும்
காதல் மந்திரம் இவர் பெயர்தானோ?-என் இந்திரியங்களும்,
இதயமும் இவர் பெயர் கேட்டு மயங்க, மழை கண்ட பயிராய்
அபலை மனமும் துளிர்க்க, கண்ணாளனே வருவாயா?

இவரின்றி என் உயிர் மெய்யும் இயந்திரம்போல் இயங்க
அல்லி என்னை அந்தியில் தழுவி மகிழும் சந்திரனாய் வருவாரோ?
தாந்திரிகத்தால் நாமும் ஒன்றாகி சுத்த சைதன்யம் ஆகிட
என் காதலுக்கும் உயிர் தருவாரா?

உன் காதலின்றி என் பூமேனியும் வாட, என் இதயமும்
உன் அணைப்பின்றி, மதுரசம் தீர்ந்த மணவீடாய்க் காய
உயிர் கொடு-உன் இதழ் அமுதத்தால்,
என் காதலுக்கு வாழ்வு கொடு

மணவீட்டின் புது திராட்சை மதுவாய், உன்னைப் பருகிடக்
காதல் கொடு, காலமெல்லாம் நம் காதல் வாழ
வாசமலராய் என்னை சூடு, கண்ணீரால் பாத பூஜை செய்து
காதலைச் சொன்னேன், இன்னும் ஏனிந்த மௌனம்?

சிலுவையடியில் கதறியழுதே-அன்னை மரியோடு
அபலை நானும் நின்றேன்
ஒரு மொழியேனும் எனக்கும் சொல்லு

உன்னை காணாது என் விழிகளும் காய, ஆயனில்லா ஆடுகள்போல்
என் நினைவும், பல திக்கும் பாய்ந்தோட-விரகதாபமோ
ஓநாய்போல் துன்புறுத்த வாடுகின்றேன், அன்பே என் நல்லாயனே
என்னைக் காக்க வருவாயா? காதல் பசும் புல்வெளியில் மேய
காதல் பசியாற அருள் புரிவாயா? வரம் தருவாயாய?

பெண்ணோ பேரின்பப் புதையலோ-இவள்
பிறவிப்பயன் போக்கும் ஆனந்தப் படையலோ இவள்
கண்டவர் மயங்கும் பேரழகு மங்கை
காதலால் ஆட்கொள்ளத் திருமகனை அழைத்தாள்

காதலாகிக் கனிந்த கனி, பணிந்தே இறைமகன் காலடியில்
ஒற்றை குயிலாய் உருகிக் கரைந்த கன்னி
பௌர்ணமி நிலவாய் பூரித்த பெண்மை-காதலால்
உருகிக் கரைந்திட தேய்பிறையின் தன்மை





உன்னோடு வாழவே என் உயிர் துடிக்கின்றது
உன்னாலே என் பெண்மையும்
என்னுள் உயிர்த்தது- துளிர்த்தது

போகியாய் வாழ்ந்த பேரழகிக்கு–பாவிக்கு
புத்துயிர் அளித்த இறைமகனே-என்னுயிரே
உன்னோடு வாழவே என் இதயம் தவமிருக்கின்றது

நீயின்றி என் மெய்யிலும் உயிரில்லை, இதயத்திலும்
துடிப்பில்லை-சுவாசத்திலும் மூச்சில்லை-
என் வாழ்விற்கும், என் வசந்தமே பொருள் இல்லை

உம்மைச் சிலுவையில் சிதைத்தபோது, காதல் சிலுவையில்
நானும் சிதைந்தேன், கல்லறையும் கொள்ளாத
உன் திருவுடலை-பத்திரமாய் நெஞ்சுக்குள் பூட்டி
பொக்கிஷமாய் காத்தேன்



பரிவோடு கல்லறைத் தோப்பில் உன் காட்சி
பரந்தாமனாய் உன் மாட்சி
கண்டு கட்டிக் கொண்டேன்-காதலாகிக் கனிந்தே
உன்னை விட்டுப் பிரிய மனமின்றிப் பிரிந்தேன்

இழிந்தவள் எனக்கும் உன் உள்ளத்தில் உயரிடம் தந்தாய்-
உயிர்த்து முதலில் , எனக்கே காட்சி தந்து-
சீடரில் ஒருத்தியாய் என்னையும் ஏற்று வாழ்வளித்தாய்

கசைகள் உழுத உன் பொன்னுடலை,
கட்டியணைத்து ஆறுதல் சொல்லத் துடிக்கின்றேன
ஆணிகள் துளைத்த உன் மேனியை
முத்தங்களால் ஆற்றிடத் தவிக்கின்றேன்

கழுவிக் களித்த உன் பொற்பாதங்களை, காயத்தால் புண்பட்ட
திருவடிகளை கண்ணீரால் கழுவி, கார் குழலால் துடைத்து
தைலத்தால் மெழுகி- முத்தத்தால் மருந்திட்டு-என்
இதயதெய்வமே பாத பூஜை செய்திட ஆசிக்கின்றேன்

ஈட்டி துளைத்த இதயத்தை- காதல் இதயத்தால்
ஆற்றிடத் துடிக்கின்றேன் முள்முடி தரித்து நொந்த
பொன்முகத்தை மார்போடணைக்கத் துடிக்கின்றேன
என் காதலே!, என் காதலை நீ அறியாமல்,
யார் அறிவார், எண்ணியே மனம் குளிர்கின்றேன்.

அண்ணகர் வாழும் உலகில், ஆணாய் கண்டதும்
உன்னைத்தான், கன்னி மனம் தேனாய் இனிக்க
காதல் கொண்டதும தேவனே, அழகன் உன்னைத்தான்

பூவாய் தன்னை சூடிக்கொடுத்த பூங்கோதை
காதல் பிச்சைக்காய் உன்னைக் கெஞ்சும் பாவை
ஆட்கொள்வாய் அருளாளனே என் பெருமானே



என் நெஞ்சுக்குள் நீயிருக்க- கல்லறையில்
உன்னைத் தேடிய காரிகையோ பேதை, என் கண்களுக்குள்
நீயிருக்க கனவில் தேடிய பூவையோ அபலை

நீயே என் வாழ்வு, உன் உள்ளமே என் காதல் உலகு
காதல் பாவமல்ல-காமமும் பாவமல்ல
காமம் கடந்தால் கடவுளே, காதல், காதல் காதல்,
காதல் போயின் சாதல், சாதல்

வானவன் வார்த்தையோ -நிலை வாழ்வு தரும் வானமுதோ
பாலையின் குரல் மொழிந்த தேவ நீதியோ
பாவிகளுக்கு நண்பனான அமைதியின் தெய்வமோ?
முள்முடி சூடி-மூன்றாணிகளால் கழுமரத்தில் தொங்கியது



காதல் நெஞ்சைத் துளைத்த ஈட்டி-
கன்னித் தாயவள் நெஞ்சிலே சோகத்தின் ஆட்சி
**கன்னி நெஞ்சிலோ அழியாக் காதலின் மாட்சி**

**காதல் பாவமல்ல-காதலிக்காதவர் யாருமிலர்**
**காதலே முதல் வேதம்-மனிதம் நிலைக்க**
**இறை தந்த ஆசிர்வாதம்**



**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
Pax Ravichandra-19-10-2023

# சமாரியப் பெண்-ஜீவ நதி

இருள் சூழ்ந்த காலமில்லாக் காலத்தே-ஓம் என
அதிர்ந்த ஓங்கார நாதம் - **ஒளி உண்டாகுக**
ஆதியின் வார்த்தையோ பிரணவம்





இருளிலிருந்து ஒளிக்கு, மரணத்திலிருந்து
அமரத்துவத்திற்கு, இறைவா எம்மை வழி நடத்து
மானுடத்தின் வேண்டுதல் கீதமானது

அக இருளே மரணம்-அக ஒளியே வாழ்வு
அக இருளை, ஒளியாக மாற்றும் இரசவாதமே,
அற்புத கலையே-மதம்

ஒன்றே குலம், ஒருவனே தேவன், ஒன்றே தேசம்
என்றே வாழ்ந்த இனம், நாடு இரண்டாக-
வழிபாட்டுத் தலமும் இரண்டாக- ஒற்றுமை
எட்டாத வான் நிலவானது

அந்நிய அடிமைத்தனமும், வந்தேறு குடியேறிகளுடன்
கலப்புத் திருமணமும், பஞ்ச தெய்வ வழிபாடும், பறை நாய்,
கலப்பு ஜாதி என யூதர் தூற்றி ஒதுக்கிட, சமாரியர் மனங்களில்
பகைமையும், வெறுப்பும் ஆறாத காயமானது



அத்தி மரநிழலில், அள்ளியணைக்கும் தென்றல் தித்திக்கும்
அன்பைச் செல்லமாய் தழுவிச் சொல்ல, சிக்கேம் ஊர் யாக்கோபின்
கிணற்றடியில் நடந்த களைப்பாற நல்லாயன் அமர்ந்திருந்தார்
உணவு வாங்கிடச் சீடர்களோ ஊருக்குள் சென்றிருந்தார்.

கயலோ? வேலோ? எனும் கருவிழியாள், கள்ளோ, தேனோ
கசியும் தேனிதழாள், அன்ன நடையிலோ உலாவரும் பௌர்ணமி
வாழ்வோ அமாவாசையான பெண்மணி

கொடி இடை தாங்கியதோ நீர்க்குடம், மதிநுதல்
மாதோ தளும்பும் குறை குடம், வண்ணமலரைக்
காதல் வண்டுகள் மொய்த்துப் பறந்திட , எண்ணமும்,
இதயமும், சுமையாக ஏந்திழையாள் அவல வாழ்வு

வண்ணமயில் நீர் மொள்ள வந்திட-கண்முன் இருந்ததோ
வானவன் வார்த்தையான நிலைவாழ்வு



யூதர், சமாரியர் இருமை கடந்த கருணாநிதி
உறவினை வளர்த்து-நிலை வாழ்வளிக்கும் நீராய்
அன்பையும், விழிப்புணர்வையும் பெருநிதியாய்
அள்ளிக் கொடுக்க விரும்பிய தயாநிதி

இறை வெகுமதியை இலவசமாய் அளிக்குமுன் , அன்புடன்
பெற்றுக்கொள்ள விரும்பிய மனம், மாதிடம் -அம்மா
பருகிடச் சிறிது நீர் தாரும் கேட்ட தேவகுணம்

நடந்து களைத்து தனித்திருந்த யாத்ரீகனோ, உயர்குடி யூதன்,
தம்மைத் தாழ்த்தி, தாழ்ந்தோர் என ஒதுக்கிய தீண்டாமைச்
சாதி, பெண்ணிடம் நீர் கேட்ட மனுமகனோ புதுமைச்சித்தன்

யூதர் நீர் என்னிடம் குடிக்க நீர் கேட்பது எங்ஙனம்?
அன்பு மனம் அணங்கின் முன் இருந்தும்
அறியாமையால் பிரிவினை மொழிந்த பேதமை

நீர் அருந்தும் நீரோ, தாகம் தணிக்காது,
நான் தரும் நீரோ-ஊற்றாய்
உள்ளத்தே பெருகி நிலைவாழ்வளிக்கும்

“கடவுளுடைய கொடையை அறியாத மங்கை
குடிக்கத் தண்ணீர் கேட்கும் என்னையும் அறியீர்
அறிந்திருந்தால் என்னிடம் நீரே கேட்டிருப்பீர்,
வாழ்வு தரும் நீரை, நான் வழங்கியிருப்பேன்”

கண்டதே காட்சி, கொண்டதே கோலம் வாழ்வான கோதை
கண்டதும் யூதனாக, கண்முன் கடவுளின் கொடையிருந்தும்
காணாத அந்தகியாய் காரிகை- விண்தான் தன்னை ஈய
முன்வந்தும், தர்க்கித்த பேதமையாய்ப் பெண்மை

வாளியோ, கயிறோ உம்மிடம் இல்லை-ஐயனே,
வாழ்வு தரும் நீரை மொள்ள வழியே இல்லை
எம் மூதாதை யாக்கோபு வெட்டிய கிணறு
எம் பாரம்பரியத்தோடு இரண்டறக் கலந்த உறவு

அன்னாரும், அவர் சந்ததியினரும், கால்நடைகளும்,
வழி வழியாய் நாமும் நீரைப் பருகும் அரிய துரவு
அவரை விட நீர் பெரியவரோ? வினாவிலே பணிவு, அறிவு

நான் தரும் நீரோ விழிப்புணர்வு, அருந்துவோருக்குத் தாகமிராது-
பொங்கி எழும் ஊற்றாய் அவருள் நிலைக்கும் பேருணர்வு

ஐயனே அந்த நீரை எனக்குக் கொடும்-தாகம் இராது
தண்ணீர் மொள்ளும் தேவையும் இருக்காது
வார்த்தையின் பொருள் புரியாத நங்கை-இறை
வார்த்தையிடம், தவமின்றி வரம் கேட்ட மங்கை

இருமை கடந்ததோ கிறிஸ்து உணர்வு நிலை
ஒன்றிணைந்த சுய உணர்வு நிலையில்
எல்லைகளில்லாத ஆகாயமான அழகு நிலை

***"உன் இதயத்தில் மாதே எனக்கோர் இடம் கொடு***
***அதுவே அன்பின் ஊற்றாய்-விழிப்புணர்வாய்***
***உன்னுள் ஊற்றெடுக்கும் வாழ்வு தரும் நீர்"***

மனுமகன் அழைப்பு -மணவாழ்வின் கசப்பைச்
சுவைத்த இதயத்திற்கு புரியாத வரவேற்பு



வாழ்வு அவள் முன்னாள் இருந்தும், வாழ்வே
சுமையாக, அறிவு கடந்து -இதயத்தால்
வாழும் உண்மையைக் காணத்தவறிய பெண்மை
மதவாத, இனவாத இருமையில் வாழும் பேதை

உடல் உணர்வில் வாழ்பவர்கள் , உடலையே காண்கின்றார்
உண்மையின் தேடல் அவர்களுக்கில்லை, சமாரியப்
பெண்ணிற்கும் இல்லை. அன்பைப் பெறத்துடிக்கும் மனுமகன்,
அன்பினால் உறவுப்பாலம் அமைத்து-மனித மாண்பின்
மேன்மையை, கேட்பதனால் காட்டிய தயாபரன்

***விழிப்புணர்வு நீர் பற்றி*** இயேசு பேச
யாக்கோபின் கிணறு பற்றி அவள் பதில்,
வாழ்வளிக்கும் ஜீவதண்ணீரை அவர் கூற
தாகமெடுக்கும் நீர் பற்றி அவள் தர்க்கம்

தர்க்கம் கடந்த இதயத்தால், உள் உணர்வால்
புரிந்திடும் உண்மையே ***கிறிஸ்து உணர்வு நிலை***
கண்முன் இருப்பதோ பெருநிதி, தர்க்கரீதியாய்
விவாதித்து தவறவிட்ட பெண்ணோ பழமைவாதி

***மரத்தை மறைத்தது மாமத யானை,***
***மரத்தின் மறைந்தது மாமத யானை,***
***பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்***
***பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே-***
திருமந்திரம்

யூதனாய் கண்டவளுக்கு-இறைமகனைக் காணாத பாவம்
இறைமகனோ யூதனுக்குள் மறைந்த பாவம்
இருமைச் சேற்றில் புதைந்தவளுக்கு-“இருப்பு”
கண் மறைந்த சாபம்-தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்

வாழ்வளிக்கும் ஒளி முன்னால் ஒளிர்ந்தும்-காண
அக ஒளி இல்லாப் பேதை, அன்பை பகிர்ந்து உறவை வளர்த்து
விழிப்புணர்வை வரமாக்கிட-இனவாதமும், அறிவும் தடையானது
இறைவனுக்கும், மனிதனுக்கும் இடையே “திரையானது



இரவல் அறிவால் நிரம்பிய மனதில் இருளின் ஆளுமை-
இருப்பாய் கண்முன் இருந்த இறை வெகுமதி, பெண்மை
அறியாத சங்க நிதி, கருணையால் தன்னை காட்டிய அருள்நிதி

அறிவுரை கேட்க, நாலும் அறிந்த கணவர்,
மனைவி அருகிலிருப்பது நன்றென்று அம்மா, உம்
கணவரை அழைத்து வாரும், இயேசு மொழிந்திட
ஐயனே, எனக்கு கணவர் இல்லை அணங்கு உரைத்தாள்

அம்மா நீ சொல்வது சரியே- அன்றோ ஐவர்
கணவராய் உமக்கிருந்தார் , இன்று உம்மோடிருப்பவரும்
உம் கணவர் அல்ல-மெய் உரைத்தீர்

வண்டு மொய்க்கும் வண்ணமலர் உண்டு சுவைத்து,
உறங்கிக் கழிக்க, புலனின்பம் பேரின்பம் என
ஐவர் சுவைத்த தேன் மலர்

மனைவியாய் வாழக் கணவனாய் ஒருவனில்லை
“இல்லறமே நல்லறம் கிட்டாத ஏழ்மை” பெருநிதியான
அழகிற்கு-நிம்மதி எட்டாத வானத்துச் சந்திரமதி

„ Jesus was not sent here to teach the people to build magnificent churches and temples … amidst the cold wretched huts and dismal hovels. He came to make the human heart a temple, and the soul an altar, and …. the mind a priest. „

- Khalil Gibran

மங்கலம் காணத பெண்மை-கூடி வாழ்வதும்,
பிரிந்து போவதும்-கலைத்துப் போடும் கோலமான சிறுமை
நிலைக்காத மணவாழ்வில் நிம்மதி தீராத வறுமை

மணம் முடித்தும்-மனம் முறிந்து மணமிழந்த திருமணம்-
கூடலும், பிரிதலுமான வாழ்வில் கொண்டாட்டமில்லை
உடல்கள் சேர்ந்து வாழும் உறவில் உண்மையில்லை

ஆழ்ந்த உறவில்லை, பொருளில்லை,
அன்பில்லை, காதலில்லை, அறமில்லை-அன்பு
இதயங்கள் கலந்திடப் பிறந்திடும் உறவே இல்லறம்

மனம் முறிந்த பூவைக்கு, திருமணம் வேண்டாத
நறுமணம், மங்கையிவள் வாழ்வில் சுயம்வரம்
பசி போக்கும் விவகாரம்

மலர் தாவும் வண்டுகளுக்கு விருந்தான
முல்லை, மனம் கொண்டதே மாளிகை
கலையும் கனவான மல்லிகை



ஆகமங்கள் ஐந்தை வேதமாக கொண்ட- ஆதி யூதர்
அசீரிய நாடு கடத்தலில் அடிமைகளானார்
பாபிலோன், ஊத்தா, அவ்வா, ஆமாத்து. செபவர்வயிம்
பஞ்ச தெய்வங்களை வழிபட்டு மெய்வழி தவறி சமாரியரானார்

ஐவரோடு வாழ்ந்தும், ஐம்புலனின்பம் துய்த்தும்
வாழ்வில், இன்பம் ஏதுமில்லை
பஞ்ச தெய்வங்களை வழிபட்டவள் வாழ்வில்
நிம்மதியோ நிலைக்காத பஞ்சமான தொல்லை

உண்மைத் தெய்வம் உண்டென்பது -ஆறாம்
அறிவுக்கும் எட்டாத ஒன்றானது
சுமையான வாழ்வோ மாயை என்றானது

இறைவாக்கினர் நீர் என அறிந்தேன், சமாரியர் நாமோ
கெரிசிம் மலையிலும், நீங்களோ சீயோன் மலையிலும் வழிபட
மெய் இறைவனை எங்கே வழிபடல் வேண்டும்?



அம்மா என்னை நம்பு-இடம், பொருள் காலம் சார்ந்ததல்ல
-இறைவழிபாடு, வழிபடுவது யார் என அறியாமல் உங்கள் வழிபாடு
உண்மை இறைவனை உள்ளத்தில் வழிபடுவதோ மெய் வழிபாடு

காலம் வருகிறது, ஏன் வந்தேவிட்டது-உருவற்ற இறைவனை
உண்மை இயல்பிற்கேற்ப உள்ளத்தில் வழிபடுவதே மெய் வழிபாடு
அன்பில் நிலைத்து, உண்மையை வாழ்வாக்கி அன்பில் வாழ்வதே
வாழ்வும், வழிபாடும் ஒன்றான மெய்யான அக வழிபாடு

கிறிஸ்து எனப்படும் மெஸியா வருவார், அனைத்தையும்
எங்களுக்கும் அறிவிப்பார், சமாரியர் நாமும் அறிவோம் ஐயா
"*அம்மணி உம்மோடு பேசும் நானே அவர்*"

இறை கருணையினால் வாழ்தறியும் உண்மை,
தவமின்றிப் பெண்மைக்கு வரமானது,
அன்பே இறைவன் நிதரிசனமானது

சாதியம் கடந்து, நீர் கேட்டு உறவாடி உறவு வளர்த்து
ஒழுக்கம் கேள்வியான பெண்மைக்கு- தன்னை மெஸாயா என
வெளிப்படுத்திய கருணை, தொலைந்த ஆடுகளை தேடும்
நல்லாயன், சாதி, மதம் கடந்த அன்பனாய் இறைமகன்

குடத்தை விட்டு விட்டு ஊருக்குள் ஓடிய கோதை
கிணற்றடியில் நடந்த அதிசயத்தை உரைத்தே
என் வாழ்வில் நடந்தவற்றைக் கூறும் மனிதர்
மெஸியாவோ? "வந்து பாருங்கள்" அழைத்த பாவை




உன் பேச்சைக் கேட்டு நாங்கள் நம்பவில்லை
"வந்து பார்த்து, இறை வார்த்தையைக் கேட்டறிந்து"
"இவரே உலகின் மீட்பர் என்பதை அறிந்து தெளிந்தோம்,
நம்பிக்கை கொண்டோம்" ஊரார் மொழிந்திட
***"வந்து பாருங்கள்" இன்றும் அழைப்பானது***

யூதனாய் கண்டவள்-இறைவாக்கினராய் கண்டு வியந்தாள்
மீட்பராய்க் கண்டவள், முதல் பெண் திருத்தூதராய்
சமாரியருக்கு நற்செய்தி எடுத்துரைத்தாள்

இறைவனை அனுபூதியில் அறியாதவரைக்கும்-மறையாது
மானுடர் நம் உள்ளத்தாகம், கிறிஸ்து உணர்வு நிலை
உள்ளத்தைஒரு முறை தொட்டுவிட்டாள்-அக்கினியாய்
நம்முள் பற்றி எரிய-நாமே நமக்கு ஒளியாவோம்.

சீடன் குருவாக மாறும் உன்னத நிலையே-அந்நிலை,
கிறிஸ்து உணர்வு நிலை நம்முள் மலர்ந்திட
இறைவனை நாம் அறிவோம் -அதுவே வழி

நாம் இயேசுவாக மாறாவிடில் நம்மால் இறைவனை
அறிய முடியாது, தூக்கம், கனவு, விழிப்பு கடந்த-
துரியமே! கிறிஸ்து உணர்வு நிலை

***இறைவனை அறிதலே இயேசு என்பதன் பொருள்***
"வந்து பாருங்கள்" மனுமகனின் அழைப்போ
நம்பிக்கை கடந்த நல் வரவேற்பு

எதிர்பின்றி, ஆழ்ந்த நம்பிக்கையுடன் இணைபிரியாமல் இருக்க கூடிய
உணர்வு நிலை பெண்மை-பெண்மையே பெற்றுக் கொள்ளும்
கிறிஸ்து உணர்வைப் பெற்றுக்கொள்ளப் பெண்மை நிலை வேண்டும்-
பெண்மையாய் இருத்தலே பெற்றுக்கொள்ளச் சீடனுக்கு ஒரே வழி
சமாரியப் பெண்மணி குறியீடே

இல்லறமே நல்லறம் -கிட்டாத பெண்மைக்கும், சீடத்துவம்
வழங்கிய குரு தத்துவம்தான் என்னே!, தேடாமல் கிட்டிய
சீடத்துவம்- கல்லான அகலிகையை-உறவாடி, உண்மையால்
மீண்டும், பெண்ணாய் மாற்றிய அன்புத் தத்துவம்



பாரம்பரியத்தைப் புறந்தள்ளி-கிணற்றடியில்
இல்லறம் நல்லறமாய் அமையாத-ஒழுக்கம்
கேள்வியான பெண்ணோடு
உறவாடும் குருவைக் கண்டு வியந்த சீடர்

வழிதவறிய தன் ஆடுகளைத் தேடும் ஆயன்
திருச்சட்டம், ஒழுக்கம் கடந்த அன்புத் தேவன்
பெண்மையைப் போற்றிய மாட்சி
பெண்ணிய விடுதலையாளராய் அவர் புரட்சி




ராபி உண்ணும், சீடர்கள் வேண்டிட, தந்தை திருவுளத்தை
நிறைவேற்றி-தந்த பணியைச் செம்மையாய் செய்து முடிப்பதே
என் உணவு, வார்த்தையும் வாழ்வும் ஒன்றான நிகழ்வு

***இயேசு அன்பும், தியானமும் கலந்த அற்புத மது***
பருகியவருக்கு தெரியும் அதன் சுவை
புது மதுவை புது சித்தையில் வார்ப்பதே முறை




உண்மைக்கு மாற்றீடு அறிவு அல்ல, உண்மைக் கிணறு
நம்முள்ளே-தேடல் நமதே, ஆணவமே, இயேசுவை அறியத்
தடையானது-அன்பு இதயமே இயேசுவைப் புரியும் வழியானது

திருச்சட்டங்களை அன்பினால் புடமிடும் ஆன்மீகன்
அழியும் நீரை அழியாத இரசமாக்கி- ஆன்மாவாய்
மானுடம் மாறிட வழி காட்டிடும் அற்புதன்-கூழாங்கற்களை
வைரங்களாய் மாற்றிடும் இரஸவாதி -இயேசு

விழிப்புணர்வு நிலையோ நெருப்பு, ஆணவத்தை
சுட்டெரிக்கும் அகத்தீ, அதுவே தூய மனம்,
***மனமற்ற பரிசுத்த உணர்வு நிலை***

“நான் என்று ஒன்றில்லை ”-இருப்பது தூய மனமே-
அதுவே ஆன்மா, சுத்த சைதன்யம்

இருப்பவர் நாமே எனும் இருப்பாயது, மீட்பு, நிர்வாணம்
என்பதும் அதுவே, ***நீயே உன் மீட்பர்-இன்றும் மாறாத
இயேசுவின் அழைப்பு***

வற்றாத எண்ணெய்யும் சுடரும் கொண்ட சத்திய தீபம்
எண்ணெய்யும், சுடருமில்லா உங்கள் தீபத்தை ஏற்றிட
வந்து பாருங்கள்-என்னைப் பின் தொடருங்கள்-அழைக்கின்றது
விசும்பாய் அவர் அன்பு-கதிராய் அவர் விழிப்புணர்வு



ஆலயங்கள் இறை வாழிடங்கள் அல்ல
தூய உள்ளமே இறையில்லம்-அன்பில் நிலைத்து
உண்மையை வாழ்வாக்குதலே இறை வழிபாடு
வாழ்வும் வழிபாடும் வேறல்ல
வாழ்வே வழிபாடானால் நாம் தெய்வங்களே

அறிவுக்கனி உண்டு ஆணவம் தோன்றிட
வாழ்வு போராட்டமானது-ஆணவம் கழித்த மனுமகனோ
சிலுவையில் வாழ்வுக்கனியாய் மாறிட- வாழ்வோ
தெய்வீகமானது, அமரத்துவமானது






ஆணவ மனம் கழிந்திட, தூய மனமாய் நம்
இரண்டாம் பிறப்பு-அதுவே,
***விழிப்புணர்வே-கிறிஸ்து உணர்வு***

வாழ்ந்தறியும் உண்மையே இறைவன்
தூய மனதிற்கே சத்திய தரிசனம்

திருச்சட்டம், நீதி கடந்த அன்பே இறைவன்
அன்பு, இரக்கம், கருணை மதத்தன்மை
உண்மையே விடுதலையளிக்கும் மாறாத மேன்மை

ஐவரோடு வாழ்ந்த பேதை, கதிராய் குருவின் தொடுகை
சருகான மலர் மீண்டும் மலரான புதுமை
விழிப்புணர்வை அருளாய்ப் பெற்ற கோதை

“வாழும் இறைவனின் மகன் நீரோ- மெஸியா”
அலகை அறிந்த இரகசியம், ஞானியருக்கும், விவேகிகளுக்கும்
மறைத்து, இறைவன் சீமோனுக்கு வெளிப்படுத்திய அதிசயம்

யாருக்கும் இதைச் சொல்ல வேண்டாம் இறைமகனின்கட்டளை
சாதியம் கடந்து, பாவியான மங்கைக்கு கருணையால் தம்மை
வெளிப்படுத்தி சீடத்துவத்தை நல்கிய பேரதிசயம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-19-10-2023*

# விசுவாசம்-திமிர்வாதம்





புலன் மழுங்கி, செயல் ஒடுங்கி-படுக்கையில் ஒடுங்கிய
வாழ்வால், மழுவினில் விழுந்த புழுவென மனம் துடித்திட-
வாதம் வதைத்திடும் தேகத்தால் நாளும் பன்முறை சாவு

வாதம் வதைத்த தேகத்தில்-
கலையாத முகாரி ராகம்-பாவம் சிதைத்த
மனதில் சோகம் மாறாத பாவம்

வசந்தம் கண்டு பூத்த மலர்-இன்றோ
வாடிய சருகுபோல் படுக்கையில் கிடந்திட-சோகம்
சிதைத்த சொந்தங்களோ ஓட்டியும் ஆம்பலும்போல்
சுற்றி நின்றார் கண்களில் கங்கை பொங்க

நொருங்கிய நெஞ்சங்களில் நம்பிக்கை துளிர்க்க-ஊரெங்கும்
பெருங்கதையாய் இயேசுவின் அற்புதங்கள் விளங்க
சீரழியும் தேகத்தை சிரத்தையுடன் சுமந்த சொந்தங்கள்
நேர்வழி கண்ட உவகையோடு இயேசுவிடம் ஓடிய பந்தங்கள்

வழி கண்டவர்க்கோ உட்செல்லும் ஒரே
வழியும் திரளான கூட்டத்தால் தாளிட்ட கதவானது
தவிக்கும் உள்ளங்களில் துளிர்த்த விசுவாசம்
தனி வழி செல்லத் தூண்டிய பந்தபாசமானது

கூரையைப் பிரித்தவர், வருந்தும் சொந்தத்தை
வார்த்தை ஏதும் மொழியாது-வழியும், உண்மையும்
வாழ்வுமான பெருமான் முன் படுக்கையோடும்,
வற்றாத நம்பிக்கையோடும் கீழே இறக்கினார்

வாதம் வதைத்த தேகம் கண்டார்-அன்பின்
நாதத்தில் உறவுகளின் ஆழ்ந்த விசுவாசம் கண்டார்-
பாவப் பெருஞ்சுமை நீங்கிட பரிவோடு மொழிந்தார்-
***மகனே உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன***

பாவங்களை மன்னிக்க இவன் என்ன இறைவனோ?
இறைவனோடு தன்னை இணையாக்குதல் இறை நிந்தை
அறிந்தும் அறியாதவன்போல் ஒழுகுவதோ ஆணவம்
ஓதும் வேதத்தை இழிவு செய்தலோ பெரும் பாவம்

சினம் பழுத்துச் சிந்தை மழுங்கப் பகை வளர்த்து
குற்றம் காணும் பரிசேய, மறை வல்லுனர் இனம்
தினம் பலமுறை தொழுதும்-வனராசிகள்
வாழிடம் போலான மனமோ இருண்ட வனம்



உள்ளக் கபடம் அறிந்த உத்தமர்-அறியாதவர்போல்
குள்ள நரிகளிடம் வினவினார்-எது
**எளிது, பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்பதா?**
**இல்லை எழுந்து நட என்பதா?**

பாவங்களை மன்னிக்கும் அதிகாரம் மனுமகனுக்கு
உண்டென்பதை எண்பிக்க இயேசு மொழிந்தார்
**எழுந்து உம் படுக்கையைத் தூக்கிக் கொண்டு**
**வீடு செல்லும்**

வாதம் வதைத்த தேகத்தில் புது வசந்தம், கோடை
தீய்க்கும் பயிருக்கு, மாரி மழையின் அபிஷேகம்
நாதம் மறந்த குயில் கீதம் இசைத்திட, ஆட மறந்த தோகை
கார் கண்டு ஆடியதோ ஆனந்த நர்த்தனம்

வாதம் வதைத்த தேகத்தை வார்த்தை வாழ்த்திட
தந்தி அறுந்த வீணையில் மோகனத்தின் ஆலாபனம்
திருப்பாதம் தொழுத மனதிலோ ஆனந்தம்-படுக்கையைத்
தூக்கி நடந்த இதயத்திலோ பக்திப் பரவசம்




கண்டோம் காட்சிகள் பல-இதுவோ, காணக்கிடைக்காத
இறை மாட்சி, புண்ணியனை வாழ்த்திக் கூட்டம் புகழ்ந்திட
விடியல் கண்ட புள்ளினமாய் உறவுகள் பாடிக்களித்திட-கோபத்தால்
புழுங்கிய மதவாதம், குறை குடமாய்த் தளும்பிய தினம்.

வாதம் வதைத்ததோ தேகம்
வார்த்தை இசைத்ததோ அன்பின் கீதம்
வரட்டு மதவாதம் துப்பியதோ சாபம்
ஓங்கார நாதம் அதிர்ந்திட நடந்ததோஅற்புதம்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
*Pax Ravichandra-19-10-2023*

# இயேசு அழைக்கிறார்-பார்த்திமேயு





ஒளியிழந்த விழியிரண்டும் வெற்றுக் குழிகளாக
மொழியிழந்த குரலில் இரத்தல் அபசுரமாக
கோல் கொண்டு வழி நடந்து குழி தவிர்த்தும்
வறுமைக் குழிக்குள் வீழ்ந்த வாழ்வு

இரவும் பகலும் ஒன்றான உலகில்
இரந்து வாழும் அந்தகன் பார்த்திமேயு
களிப்பறியாத வாழ்வில் கசப்பே நாளும் விருந்து
இரந்தும் கிட்டாத பெருநிதியாய்ச் சாவு

ஊனமுற்ற ஏழைகள் உறவு சொல்ல,
தேவகானம் மறந்த குயிலுக்கு இரத்தல் கானமானது
வான் குயவன் படைத்த மூளி மட்பாண்டங்கள்
வழியோரம் இரந்து வாழும் நடைப்பிணங்களானது

கந்தைபோல் நைந்தவுடல்-கடும்பசியால் இளைத்த வயிறு
எந்தையும் தாயும் ஏன் பெற்றார்? என நொந்த மனம்
அந்தகனோ அன்றாடம் இரந்து வாழும் அவல இனம்
ஆண்டவனை மறவாது தொழுது வாழும் புனித குணம்



திருமகன் வரும் வீதி திருவிழாக்கோலம் பூண
திரண்ட கூட்டமோ குதூகலம் காண
விழியிழந்த அந்தகனோ கலைந்தகோலம்
எழுப்பியதோ வருவது யார் எனும் வினாக்கோலம்

இறைமகன் வருகைக்கு கூட்டமோ கட்டியம் கூற
இயேசு வருகிறார் இவ்வழி அறிந்தவர் மனதில் ஆனந்தம்
இயேசுவே தாவீதின் குமாரனே என்மேல் இரக்கமாயிரும்
கதறி அழைக்கும் ஏழையின் ஓயாத சோக கீதம்

பேசாதிரும், அதட்டியும் மௌனவிரதம் பூணாத மனிதன்-
இரைச்சலிலும் விநயமாய்க் கூவிக் களைக்காத புனிதன்
ஒளி காண வழி பிறக்கும் -மூடிய விழி திறக்கும்
விசுவாசத்தை அறிக்கையிட்ட அந்தகன்

அண்ணல் கேட்டிட ஓயாத அழைப்போ நம்பிக்கையின்
அருந்தவம், புண்ணியனால் பார்வை கிட்டிட
அந்தகனக்கு கிட்டியதோ பெருவரம்

நாதம்போல் ஏழையின் குரல் நாதன் செவிகளைத் தழுவிட
நாயகன் செப்பினார் அழைத்தவரைக் கூட்டி வர
நல்நாதமாய் ***இயேசு அழைக்கிறார்*** ஒலித்திட-மேலுடையை
எறிந்துவிட்டு குதித்தெழுந்து வந்த மனிதனோ குருட்டு ஏழை

***ஏன் என்னை அழைத்தீர்?*** விழிகளில் ஒளியில்லை? ரபூனி
நாளும் இரந்து வாழும் அவல வாழ்வில் நிம்மதியில்லை
வறுமையோ வாட்டும் எரிநரகான வேதனை, உலகின் ஒளியே,
உண்மையின் வழியே, உம்மைக் காண விழிகள் வேண்டும்
பார்வை நான் மீண்டும் பெற வேண்டும்

நீர் போகலாம், உம் நம்பிக்கை உம்மை நலமாக்கிற்று
இமைக்கதவு தாள் திறக்க-இரு விழிகளும் கதிர் கண்ட
புது மலராய்ப் பூத்திட, நெஞ்சிலே பூபாளம்
இறை துதிபாடும் மொழியோ ஹிந்தோளம்

என் விழிகள் காண்பது கனவோ? நனவோ?
எனக்கிவர் ஈந்தது விழியோ? புது ஒளியோ?
***காணாதிருந்தவன் காண்பது இறைமகனையோ***?
என்னிதயம் மொழிவது கவிதையோ? கானமோ?

இதயம் வண்ணப்பூப்போல் மலர்ந்திட
இருவிழிகளும் சுடர்போல் மின்னி ஒளிர்ந்திட
கார் கண்ட தோகைபோல் ஆடி மகிழ்ந்த உள்ளம்
போற்றிப் பணிந்த இதயத்திலோ ஆனந்த வெள்ளம்

***இயேசு அழைக்கிறார் நற்செய்தியாக,***
பார்வை பெற்றதும், மனுமகனைக் கண்டதும் பெருவரமாக
இருந்த மேலுடையையும் துறந்து வந்த ஏழை
இன்புற்று இறை புகழ் பாடிய காளை

நம்பிக்கையோடு அழைத்தவரை
இயேசு அழைத்தார், புது வாழ்வு கொடுத்தார்
அழையுங்கள்- இயேசு அழைக்கிறார்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-19-10-2023

# களையும், நற்பயிரும்






நல் விதைகளைத் தூவி-விதைப்பை முடித்து,
காவலாளிகளை நியமித்த நிலக்கிழார் மனதிலோ
ஆனந்தம்-களஞ்சியங்கள் நிறைந்திடும்
அறுவடையை எண்ணிட மனதிலோ பேரின்பம்

விதை முளைத்திட, நாற்றுக்களோடு களைகளும்
தோன்றிட, கண்ணுற்ற காவலாளிகளுக்கோ பேரதிர்ச்சி
நிலக்கிழாருக்குச சொல்லிய சேதியோ சோக நிகழ்ச்சி

ஐயரே! நல்ல விதைகளை நீர் விதைத்தீர், களைகளும்
கூடவே முளைத்ததென்ன? களைகளால் நற்பயிர்களுக்கோ
சேதம், களைகளைப் பிடுங்கியழிப்பதே நல்லுபதேசம்
நல் உழைப்பில் அறக்கொட்டி விழுந்த நாசம்

பகைவனுடைய வேலையிது உரைத்த நிலக்கிழார்
களைகளைப் பிடுங்கும்போது பயிர்கள் பாதிக்கப்படும்-
இரண்டையும் வளர விடுங்கள், அறுவடையின்போது களைகளைப்
பிடுங்கி எரியுங்கள், கோதுமையை களஞ்சியத்தில் சேருங்கள்

பகைவனாய் யாருமில்லை -தன்னுணர்வற்ற
நிலையில், தூக்கத்தில் நடக்கும் நிலக்கிழாரே
களைகளைத் தூவினார் காவலர் கண்ட உண்மை

விழிப்பு நிலையில் நல்விதைகளை தன்னுள்ளத்தில் விதைப்பவனும்,
விழிப்புணர்வற்ற தூக்க நிலையில் களைகளைத் தூவுபவனும் ஒருவனே
தூக்கமும், விழிப்புமான இரண்டாம் கெட்ட நிலையில் மனிதன்
ஊசலாட்டமான வாழ்வோ இறுக்கம், மாறிவரும் இன்ப துன்பம




வீட்டை இழந்த மனிதனோ பரிணாமப் பாதையில் ஒரு பயணி,
இறந்தகால விலங்கு நிலையிலிருந்து, எதிர்காலத் தெய்வீக நிலையை
அடைய தொடங்கிய பயணமோ முடியாத தொடர்கதையாக,
இருமையின், முரண்பாடுகளின் கலவையாய் மனிதன்

கழிந்து போன இறந்தகால விலங்கு உலகு,
கிட்டாத எதிர்காலாத் தெய்வீக உலகு
இரண்டையுமினைக்கும் பாலமாய், மிருகம் பாதி,
தெய்வம் பாதி கலந்த கலவையாய் மனிதன்,
இரண்டையும் கடந்தால் முழுமை-
இருப்போ தெய்வீகம்

உள்ளுணர்வின் உன்னதமே தெய்வீகம்
உயர்ந்தால் தெய்வீகம், தாழ்ந்தால் மிருகம்
இரண்டுக்குமிடையே ஊசலாடும் மனிதம்-தன்னுணர்வற்ற
நிலையே அலகை, அறிதலோ புனிதம்

நன்மை, தீமை, இருளும், ஒளியும், வாழ்வும்,
சாவுமான வாழ்வோ, இருமையின் முரண்பாடு
மனித நிலை கடந்தால் ஒழிய நிம்மதி இல்லை
சச்சித் ஆனந்த இறைநிலையே நம் மெய்நிலை




அகப்பரிணாமப் பாதையில்-மனம் கழித்து
இருமை கடந்து முழுமையாவதோ நம் அழைப்பு
ஆணவ மனமழிந்த நிலையே உன்னதம்
தன்னையறியும் மெய்யறிவே ஞானம்




இன்பத்தைத் தேடும்போது- அறியாமல்
துன்பத்தின் விதைகளை விதைக்கின்றோம்
இன்ப, துன்பம், சொர்கம், நரகம் இருமை கடந்து
சாட்சி பாவமாய் இருப்பதே மோட்சம்

தூய மனதின் செயற்பாடோ முழுமை
ஆனந்தமே நம் சொந்த இயல்பு
தன்னுணர்வற்ற நிலையின் செயற்பாடோ குறைபாடு
சோகமோ ஆணவத்தின் வெளிப்பாடு

உணர்வுகள் நம் வாழ்வு பற்றிய உண்மையை உரைக்க
இருமை கடந்து சாட்சி பாவமாய் வாழ்வதே விழிப்புணர்வு
நம் தவறுகளைச் சுமத்திட, அலகையோ அழகான கற்பனை,
நம் பொறுப்புகளிலிருந்து விடுபட எளிய பொறுப்பற்ற தன்மை

வெளியே இருக்கும் எதிரியை அறிவதும் சுலபம், வெல்வதும்
எளிது, நம்முள்ளேயிருக்கும் எதிரியை அறிவதும் கடினம்
வெல்வதும் கடினம், நம்மை நாம் புரியும் மெய்யறிவே
விடுதலை, இருமை கடந்தால் அடைவதோ சுதந்திரம்

தன்னுணர்வற்ற நிலையே நம் எதிரி
தூக்கமே துக்கம், ஒரு கரத்தால் கட்டி,
மறுகரத்தால் தூக்க நிலையில் இடிக்கும்
வாழ்வோ இன்ப, துன்பம், இறுக்கம்

விஞ்ஞான அறிவோ வெளிச்சார்புடையது, கற்றறியக்கூடியது
நம்மை நாம் அறியும் மெய்யறிவோ, தன்னுணர்வைச் சார்ந்தது
கற்றறிய முடியாதது,மெய்யறிவு தனி மனித உரிமைச் சொத்து
தன்னுள் தேடிக் கண்டடையும் நல்முத்து

அனுபூதியில் மனிதன் தன்னை அறிதலே மெய்ஞானம்
உண்மையை அனுபூதியில் அறிவதே மெய்யான விடுதலை
நன்மை, தீமையோ நம் முன், தெரிவோ சுதந்திரம்-
தெரிவே முடிவு-தெரிவே விதி

நல்லவன், தீயவனாக வாழும் உரிமை
மனிதனின் அளவில்லாச் சுதந்திரம்-முழுமை
வரவேற்றுக் கொண்டாட நல்லவன் வாழ்வு
முழுமை சபித்திட தீயவனின் அழிவு




ஆன்மீகம் தனி மனிதத் தேடல், நன்மை, தீமை,
சொர்க்கம், நரகம், கடவுள், அலகை,
"அடையாளங்களைக்" கடந்தால் இருப்பது
இருமை கடந்த மோட்சம்

மனம் கழித்த, இருமை கடந்த
தூய மனதிற்கே சத்திய தரிசனம்
*விழிப்புணர்வே மோட்சம்* –மனுமகன்
போதனையோ தேவ கடாட்சம்

***கடவுள் என்னும்போது மதங்களின் தோற்றம்***
***மானுடம் பிளவுபட்டு சடங்கு, பலி, வேதமாய் மாற்றம்***
***உண்மை சிதைந்து நம்பிக்கையாகும் சீரழிவு***
***உண்மையைச் சொந்தமாக்கும் மதங்கடந்த***
***தனிமனிதத் தேடலான ஆன்மீகமோ பேரழகு***

இயேசு பெருமானின் அதி உன்னதமான உவமை
உண்மையே உங்களுக்கு விடுதலையளிக்கும்
புத்தர், இயேசு பெருமான்களின் மாறாத போதனை

***கடவுள் என்னும்போது தத்துவம்***
***அப்பா, தந்தை என அழைக்கும்போது***
***இரத்த பந்தம்***

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-25-10-2023

# யார் பெரியவன் ?





மானுடம் உய்வுறத் தம்மை வெறுமையாக்கி
அடிமையின் கோலம் பூண்ட இறைமகன்
நல்மனத்தவருக்கு அன்பனாய்-எளிய
மனத்தவரை சீடர்களாய்த் தேர்ந்த மனுமகன்

குருவோடு வாழ்ந்தும், குரு தத்துவம் புரியாத சீடத்துவம்
யார் பெரியவன்?- ஓயாத விவாதம், அறியாமை
தாழ்வு மனப்பான்மை நோயான வாதம்

கல்விக் கடல் தாண்டாத சீடர்களோ மீனவர்,
லேவியர், குருவோ-உலகிற்கு தச்சன் மகன்
உள்ளுணர்வில் விழிப்புணர்வின் சிகரம் தொட்ட மகான்





நாளும் தமக்குள் போராடும் சீடர் மனங்களில்
இறையரசில் இருக்கை தேடும் வறுமைத்துவம்
நரிகளுக்கு வளைகளும்-ஆகாயத்துப் பறவைகளுக்கு
கூடுகளுமிருக்க-தலைசாய்க்க இடமின்றி அலையும்
நாடோடிப் போதகனோ வாழும் கலையின் அற்புதம்

வரும் வழியில் எதைப் பற்றி உங்கள் விவாதம்?
அறிந்தும், அறியாதவராய் குருவின் கேள்வியில் அனுதாபம்
வெட்கி மௌனத்தில் நிலைத்த சீடத்துவம்
குரு தத்தவம் அறியாது தளும்பிடும் குறைகுடம்

முதல்வனுக்குத் தகுதி பணிவு-கடை நிலையைத்
தேடுங்கள், தலைவனுக்குத் தகுதி
பணிவிடை-தொண்டனாகுங்கள்



ஒரு குழந்தையை அரவணைத்து -இத்தகைய
குழந்தைகளுள் ஒன்றை-என் பெயரால்
ஏற்றுக்கொள்பவர் என்னையே ஏற்றுக் கொள்கிறார்
என்னை ஏற்றுக் கொள்பவர்-என்னையன்று,
என்னை அனுப்பியவரை ஏற்றுக் கொள்கிறார்

கடந்த காலம் ஏதுமில்லாத உயிரோட்டமுள்ள
குழந்தையைப்போல், மாறாவிடில் விண்ணரசில் இடமில்லை
அறிவு கழித்து -விழிப்புணர்வில் நிலைத்து
செயலாற்றுங்கள்-அறிவே ஆணவம்

உயர்ந்தவன், தாழ்ந்தவன் போட்டி பொருளற்றது
ஆணவ மனதில் நட்பிற்கு இடமில்லை
ஆணவம் கழித்து அன்பினால் ஒன்றுபடுங்கள்



தாழ்ச்சியோடு இருந்தால் மகிழ்சி நிலைக்கும்,
ஆனந்தம் நிலைத்திட-என்றும்
முதலிடத்தில் இருப்பாய்

போட்டியிடவோ, பகைமை பாராட்டவோ
யாருமில்லை, நீ, நீயாக இருப்பாய்-நிகழ்காலத்தில்
இருப்பாய், ஆசை துறந்திட, அணவம் கழித்திட
அமைதியும், பேரானந்தமும் உன் சொந்தம்

பூக்களை, புள்ளினங்களை விண்மீன்களைப் பாருங்கள்
போட்டியில்லாத உள்ளங்கள்தான் எத்தனை அழகு
எவ்வளவு பிரகாசம்?--மனம் கழித்த தம் இருப்பில், அவற்றின்
அழகும். பிரகாசமும், ஆனந்தமும் என்றும் நிலையானவை

பள்ளங் கபடற்ற குழந்தை மனம் எளியது,
போட்டியிடாது, எளிய மனத்தவருக்கே இறையரசு
தூய மனத்திற்கே சத்திய தரிசனம்



அன்பு இணைக்கும்-ஆணவமோ பிரிக்கும்
ஆணவம் இன்றி இருத்தலே கடைசியில் இருத்தல்
தன்னை உயர்த்துகிறவன் தாழ்தப்படுவான்
தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான்

தாழ்வு மனப்பான்மையே ஆணவம்
தாழ்ச்சியோ மாட்சி-இறை மக்களாய் எழுச்சி
குருவின் போதனையோ அகப் புரட்சி

பிறந்திட வீடின்றித் தொழுவத்தில் பிறந்த மகன்
நற்செய்தி சொல்லிய நாடோடிப் போதகன்
அடங்கிட இரவல் கல்லறை கொண்ட ஆனந்த சிவன்
கூத்தனோ வாழும் கலையின் வித்தகன்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-19-10-2023*

# பசி-ஓய்வு நாள்



எளிய நாடோடிப் போதகரின் வாழ்வில்
நல்விருந்தோ எட்டாத வான் நிலவு
நல்மனங்கள் அளிக்கும் விருந்தோ
நாடோடிக்கு வானமுது

நாடோடி வாழ்க்கையில் உறங்கிட ஓர் இடமில்லை
உறவு சொல்லும் எளிய மனத்தவர் இல்லங்களில்
தங்கி இளைப்பாறும் அன்பு மனதில் எல்லைகளில்லை
வானமே எல்லை என்றான தெய்வ நிலை



நரிகளுக்கு வளைகளும், ஆகாயத்துப் பறவைகளுக்கு
கூடுகளுமிருக்க, தலைசாய்க்க இடமில்லாத நாடோடி
உலகம் ஓர் சத்திரம் அறிந்த ஞானயோகி



நம்பி வந்த நல்மனங்களுக்கு
அம்மை அப்பனான குருவோ யோகி
எங்கும் நிறைந்த இருப்பாய் தன்னை
அறிந்த துரியமோ பிரம்மம்

ஊர்கள் தோறும் நற்செய்தி சொல்லி
உறவாடி மகிழ்ந்த குருவும் சீடரும்-வாட்டும்
வெயிலில் பசி என வயிறு கூவிட-ஆயனைத் தொடரும்
ஆடுகளாய் வழி நடந்தார் வயல் வெளியில்



பூச்சூடிய கன்னியர்போல் காற்றாடும் கதிர்களின் நாட்டியம்
கண்களுக்கு விருந்தாகப், பரந்த வயல் வெளியோ கலையரங்கம்-
குருவும் சீடருமான உறவோ சத்சங்கம்-சோர்வோடு
நடந்த வயிற்றிலோ தீக்கும் பசியின் கட்டியம்

முற்றிய கதிர் பறித்து கசக்கி உண்டு பசி தணித்த
நெஞ்சங்களில் பரவசம்-ஓய்வு நாள்
குற்றம் எனச் சாட்டிய மனங்களில் வஞ்சகம்
ஏழை பசி போக்காத மனங்களில் கஞ்சத்தனம்

நற்செய்திப் பணியின் மேன்மை அறியாத குருடர்
குற்றம் குறை காணவே விழிபடைத்த பரிசேயர்
திருச்சட்டமே வேதம் எனும் மதவேசிகள்
பசித்தவருக்கு பருக்கையெனும் பகிராத கல்மனத்தவர்

அனல்போல் தகிக்கும் பசியோ சாண் வயிற்றில்
அன்பு மனங்களுக்கு நல்விருந்தோ வான் முகட்டில்
கசக்கி உண்ட கதிர்களோ தெள்ளமுதம்-குற்றம்
கண்ட பரிசேயர் வசை மொழிகளில் ஆலகாலம்

குருக்கள் மட்டும் உண்ணத் தக்க ஆலயத்து அப்பங்களை
வீரருக்குப் பகிர்ந்து தாவீது உண்ணவில்லையா?-ஆலயத்
திருப்பணியாளருக்கு ஓய்வு நாள் விதி விலக்கு
திருச்சட்டம் ஓதும் பரிசேயரே அறிந்ததில்லையா?



எளியோரை வருத்தும் உங்கள் சட்டம், முதுகெலும்பை
முறிக்கும் இரும்பு நுகம், ஓய்வு நாள் மனிதனுக்கேயன்றி
-மனிதன் ஓய்வு நாளுக்கல்ல, பலியை அல்ல இரக்கமே
இறை விருப்பம், நொருங்கிய மனமே நற்காணிக்கை

குற்றம் குற்றமே என ஓதிய மதவாதிகளுக்கு
நெற்றிக் கண் திறந்து காட்டிய சிவன்
சொற் குற்றம், பொருட் குற்றம் கடந்து
அன்பே வேதம் என ஓதிய மகான்

ஈரமில்லா மனங்களில் இறையன்பு வெளி வேடம்
பாலை மனங்களில் முட்செடியாய் வரண்ட வேதம்
அன்பிலும் மேலானது திருச்சட்டம் முரட்டுப் பிடிவாதம்
அன்பே இறைவன் அறியாத இறை நாதம்



ஆடையிழந்து நிர்வாணியாய வாடிய
ஆசாடபூதித்தனம், அத்தியிலை தேடிய ஆதாம்போல்
ஆணவ அறிவால் வருந்தி நாணிய தினம்

தென்றலில் ஆடிடும் முற்றிய கதிர்களிலோ
விருந்தோம்பலின் பெருமை,
சீடர் மனங்களிலோ பசியாறிய இனிமை

வேதியர் மனங்களிளோ குறை காணும் சிறுமை
மனுமகன் வார்த்தையிலோ -ஆணவ
இருளைச் சட்டெரிக்கும் மாறாத கருணை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra -19-10-2023*

# ஓசான்னா! ஓசான்னா! ஓசான்னா

திக்கு விஜயம் செய்து, நாடுகள் பல வென்று
வாகை சூடி வரும், மன்னாதி மன்னனுக்கோ
தலைநகரில் மகத்தான வரவேற்பு.





முரசுகளும், பேரிகைகளும் முழங்க, எக்காளமும்,
கொம்புகளும் ஒலிக்க, கிண்ணரமும், யாழும் இசைக்க
இசை மழையின் ஆனந்த ஆராதனை

வண்ணத் தோரணங்களும், வரவேற்புப் பதாகைகளும்,
அசைந்தாடும் கொடிகளும் வருக வருக என்று வரவேற்றிட-
வாழ்தொலிகளால் விண்ணும் மண்ணும் அதிர்ந்திட
பூத்தூவி வாழ்த்தும் மக்களின் குதூகலப் புன்னகை

எழில்மிகு கொடியிடை மகளீர் மலர்கள் தூவி நடனமாடிட
மங்கல மகளீர் குங்குமத் திலகமிட்டு ஆராத்தி எடுத்திட
சங்குகள் முழங்கிட, ஒலிக்கும் வேதியர் மந்திரம்

சேனை புடைசூழ, விழுப்புண் மார்பில் வாகை பூத்தாட
மண் வென்ற மாவீரனைச்-சொல்லேறு புலவர்கள்
பரணி பாடிப் போற்றுவார்-கண்ட அழகில்
காமன் கணைபட்டு அழகுக் கன்னியர் மனம் வாடுவார்



கட்டியம் ஒலிக்க கம்பீரமாய் மன்னன் அரியணை அமர்ந்திட
முடியும், கோலும், குடையும், படையும் அதிகாரத்தைப் பறைசாற்ற,
ஒருவன் உலகமெல்லாம் ஆதாயமாக்கிக் கொண்டாலும், தன்னை
இழந்தால் என்ன பயன்?, தன்னை வெல்வதே மெய்யான வெற்றி

நற்செய்தி சொல்லிடும் நாடோடிப் போதகன், நம்பிக்கையால்,
நல்மனங்களில் ஒளியேற்றி, நடைப்பிண மானிடருக்கு
புத்துயிர் அளிக்கும் பெருமான், அமைதியின் தூதராய்,
எளிமையின் கோலம் ஜெருசலேம் எழுந்தருளிய நாள் அன்று.

வலியோனாய் இல்லாது, வாழ்வளிப்பராய்
கழுதையைத் தேர்ந்த புனிதனின் திரு யாத்திரை
ஆடை விரித்துச் சீடர் மகிழ்ந்திட
அமர்ந்தவர் முகத்திலோ மாறாத புன்னகை

வாகை சூடிய மன்னாதி மன்னாய் அன்றி
எளியோர் மனங்களை வென்ற அன்புதாசனாய்,
தேவநேசனாய், மனித நேயனாய், அமைதியின் தூதனாய்
ஜெருசலேம் நோக்கிய அண்ணலின் திருப்பவனி

***சீயோன் மகளே உம் மன்னன் வருகிறார்***
***எளிமையின் வடிவம் ஏறி வருவதோ கழுதைக்குட்டி***
***இறைவாக்கும் நிறைவேறிட***
நல்மனத்தவர் நம்பிக்கையாய் மனுமகன்

ஆடைகளும், பசும் ஓலைகளும் பாதை விரிப்பாக
**ஓசான்னா, ஓசான்னா! எம்மை மீட்டருளும், மீட்டருளும்**
ஆண்டவர் பெயரால் அரசராய் வருபவர் வாழ்க! வாழ்க!
விண்ணகத்தில் அமைதியும் மாட்சியும் உண்டாகுக!



ஒலிவ் ஓலைகள் அசைத்து மக்கள் வாழ்த்திட
சிறுவர், சிறுமியர் மகிழ்ந்து போற்றிட
பொங்கும் பூம்புனல்போல் ஆனந்தம்
மக்களை ஆசிர்வதித்த பரமானந்தம்

பெருக்கெடுத்த ஜோர்தான் புதுவெள்ளம்போல்
மக்கள் வாழ்த்த, வானும், மண்ணும் மகிழ்ந்து பூரிக்க
காற்றிலாடி மரங்களும் மலர் தூவி ஆரவாரிக்க
பரபரப்படைந்த ஜெருசலேம்

மங்கல வாழ்த்தும், மகத்தான வரவேற்பும் கண்டு
புழுங்கிய அமங்கலப் பரிசேய மனங்கள்
சுயம்பிரகாச சுதனை, சுந்தரனை வேண்டியது
போதகரே வாழ்த்துவதை நிறுத்தக் கூறும்.

இவர்கள் வாழ்த்தாவிடில்-இயற்கை வாழ்த்தும்
கல்லும் கரைந்தே கூவும், காற்றும் மகிழ்ந்தே கரையும்
கடலும் பொங்கி ஆர்ப்பரிக்கும்

***இரட்சகன் என் பெயர்- இரட்சிப்பே என் நற்செய்தி***
***இரட்சணியமே என் பணி*** திருமகன் மறுமொழியானது
*(My name is my message; my mission is my name)*

எதிர்பார்த்திருந்த மெசாயா இவரே
எளியவருக்கு உறுதியானது-பரிசேயருக்கு
எரிச்சலூட்டும் இறை நிந்தையானது.

பொங்கும் கங்கைபோல் கண்களில் நீர் வடிய
பூப்போல் பூரித்த மனம் சருகுபோல் வாடிச் சோர
அமைதியின் நகரை அண்மித்தவர் அழுது மொழிந்தார்

அமைதியின் நகரே ஜெருசலேமே
அமைதியின் பாதையை நீ மறந்ததென்ன?
அந்தகனும், செவிடனும்போல் நீ மாறியதென்ன?



ஓ ஜெருசலேமே ! ஜெருசலேமே! இறைவாக்கினரைக்
கொல்லும் நகரே, உன்னிடம் அனுப்பப்பட்டோரை
கல்லால் எறிகிறாயே-

கோழி தன் இறக்கைக்குள் குஞ்சுகளை கூட்டிச்
சேர்பதுபோல்-நானும் உன் மக்களை பல முறை
அரவணைத்துக்கொள்ள விரும்பினேன்
உனக்கோ மனதில்லாமல் போனதே



நாற்புறமும் பகைவர் சூழ-போர்ப்பறையால்
நகரம் வாட-வாளும், தீயும்
உன்னை வதைத்து நிர்மூலமாக்கும்

இறை இல்லம் தரைமட்டமாக-இறைவன்
திருப்பெயரால் வருபவர் ஆசிர் பெற்றவர் என-
நீங்கள் இயம்பும் நாள்வரை என் வருகை சுணங்கும்

***ஆயன் உன்னைத் தேடி வந்த காலத்தை***
***ஆடே நீ அறிந்து கொள்ளவில்லை***
***இரக்கமே இறை விருப்பம் நீ ஏற்கவில்லை***

நிகழவிருக்கும் கொடிய அனர்த்தம்-பூ நெஞ்சை
காட்டுத் தீபோல் எரிக்க, அன்பு நெறி பிறழ்ந்து,
ஆணவமும், மதவெறியும் கல்நெஞ்சங்களை ஆளக்கண்டு
கலங்கிய மனம், கண்ணீர் சிந்தி அழுத தினம்.

நொருங்கிய இதயமே இறை விரும்பும் காணிக்கை
பலியல்ல, இரக்கமே இறை விருப்பம், சடங்கு, சட்டம், பலி
எனச் சீரழிந்து, சத்திய தரிசனத்திற்கு தடையான மதவாதம்

மாறாதோ, மனம் திரும்பாதோ? ஏங்கி
வருந்தியழைத்தும் திருந்தாத கல்மனம்
நேருவிருக்கும் பெருந்துயர் நெஞ்சை நொருக்க
கண்ணீர் சிந்தி நொந்தழுத பூமனம்



கள்வர் குகையான ஆலயத்தில் மனுமகனின்
மதப்புரட்சி, கழுமரத்தில் அறைந்து கொல்ல
தலைமைக்குருவின் சதி முயற்சி

இறைமகன் நான் -எதிர்பார்த்திருந்த
மெஸாயா நான்
சத்தியத்திற்கு சான்று பகிர்ந்த உத்தமன்

இறை நிந்தை மன்னிக்க முடியாத மகாபாவம்
மரணமே மனுமகனுக்குச் சாபம்
திருச்சங்கத்தின் மாறாத ஆணவம்

கசையால் வதைத்து, முள்ளால் முடி சூட்டி
சிலுவையில் அறைந்து கொன்று
சினம் தணித்த மதவாதப் பொய்மை
வதைப்போரையும் மன்னித்த மாகருணை

கோலும், குடையும், முடியும், படையும் கொண்ட
முடி சார்ந்த மன்னரெல்லாம் முடிவில்
பிடி சாம்பலாகிட-வரலாற்றில் அவர்தம்
வெற்றி வாகை பழங்கதையானது

அன்பும், அமைதியும், மன்னிப்பும் அருளி
பிணி தீர்த்து புது வாழ்வளித்த மனுமகன் -இன்றும்
**இறைமகனாய்** போற்றப்பட்டு பூஜிக்கப்பட
***இயேசு ஜீவிக்கின்றார் சத்தியமானது***

***திருமகன் வாழ்வும் போதனையும்***
நல்மனத்தவருக்கு வாழும் கலையானது

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-19-10-2023*

# கைம்பெண்ணின் காணிக்கை

---

அந்தி மயங்கும் நேரம்-அழகு வானில்
நட்சத்திரப் பூக்களின் ஒளிக்கோலம்
அல்லிகள் சூழ்ந்த பங்கயம்போல்- ஆலய முன்றலில்
அருமைச்சீடர் சூழ அண்ணலின் திருக்கோலம்.



தந்தையின் உறைவிடத்தில்-தானத்திற்காய்
வாய் திறந்து- மௌனத்தில் இரஞ்சும் உண்டியல்
இறைவனையும் இரந்து வாழும் ஆண்டியாக்கிட
ஏழைகளையும் சுரண்டிப் பிழைக்கும் மதவியாபாரம்

ஆயனில்லாத ஆடுகள்போல் மக்கள் வாடிட
அச்சமின்றி வேட்டையாடும் ஓநாய்கள்
திருச்சட்டமே வேதம் என்ற மதவாதம்
பலி, சடங்கு, சட்டமான ஆச்சாரம்



பகட்டோடு வந்த செல்வர்-பலர் காண
செருக்கோடு செல்வம் போட்டார்
இருந்ததில் கொஞ்சத்தை வருந்திப்போட்டு
இறுமாப்போடு இறை வணக்கம் செய்தார்

யாருமில்லா வேளையில் -கூட்டமாய்
வாட்டும் வறுமையோடும், குழந்தைச்
செல்வங்களோடும் வந்த விதவை-மனதில்
இறைவனே துணை என்ற மேன்மை

வறுமை வாட்டும் ஆடையில் பொத்தல் காயங்கள்
தைத்தும், ஆறவில்லை, வருந்தி உழைத்த கரங்களில்
உழைப்பின் வடுக்களும் மாறவில்லை
கறைகளும் மறையவில்லை

ஏழ்மைக் கறைபடிந்த முகத்தில் இனிய புன்னகை
வறுமை தோள் ஏற, வயதிற்கு முன்வந்த முதுமை-ஊரும்,
மதமும், வாழா வெட்டிக்கு இரங்காத கொடுமை-நாளை
என்பது நம்பிக்கை, இன்றே நிஜம் என்னும் வாழும் கலை

நைந்த ஆடையில் முடித்து வைத்திருந்த இரண்டு
செப்புக்காசோ காணிக்கை, ஆனந்தமாய் இட்ட
முகத்தில் இனியதோர் புன்னகை -கண்ட
இயேசுவின் முகத்திலோ ஆனந்தக் குறுநகை

இருப்பதை இறைவனோடு பகிர்வதில் கண்ட இன்பம்
இதயத்தை நிறைக்க, வானை நோக்கியவள் முகத்தில் உவகை
உள்ளத்திலோ ஆனந்த அமைதி, அருகிலோ காதல் பரிசு தந்த
வெகுமதி, நிலா ஒளியில் ஏழையோ புதிய பௌர்ணமி

மகிழ்வோடு அண்ணலும் உரைத்தார், இட்டவரெல்லாம்
இருப்பில் கொஞ்சம் இட்டார், இட்டதும் பிச்சை என்றே
இறைவனுக்குப் போட்டார்

இவரோ தன் இருப்பையே காணிக்கையாக்கி
தன்னையே உவந்து ஈந்தாள்
இறை சந்நிதியில் இவரே பெருவள்ளல்




மகிழ்ந்து பகிர்பவர்-இரந்து வாழ்வதில்லை, பிறர் சொத்தை
கவர்ந்து மகிழ்வதில்லை, ஈகைக்கு கைமாறு கொடுக்க -இறைவன்
என்றும் மறப்பதில்லை, ***கொடுங்கள்***
***உங்களுக்கு கொடுக்கப்படும்*** பொய்யாய்ப் போனதில்லை

இருப்பது எள்ளளவானலும்-மகிழ்ந்து
பகிர்ந்தவர் உள்ளம் பெரிது- ஏழையின் காணிக்கை
சீயோன் மலையிலும் பெரிது

இருப்பதில் கொஞ்சம் இட்ட செல்வர் உள்ளத்தில்
என்றும் தீராத இறை வறுமை
இருப்பையே ஈந்த ஏழை உள்ளத்திலோ
உவகையின் செழுமை-இறை பக்தியின் பெருமை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

*Pax Ravichandra-19-10-2023*

# விழி வழி வந்த விசுவாசம்



ஒளியிழந்த விழிகள் இறை தந்த வரமாக
கலையாத இருளில் ஓயாத ஆயுட் சிறை வாசம்
மாறாத சாபமோ? முன்னோரின் பாவமோ?-ஊராரின்
உபதேசம் -அந்தகருக்கு எரிநரகான உபநியாசம்

இரத்தல் வாழ்வாதாரமானது, நாளும், பொழுதும்
கோலோடு நடத்தல், ஏழையின் சோக வாழ்வானது
கோலோ இணைபிரியாத் துணையானது-இறைமகன்
தரிசனம் , அந்தகனின் வாழ்நாள் தவமானது

புலரும் பொழுதும், சாயும் பொழுதும்
ஒன்றான சாபம், அறியாத பாவம்-ஏற்றிய
தீபம் இவன் வாழ்வில் வேண்டாத வரம்

கண்காணாத இறைவனை நினைந்துருகும் நெஞ்சம்
காணாத மனிதரிடம் கை நீட்டி இரந்து கெஞ்சும்
காசு, பணம் காணாத செல்வம்
விழி காண ஒளியே தேடிடும் பெருஞ்செல்வம்.

பாதையோரம் கூடு கட்டிய அந்தகன்
பார்க்கும் விழிகளை மூடி வைத்த வித்தகன்
பாதை வழி வந்த சத்தியன்
வழியும், உண்மையும், வாழ்வுமான நித்தியன்

கோலே வழியாகிக் குழி தவிர்க்க, விழிகளோ இருளாகி ஒளி மறைக்க
மொழிகளோ இரத்தலாகிப் பசி தணிக்க, வாழ்வே இருளாகி
நம்பிக்கை நலிந்த நூலாகி-காற்றடிக்கும் திசையெல்லாம்
புழுதியில் அல்லாடும் கயிறறுந்த பட்டம் விதிவகுத்த நியதியோ?

இளைஞனைக் கண்ட சீடர் மனமும் இளகிட
பணிந்தே குருவிடம் வினவினார்-ஐயனே
அந்தகராய்ப் பிறந்ததற்கு இவர் புரிந்த பாவமோ?
இல்லை பெற்றோர் புரிந்த பாவமோ காரணம்?

பெற்றோர் புரிந்த குற்றமுமல்ல, பிறந்தவர்
புரிந்த பாவமுமல்ல- இறைமகன்
மாட்சிக்கு இவரும் ஒரு சாட்சியம்-இறை
லீலை மானுடம் அறியாத பரகசியம்

கருணையோடு கூர்ந்து நோக்கிய கண்கள், உமிழ் நீரால்
மண்ணில் சேறுண்டாக்கி, ஒளி காணா விழிகளில் பூசி
மொழிந்தார்-சென்று, கழுவும் சீலோவாம் குளத்தில்
இருள் கழியப் புதிய உதயம் காண்பீர்



மொழிந்த வார்த்தையில் ஒலித்த உறுதி நம்பிக்கையளிக்க
கழுவிய விழிகளில் ஒளி பிறந்து காட்சிகள் தெரிய
நெஞ்சுருகி இதயம் இறை துதிபாட
ஆனந்தக் கண்ணீரால் பனித்த விழிகள்

பரிவான மொழியும், பாசமான தொடுகையும்-நெஞ்சைத்
தொட, கண்களைக் கழுவியவரும் பார்வை பெற
கதிர் கண்ட மலர்போல் பூத்த விழிகள்
கானக்குயில்போல் பாடும் மொழிகள்

கண்டவர் மொழிந்தார்-நம்மோடு
இரந்த பிறவிக் குருடர் இவரன்றோ,
நடந்ததும் பேரதிசயமன்றோ?



அறிந்த பரிசேயரும் ஆவலோடு வினவிட, நடந்த நிகழ்வை
இளைஞனும் வியந்து கூறி, பெரும் புதுமை புரிந்தவர்
மாபுனிதரே, காரிருள் நீக்கி கருணையால் ஏழைக்கு-விழி
தந்த பெருமான் இறைவாக்கினரே புகழ்ந்தான்

திருச்சட்டம் புனிதமானது-ஓய்வு நாள் புனிதமானது
மதியாமல் அவமதிக்கும் மனிதனும் புனிதனோ?
கடிந்தவர், பெற்றோரை அழைத்து நடந்த
பேரதிசயம், உண்மையா? என வினவினார்.

பிறவிக்குருடன் எம்மகன்- இன்றோ பார்வை பெற்று
ஒளியைக் காண்கிறான், இருண்ட வாழ்வு -இன்றோ
ஒளியால் மலர்ந்திட-உலகைக் காண்கிறான்

நல்லது, கெட்டது அறிந்த இளைஞன் அவன்
நடந்ததை அவனிடமே கேளுங்கள்
அஞ்சியவர் சாதுரியமாய் விடை பகிர்ந்தார்

பிறவியிலே ஊனமான விழிகள், இருள் அன்றி ஏதுமறியாத
என் விழி மொழிகள், இரந்து வாழ்தல் வாழ்வான சாபம்-
இன்று ஒளி காண விழிகள் தந்த பெருமானால்
சாபம் நீங்கப் பெற்ற ஆனந்த அபிஷேகம்

உண்மையை உரைத்த இளைஞனின் உறுதி
பரிசேய நெஞ்சங்களைப் புண்படுத்திட
பாவி நீ எங்களுக்குப் பாடம் கற்றுத் தருகின்றாயா,
இறுமாப்போடு மொழிந்து, இகழ்ந்து பரிகசித்த மூடர்



இளைஞனைக் கண்ட இளையபெருமான்
மனுமகனிடம் நீர் நம்பிக்கை கொள்கிறீரா? வினவிட
யார் அவர்? கூறும் நம்பிக்கை கொள்கிறேன்
நீர் காண்பவரே அவர்

உம்மைக் காணவோ அந்தகனாய் என் தவம்
உம்மால் பார்வை பெற, நீர் ஈந்ததோ பெரு வரம்
உம்மால் ஒளி கண்ட விழிகளும் இறை ஒளியை கண்டனவே
என்னே உங்கள் அருள்வரம்- இறைவனைப்
போற்றியவர்-இயேசுவைத் தொழுதார்

**நான் உலகில் இருக்கும்வரை**
**நாமே உலகின் ஒளி**



பார்வையற்றோர் பார்வை பெறவும், பார்வையுடையோர்
பார்வையிழக்கவும், நான் வந்தேன் இயேசு மொழிந்திட
நாம் என்ன அந்தகரா? கோபத்தோடு கொதித்த பரிசேயர்

அந்தகன் பார்வை பெறுதல் அரிதன்று,
ஆணவக்குருடர் பார்வை பெறுதல் அரிதிலும் அரிது,
அந்தகராய் இருந்திருந்தால் உண்மை புரிந்திருக்கும்

ஆணவக் குருடராய்-மதவெறியராய் இருப்பதனால்
உண்மையை, இறை கருணையை சுவைக்க முடியாது
இருளில் தடுமாறுகின்றீர் கடிந்தார் பெருமான்

கதிர் கண்ட மலர்கள்போல் கண்கள் பூத்துச் சிரிக்க
காரிருளில் தட்டுத் தடுமாறிய இதயம்-உதயம்
கண்ட கோகிலம்போல் கூவிக்களிக்க-விழிகளில்
பனி படர, பரவசமாய் பரமனைப் போற்றிய பக்தன்

ஒளி பெற்று வழி கண்டு கோலும் கை நழுவ
வழியும், உண்மையும், வாழ்வுமானவன் தந்த
புது வாழ்வு நெஞ்சில் இனிக்க -தாய்ப்
பசுவைத் தொடரும் கன்றாய் இளைஞன்

கண்கள் மலரக் காட்சிகள் தெரிந்திட, இரந்து வாழ்ந்த
இழிவாழ்வும் கனவாய், கலைந்து பழங்கதையாய்ப் போனது,
புதுப்பொழுது புலர்ந்திட, ஒளி தந்த இறைமகனைக் கண்டு-
உள்ளம் நன்றியால் பொங்கும் பூம்புனலாய்ப் பூரித்தது



உயிரும் மெய்யும் ஒன்றாய்ச் சிலிர்த்திட
ஒளியான விழிகளில் ஆனந்த கண்ணீர் பூத்திட
நன்றிப்பெருக்கால் விம்மிய இதயம்
நாதன்தாள் போற்றி வணங்கியது

கண்களிருந்தும் உண்மையைக்
காண மறுப்போரே குருடரே-செவிகளிருந்தும் -
உண்மைக்குச் செவிகொடாதோரே செவிடரே

இரக்கத்தை புறந்தள்ளி திருச்சட்டத்தை
ஏந்திப் போற்றும் கல்நெஞ்சம்
கண்ணெதிரே உண்மையின் ஒளி ஒளிர்ந்தும்
காணாத மதவாத நயவஞ்சகம்



வேதம் சுமந்திடும் -மதவாதக் கழுதைகளுக்கு
இறை நாதம் புரியாது, அன்பின் நாதம்,
ஆணவம் கேளாத தேவ சங்கீதம்

காலம் கடந்த இறைவனுக்கு,கருணை புரியக் காலநேரமேது?
அன்பின் வேதத்திற்கு, மெய்பொருளிற்கு மதமேது?
ஓய்வு நாள், வேலை நாள் பிரிவினையும் ஏது?

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்**

*Pax Ravichandra-19-10-2023*

# இறுதித் தீர்வை-இரக்கம்

---

இறுதித் தீர்ப்பளிக்கும் நீதிபதியாய்-இறைமகன்
வானவர் சேனை புடை சூழ வருவார், விழிப்பாயிருங்கள்
இரக்கமே இறை விரும்பும் காணிக்கை
கருணையே, நிலை வாழ்வுக்கு உரைகல்



அரியணை அமர்ந்த நல்லாயனும்
இடம், வலமாய் வெள்ளாடுகளையும்
செம்மறிகளையும் பிரித்தே
செம்மறிகளுக்கு புகழாரம் சூட்டுவார்



வானகத் தந்தையின் இல்லத்தில், வாழப்
பேறுபெற்றவர்களே வாருங்கள், வந்து-எம்மோடு
நித்தியத்திற்கும் இன்புற்று வாழுங்கள்-

பசியால் வருந்தினேன் உண்ணத் தந்தீர்
தாகத்தால் வாடினேன் பருகத் தந்தீர்
அந்நியனாய் இருந்தேன் சகோதரனாய் ஏற்றீர்
ஆடையின்றி இருந்தேன் ஆடை தந்தீர்

நோயுற்று இருந்தேன் பார்க்க வந்தீர்
சிறையில் இருந்தேன்- ஆறுதல் மொழிந்தீர்

நல்லவர்களோ, ஆண்டவரே எப்போது
இவற்றை நாம் உமக்கு புரிந்தோம்? வினவிட
எளியோருக்கு நீங்கள் புரிந்ததெல்லாம்
எனக்கே புரிந்தீர்கள் என்பார்



இடப்புறம் நிற்போரை பார்த்து-ஏழை
எளியவனாய், உங்கள் வாயிலில் நின்றேன்
இரக்கம் காட்ட மறுத்தீர்-ஒரு கிண்ணம் நீரோ,
ஒரு பிடிச் சோறோ ஈய மறுத்தீர்

பழந்துணியோ, புன்னகையோ காட்ட மறுத்தீர்
துன்பமே உங்களுக்கு சாபம்
அது நீங்கள் வேண்டிப் பெற்ற வரம்
எதை விதைத்தீர்களோ அதை அறுப்பீர்கள்

ஐயனே எப்போது நீர் வந்தீர்? எம்மிடம் இரந்து நின்றீர்?
இறைமகனும் ஏழை எளியோனாய் வருவாரோ?
எம்மிடம் இரந்துண்டு வாழ்வாரோ?
ஆடையின்றிப் பசி தாகம் வாட்டிடச்-சிறையிருந்து
நோய் சுமந்து நீர் வாடும் நாளும் வருமோ?



அன்பே தெய்வம், கருணையே பெருஞ்செல்வம்
கண்முன் வாடும் ஏழையில் என்னைக் காணாதவர்
எங்கு தேடினாலும் என்னைக் காணமாட்டார்
கல் நெஞ்சத்தில் இறைவன் வாழ்வதில்லை
கள்வர் குகையும் ஆலயமில்லை

மண், பொன், பெண்ணில் தேடும் இன்பத்தை-துன்புறும்
மானுடர் துயர் துடைத்து இன்பம் காணுங்கள்
அன்பினால் இன்புற்று-இருப்பதை பகிர்ந்து
இரக்கம், கருணையை வாழ்வாக்கி மகிழுங்கள்

துன்புறும் ஏழையில் இறைவனைக் காண்போர்
உண்மையில் என்னையே காண்கிறார்
இன்புற்று தம்மிடம் உள்ளதைப் பகிர்ந்து
வானகத்தில் அழியாச் செல்வம் சேர்க்கின்றார்

இருப்பதைப் பகிர்ந்து இல்லாமை போக்கி
அழியாச் செல்வத்தை வானகத்தே சேமியுங்கள்
கள்வனும் திருடாத, கறையானும் அரிக்காத
உன்னத செல்வமே நிலையான சொத்து



அன்பே மேல்வரிச் சட்டம்
அன்பே வாயில், அன்பே வழி, அன்பே இறைவன்
ஏழைக்கு இரங்குபவனுக்கு எக்குறையுமில்லை
கொடுங்கள் உங்களுக்கு கொடுக்கப்படும்

இரக்கமே இறை நீதி-இறைவனோ தயாநிதி
இறைவன் யாரையும் தண்டிப்பதில்லை,
நம் பாவங்களே நம்மைத் தண்டிக்கும்

தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்,
எளிய மனத்தவருக்கே இறையரசு
இரக்கமுடையோரே இரக்கம் பெறுவர்

அன்பே இறைவன். அன்பில் நிலைத்திருப்பவன
இறைவனில் நிலைத்திருக்கிறான்
இறைவனும் அவனில் நிலைத்திருக்கின்றார்
அன்பே மோட்சம்-அமைதியே ஆனந்தம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

Pax Ravichandra-19-10-2023

# மண முறிவு



நா வரண்டு தவித்த கலைமான்கள், நீரோடை கண்டு
துள்ளிக் குதித்திட, பசி வாட்டிடப் பறந்தலைந்த அஞ்சுகங்கள்
பழமுதிர்ச்சோலை கண்டு கூவிக் களித்திட, பூங்கமிழ் வாவியும்,
புள்ளுறை சோலையும் கண்டு தேனீக்கள் ரீங்காரம் இசைத்திட
அன்ன மனுமகனை கண்டு மகிழ்ந்த மக்கள் கூட்டம்,
உறவாய் சூழ்ந்து இன்புற அம்மான் மகன் இருப்போ சத்சங்கம்

புண் மொய்த்து நோய்காவும் ஈக்கள், பரிசேய, மறை வல்லுனரான
மாக்கள், மனம் வெதும்பிட-குற்றம் கண்டு குருவைப் பழிக்க
யாதுமறியதோர் போல் வினவினார்-ஐயனே மணவிலக்கு
குறித்து உம் கருத்தென்ன? மனைவியை-விலக்கிவிடுவது சரியா?



அர்த்தநாரிஸ்வரனோ தம் சாயலாய்
ஆணும், பெண்ணுமாய் மனிதரைப் படைத்தார்
ஒரு குடும்பமாய் வாழ்ந்து பல்கிப் பெருகி-
பூமியை சுதந்தரிக்க ஆசீரளித்தார்

பெற்றோரிலும், பிரியவளாய் கணவன்
மனைவியை நேசிக்க உற்ற உறவு
ஒருடலாய் மாறி இன்புற-கடவுள் இணைத்ததை
மனிதன் பிரிக்காதிருக்க தீது மணமுறிவு



மணவிலக்குச் சான்றிதழைக் கொடுத்து
மனைவியை விலக்கி விடலாம்-
மோசேயின் கட்டளை பின் ஏனோ?

கல்லான உள்ளங்களுக்கே மணவிலக்கு
கனிந்த மனங்களுக்கு இல்லறமே நல்லறம்
கணவன் மனைவி உறவோ தேன் கரும்பு
கூடி வாழ்ந்தால் கோடி இன்பம்

பரத்தமையில் ஈடுபட்ட மனைவி சாபம்
சுயநலத்தால் மனைவியை விலக்கிவிட்டு
இன்னொருத்தியை மணப்பது பாவம்-விபச்சாரம்

மணவிலக்கு கட்டளையல்ல-அனுமதி, கட்டளையும் ,
அனுமதியும் ஒன்றல்ல-வேறு, வேறு,
நுன்மதியாளன் பதிலோ மதவாதிகளுக்குச் சவுக்கடி



மணவிலக்கை எதிர்த்தால் -கட்டளைக்கு
எதிரானவர்-மணவிலக்கை ஏற்றால்-தம்
அன்புப் போதனைக்கே முரணானவர்
எண்பிக்க வந்து ஏமாந்த குள்ளநரிகள்

கணவன் மனைவி உறவும் வேம்பென்றால்
திருமணம் எதற்கு சீடர் வாதம்
அருட் கொடை பெற்றவரேயன்றி-வேறு எவராலும்
இக்கூற்றை ஏற்கமுடியாது குருவின் கீதம்

பிறவியிலே அண்ணகராய்ப் பிறந்தவருண்டு
மனிதரால் அண்ணகராக்கப்பட்டவருமுண்டு
விண்ணரசின் பொருட்டு-தம்மை தாமே
அண்ணகராக்கியவருமுண்டு

உள்ளிருக்கும் பெண்மையோடு தம்மை ஒன்றித்து
ஆண், பெண் இருமை கடந்து-தம்மை
தாமே பிறப்பித்வர்க்கே இது சாத்தியம்
காமம் கடந்திட இருப்பதோ கடவுள் தன்மை




விண்ணவன் இணைத்ததை மண்ணவர் பிரித்திட
மணம் வீசும் திருமணமும் மணமிழந்து வாடி நாறிட
அநாதரவான பெண்மை கண்ணீரில் நிலைத்திட
மணவிலக்கு ஆணாதிக்க வழக்கு

இல்லறமே நல்லறம்-அன்பும், புரிந்துணர்வும்
இணைபிரியா வாழ்வின் அடித்தளம்
இயேசுவின் திருவாக்கு

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

Pax Ravichandra-19-10-2023

# கானானியத் தாய்



அந்தி நேரம்,அலைமோதும் தீர், சீதோன் கடலோராம்
அண்ணலும் சீடர்களும் ஓய்வாய் நடந்திட
தென்றலும் தழுவி நேசம் சொன்னது- அலைகளும்
கால்களைக் கழுவி பாதபூஜை செய்தது

கண்களில் கங்கை பொங்கப்- பூவான இதயம்
புண்ணாகி, புயலழித்த பூவானம்போல் அல்லாட
கூப்பிய கைகளோடும், குழறும் மொழியோடும்
அண்ணலை அணுகிய கானானியத் தாய்



அழுது மனமுருகிக் கெஞ்சினார், இறை மகனே
என் மகளைக் குணமாக்கும், தீய ஆவி
அவளை ஆட்டிப் படைக்க
தீயில் விழுந்த தும்பிபோல் துடிக்கின்றாள்

இருதலைக் கொள்ளி எறும்புபோல் செய்வதறியாது
என் மனம் தவிக்க, இறைமகனே ஏழை என் மீது இரங்கும்
உம்மால் முடியாதது ஏதுமில்லை

மொழி ஏதும் கூறாமல் ''வழியானவர்'' நடக்க
தளராமல் பின் தொடர்ந்த தாயவள்
மன்றாட்டோ ஓயாத அலை
தாய் நெஞ்சை வாட்டும் துயரோ பெருமலை

அன்னையின் துயரோ அந்தோ பரிதாபம்
அன்பால் தாயைத் தேற்றி அனுப்பிவிடும்
கண்ணீர் பொங்கக் கதறி-எம்மைப்
பின் தொடர்கின்றார் மொழிந்தார் சீடர்

தொலைந்த தன் ஆடுகளை தேடிடும் ஆயன்
அன்னையின் துயர் அறிவார்

அழுகையும், கண்ணீரும் அலைபாய
முழந்தாள் படியிட்டுக் கெஞ்சிய அன்னை
இறைமகனே என் மேல் இரங்கும்
என் குழந்தை குணமாக அருள்புரியும்

நன்றல்ல தாயே குழந்தைகளின் உணவை நாய்களுக்குப்
போடுவது நன்றல்ல, குழந்தைகள் பசியால் வாடுமே
அறிவேன் ஆயினும் சிந்தும் உணவை
ஆண்டவரே குட்டிகள் உண்டு பசியாறுமே



கருணையோடு அன்னையைப் பார்த்தவர்
கண்களில் பெரு விசுவாசம் கண்டார், அம்மா
உம் விசுவாசம் கண்டு அகமகிழ்ந்தேன்
அந்நியராயிருந்தும் உண்மையை அனுபூதியில் கண்டீர்
அருமை மகள் குணமடைந்தாள், அமைதியோடு செல்வீர்

வார்த்தை கேட்டு அன்னையின் வருத்தம் மறைந்திட
நெஞ்சிலே ஆயிரம் வண்ணப் பூக்கள் மலர்ந்திட, நேசத்தால்
நிறைந்தவள்-நேசர் மகனை, இரு கரம் கூப்பித் தொழுதாள்
உம் ஒரு வார்த்தையே போதும் -நம்பியவள்
நலம் பெற்ற மகள் காண கடுகி நடந்தாள்

விம்மலும், அழுகையும் மறைந்து அன்னை முகத்தில்
ஆனந்தம் பொங்க அம்மான் மகன் வார்த்தையை
நம்பிய அன்னையின் விசுவாசம் ஆழியிலும் ஆழமென
சீடரும் கண்டே வியந்து தாயைப் போற்றினார்

அன்னையின் விசுவாசம் ஆழ்கடலிலும் ஆழம்
பாசமோ இமயத்திலும் உயரம், அன்னையின்
விசுவாசத்தை அன்புச்சீடரும் அறிந்து, விசுவாசத்தில்
நிலைத்திட, அழகன் திருவிளையாடல் அன்று

பொய்த் தெய்வங்களை வழிபட்டு-மூட நம்பிக்கையில்
நிலைத்த அஞ்ஞானியரோ கானானியர், தன் மகளின்
தீராத் துயரில் உண்மை அறிந்தவள், மெய் இறைவனைத்
தேடிக் கண்டாள் விசுவாசத்தால் இன்பம் கண்டாள்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

*Pax Ravichandra-19-10-2023*

# பெத்சாதா-குணமாக்கல்



கலங்கும் நீருக்குள் முதலில் கால் வைப்பவர்
நலமடைவார் நம்பிக்கையாக-கலங்கிய நெஞ்சோடு
ஐந்து மண்டபக் குளக்கரையில்-மனஞ்சோர
ஐம்புலனும் வாடக் குழுமியிருந்த நோயாளரோ பலர்

நலம் காண ஏங்கும் இதயங்கள், கலங்கும் நீர் பார்த்து
இயலாமையில் கண்கள் கலங்கி நீர் பூக்க மனஞ்சோரும்,
கவலைப் பூஞ்சணம் படர்ந்த நெஞ்சங்கள்
பூபாளம் மறந்து நாளும் முகாரி பாடும்

மெய்யெங்கும் நோயிட்ட அலங்கோலங்கள் உயிர், மெய்யை
ஒன்றாய் வருத்திட, பொய்யான மெய்யுள் சிறையான
அவல வாழ்வு, கல்வாரிப் பாதையான சாபம்,
சாவோ வரப்பிரசாதம் என்றான சோகம்

நீர் பூத்த விழிகள்-இமைக்காமல் கலங்கும்
நீர் பார்த்துக் களைத்துக் கண்ணீர் பூக்க, நம்பிக்கை,
நலியும், நோய் முற்றி மெய் வாட, நெய்யின்றி
சுடரான வாழ்க்கை மெல்ல அணையும்

நோயால் நொந்து மெய்யும் பொய்யாக-ஆண்டுகள்
முப்பத்தியெட்டும் படுத்த படுக்கையாக, இளமை கழிந்து
முதுமை வாட்ட, எல்லாம் மாயையாக, கலங்கும் நீரில்
இறங்கி குணம் பெற, தவமாய்த் தவமிருந்த ஏழை

அற்ற குளமாய் ஆரோக்கியம் வற்றிட
அறுநீர்ப் பறவைபோல் நம்பிக்கை பறந்தோடிட
ஒட்டிய அல்லியும், ஆம்பலுமாய்-இற்றுப்போன
படுக்கையும், போர்வையும் பக்கத்தில் கிடந்தன.

எலும்பும் தோலுமாய்க் கிடந்த ஏழையின்மேல்
பெருமான் பார்வையும் பட்டிட
வாடிய பயிருக்கு வான் மழையின் அபிஷேகம்
வற்றிய குளத்தில் புது வெள்ளத்தின் ஆரவாரம்

பூமழை பொழிய, இறைமகன் வாழ்த்திய பொற்காலம்
படுத்தவர் நலம் பெற்று எழுந்து நடந்திட,
வாழ்வு மலர்ந்திடப், புலர்ந்த வசந்தகாலம்

நீர் கலங்கிட, கால் நடுங்கிட, ஒருவர் இறங்கிக்
குணம் பெற, கண்ணீர் சிந்திய நடைப்பிணம்
***உம் படுக்கையை எடுத்துக் கொண்டு வீடு செல்லும்***
வார்த்தை உரைத்த கருணையிலோ ஆரோக்கியம்

ஆடி அடங்கிய நாடி நரம்புகளில்
ஆரவாரமாய் பெருகி ஓடிய உயிர்ச்சக்தி
அங்கமெங்கும் புத்துயிர் பாய்ந்து வாழ்த்திட-புது
வசந்தமாய் மாறிய வாழ்வோ வரமான இறைசக்தி



கூண்டுக்கிளிக்கு சுதந்திரம் கிடைத்திட
இறகடித்து வானில் பறந்திடும் புது வாழ்வு
இறைமகனால் அருள் வரமானது

புள்ளிமான்போல் இதயம் துள்ளி மகிழ,
கானக்குயில்போல் நெஞ்சம் பூபாளம் இசைக்க
வார்த்தையால் புது உதயம் பிறந்தது

ஓய்வு நாள் ஒழுக்கவாதி பரிசேயர்
படுக்கையோடு நடக்கும் முதியவரைக் கடிந்திட
கண்டனமோ கடவுளை நிந்தித்திட
***வெற்றுச் சட்டமான மதம்-வேசித்தனமான போதனை***

ஆண்டுகள் முப்பத்தி எட்டு-நோய் வாட்டிட, நொந்து
முடங்கிக் கிடந்தேன், கலங்கும் நீரில் நீராடிக் குணமடைய
காலங்கள் பல காத்திருந்து சலிப்புற்றேன்



இன்றோ கலங்கும் என் விழிநீர் கண்டு
கருணையின் ஆசிரால் நலம்பெற்றேன்
நலம் தந்தவர் சொற்படியே அடியேன்
படுக்கையைத் தூக்கிக் கொண்டு நடந்தேன்

யார் உம்மைக் குணமாக்கியது? ஆணவம் வினவிட
நானறியேன் முதியவர் மொழிந்திட, குணமளித்த குணாளனை,
கருணையில்லா மூர்க்கர் வசைபாட-குணமான
இதயம் கோகிலம்போல் இறை புகழ்பாடியது

நலமடைந்தவரைக் கோயிலில் கண்டவரும் நலம் காக்க
உரைத்தார்- கேடானது ஏதும் இனியும் நேராதிருக்க
பாவம் செய்யாதீர் -அறிந்தவரும்
பரிசேயரிடம் அற்புதனுக்கு சாட்சி சொன்னார்

குரைத்துக் கொதித்த பரிசேயர் கூட்டம்
விறைத்த மனங்களில் கருணைக்கோ பஞ்சம்
அன்பை அறியாத நீதி- ஒழுக்கமோ
மதமும், திருச்சட்டமுமான அநீதி

கண்ட பெருமான் கனிவோடு உரைத்தார்
தந்தை இறைவன் செயலாற்ற கால நேரமில்லை
காலநேரம் கடந்த நித்தியமோ இறைவன்

இறைவனுக்கு ஓய்வுநாள், வேலை நாள் பேதங்களில்லை
கருணைக்கு சுபநேரமோ, மூகூர்த்த நேரமோ
இராகு காலமோ கிடையாது

***தனயனும் தந்தை வழி நடப்பதில் தப்பில்லை***
***இரக்கத்தை புறந்தள்ளி பலியை ஏற்பவர் இறைவனல்ல***
***அன்பே இறைவன்- கருணையே அவர் மொழி***

என் தந்தை இறைவன் -நானோ இறைமகன்
பலியல்ல இரக்கத்தையே நாம் விரும்புவது
விளம்பியதை விரும்பாத பரிசேயர் நெஞ்சிலோ வஞ்சம்
படமெடுத்த நாகத்திலோ கொத்தும் வெஞ்சினம்

கல்லில் பொறித்த திருச்சட்டத்தை
மனங்களில் பொறித்தும் -கனியாத மனங்கள்
வார்த்தை முளைக்காமல் காய்ந்திட
உள்ளங்களோ கற்பாறைகள்

அன்பே சிவம் என்பதை மறந்து-
பலி, சடங்கு, சம்பிரதாயங்களில் மானுடத்தை
அடிமையாக்கும் மதவேசித்தனங்கள்
விபச்சாரகுலச்சந்ததியின் வேதநெறிகள்.

மனிதர் உங்களுக்கு என்ன செய்யவேண்டுமென நீங்கள்
விரும்புகின்றீர்களோ-அதையே நீங்கள் பிறருக்கும் செய்யுங்கள்
***அன்பே மதச் சாரம்-அன்பே இறை வேதம்***

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

Pax Ravichandra-19-10-2023

# மெய்யான திராட்சைக் கொடி





தந்தையின் மெய்யான திராட்சைக் கொடி **நானே**,
கனிகொடாத கிளைகளைத் தறித்தும்,
கனிதரும் கிளைகள் -மிகுந்த கனிதர, அவற்றை
கழித்து விடுவதும் என் தந்தையே

கொடியோடு இணைந்த கிளைகளே
மிகுந்த கனிதரும்-என்னோடு நீங்கள்
இணைந்திருந்தால் மிகுந்த கனி தருவீர்.

என்னைப் பிரிந்து உங்களால் வாழ முடியாது,
என்னோடு இணைந்திராதவர்
தறித்து எறியப்பட்டு-எரித்தழிக்கப்படுவார்

நீங்கள் என்னுள்ளும்-என் வார்த்தைகள்
உங்களுள்ளும் நிலைத்திருந்தால்
நீங்கள் விரும்பிக் கேட்பதெல்லாம் நடக்கும்

நீங்கள் மிகுந்த கனிதந்து-என் சீடராய் இருப்பதே
என் தந்தைக்கு மாட்சி-என் தந்தை
என் மீது அன்பு கொண்டுள்ளதுபோல்-நானும்
உங்கள் மீது அன்பு கொண்டுள்ளேன்
என் அன்பில் நிலைத்திருங்கள்




தந்தையின் கட்டளைகளை கடைப்பிடித்து
அவரது அன்பில் நான் நிலைத்திருப்பதுபோல்
நீங்களும் என் கட்டளைகளை கடைப்பிடித்தால்
என் அன்பில் நிலைத்திருப்பீர்கள், என் மகிழ்ச்சி
உங்களுள் இருக்கவும் உங்கள் மகிழ்ச்சி
நிறைவு பெறவும் இவற்றை அறிவீர்

நான் உங்களை அன்பு செய்வதுபோல்
நீங்களும் ஒருவரை ஒருவர் அன்பு செய்யுங்கள்.
இதுவே என் கட்டளை

நட்புக்காக உயிரைக் கொடுப்பதைவிட மேலான
அன்பு இல்லை, என் கட்டளைகளை கடைப்பிடித்தால்
நீங்கள் என் நண்பர்கள்



நீங்கள் நண்பர்கள்-ஏனெனில் என் தந்தையிடம்
நான் கேட்டவை அனைத்தையும் உங்களுக்கு அறிவித்தேன்
நீங்கள் என்னைத் தேர்ந்து கொள்ளவில்லை
நான்தான் உங்களைத் தேர்ந்து கொண்டேன்

நீங்கள் கனி தரவும், உங்கள் கனி நிலைத்திருக்கவும்
உங்களை ஏற்படுத்தினேன்-ஆதலால்
நீங்கள் என் பெயரால் தந்தையிடம் கேட்பதை
அவர் உங்களுக்கு அருள்வார

நீங்கள் என்னைச் சார்ந்தவர்கள், உண்மையைச்
சார்ந்தவர்கள்-உலகைச் சார்ந்தவர்கள் அல்ல
உலகைச் சார்ந்தவர்கள் உங்களை வெறுப்பர்

என்னையையும், தந்தையையும் அவர்கள் அறியார்
என்னையையும், தந்தையையும் வெறுத்ததுபோல்
அவர்கள் உங்களையும் வெறுப்பார்

வழியும், உண்மையும், வாழ்வும் 'நானே''
*விழிப்புணர்வே நான்*
*விழிப்புணர்வில் நிலைத்திருங்கள்*
*சுவைமிகுந்த கனி தருவீர்*

கனிந்த திராட்சையை களஞ்சியப் படுத்த முடியாது
கனிகள் அழுகிப் பழுதடையும்-திராட்சை மதுவோ
காலம் கடந்தும் நிலைக்கும், சுவை அதிகரிக்கும்



என் வார்த்தை உங்களுள்-போதை தரும்
திராட்சை மதுவாய் நிலைக்கட்டும்
எங்கும் அமைதி பரவட்டும்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

*Pax Ravichandra-19-10-2023*

# சீசருக்கு வரி

கள்ளும், பாலும் நிறத்தில் ஒன்றானலும் மணத்திலும்,
சுவையிலும் வேறு, காகிதப்பூக்களும், வண்ண மலர்களும்-
உருவில் ஒன்றானாலும் உயிர்த்தன்மையில் வேறு,
கள்ளும் பாலாகாது, காகிதப்பூவும் வண்ண மலராகாது.

ஆசாடபூதிகளாய் வாழும் ஆன்மீகப்போலிகளை
ஆன்மீகக் கிளர்ச்சியாளர் சாடி-வரட்டு
ஆசாரங்களைக் கண்டித்திட-
கோபத்தில் கொதித்த பரிசேயர் கூட்டம்

ஏரோதியார் துணை நாடி
விரோதத்தை விபரீதச் சூதாட்டமாக்கி
இயேசுவை சிக்க வைக்க -ஒற்றர்களை
ஒன்றுமறியாதவர்போல் அனுப்பியது

உள்ளொன்று வைத்து புறம் ஒன்று பேசி,
உறவாடும் நாவில் தேன் ஒழுகும், நஞ்சான உள்ளத்தில்
வஞ்சம் நிலைத்திட, உயிர் கொல்லும் நச்சரவம்-
தருணம் பார்த்துக் கொத்தும்

வந்தவர்கள் வாழ்த்திக் கூறினார், ஐயனே அறிவோம் உம்மை
சத்தியமே உம் வார்த்தை, சத்தியத்திற்கு சாட்சியமாய் உம் வாழ்க்கை
அஞ்சாதவர் நீர் ஆள், பொருள் பார்த்து செயற்படாதவர்-எமக்கு
கூறும்-சீசருக்கு வரி செலுத்துவது முறையா? இல்லையா?

சுந்தரனைச் சூதுவாதில்லாத மனுபுத்திரனை
சூழ்ச்சியால் சிக்க வைக்க, சூதும் வாதும்
வாழ்வான கயவர், சூசகமாய்க் கேட்டார்

சீசருக்கு வரி செலுத்துவது முறையோ?
ஆம் என்றால்-அந்நிய அடிமைத்தனத்தை ஆதரிப்பவன்
அடிவருடி, இவரை மக்கள் வெறுப்பார்,

இல்லை என்றால்-ஆளும் ரோமமப் பேரரசின் எதிரி
புரட்சியாளன்-அரசு இவரைத் தண்டிக்கும்
இருதலைக் கொள்ளி எறும்பாய் இயேசுவின் நிலை மாற
வஞ்சகர் கேள்வி, வார்த்தையானவரோ ஞானயோகி



வினயமாய் வினவிய வினாவில்
விடயமாய் மறைத்த விஷத்தை அறிந்தவர்
விளையாட்டாய் வினவினார்-எனக்கு
வரி செலுத்தும் நாணயத்தைக் காட்டுங்கள்

நாணயமற்றவர் ஒரு நாணயத்தை காட்டிட
நாணயமானவர் நயமாய் கேட்டார்-நாணயத்தில
உள்ள உருவும், எழுத்தும் யாருடையவை?

சீசருடையவை பதிலாக-அப்படியானால்
சீசருடையதை சீசருக்கும், கடவுளுக்குரியதை
கடவுளுக்கும் செலுத்துங்கள்.

நயமிக்க மெய்ஞானத்தின் பதில் அஞ்ஞானிகளுக்கு
பெருவியப்பானது, குறை காண வந்த வஞ்சகரும் -மனதுள்
ஞானத்தைப் போற்றி புறமுதுகு காட்டிட-கர்ம யோகியின்
வாழ்வு காரிருளிலும் ஞான தீபமாய் ஒளிர்ந்தது

கள்வர் குகையான ஆலயத்தை கண்டித்தவரும்
கைம்பெண்ணின் காணிக்கையைப் புகழ்ந்தார்
கோயில் வரி செலுத்தப் பேதுருவைப் பணித்தார்

விதவையின் காணிக்கை இறை நன்றியானது
மனுமகனின் வரியோ-அந்நியர் நாம்- உரிமைக்
குடிமகன் அல்லோம் என்பதற்குச் சான்றானது

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra-19-10-2023*

# தாகமாயிருப்பவர்களே வாருங்கள்



பூக்களைச் சுற்றி தேனீக்களின் ரீங்காரம்
புண்களைச் சுற்றி ஈக்களின் கொண்டாட்டம்
கனிகளைச் சுவைத்து கிளிகளின் பூபாளம்
பிணங்களைச் சூழ்ந்து கழுகளின் ஆர்ப்பாட்டம்

மனப்பிணி, உடற்பிணி நீங்கிட-சூழ்ந்த
மக்கள் மனங்களிலோ அமைதியின் சங்கமம்
இறைமகன் இருப்பிலோ மலரும்
ஆனந்தச் சத்சங்கம்



தகவல் அறிவும், வரண்ட திருச்சட்டமும்
உரைகல்லாக- மத மாச்சரிய கூட்டம்
மக்களைப் பிரித்து, மனுமகனை ஓரம் கட்டிட
மதவாதத்தின் மாறாத நயவஞ்சகம்

“கலிலேயாவிலிருந்து மெஸாயா வரக்கூடுமோ” ?
எங்கிருந்து உமக்கு இந்த அதிகாரம் கிடைத்தது

கலிலேயன் இவனோ, தச்சனின் மகன், தாய் மரியாள்
உறவுகளும் நம்மிடையே வாழ எப்படி இவன்
தன்னை மெஸாயா என விளம்புவது?
இறைவாக்குக்கு எதிரான நிந்தை இவன் வார்த்தை

பெற்றோர் பிறப்பைத் தந்திட-உடலை உலகு கண்டிட
அறிவும், சூழலும் மனதைத் தந்திட
ஆன்மா எனும் உள்ளிருப்பை-சுயத்தை
அறியாத மானுடம் இவனை அறிவோம் என்றது.

இனம், மதம், மொழி, நிறம் கடந்து
உண்மையைத் தேடலாக்கியவருக்கு பாதைகளில்லை
எல்லா பாதைகளும்-உண்மையின்
இருப்பிடத்திற்கே அழைத்துச் செல்கின்றன

ஆபிரகாமிற்கு முன் நாம் இருக்கிறோம் இருப்பே இறைவன்-
தன்னை அறிந்தவர், காலம் கடந்தவர், கணந்தோறும்
வாழும் மனிதர், ஓடும் நதியாய் அவர் வாழ்வு

உள்ளுணர்விலிருந்து உண்மையை உரைத்திடப்,
புரிந்தவர் யாருமிலர், தூய மனதிற்கே சத்திய தரிசனம்

நான் யார்? நான் எங்கிருந்து வந்தேன்?
நாம் எங்கு போகின்றோம்? ஆணவ முக்காலியின் கால்களில்
ஒன்றை தகர்த்தாலும் முழுவதும் தகரும், தம் இருப்பை
அறியாத ஆணவம் மொழிந்தது உம்மை நாம் அறிவோம்

நம்மை நாம் அறிவோம். வந்தவிடமும், போகுமிடமும்
அறிவோம், ஆணவத்தின் கால்களில் நடைபோடும்
மாந்தர், தொன்று தொட்டு இருந்து வரும்
தர்மத்தை அறியாது மதவாதக்குருடர்

நானாக வரவில்லை-தந்தையே
இறைபணியாற்ற என்னை அனுப்பினார்
***நாம் எல்லோரும் அனுப்பப்பட்டவர்களே***

தந்தை பணியே என் பணி. நானாக எதையும்
செய்யவில்லை, தந்தை செய்வதை நானும் செய்கிறேன்,
என்னை நான் அறிவேன், உங்களுக்கோ,
உங்களையும் தெரியாது, என்னையும் தெரியாது

சுயத்திலிருந்து சுயம்புவாய் இயம்பிட
விழிப்புணர்வின்றிக் காழ்ப்புணர்வால் நஞ்சான
மனம், புரியாத குணம்-உண்மையை ஏற்காத
கல்மனம், மதவாத இனம்

வெற்றுப் புல்லாங்குழலில்  இறைவனின் வேணுகானம்
கூத்தாடிகளுக்குப் புரியாத சாஸ்திரிய சங்கீதம்
இறையிருப்பின் மனுஷரூபம்-ஆணவ மனங்களுக்கு
தச்சன் மகனான தோற்றம்

உள்ளுணர்வின் சிகரத்திலிருந்து பொங்கிடும்
உண்மையின் அருவி- கண்முன் இருந்த உண்மையைக்
காணத்தவமின்றி, வரமின்றி அருள் மழையைத் தவறவிட்ட
கல்மனங்களோ ஆன்மீகப்போலி

***என்னுயிரை நானாகவே கொடுக்கின்றேன்***
யாரும் அதை என்னிடமிருந்து பறித்துவிட முடியாது
நானும், தந்தையும் ஒன்றே

பன்றிகளுக்கு முன் முத்துக்களைப் போடாதீர்
பாறையில், பாதையில், முள்ளில்-நல்ல
விதைகளை தூவாதீர்- மெய்யானது

வழியும், உண்மையும், வாழ்வும் "நானே"
கிறிஸ்து உள்ளுணர்வே அது
ஆணவ மனம் கழித்த மனிதனுக்கு
அதுவே வாயில்-கிறிஸ்துவே வழி

விழிப்படைந்த மனிதருக்கு உலகம் தடைபோடும்
இருளில் வாழும் உலகு, ஒளியை விரும்பாது
இருளையே விரும்பும்-பழம் மதுவை குடித்தவன்
புதியதை விரும்பான், பழையதே தாவிளை என்பான்

இன்னும் சிறிது காலம் உங்களோடு நானிருப்பேன்
என்னை அனுப்பியவரிடம் நான் போகின்றேன்
என்னை தேடினாலும் நீங்கள் காணமாட்டீர்கள்

பழுத்த கனி மரத்தில் ஒட்டியிருப்பதில்லை
தழும்பின்றி தானாகவே உதிர்ந்துவிடும்
உண்மையை அறிந்தவர் தம்முள் வீட்டை அடைகின்றார்
உலகம் அவர்களுக்கு ஓர் சத்திரம்

உங்களில் யாரேனும் தாகமாயிருந்தால் என்னிடம் வாருங்கள்-
வற்றாத ஜீவ நீரூற்று கண்முன்னிருந்தும் பருகியவர் யாருமிலர்
வாழ்வு தரும் இறை வார்த்தை உணவாயிருந்தும்
ஆன்மீகப் பசியெடுத்தவர் எவருமிலர்

உண்மையின் தேடலே தாகம்-விழிப்புணர்வே அமுதபானம்
உண்மையே உங்களுக்கு விடுதலையளிக்கும்
உண்மை நம் சொந்த அனுபவமாகாதவரை
மானுடர் தாகம் தீராது

தூய மனங்களுக்கே சத்திய தரிசனம்
எளிய மனங்களுக்கே இறையரசு, நீரில் மலர்ந்தாலும் தாமரை
நீருக்குள் மூழ்குவதில்லை-உலகில் வாழ்ந்தாலும்
உலகம் அவருக்குள் இல்லை

அதிகாரம் தருவது அரசியல், விழிப்புணர்வோர்
ஆன்மீக அதிகாரம், உண்மைக்கு சாட்சியங்களில்லை
உண்மையை உரைத்திட அதிகாரமும் தேவையில்லை
ஆன்மீகத்திற்கு வாரிசும் இல்லை

தச்சன் மகனாய் கண்டவருக்கு
அச்சன் மகன் மறைந்த தோற்றம்-அச்சன் மகனோ
தச்சன் மகனில் மறைந்த உருமாற்றம்

வார்த்தையை மறைத்தது மனுவுரு
மனுவுருவில் மறைந்ததோ இறையுரு
இருப்பை மறைத்தது ஐம்பெரும் ஆற்றல்
ஐம்பெரும் ஆற்றலில் மறைந்ததோ "இருப்பு"

அன்பின் அகக்கிளர்ச்சி-விபச்சார சந்ததிக்கு
சவாலான புதுப் புரட்சி

தச்சன் மகனாய் பிறப்பு-நாடோடிப்
போதனாய் அவர் உழைப்பு
மதவாதத்திற்கு தலை வணங்காத நிலைப்பு
அன்பே தெய்வம் என்னும் திருச்சட்டம் தாண்டிய
கட்டளையோ மனுமகன் திருவாக்கு

கறை பட்டுள்ளது மறையவர் வேதம்
குறை பட்டுள்ளது வேதியர் சீலம்
ஆணவச் சிறையிலோ வேதியர்
அறியாமைச் சிறையிலோ மானுடர்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra-19-10-2023*

# சாபங்கள்

இருள் சூழ்ந்த உலகிற்கு புது விடியல் சொல்ல, இறைவார்த்தையே
மனுவுருவாகி வந்தார், இம்மானுவேல் எனப்பொருள்பட
இறைவன் நம்மோடு வாழ்ந்தார், ஒளியை ஏற்காத இருள்,
அன்பு வேள்வியில் தம்மை ஆகுதியாக்கிய இறையருள்





சொல், செயல், சிந்தனையால்
கல்லான மனங்கள் கனிந்து வாழ்வுபெற
இருமை கடந்த நித்தியம்
எல்லோருக்கும் மொழிந்தது சத்தியம்

பலி, சடங்கு சட்டங்களாய் மதம் உருவழிய,
ஆன்மா லயம் பெறும் ஆலயமோ கள்வர் குகை
ஆசாடபூதிகளுக்கோ மோசேயின் இருக்கை
அன்புக் கிளர்ச்சியாளன் மேல் தீராத பகை

கொதித்த நெஞ்சம் பொய்மையைச் சாடி
உண்மையை உரக்க கூவியது.

பரிசேயரே, மறைநூல் வல்லுனரே, கபட வேடதாரிகள்
நீங்கள், ஓதுவது வேதம், ஒழுகுவதோ பொய்யான தசசீலம்,
பாடுவது வாயால் தேவனுக்குப் புகழாரம்,
நெஞ்சிலோ பரமன் வேண்டாத வார்த்தை ஜாலம்

ஊருக்கே உபதேசம் தமக்கில்லை என்பார்
பாரச்சுமைகளை ஏழைகள் மேல் சுமத்தி
சுண்டு விரலாலும் தொடாத பரதேசிகள்
வெளிவேட மெய்ஞான தேசிகர்

நல்லோராய்ப், பக்திமானாய் நடிக்கும்
நாடக வேடதாரிகள் உள்ளமோ
வெள்ளையடிக்கப்பட்ட கல்லறை-உள்ளே
அழுகும் பிணங்களின் துர்வாடை

பசப்பு மொழி பேசிடும் ஆசாடபூதிகள் செப்புவதோ
வேதம், செயல்களோ சுரம் தப்பிய கீதம்
வாசகப்பட்டைகளை அகலமாக்கிக், குஞ்சங்களை நீளமாக்கி-
பந்தியிலும், தேவசபையிலும் முன்னிருக்கை நாடும் அவலம்

சந்தையிலும் வந்தனமும், வாழ்த்தும் நாடும்
கபடர் சிந்தையிலே மாறாத இறுமாப்பு
மனிதர் காணவே புனிதராய் அவர்கள் நடிப்பு



பாசம், நேசம், அன்பு, கருணையை உதறித்தள்ளி
பத்திலொருபாகம் பகற் கொள்ளையர் வேதம்
பலியல்ல இரக்கமே அன்பின் நாதம்

யாரையும் இராபி என அழைக்காதீர்
விழிப்புணர்வைத் தரும் குரு கிறிஸ்து ஒருவரே
யாரையும் தந்தை என விழிக்காதீர்
ஆன்மாவைத் தரும் இறைவனே மெய்யான தந்தை

யாரையும் ஆசிரியர் என அழைக்காதீர்
கேட்டல், கற்றல் அறிவு கடந்து
மெய்யறிவு புகட்டும் ஆசிரியர் கிறிஸ்துவே

விண்ணகத்தின் கதவை மூடி, நீங்களும்
நுழையாமல்-மற்றவரையும் நுழையவிடாமல்
தடுக்கும் உங்கள் மடமை உஙகள் உடைமை

ஒருவரை மதம்மாற்ற உங்கள் நெடும்பயணம்
மதம் மாறியவர் மனம் வாட -எரி நரகின்
கொடுஞ் சூழலோ திருச்சட்ட அடிமைத்தனம்

ஆலயத்தின் மீது செய்யும் சத்தியம் செல்லாக்காசு
அதன் பொன்னின் மீது செய்யும் சத்தியமோ பொற்காசு
பலி பீடத்தின் மீது செய்யும் சத்தியம் வெற்று வார்த்தை
காணிக்கை மீது செய்யும் சத்தியமோ சத்திய வாக்கு

பலி பீடத்தின் மீது செய்யும் சத்தியமோ-அதில்
உள்ள எல்லாவற்றின் மீதும் செய்யும் சத்தியம்
ஆலயத்தின் மீது செய்யும் சத்தியம்
வாழும் இறைவன் மீது செய்யும் சத்தியம்

குருடனுக்கு குருடன் வழிகாட்டக் கூடுமோ?-மூடரே
இருவரும் குழியில் விழுவதும் நியாயமோ?

புதினா, சீரகம், சேம்பை உயர்த்தி
அன்பு, நீதி. இரக்கம், கருணையைத் தாழ்த்தி
கொசுவை வடிகட்டி-ஒட்டகத்தை
விழுங்கும் கபட வேடதாரிகள் நீங்கள்

நல்லோரைக் கொன்று, இறைவாக்கினர்
கல்லறைகளை அலங்கரிக்கும் மூடர்
பழியும், பாவமும் எம் முன்னோர் குற்றம் என
வழிமொழியும் வேடதாரிகளோ கபடர்

ஆபேல் முதல் சக்ககரியா வரை
நீங்கள் சிந்திய குருதிக்கு -தண்டனை உறுதி
விரியன் பாம்புகளே, இறை நீதி வழுவாதது

ஓ ஜெருசலேமே! ஜெருசலேமே!
இறைவாக்கினரைக் கொன்று-பலரைக்
கல்லால் எறிந்த உன் நீதிதான் என்ன?

கோழி, தன் குஞ்சுகளை இறக்கைக்குள்
சேர்ப்பதுபோல், உன்னைக் காத்திட விரும்பினேன்
உனக்கோ மனதில்லாது போயிற்று

ஆண்டவரால் வருபவர் ஆசிர்வதிக்கப்பட்டவர்
எனக் கூறும் நாள் வரை
நீ என்னைக் காணமாட்டாய்- Mat 23

சினந்த மனம், சிறுமதியாளர் மனந்திரும்பிடக்
கண்டித்தது, வஞ்சகர் உள்ளம் நயவஞ்சகத்தால் வெதும்பி
வார்த்தையைக் கொல்லச் சதிசெய்தது

உண்மைக்குச் சான்று பகிர்ந்த உன்னத ஜெபம்
கருணையால் ஒலித்த நீதிபரனின் கோபம்
மதவாத மனங்களுக்கு சத்தியமோ சாபம்
தூய மனத்தவருக்கோ சத்திய தரிசனம் மாறாத வரம்

உண்மையின் ஒளி பொய்மையைச் சபித்திட
சத்தியம் தணலாய் இருண்ட மனச்சாட்சிகளைத் தகித்திட
கோபத்தில் கொதித்து கொல்ல வழிதேடிய மதவாதம்
நல்மனங்களுக்கே இறை அமைதி வானவர் கீதமானது

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

*Pax Ravichandra-19-10-2023*

# கள்வர் குகையான ஆலயம்

---



மனிதன் ஒரு வெற்றுக்கோயில்-இறைவனைக் காணோம்
ஆணவம், கன்மம், மாயை அலைக்கழிக்க
இருமைக்குள் ஊசலாடும் முக்குணம்
விழிப்புணர்வில்லாத மனிதனோ நடைப்பிணம்



வானக இறைவனோ கண் காணாத உண்மை
வாழும் மனுமகனோ கிளர்ச்சியாளனான மேன்மை
வாழும் நாடோ உரோமருக்கு அடிமை
வறியவர் குரலோ இரத்தலான சிறுமை

விதவையர் வாழ்வு கண்ணீரில் மூழ்க
ஏழையர் வயிறு உணவின்றிக் காய
உண்டு கொளுத்த மதவாதம்-வறுமையால்
உருக்குலைந்த ஏழை மானுடம்

மறையவர் வேதம் சடங்காச்சாரம்
இறையவன் ஆலயமோ அங்காடியான அலங்கோலம்
பலியும், காணிக்கையும் திருசங்கப் பொருளாதாரம்
ஏழையர் நம்பிக்கையோ இறைவனுக்கு ஆதாரம்

யூதர்களின் தனித்த அடையாளமாய் மதம்
திருச்சட்டத்தின் காவலனாய் ஆளும் திருச்சங்கம்
அரசியல், சமூக, பொருளாதார, ஆன்மீக மையமாய்,
தலைமைக் குருவின் அரியணையாய் யூதப்பேராலயம்.



ஆடை அலங்கார ஆசாடபூதிகளோ
மதவாதக் கபடவேடதாரிகள்
சங்கம் வைத்து வளர்த்த சமையமோ
சட்டத்தை வணங்கி வழிபடும் சடங்காச்சாரம்

பத்திலொரு பாகம் வரியானது-மதுவும்
பலி இறைச்சியும் நாளும் பூசாரிகளுக்கு விருந்தானது
ரொட்டியும், நீரும் ஏழைகளுக்கு கனவானது.
தலைமைக் குரு பதவியும் விலைபோனது

அங்காடியாய் மாறிய ஆலய வளாகம்
ஆரவார வியாபாரமோ குபேரநிதியான ஆதாயம்
வணிக மையமாகிக் கள்வர் குகையான ஆலயத்தில்
வழிபாடோ பலி, சடங்கு, காணிக்கையான மாயம்

சத்திய தரிசனம் வெற்றுக் கனவானது
ஆடு, மாடு பறவையாய்ப் பிறப்பதிலும்
அருவெறுக்கும் பன்றியாய் பிறந்தால் அச்சமில்லை
பலியாகும் அவலமில்லை நிஜமானது



காளை, வெள்ளாடு, செம்மறி செல்வர் காணிக்கை
மாடப்புறாவும், புறாக் குஞ்சும் ஏழைகளின் காணிக்கை
செப்புக்காசிலும் விதவையின் இறை நம்பிக்கை
ஏழ்மையைச் சுரண்டுவதும் காணிக்கையான கேளிக்கை

கொழுப்பும், இறைச்சியும் நாளும் உண்டு
கொழுக்கும் சொர்க்கவாசி இறைவனும்
முதலாளி வர்க்கம்? உழைத்து மெலியும்
ஏழைப் பதர்களோ பாவிகளான குதர்க்கம்

பாஸ்காவின்போது பலியாகும்
மிருகங்களோ பல இலட்சம்-குருதியை
பொன், வெள்ளித் தாம்பாளங்களில் நிறைத்து
தூயகத்தின் அடியில் ஊற்றுவது இறை வணக்கம்.

பலியாகும் விலங்கு, பறவைகளின் கதறல்
இறைவனைக் கதறி அழைக்க
பலி கேட்கும் தெய்வமா நீ ? பழித்துரைக்க
காக்கும் கரங்களோ கண் மறைந்த வேதனை ?




விலங்கு, பறவை நாளும் பலியாகும்
கோயில் பணமும் கடனாகும்-வட்டியோடு
வசூலிக்க முடியாத கடனிற்கு-ஏழை,
விதவையின் சொத்து பறிமுதலாகும்

பதியிழந்த விதவைகளைக் காமப்பலியாக்கி
நிதியிழந்த ஏழைகளை நிர்க்கதிக்குள்ளாக்கி
சுமக்க முடியாத விதிகளைத் திருச்சட்டமாக்கி
ஆளும் மதவாதிகள் வாழ்வோ சொர்க்கம்
ஏழைகள் வாழ்வோ என்றும் எரி நரகம்

“விரியன் பாம்புக்குட்டிகளே”- நாம் ஆபிரகாமின் சந்ததி
என்பது இறை சந்நிதியில் செல்லாக் காசான சங்கதி
வேதியரைச் சாடிய பாலையின் கூக்குரல்-படையினருக்கும்,
லேவியருக்கும் அறிவுரை கூறிய இறைவாக்கினரோ சங்கநிதி

இரண்டு சட்டை உள்ளவன் இல்லாதவனோடு பகிரட்டும்
***பகிர்ந்து வாழ்ந்தால் இரந்து வாழ்தல் ஒழியும்***
சமுதாயப் புரட்சிக்கு முழங்கிய சங்கு
செவிடன் காதல் ஊதிய நிலையானதோ இங்கு

விழிப்புணர்வே மெய்வாழ்வு-அன்பினால்
உண்மையை வாழ்வாக்குதலே மெய்வழிபாடு
அன்பே தெய்வம்-பலியல்ல இரக்கமே
இறை விரும்பும் காணிக்கை

ஓய்வு நாள் மனிதனுக்கேயன்றி
மனிதன் ஓய்வு நாளுகாய் அல்ல-மக்கள்
எழுச்சி காண, இயேசுவின் ஆன்மீகக் கிளர்ச்சி
திருச்சங்கத்தை ஆட்டம் காண வைத்த மதப்புரட்சி






வந்தனை செய்யும் ஆலயம்-தந்தையை நிந்தை
செய்யக் கண்டார், வணிகமே பெரு வழிபாடாய் மாறிட
ஆன்ம லயம் பெறும் ஆலயம் -கள்வர்
குகையாய் நாறிடக் கோபம் கொண்டார்

விழிகள் சிவக்க, விம்மி உள்ளம் எரிமலைபோல் கொதிக்க
செம்மேனி நடுங்கச் சினமுற்ற மைந்தன்-தந்தை
இல்லத்தின் மீதுள்ள ஆர்வம் தன்னை எரித்திட
***என் தந்தையின் இல்லம் ஜெபவீடு-அதைக்***
***கள்வர் குகையாக்காதீர்*** கடிந்த சித்தன்

தன்னுள் மையங்கொண்ட மனுமகன் இறைமகனாக
என் தந்தை இல்லம் என்றே உறவு கொண்டாட
சினம் பூத்து தன்னுணர்வு சீனாய் எரிமலைபோல் பொங்கிட
உருத்திர தாண்டவமாடிய சிவப்பிரியன்



கட்டிக்கிடந்த செம்மறியின் கயிற்றை அவிழ்த்து
சாட்டை பின்னிக் களவாணிகளை அடித்து விரட்டிய
அஞ்சாத சிங்கம்-அஞ்சித் திகைத்த
ஆலயக் காவலரோ திருச்சங்கத்தின் அங்கம்

கனன்ற செந்தணல் விழிகளில் வீசிட-கசையின்
அசைவில் மேகம் முழங்கிடத், தோகை ஆடிட
இடிகேட்ட நாகம்போல் ஒடுங்கிய வாணிபம்
இறையில்லம் நின்றே விரண்டோடிய வர்த்தகம்

விசையோடு கசையாட வியாபாரிகள் அஞ்சியோட
கூண்டுகள் திறந்திட இசையோடு பாடிப் பறந்த புள்ளினம்
மேசைகள் புரண்டிட, நாற்காலிகள் உருண்டிட-ஓசையோடு
திசை தெரியாது உருண்டோடிய பல நூறு நாணயம்

விடுதலை என்றே நர்த்தனமாடி நடந்த கிடையினம்
இனம் புரியாத அச்சத்தால் ஓடி ஒளிந்த வாணிபம்
கசை இசைபாட அன்பே இறைவன் எனும் நாயனம்
ஆலயக் குடமுழுக்கோ அதிசய நர்த்தனம்

தனிமனித ஆன்மீகக் கிளர்ச்சி-தந்தையின்
இல்லத்தை கும்பாபிஷேகம் செய்த அற்புத நிகழ்ச்சி
வணிகரை அஞ்ச வைத்த அதிர்ச்சி வைத்தியம்
திருச்சங்கத்திற்கு எதிரான புரட்சியோ சத்தியம்

களவாணியும், பொய்யனும் திருச்சங்கமாய்ச் செழிக்க
கள்வர் குகையான ஆலயம்-கசை மொழியோ
இசை பாடி இறைவனைத் துதிக்க-***கருணையால்***
***உருத்திர தாண்டவமாடிய பெருமானோ சிவரூபம்***

முள்ளை வழிபட்டு, மலர்களைப் புழுதியில் வீசிடும் கள்வர் குகை,
காலவெள்ளத்தில்-பலமுறை இடிபட்டு மீள எழும்பிடும்
காலம் இனியில்லை, கல்லின் மேல் கல்லிராதபடி கள்வர் குகை
இடிபடும் காலம் வெகு தொலைவில் இல்லை சபித்த இறைமகன்

அழுகையும் புலம்பலும் ஒலிக்க
அழுகைச் சுவராய் மூழிக்கோலம் பூண்டு
ஆயிரமாயிரம் ஆண்டுகள் தவிக்க-இன்றும் நிலைக்க
அன்று சாபமிட்ட மாமுனிவன்

பொன் கன்றை இன்றும் வழிபடும் மதவேசித்தனம் ஒழிய
கற்பலகைகளை உடைத்தெறிந்த மோயீசன்போல்
இறைமகன் காட்சி-பாகாலின் பூசாரிகளை
அஞ்சவைத்த எலியாபோல் அவர் மாட்சி

வஞ்சகரின் ஆசாடபூதிக் கோலங்கள் கலைய
இறை துதி பாடிய சாட்டை-நஞ்சாய் கொதித்த நெஞ்சிலோ
இயேசுவைக் கொல்லும் தீராத வேட்கை

கடிந்த மொழிகளில் இடியின் சீற்றம்
கண்டவர் அஞ்சிட குமுறும்
சீனாய் எரிமலைபோல் அவர் முகத்தோற்றம்.
எரியும் முட்செடிபோல் நிலை மாற்றம்

மாமுனியின் சாபம் கேட்டு சீடரும் வியந்தார்
நீதியின் மேல் பசியும் தாகமும் பொங்கிட
நீதிக்காய் துன்புறும் காலம் நெருங்கிட
***அவர் கோபம் கருணையால் பொங்கியதை***
அறிந்தவர் யாருமிலர், புரிந்தவர் எவருமிலர்

இடியாய் ஒலித்த குரலில் விண்ணும், மண்ணும் அதிர்ந்திட
இடியொலி கேட்ட நாகங்களாய் அன்னாஸ், கைபாஸ் அஞ்சிட
வஞ்சம் நஞ்சைச் சுரக்க, வெஞ்சினம் கொதிக்க-இயேசுவை
கொல்லச் சதிசெய்த குள்ளநரிக் கூட்டம்

உன் முழு அறிவோடும், உன் முழு இதயத்தோடும்
உன் முழு ஆன்மாவோடும்-இறைவனை அன்பு செய்
உன்னைப்போல் உன் அயலானையும் அன்பு செய்
உள்ளம் பெருங்கோயிலாக-உண்மையிலும்,
அன்பிலும் வாழும் வாழ்வே மெய்யான வழிபாடு

வாழ்ந்தறியும் உண்மை, சடங்குகளுக்குள் முடமாக
இறை வழிபாடு சத்திய சோதனையானது
ஆணவத்தைப் பலியாக்கி-விழிப்புணர்வை வரமாக்கும்
சுயதேடலுக்கு கள்வர் குகை தடையானது

கள்வர் குகையான ஆலயமோ இறை நிந்தனை
இறை வணக்கத்திற்கு தடையான சோதனை
கருணையால் செய்த குடமுழுக்கு விழா
செம்மறியாய், அவரைப் பலியாக்கிட
மதவாதிகளுக்கு வாய்த்த பாஸ்காப் பெருவிழா

மதப்போதை ஒழிந்து மனித நேயம் தழைக்க
உன்னைப்போல் உன் அயலவனை நேசித்து,
பொன் விதியை வாழ்வாக்கி வாழ
கசாப்பு கடையான ஆலயம் இடிக்கப்படும்

விழிப்புணர்வில்லாத மதவாத கும்பல் விழித்திட
கள்வர் குகையான ஆலயத்தில் இரு முறை
களப்புரட்சி செய்த ஆன்மீக குரு

கிளர்ச்சிக் குரு கொல்லப்படல் வேண்டும், ஆன்மீகப் புரட்சி
அடக்கப்படல் வேண்டும், முழு யூத இனத்தையும் காத்திட
ஒருவனைப் பலி கொடுத்தல் சாலச்சிறந்தது , தலைமைக் குரு
கைபாஸின் சதி  திருச்சங்கத்தின் பொன் விதி.

வெள்ளிப் பணத்தால் பின்னிய வலையில் ஆசையின் வடிவம்
யூதாஸ் சிக்கிட-இருளில் முத்தமிட்டு காட்டிக் கொடுத்த கபடம்
வஞ்சகன் கைபாஸ் அரங்கேற்றிய நாடகம், அடிமையின் விலை
முப்பது வெள்ளிக்கு மலிவு விலையான சீடத்துவம்

வேதநெறி ஆகமங்கள்-திருச்சட்டமெல்லாம்
சூதாய் ஓதும் வேதியர் சூழ்ச்சியையும்,
சுயநலத்தையும் சாடிய சுந்தரனை சூதாய்
வதைத்தே சிலுவையில் அறைந்தார்

அன்னை நெஞ்சை கொடுந்துயர் வதைக்க
கண்களில் கங்கை பெருக்கெடுக்க-மகனைக்
கற்றூணில் கட்டி அடித்தார்-பாரக்
கழுமரத்தைச் சுமக்கக் கொடுத்தார்



கண்படும் அழகை புண்படச் சிதைத்து
முள்ளால் மகுடமிட்டு-அங்கத்தை
ஆணிகளால் துளைத்து-கழுமரத்தில்
பிணைத்து விண்ணுயர்த்தி நகைத்தார்

சக்கரங்கள் ஏழும் மலர்ந்திட்ட விழிப்படைந்த
குண்டலினி களிப்போடு நடனமாட
ஆயிரம் மலர்த் தாமரை "சஹஸ்ரா" பூத்தாட-
சிவசக்தியாய் சுத்த சைதன்யமாய் மலர்ந்த
இயேசுவோ கிறிஸ்து




விண்ணோக்கித் தலைவைத்து-மண்ணோக்கி
கால்மனை வைத்து-இரு கரங்களும்
இரு திசை நோக்க-ஆசி வழங்கும் நிலையில்
சிலுவையில் இறைமகன் திருநிலையானது

இயேசு, கிறிஸ்துவாக மலர்ந்திட
வட்டம் பூர்த்தியானது, ஏதேன் கதவுகள் திறந்திட
இறைமகன் வீடுபேறடைந்த நிகழ்வானது



வதைப்போரையும் மன்னிக்க தேவனை வேண்டிய தேவமகன்-
மனம் மாறிய கள்வனிற்கும் இன்றே பரகதி என்ற தயாபரன்
இவர்போல் ஒருவரை, பூவுலகில் யாரேனும் கண்டதுண்டோ?

அந்தகர் முன் திருமகள் நின்றாள் அழகை அறிவாரோ?-
சந்தப் பண் இசைத்தால் செவிடரும் கேட்பாரோ?-
நிந்தை புரியும் மனிதர் முன் நேசரும் நின்றால்
மூடரும் சத்தியத்தைப் புரிவாரோ?

ஆசாடபூதிகளின் அகநிர்வாணத்தைச் சாடி
அழுகி நாறும் மதத்திற்கு அன்பினால் உயிர் கொடுத்து
"வாழும் இறைவனின் மகன் நான்"சான்று பகிர்ந்தவரை
இறைவனுக்கு நிகரா இவன் ?-வஞ்சகர் நயவஞ்சகமாய்
வதைத்துக் கொன்றதே வரலாற்று உண்மை

***நம் பாவங்களுக்காய் இயேசு மரித்தார்***
***பாவ நிவாரண பலியாய் தம்மை ஒப்புக்கொடுத்தார்***
பரிசேயன் ***பவுலின்***
***திசைமாறிய போதனையோ பொய்மை***

நம் பாவங்களுக்காக-தம் மகனை கொல்லுமளவிற்கு
இறைவன் கொடியவரல்ல-இருப்பு நபரல்ல
அன்பே தெய்வம்
இருப்போ தெய்வீகம்-சுத்த சைதன்யம்




இறைமக்கள் நாம்-இறையரசு நம்முள்ளே
அன்பே தெய்வம்-சத்தியமே பாதை
வாழ்ந்தறியும் உண்மையே இறைவன்
தூய மனத்தவர்க்கே சத்திய தரிசனம்

தந்தையும் மகனும் உறவாடத் தரகர்கள் எதற்கு?
தாய், சேய்யைப் பிரிக்கும் மதவாதத் திரை எதற்கு?
களவர் குகையை இடித்து, மதவாதத் திரையைக் கிழித்திடு
உண்மையே உனக்கு விடுதலை-

கழுமரத்தில் மனுமகனோ இராஜயோகி
குருஷேத்திரத்தில் கண்ணனோ கர்மயோகி
போதி மாதவனோ ஞானயோகி

இருப்பெனும் பெருங்கடலில் எழுந்த
விழிப்புணர்வின் பேரலைகள்
மானுடம் உய்வுற-தம்மை ஆகுதியாக்கிய
கருணையின் யக்ஞங்கள்

என் தந்தையின் இல்லத்தில்-
எல்லோருக்கும் உறைவிடங்கள் உண்டு
இறை வார்த்தையோ பொய்காத சத்தியம்



Toledot Yeshu

*There are a number of later embellishments to the narrative of the incident that are generally regarded as legendary or polemical by scholars. The* Toledot Yeshu*, a parody gospel probably first written down about 1,000 years later but possibly dependent on second-century Jewish-Christian gospel*[22] *if not oral traditions that might go back all the way to the formation of the canonical narratives themselves,*[23] *claims that* Yeshu *had entered the Temple with 310 of his followers. That Christ's followers had indeed entered the Temple, and in fact the* Holy of Holies*,*[24] *is also claimed by* Epiphanius*, who claims that James wore the* breastplate of the high priest *and the high priestly diadem on his head and actually entered the* Holy of Holies*,*[25] *and that John the Beloved had become a sacrificing priest who wore the mitre,*[26] *which was the headdress of the high priest.*

*Yeshu was likewise accused of robbing the* shem hamphorash*, the 'secret name of god' from the Holy of Holies, in the Toledot Yeshu.*[27]

***************************************************

*There are debates about when the cleansing of the Temple occurred and whether there were two separate events.* St. Thomas Aquinas *and* St. Augustine *agree that Jesus performed a similar act twice, with the less severe denunciations of the Johannine account (merchants, sellers) occurring early in Jesus's public ministry and the more severe denunciations of the synoptic accounts (thieves, robbers) occurring just before, and indeed expediting, the events of the crucifixion.*

*Professor David Landry of the University of St. Thomas suggests that "the importance of the episode is signalled by the fact that within a week of this incident, Jesus is dead. Matthew, Mark, and Luke agree that this is the event that functioned as the 'trigger' for Jesus' death."*[15]

*A common interpretation is that Jesus was reacting to the practice of money changers routinely cheating the people, but Marvin L. Krier Mich observes that a good deal of money was stored at the temple, where it could be loaned by the wealthy to the poor who were in danger of losing their land to debt. The Temple establishment therefore co-operated with the aristocracy in the exploitation of the poor. One of the first acts of the* First Jewish-Roman War *was the burning of the debt records in the archives.*[20]

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
Pax Ravichandra-19-10-2023

# ஆபிரகாமிற்கு முன் நான் இருக்கிறேன்

இறைவன் என் தந்தை, இறை தந்தை தரும் மாட்சியே
எனது மகிமை, வழியும், உண்மையும், வாழ்வும்
“நானே” , என் வார்த்தைகளை கடைப்பிடிப்பவர்
இறவாது வாழ்வார் சத்தியமே. வாழ்வு அமரத்துவமே






பிறந்தவர் இறப்பது மாறாத விதி-தந்தை ஆபிரகாமும்,
இறைவாக்கினரும் மடிந்ததோ இறை வகுத்த நியதி
உன் வார்த்தைகளைக் வாழ்வாக்குவோர் மரணசுவை அறியார்
பேச்சோ வெற்றுக் கூச்சல்-மண்ணில் போடும் நீச்சல்

ஆபிரகாமிலும் பெரியவனோ நீ-உன்னை
யாரென நீ எண்ணுகிறாய்?-பொய்யன் நீ
உனக்கோ பேய் பிடித்திருக்கிறது




என்னை நானே பெருமைப்படுத்தினால்-அது
எனக்குப் பெருமை இல்ல-என் தந்தையே
என்னைப் பெருமைப்படுத்துபவர்- நீங்களும்
உங்கள் தந்தை என அவரைச் சொல்கிறீர்கள்

இறை தந்தையை நீங்கள் அறிந்ததில்லை
***ஆனால் நானோ அவரை அறிவேன்***
அவரைத் தெரியாது என்றால் நானோ பொய்யன்
தந்தையின் வார்த்தையே என் உணவும், பானமும்

உங்கள் தந்தை ஆபிரகாம் -நான்
வரும் காலத்தை காணமுடியும் என்பதை
முன்னிட்டுப் பெருமை கொண்டார்-அதனைக்
கண்டபோது மகிழ்ச்சியும் கொண்டார்




ஐம்பது வயதும் ஆகாத -நீ
தந்தை ஆபிரகாமைக் கண்டாயா?
ஆபிரகாம் பிறப்பதற்கு முன்பே
**நான் இருக்கிறேன்**




நாயனமாய் ஒலித்த இசை-மதவாத
மனங்களுக்கோ இறை நிந்தனையான வசை
நல் நாதம் அறியாத மனம்-மதவாதத்
தொழுநோயால் நஞ்சான குணம்

வெஞ்சினத்தால் கொதித்த கும்பல்
நஞ்சான மனதோடு எறிவதற்கு கல் எடுத்த வெம்பல்
இறைவார்த்தையான சத்தியனோ-சாந்தமாய்க்
கோயிலிலிருந்து கண் மறைந்த திங்கள்

அழிவற்ற "**கிறிஸ்து உள்ளுணர்வை**" அறியாத மதவாதம்
நாளும் ஓதிடும் வேதமோ கிளிப்பிள்ளைப் பாடம்
கடந்த காலத்தைப் பற்றி யூதர்களின் விவாதம்-காலம்
கடந்த கிறிஸ்து உள்ளுணர்வே இயேசு மொழிந்த வேதம்
புரியாத உணர்வுத்தளம்-விழிப்புணர்வை
அறியாத வரண்ட அறிவுத்தளம்



கடலில் விழுந்த துளியும் கடலாக
எப்போதும் இருக்கிறேன் எனும் சமுத்திரம்
கிறிஸ்து உள்ளுணர்வைச் சுவைத்துக்
கலந்த துளியாய்த் தந்தை ஆபிரகாம்

நனவு, கனவு, கனவற்ற உறக்கம் கடந்த துரியத்தில்,
மனமழித்து தம்மைத் தாமே பிறப்பித்த-இயேசு
மூன்று நிலைக்கும் ஆதாரமான
**பிரக்ஞானமே பிரம்மம்-அதுவே துரியம்**

தூய மனமாய்த் துரியம்-
மனதற்ற பரிசுத்த நிலையில் துரியாதீதம்

சூசை மரியாளின் மகனல்ல இயேசு
தந்தை தாய் தரும் உடல் கடந்த உள்ளுணர்வு
இரண்டாம் பிறப்பாய் இயேசு

மனமழிந்த துரியாதீதமே **நிர்வாணம், இறையரசு**
ஆபிரகாமிற்கு முன் நான் இருந்தேன் எனக் கூறாமல்
**ஆபிரகாமிற்கு முன் நான் இருக்கிறேன்** என்றவரோ
**காலம் கடந்த நித்தியம், இருப்பவர் நாமே என்ற சத்தியம்**

மெய்யறிவு பெற்ற சக்தி அனைத்தும்
ஒருவர் மெய்யறிவு பெறும்போதெல்லாம்
வீட்டை அடைந்துள்ளார் ஒருவர்
உள்ளுணர்வில் மலர்ந்துள்ளார் அன்பர் என்றே
பூ மழை பொழிந்து பூரித்து மகிழ்கின்றன.

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-20-10-2023

**நனவு, கனவு, கனவற்ற**
**உறக்கம், முறையே**
**ஜாக்ரதம், சொப்பனம்,**
**ஸூஷுப்தி**
**என்றழைக்கப்படும்**

Contemplation
There is only One Mind Being Aware.
One Awareness seeing through all eyes.
One Awareness feeling, smelling, sensing.
One Consciousness exploring and understanding.
One Consciousness experiencing.
One Being knowing ItSelf.
One Life living.
One Creator creating.
Surrender into This.
Dissolve into This.
Until there is nothing left of you.

One Infinite Hologram
One Infinite Consciousness
One Infinite Awareness
One Infinite Life
One Infinite Mind
One Infinite Self
One Infinite Being
One Infinite Creation

There is no way to understand
Infinite Awareness, Oneness.
There is no way to understand enlightenment first.
First comes surrender and dissolution
into Infinite Awareness
without understanding, desire or knowing what will happen.
Then comes enlightenment
and understanding.

Spiritual Awakening
Is remembering who and what you are
and have always been
Is Peace beyond peace, Bliss beyond bliss
There are no struggles in Awakening
It is just waking up and realizing that you
have been having a dream that felt very real.

# தந்தையின் இல்லம்

---

நெஞ்சே கலங்காதே-தேவநேசன் நான் என்றும்
உங்களோடு, என்னையையும் தந்தையையும் நம்புங்கள்
என் அமைதி என்றும் உங்களோடு



எல்லோரும் இன்புற்று வாழ-எந்தையின்
இல்லத்தில் இல்லிடங்கள் பலவுண்டு-மனமே
கலங்காதே-சென்று ஓரிடம் தயார் செய்து
மீண்டும் நான் வருவேன்



ஒன்றாய் கூடி வாழ்ந்து இன்புற “நான்” செல்லும்
வழி நீங்கள் அறிவீர், என்னோடு நீங்கள் இருந்தால்-எந்நாளும்
உங்களோடு கூட நான் இருப்பேன் (யோவான் 14:1-4)

அன்பு இறைவனுக்கு மதமில்லை
அன்பு, கருணை, இரக்கம், உண்மை மதத்தன்மை,
உண்மை, அன்பை வாழ்வாக்கி வாழ என்றும் இன்பமே
மதத்தன்மையோ மதம் கடந்த பேரின்பம், ஆன்மீகம்

ஆணவம் கழித்து அன்பில் நிலைத்து-நான் எனும்
பேருணர்வை சுவீகரித்தவர்கள் -நம் சகோதரரே
நானே வழியும், உண்மையும், வாழ்வும் “நானே” அது-
அஹம் பிரம்ம அஸ்மி,-த்வம் அஸி- அது நீயே
தன்னை அறியும் மெய்யறிவே ஞானம்

மதம் கடந்த தூய பேருணர்வு-நான் எனும் சுத்த சைதன்யம்
இருப்பவர் நாமே என மோயீசனுக்கு இயம்பிய பரப்பிரம்மம்
மதவாத எல்லைகள் கடந்த அன்பின் விரிந்த விசும்பு
அயம் ஆத்மா பிரம்மம்-ஜீவாத்தமனே

இன்பமே சூழ எல்லோரும் நலமே வாழ
அன்பே தெய்வம் என்ற அன்னை இல்லம்
**உள்ளுணர்வில் நீங்களும் சின்மயமாக**
**நாம் வாழும் இல்லிடம் ஒன்றே**

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-20-10-2023

சின்மயம் :-ஞான ரூபியான ஆன்மா

# பிரியா விடை–இறுதி இராவுணவு

---



விழிப்புணர்வான குரு, அருமைச் சீடர்களோடு
பாஸ்கவை உண்ணப் பந்தியிலமர்ந்த திருக்கோலம்
பங்கயம் சூழ்ந்து பன்னிரு அல்லிகள்
பூத்த மலர்க்கோலம்.



பிரியும் பொழுது வந்ததென்று-தேவப் பிரியனும்
பிரியமான சீடர்களைப் பிரிய மனமின்றிப்
பிரியா விடையாய், மறவா நினைவாய்,
***விழிப்புணர்வை*** வழங்கிய நேரமது

என் நேரம் நெருங்கிவிட்டது, என் பயணம்
தொடங்கி விட்டது-ஆவலோடு ஒன்றாய் நாம்
உண்ணும் என் கடைசி இராவுணவு-ஒலித்த
குருவின் வார்த்தைகளில் என்றும் மாறாத கனிவு

உண்ணும் பொழுது சீடன் மனம் ஓய்விலிருக்கும்
ஓய்ந்த மனதை குரு எளிதாய் ஊடுருவி
விழிப்புணர்வை வரமாய் அளிக்க -இறுதித்
திருவிருந்தை விழாவாய்க் கொண்டாடிய குரு

உணவு- வாழ்வு சார்ந்த நெருக்கம்
உணர்வு- புரிந்த கொள்ளலின் உயர்நிலை
அன்பு -அறிந்து கொள்ளலின் உயர்நிலை
இதயம்- புரிந்து கொள்ளலின் உச்சம்

உயிர் தரும் குருதியை திராட்சை மது குறிக்க
உடலைப் போஷிக்கும் உணவை அப்பம் குறிக்க
***வாழ்வு தரும் வார்த்தை நானே–என்*** வார்த்தைகளை
உண்டு, குடித்து வாழ்வாக்கி வாழுங்கள்-

உயிருள்ள என் வார்த்தைகள்
உணவும், பானமுமாய் -ஊனிலும், என்பிலும்,
உள்ளோடும் குருதியிலும் கலந்து
உங்கள் இருப்பாகட்டும்-

உங்களில் “நான்” வாழ, வாழ்வது நான் அல்ல-என்னில்
இயேசுவே வாழ்கின்றார் என நீங்கள் மகிழ-என் வார்த்தையே
உங்களுக்கு உயிரளிக்கும் உணவும், பானமுமாகட்டும்

அறிவாய், தகவலாய் மூளையில் தங்காது
இருப்பாய், இதயமாய் உங்கள் உயிர் மூச்சாய் மாறட்டும்
என் வார்த்தைகள் போதையளிக்கும் மதுவாகி
கிறிஸ்து உணர்வு என்றும் நிலைக்கட்டும்

“இறை வார்த்தையே வாழ்வளிக்கும் உணவு”
தவமாய் வாழ்வாக்கினால் “விழிப்புணர்வே”
பெரு வரம், என்பதை எடுத்தியம்பிட,
அண்ணல் வழங்கிய இராவுணவு

அப்பத்தையும், திராட்சை மதுவையும்-தம் தசையும்-
குருதியுமான, உருவக தோற்றத்தில் அளித்தே
மனுவுருவான இறை வார்த்தை, தம்மை
மறவாது நினைகூர விடுத்த அழைப்பு

***விருந்தல்ல இது –நிலை வாழ்வின் அருமருந்து***
***வாழ்வளிக்கும் உணவாய்– இறை வார்த்தையை***
***உண்டு குடித்து வாழுங்கள்***
***விழிப்புணர்வில் நிலைத்திருப்பீர்கள்***

நான் உடலல்ல அழியாத ஆன்மா, உடல் கொல்லப்பட்டாலும்-
ஆன்மாவிற்கு அழிவில்லை, மரணமில்லை
நீங்கள் ஒரு நாள் அறிவீர்கள்

***விழிப்புணர்வே கிறிஸ்து உணர்வு,*** நம்மில் பிரிவில்லை,
பேதமில்லை, உங்கள் குரு -உங்கள் இதயமாக மாறாவிடில்
நீங்கள் சீடரில்லை-மாணவனே-கற்பதனால்-
மாணவன் சீடனாக முடியாது, குருவாக மாறமுடியாது

அறிவல்ல என் வார்த்தை, என் வாழ்வும், போதனையும்
உங்கள் உணர்வாய்-உயிர், மெய்யில் கலந்த, ஊனும்,
இரத்தமுமாய் மாறாவிடில் உங்களுக்கு உயிர் இல்லை

***விழிப்புணர்வில்லாத வாழ்வு நடைப்பிணமே***
ஆணவ மனமழிந்து-கிறிஸ்து உணர்வு மலர்ந்திட
அவர் கடைசி இரா விருந்து

உணவாய், பானமாய் உண்டு, குடித்து தவறவிட்ட
சீடர்களுக்கு அரிய நிகழ்வைப் புரிந்திடத் தவமில்லை
அருங்கொடையைப் பெற்றிட வரமில்லை
உள்ளவனுக்கே கொடுக்கப்படும் உயர் நிலை

மரணம் வரும் வேளையிலும்-மகிழ்வோடு விருந்தளித்து
வாழ்வையும், சாவையும் கொண்டாட்டமாய் மாற்றிய குரு
வழியும், உண்மையும், வாழ்வுமாய்த், தம்மைக் காட்டிய திரு

அப்பம் பிடுதலோ அழகிய அபிநயம், தன்னை
அடையாளம் காண-மனுமகன் காட்டிய அழகிய கலைநயம்
வதைப்போரையும் மன்னிக்க-இசைபாடிய
வாழும் கலையோ அன்பின் காவியம்

மனிதர் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்
என நீங்கள் விரும்புகின்றீர்களோ-
நீங்களும் அதை அவர்களுக்குச் செய்யுங்கள்
***பொன் விதி வழங்கிய பெருமான்,***

அன்பினால் இன்புற்று மண் வந்த சிவம், நானும் தந்தையும்
ஒன்றென்ற ஆதி சிவம், என் சித்தமன்று, உம் சித்தம்
என்றே -வாழ்வைத் தவமாக்கிய பெருந்தவம்
வதைப்போரையும் மன்னிக்க-தந்தையை வேண்டிய அருந்தவம்

அன்புதான் இறைவன் என்றே -மானிடர்க்காய்த்
துன்புற்ற மனுமகன்-இறை சித்தம் நிறைவேற
மரணம் மட்டும் பணிந்து வாழ்ந்து-தம்
போதனையும், வாழ்வும் ஒன்றென்ற திருமகன்

மனுவுருவான வார்த்தையோ சத்திய ஜோதி
ஆதிபகவனோடு ஒன்றான ஆனந்த ஜோதி.
அன்பே இறை நீதி என்ற ஞான ஜோதி
கட உள் என்று-கடவுளான பகவத் ஜோதி

அன்பிலே நிலைத்தவர், அன்பே சிவமாய்
அவரைக் காண்கிறார்
சச்சித் ஆனந்தத்தில் திளைக்கிறார்.

தேடுங்கள் கண்டடைவீர்-ஞான யோகமாக
தட்டுங்கள் திறக்கப்படும்-கர்ம யோகமாக
கேளுங்கள் கொடுக்கப்படும்-பக்தி யோகமாக
சிலுவையில் பூரண சரணாகதியான -இராஜயோகி
தந்தையும்-நானும் ஒன்றென்ற அத்வைதவாதி.

மெய்பொருளாக விண்ணில் நின்றது-மனுவுருவாகி
கைப்பொருளாய் நம்மிடை குடிவந்தது, நற்பொருளாகிப்
போதனை செய்தது, நற்கருணையாய்த் தம்மையே தந்தது.



மனுவுருவான இறைவார்த்தை-மானுடருக்காய்த்
உணவுருவான இறைவார்த்தை-
***என்னே அவர்தம் அன்பு-எல்லையில்லாக்***
***கருணையே இறைவார்த்தையின் பண்பு***

கற்றறிந்த பண்டிதர்களல்ல-கல்விக் கடலில்
கரைகண்ட மேதைகளுமல்ல -தாழ்நிலை
மானிடர்களைத் தம் சீடர்களாய் தேர்ந்த யோகி
கூழாங்கற்களை வைரங்களாய் மாற்றிய இரசவாதி

இயேசு கிறிஸ்து -என்றும் மாறாத
அன்பின் புதுப் புரட்சி
மதங்கடந்த மனித நேயத்தின் பேரெழுச்சி



***இருப்பு எனும் பெருங்கடலில் எழுந்த பேரலை***
***இறவாப் பெருநிலை தம் நிலை***
***என்று காட்டிய அன்பின் திருநிலை***



***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-20-10-2023*

# பாத பூஜை

பன்னிரு சீடர்களோடு பந்தியிலிருப்பது-சுந்தரனோ? சூரியனோ?
இறைமக்கள் நாம், இறைவன் நம் தந்தை என மொழிந்த
பரமனோ? பகைவரை நேசியுங்கள் என்ற
புதிய கட்டளை தந்த குருவோ?, திருவோ? கருணாகரனோ?



நாடோடி வாழ்வோ எளிமையின் திருக்கோலம்
வார்த்தையோ உண்மையின் தவக்கோலம்-"இசையா"
முன்னுரைத்த இறைவாக்கோ மனுமகனின் பணிக்கோலம்
சத்தியத்திற்கு சாட்சியமாய் செம்மறியின் அருட்கோலம்

நீரை திராட்சை மதுவாக்கி-பணி வாழ்வை
கொண்டாட்டமாய்த் தொடங்கிய அருளாளன்
மரணம் நெருங்கிட்ட வேளையில்-கடைசி
இராவுணவை பெருவிருந்தாக்கிய தயாளன்

ஊன் வளர்ப்பதோ உணவு, உயிர் தருவதோ இறைவார்த்தை
உயிர் தரும் வார்த்தையை-நாளும், பொழுதும்
உணவும், பானமாய் உண்டு குடித்தால்
விழிப்புணர்வில் நிலைத்திருப்பீர்கள்



உள்ளுணர்வின் உயர்தளத்தில்-விழிப்புணர்வில்
நிலைத்திட-"இறை வார்த்தையை" உருவகமாய்
அப்ப, இரச வடிவில் ஈந்த பெருமான்

தம்மில் யார் பெரியவன்? சீடர்களின்
ஓயாத வாக்குவாதம், தாழ்வு மனப்பான்மையோ
தொழுநோயாய் வருத்திடும் மாறாத வாதம்

குருவோ விருந்து, குரு அளித்த உணவோ
விழிப்புணர்விற்கான அருமருந்து-அதிதியின்
காலடிகளை கழுவுதல் விருந்தோம்பலின் மேன்மை
கழுவ மறுத்த சீடர் மனங்களில் ஆணவத்தின் சிறுமை

தம்மை வெறுமையாக்கி அடிமையான குருபரன்
தம்மைத் தாழ்த்துகிறவர் உயர்த்தப்படுவார்
தம்மை உயர்த்துகிறவர் தாழ்த்தப்படுவார்
போதனையும், வாழ்வும் ஒன்றான பராபரன்

பந்தியிலிருந்து எழுந்தவர் பணிவிடை செய்யும் அடிமைபோல்
ஒரு துண்டை இடையில் கட்டி, பாத்திரத்தில் நீர் மொண்டு-சீடர்
பாதங்களைக் கழுவித் துடைத்தார்



அதிதியே அடிமையின் கோலம் பூண்ட அதிசயம்
பணிவிடை ஏற்க அல்ல பணிவிடை புரியவே வந்தேன்
பணி வாழ்வின் அழகைச்-சீடத்துவப்
பண்பைச் செய்கையால் போதித்த அற்புதன்

ஆண்டவரும் குருவுமானரே அடிமைபோல்
சீடர் பாதங்களைக் கழுவி அகங்காரம் கழித்திட
செய்கையால் நடத்திய புதுப்புரட்சி
அன்புப் போதனையான அரிய நிகழ்ச்சி

தந்தையின் திருவுளம் நிறைவேற்ற
தம்மை வெறுமையாக்கி மனுவுருவான வார்த்தை
இதோ உம் அடிமை என்ற கன்னித்தாயின் குழந்தை
சீடரின் பாதம் கழுவி இன்புற்ற குருவோ தந்தை

குருவா என் பாதங்களைக் கழுவுவது?
மறுத்துரைத்த பேதுரு-உன் பாதங்களைக்
கழுவாவிடில் என்னோடு உனக்குப் பங்கில்லை
அன்பால் தடுத்தாட்கொண்ட இறையுரு

பாதங்களை என்ன, அடியவன் தலையையும் கழுவும்
அன்பின் நாதமே-உம்மோடு பங்கில்லையெனில் என் வாழ்வில்
பொருள் இல்லை, நீரில்லா உலகோ கதிரில்லா வானம்
வாழ்வுதரும் வார்த்தையெல்லாம் உம்மிடமே
கதறிக் குருவைச் சரணடைந்த சீடனின் கானம்

கால்களை மட்டும், குளித்தவர்
கழுவினால் போதும் அவர் தூய்மையானவரே
கனிவோடு மொழிந்த குரு.



அன்பினால் இன்புற்று உங்கள் பாதங்களை, ஆண்டவரும்,
குருவுமான நானே கழுவி, நாம் ஒரு குடும்பம்
என்பதை எண்பித்தேன் நீங்களும் ஓர் குடும்பமாய் வாழ
ஒருவர்க்கு ஒருவர் பணியாளராய் மாறுங்கள்

பணி வாழ்வின் ஒளி அன்பினால்
உலகெங்கும் ஒளிரட்டும்
அன்பே இறைவன் நற்செய்தியாகட்டும்

ஆண்டவரின் அடிமை நான் என்ற தாயின் அன்பு முகம்
நெஞ்சை நிறைக்க, அம்மான் மகன் பாதணிகளின் வாரை,
அவிழ்க்கப் பாத்திரனல்லேன் என்ற அண்ணண் முகம்
விழிகளில் நீரை வரவழைக்க, கண்ணீரால் பாதங்களைக் கழுவி-
கூந்தலால் துடைத்தவள் நேசம் நெஞ்சை நெகிழவைக்க- அன்புச் சீடரின்
பாதங்களை கழுவித் துடைத்த பணிவாழ்வின் அரிய போதனை

பூஜைக்குரிய புண்ணியனே- பாதபூஜை செய்து
பணி வாழ்வைச் சீடருக்குக் கற்றுக்கொடுத்தார்
வார்த்தையும் வாழ்வும் ஒன்றானவரே-வாழ்வும்
போதனையும் ஒன்றென்று சிலுவையில் எண்பித்தார்.

***இரட்சகனே-அர்ச்சகர்களுக்கு***
***பூஜை செய்த புதிய வேதமுமிங்கே-வாழ்வும்***
***போதனையும் வேறல்ல-ஒன்றே என்ற***
***உண்மையின் நிதரிசனமுமிங்கே***

தெய்வத்தின் திருப்பாதம் தினம் தொழும்
அடியவர்களே வியப்புற்று நாணிட
மெய்யப்பன் திருமகனோ அடியவர் பாதங்களை
பரிவுடன் கழுவித் துடைத்த அரிய போதனை

நற்பணியாளனே நல்ல தலைவன் -சிவப்பிரகாசமே
தன்னைத் தாழ்த்தி அருட்பிரகாசமானது-ஐயமின்றி
சீடரும் அறிந்து தெளிந்த படிப்பினை

அன்பினால் தன்னை வெறுமையாக்கி அடிமையின்
கோலம் பூண்ட சிவம், குரு பண்பினால் தன்னைத் தாழ்த்தி
அடியவர் பாதங்களைக் கழுவித் துடைத்தே
பணி வாழ்விற்கு புது இலக்கணம் வகுத்த அரியதவம்

அடிக்கும், முடிக்கும் வேறுபாடில்லை-எல்லாம் ஒன்றே
வணங்கத்தக்க வெகுமதியை அள்ளி வழங்கிட, பாத பூஜை செய்து-
***என்னில் இருப்பதே-உங்கள் உள்ளும் இருப்பது***
***நானும் நீங்களும் வேறல்ல ஒன்றே*** என்ற சின்மயன்
நீங்களும் ஒரு நாள்-விழிப்புணர்வில் என்னைப்போல்
குருவாய் மலர்வீர் என்பதை எண்பிக்க புரிந்த அதிசயம்

குரு சீடனின் பாதங்களை தொடும்போது, குரு சீடனாகவும்,
சீடன் குருவாகவும் , மகன் தந்தையாகவும். தந்தை மகனாகவும்
எதிர்துருவங்களின் இணைப்பில் முரண்பாடுகளின் இசைவு
முரண்பாடுகளின் இசைவே ஆன்மீகம்

இரவு பகலாகின்றது-பகல் இரவாகின்றது
ஒன்றுக்குள் ஒன்றாக உடலும், ஆவியும் இசைந்து ஆடிட
இறைவனும். மனிதனும் இணைந்து ஆடும் நடனமே மெய்வாழ்வு
அம்மான் மகன் செய்கையால் காட்டிய ''ஸென்''அதிசயம் அன்று

மண்ணும், புழுதியும் படியத் தன்னைத் தொடர்ந்த
நண்பர் பாதங்களைக் கழுவி அன்பைச் சொல்லிய நிலவு
அகங்காரம் கழித்திட செயல் வடிவம் காட்டிய அரிய நிகழ்வு
தயாபரனாய், கருணாகரனாய் இறைமகன் பேரழகு



தாள் பணிந்து அடியவர் தொழும் தெய்வம்
தன்னை அடிமையாய்த் தாழ்த்தி-சீடர்
பாதங்களை கழுவித் துடைத்தே மொழிந்தார்
*நான் உங்களை அன்பு செய்ததுபோல்*
*நீங்களும் ஒருவரை ஒருவர் அன்பு செய்யுங்கள்*
*அன்பே உறவு-அன்பே நிறைவு*

அன்பே பணி வாழ்வுக்கான அனுசாசனம்
வழியும் உண்மையும், வாழ்வும் நானே,
நானும் தந்தையும் ஒன்றே
அனுபூதியில் அறிந்த அத்வைத மனதின்
ஆனந்தப் பிரகடனம்

அன்பே இறைவன் அன்பில் நிலைத்திருப்பவர்
என்னில் நிலைத்திருக்கின்றார்
நாமும் அவரில் நிலைத்திருப்போம்.

மனிதர் உங்களுக்கு என்ன செய்வேண்டும் என்று
நீங்கள் விரும்புகின்றீர்களோ
அதை நீங்கள் அவர்களுக்கும் செய்யுங்கள்
பொன் விதி அருளிய மனுமகன்

அன்புதான் தன்னை மழையாய் அள்ளிப்பொழிய, அருள்தான்
தன்னை கதிராய் எரித்துக் கொடுக்க, அச்சன்தான் தன் மகனை
அன்புப் பரிசாய் அளித்து களிக்க-அன்புதான் தன்னைச்
சிலுவையில், பூரண சரணாகதியாக்கி அன்பே சிவம் என்றது



தாழ்ச்சி நிறைந்த உள்ளத்தில் இறை மாட்சி
தவமான வாழ்வில் இறை அமைதியின் ஆட்சி
பரி பூரண சரணாகதிக்கு இயேசுவே சாட்சி

நீர் பட்டுச் சிலிர்காத பாதம்-கரம் பட்டுச் சிலிர்க்க
நீர் முட்டி சீடர் விழிகளும் அன்பால் நெகிழ
யார் கண்பட்டு காயமுற்றதோ –ஐயன்
கரங்களும், பாதங்களும் ஆணிகள் துளைக்க

நண்பனாய் இதயம் சுவைக்க அன்பழகன்
அறிஞனாய்ப் போற்றித் துதிக்க அறிவழகன்
ஞானமாய் கண்டு வணங்க நாடோடிச் சித்தன்
மாதவமாய் ஆன்மா சுவைக்க சின்மயன்

தாயாய், தந்தையாய், நண்பனாய்,  குருவாய்
உலகில் வாழ்ந்த குருபரன், சத்தியத்திற்கு
சான்றாய் இன்னுயிர் ஈந்த கிருபாகரன்-வழியும்,
உண்மையும், வாழ்வும் நானே என்ற இரட்சகன்

கண்டு சுவைக்க கனிமுகமோ தயாநிதி
உண்டு சுவைக்க வார்த்தையோ அருள்மொழி
அணைத்து காக்க இரட்சகனான இறைநிதி
பெருநிதியாய் தாயுமானவன் அருள்வதோ அமைதி

கண்ணீர் துடைக்கத் தாயுமானவன், தஞ்சமளிக்கத்
தந்தையுமானவன், தொழுது வணங்க இறைமகன்
தன் விதி தந்தை நியதி என்றே-இன்புற்று
இறை தந்தையைப் புகழ்ந்த திருமகன



**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-20-10-2023

# ஜெஸ்தமெனி-துயரம்

---

இரவு நேரம், நிலவு பழுத்த பௌர்ணமிக்காலம்
ஒலிவத்தோப்பு நிலவொளியில் நீராட, நீரோடையில் மீன்கள்
துள்ளி விளையாட, வாடைக் காற்று வருடிச் சீராட்ட
உண்ட மயக்கத்தில் சீடரின் ஆழ்ந்த உறக்கம்





உலகம் உய்வுற, மானுடம் மீட்புற, தனித்திருந்து,
விழித்திருந்து தந்தை அன்பில் பசித்திருந்து
செபித்த மனதிலோ தணியாத ஏக்கம்

தென்றலும் இறைமகனைத் தழுவித் தேற்றிட
தேன் நிலவும் முகம் மறைத்து துயர் பகிர்ந்திட
அச்சத்தின் உச்சத்தில் கலங்கிய உள்ளம்
ஆறாத்துயரில் தந்தையை அழைத்த கண்ணீர் வெள்ளம்

முழுநிலவும் முகம் கறுக்க-சிந்திடும் வியர்வை
குருதி நிறமெடுக்க-துன்பக்கலம் நீங்காதோ-ஏங்கித்
துன்புற்றுக் கலங்கி-சாஷ்டாங்கமாய் விழுந்து
தொழுத மனதில் கொடிய மரணபயம்

ஆடும் கொடிய நாகமென பாடுகள் மனக்கண்ணில் தோன்றி அச்சுறுத்த
எரிமலைக் குழம்பில் விழுந்த தும்பிபோல் இதயம் துடித்திட-பொன் மேனி
இரத்த வியர்வை சிந்திச் சிவந்திட-துயரக் கிண்ணம்தான் நீங்காதோ
மனம் ஏங்கிட, திண்ணம்தான் பிறவாமல் மகனும் வேண்டினார்



***தந்தையே இத்துன்பக்கலத்தை என்னிடமிருந்து அகற்றும்***
***ஆயினும் என் சித்தமன்று-உம் சித்தம் நிறைவேறட்டும்***

முத்தமிட்டு காட்டிக் கொடுத்தது முப்பது வெள்ளி
ஆணையிட்டு அறியேன் என மும்முறை மறுதலித்தது அச்சம்
துப்பித் தூற்றி, சிலுவையில் அறைந்திடக் கூச்சலிட்டு
பூச்சியனைப் புறந்தள்ளி-நீசன் பரபாசை தேர்ந்தது மாச்சரியம்

ஏச்சும், பேச்சும், கேலியும், கிண்டலும்
காய்ச்சிய ஈயத்தை காதுகளுக்குள் ஊற்றிய சோதனை
கசையின் கொடும் முட்கள் விசையுடன் முதுகை
கொத்திக் கிழித்து உழுதிட தாங்கொண்ணாத வேதனை

முடியமர்ந்த முட்கள் தாகம் தாகம் என்றே-சிரசைத்
துளைத்து குருதியில், விடாய் தணிக்கத் துவண்ட நெஞ்சம்
கல் மனங்களில் இரக்கத்திற்கோ பெரும் பஞ்சம்

கழுமரச் சுமை தோளை முறிக்க, கசையடியோடும்,
வசைமொழியோடும், கல்வாரி நோக்கிய மரண யாத்திரை
அன்னையர் விழிகளிலோ கண்ணீர்த் திரை



ஊனையும், என்பையும் ஊடுருவி-உடலைச் சிலுவையோடு
இழுத்துப் பிணைத்த கூர் ஆணிகள், உயிர் மெய்யை ஒன்றாய்ச்
சிதைத்து-ஒவ்வொரு உயிர்க்கலத்தையும் வதைக்கத் தோன்றும்
கொடிய வேதனையோ எரிநரகான சோதனை

வானுயர்ந்த சிலுவையில் உயிர் மெய் உற்ற துயரோ
சொல்லொண்ணா மரண வேதனை-இங்கே
வேடனின் அம்பு பட்டு வெண்புறா வீழ்ந்தது
கொடுந்தீயின் தணல் சுட்டு பூத்த ரோஜா கருகியது.

சுரிகுழல் சுந்தரன் சிரசில் முள்முடி, கசை உழுத முதுகில்
தாங்கொண்ணாப் பெருவலி, வசை ஒலிக்க, அங்கம் துளைத்த
ஆணிகளால் வானுயர்ந்த சிலுவையில் கொடிய வலி,
அன்னையைக் கண்ட இதயத்திலோ வார்த்தை கடந்த பெருவலி

அச்சத்தின் உச்சத்தில், சொல்லொண்ணாத் துயரில்
கொல்லும் ஒநாய்கள் நாற்புறமும் சூழ்ந்திட
ஆயனைக் காணத செம்மறிபோல் மனம் கதறியது
என் தந்தையே என் தந்தையே-ஏன் என்னைக் கைநெகிழ்ந்தீர்?



அச்சத்தீயில் ஆவி வெந்து துடித்திட, உச்சத்தில் உடலும் இளகி
இரத்தவியர்வை சிந்திட, அச்சனைப் பட்சமாய் இரந்தவர் துயரம் கண்டு
காரும் மழையாய்க் கரைந்தழுதது, கண்ணயர்ந்த சோலைப்
புள்ளினங்களும் கண்விழித்து சோகம் சொல்லிப் புலம்பின

துன்பம் பகிரத் துணையாய் யாருமில்லை
அன்புச் சீடர்களோ ஓடி மறைந்த அவலநிலை
அன்புத் தாய்க்கோர் ஆறுதல் மொழிய -வார்த்தையே
வார்த்தையின்றி மௌனித்த துன்பநிலை

அன்னையின் விழிகளிளோ கண்ணீர்க் கோலம்
ஆறுதல் சொல்ல மொழியின்றி உள்ளம் ஊமையான பாவம்
நொருங்கிய இதயத்தில் சோகப் புயல் வீசும் அவலம்
விதவையோ இன்று அநாதையான பெருந்துயரம்

தன்னையே வெறுமையாக்கி
அடிமையின் கோலம் பூண்ட திருமகன்-தந்தையே
என் சித்தமன்று, உம் சித்தம் நிறைவேறுக -வேண்டியே
சிந்தையில் பேரமைதி கொண்ட மனுமகன்

ஒரே பேறான மகனை உலகிற்கு ஈந்து-உத்தமரும்
உலகின்மேல் தாம் கொண்டுள்ள பேரன்பைக் காட்டிட
வைதாரையும், வதைப்போரையும் மன்னிக்க வேண்டிய
கருணாகரனோ, வாழ்வும், போதனையும் ஒன்றான இறைமகன்



“வார்த்தை” மனுவுருவானபோது வாழ்த்திய வானவரும்
அமைதி கண்டு அகமகிழ்ந்த நல்மனத்தவரும், வாதைகள் பட்டு
பலியானபோது,சொல்லியழ வார்த்தையின்றிப் புலம்பி நின்றார்
நெஞ்சம் நொருங்கிட உள்ளம் கலங்கி நின்றார்

தம் மகனைக் கொல்லுமளவிற்கு-இறைவன் உலகிற்கு
சுதந்திரம் அளித்தார், மரித்த மகன் உடலை உதிர்த்தே
அழியாத ஆன்மா நான்
அமரத்துவமே நிலை வாழ்வு என்றார்

ஆணவமே தீமை- ஆணவமே மரணம்
பரிபூரணசரணாகதியே நிலை வாழ்விற்கு வழி
ஆணவத்தின் இறப்பும்-தூய மனத்தின் பிறப்புமாய்-
இரண்டாம் பிறப்பு, இறையரசில் நம் வாழ்வு-
வாழ்வே கடவுள்



கடவுள் எனும்போது இறைவனோ தத்துவம்
தந்தை எனும்போது இறைவனோ இரத்த சொந்தம்
கடவுள் நம் தந்தை நாம் அவர் குழந்தைகள்
உறவு சொல்லித் தந்த இறைமகன் நம் சகோதரன்

*அச்சன்-பிதா*

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-20-10-2023

# கெத்சமனி தோப்பு-வேண்டுதல்



தியானமும், ஜெபமும், நிலை வாழ்வின் இரு வழிகளாக
ஆணவ மனம் கழித்து-தூய மனம் பிறக்க
சும்மாயிருக்கும் செயல் கழிந்த நியே
*"சா ஸென் தியானம்"*

"இறை தேவை" தியானத்தில் இல்லை
*"வாழும் இறைவனோ"*
ஜெபத்தின் இன்றியமையாத் தேவை




**இறைவனை அறிந்தவரே குரு**
சத்திய குருவுக்கே ஜெபம் சாத்தியம்

நிபந்தனையற்ற, முழுமையான,
நின்னடிமை நான் எனும் சரணாகதியே
உண்மையான ஜெபம்.

அன்பின் ஆழ்ந்த நெருக்கத்தில், இறைவனும்
மனிதனும் கொள்ளும், உன்னத உறவே ஜெபம்,
அந்தரங்கமாக காதலர்களின் சந்திப்பாய்,
இதயங்களின் சங்கமமாய் ஜெபம்

கண்களை மூடி ஜெபிக்கையில் கரைந்துருகும் இதயம்
மண், விண்ணின் சந்திப்பாகும், ஆகாயம் மண்ணை அணைக்க
***தந்தையும், மகனும் சந்திக்கும் நிகழ்வு, இயேசுவின்***
***இதயத்தில் நிகழும் இரு எதிர் முனைகளின் சந்திப்பாகும்***

விண்ணோக்கி எழும் இருப்பின் ஆனந்த எழுச்சியில்
கடல் அலைகள்போல் இதயம் பொங்கிப் பூரிக்கும்
கதிர் தொட்டு மலரும் பூப்போல் நெஞ்சம் அகமகிழ
உயிர்ப்பான நிகழ்வாய்- ஜெபம்

ஜெபமோ ஆழ்ந்த செயல் நிலை, இதயம் திறந்திருக்க
சும்மா காத்திருத்தலே தியானம்

குரு ஜெபிக்க-சீடர்களோ, தியானத்தில் நிலைத்திருக்க
அன்பினால் இன்புற்ற இறைவன், அன்பைப் பொழிந்து
குருவை நிறைக்கும்போது, சீடர்களையும் அன்பு நிறைக்கும்
***இறை கருணை எங்கும் பொழியும்***

“முழுமையை” அறிந்த மனம் இறையன்பால் இன்புற்று
இறைவனோடு தொடர்பு கொள்ள, அன்பிறைவனால்
தொடப்பட்டவருக்கே ஜெபம் சாத்தியம்.

விழிப்புணர்வுவோ அருங் கொடையாக, குரு நல்கும்
பெருங்கொடையாக, ***இறை பிரசன்னம் தொடும்போது
விழிப்புணர்வு வரமாகின்றது***

மானுட வாழ்வோ மண்ணில் சில காலம், மனுமகன் வாழ்வோ
இன்னும் சில மணி நேரம், மண்ணால் ஆன உடல் மண்ணிற்குத் திரும்பிட
வானவன் வார்த்தை விண்ணேகிடும் நேரம் நெருங்கிட-இறுதி இரா
உணவை-சீடர்களோடு விருந்தாடிக் கொண்டாடிய அன்புறவு

அப்ப, இரச வடிவில் விழிப்புணர்வை குரு அளிக்க
விருந்தாய் உண்டு தவறவிட்ட சீடர், தவமிருந்து
பெறவேண்டிய அறம், தவமின்றி கைநழுவிப்போன வரம்



*********************************

வான் நிலவோ விண்ணில் உலாவர
மனுமகனோ தந்தையோடு உறவாட
ஜெபமும், தியானமும் சந்திக்கும் அரிய நிகழ்வு
தவமிருக்கும் சீடருக்கு வரமாகும் பொழுது

தவறவிட்ட விழிப்புணர்வை, தவமின்றிச் சீடர் வரமாய்ப்
பெற, கெத்தமெனிக்கு அழைத்தவர்- எண்மரை
“***இங்கே அமர்ந்திருங்கள்***” -தியானத்தில்
நிலைத்திருங்கள் ஸென் குருவாய்ப் பணித்தார்.

“இங்கே அமர்ந்திருங்கள்” உடலும், மனமும் ஓய்ந்திருக்க
காலத்தில் மனமும், சூனியத்தில் உடலும் அசையாது
சும்மா காத்திருத்தலே-தியானம்

பேதுரு, யோவான், யாக்கோபுடன் முன்னே நடந்தவர்-
தந்தையிடம் மன்றாடப் போகிறேன்
“ ***என்னோடு இங்கே தங்கி விழித்திருங்கள்***”
விழித்திருத்தலே தவம், விழிப்புணர்வோ வரம் என்றார்

காதலன் காதலியின் சந்திப்பாய்-தவிப்போடும், உயிர்த்துடிப்போடும்-
பெரும் எதிர்பார்புடனான காத்திருப்பாய்- விண் மண்ணைச்
சந்திக்கும் அரிய நிகழ்வாய் அவர் ஜெபம்

பிரியும் நேரம் நெருங்கிடச்-சிலுவை
மரணத்தின் கொடுந் துயரம் மனதை நொருக்கிட
துன்பக்கலம் நிறைந்து வழிந்தோட
அச்சத்தில் மூழ்கித் தவித்த அன்பு மகன்

வலுவிழந்த உள்ளம்-முன் சென்று
முகம்படியத் தரையில் வீழ்ந்து கெஞ்சியது
நிம்மதி வேண்டித் தந்தையிடம் மன்றாடியது

தம்மை வெறுமையாக்கி -அடிமையின்
கோலம் பூண்ட வார்த்தை
தம்மைக் காணிக்கையாக்கிய பிரார்த்தனை

விதை, மரத்தை நோக்கிய விடுத்த கூக்குரல்
விண்ணை நோக்கி மண் எழுப்பிய அபயக்குரல்

தந்தையே, முடியுமானால் இத்துன்பக்கலம்
என்னை விட்டு நீங்கட்டும் -கெஞ்சியது ஒரு முனை
ஆனால், என் சித்தமன்று -உம் சித்தம் நிறைவேறட்டும்-
சரணடைந்தது எதிர் முனை

என் சித்தமன்று, உம் சித்தம் நிறைவேறுக-இறைவன்,
மனிதனை ஆட்கொள்ள, தந்தை மகனாக மாறும் அற்புத நிகழ்வு
***இரு எதிர் துருவங்களின் சந்திப்பானது***

அன்பால் என்னை ஆட்கொண்ட அம்மானே
என் ஆவியும் உடலும் உனக்கே சொந்தம்
நான் மடிந்து நீ வாழ அருள் புரிவாய் பெருமானே

ஊனொடுங்கி, உயிரொடுங்கி, உயிரச்சத்தால்
ஆவியும் கலங்கி, அச்சனை அழுது
அழைத்த பிள்ளை மனம்
அடிமை நான் என்று எழுந்த தேவகானம்

உடலும், ஆன்மாவும் ஒன்றாய்
ஆனந்தக் கூத்தாட-பூரண சரணாகதியில்
நிகழ்ந்த இறை தரிசனம்

உள்ளமுருகி, ஊன் கரைய, வெள்ளம்போல்
கண்ணீர் பெருக, விழிப்புணர்வை வரமாக்கிட
விழிப்புணர்வோடு ஜெபித்த குருவின் தவம்
ஊனியல்பில் நிலைத்தவருக்கு தூக்கமே சாபம்

மன்றாடித் திரும்பியபோது ஏமாற்றமே மிஞ்சி நின்றது
விழித்திருந்து காணவேண்டியவர்களோ உறக்கத்திலிருந்தார்
உண்ட மயக்கத்தில் ஊனுடலில் நிலைத்திருந்தார்

“ ஒரு மணி நேரம் கூட-என்னோடு விழித்திருக்க
உங்களால் முடியவில்லையா? மனமோ ஆர்வமுள்ளது ,
உடலோ வலுவற்றது, சோதனைக்கு உட்படாதபடி “விழித்திருந்து”
வேண்டுங்கள்” மீண்டும் சென்று ஜெபத்தை தவமாக்கிய குரு

***“என் தந்தையே , நான் பருகினாலன்றி***
***இத்துன்பக்கிண்ணம் அகல முடியாதென்றால்***
***உம் சித்தம் நிறைவேறட்டும்”***

தாள் பணிந்து தன்னைத் தாழ்த்தி
தஞ்சமடைந்த உள்ளம்
நெஞ்சத்தில் அமைதி வெள்ளம்



கசையும், வதையும், கொடிய கழுமரச் சாவும், எண்ணத்தையும்,
இருப்பையும் சிதைக்க, அச்சத்தால் நடுநடுங்கிய மெய்
தலைமேல் கரம் குவித்து மன்றாடியது, வேண்டுதலின் உச்சத்தில்
விழிநீர் அருவியானது, வேதனையின் உச்சத்தில்
வியர்வை குருதித் துளிகளானது

தந்தை ஒருவர் நமக்கிருக்க, தரணியெல்லாம் உத்தமர்
தாள்பணிந்திருக்க, சிந்தையெல்லாம் அப்பா நின்
சித்தமென்றிருக்க, எந்தையே எனக்கென்ன குறை?

காலைப்பனி படர்ந்த ரோஜாவாய் அவர் தோற்றம்
பனித்துளிகளோ குருதித்துளிகளாய் மாறிய மாற்றம்
அச்சத்தில் இரத்த வியர்வை சிந்திச் சிவந்த மனிதன்
விழிப்புணர்வில் இறைமகனாய் மாறிய மனுமகன்

அமைதி கண்ட மனம் திரும்பி வந்தபோது
ஆழ்ந்த உறக்கத்தில் அருமைச் சீடர்
தூக்க மயக்கத்தில் அவர்கள்-கொடிய
துர்மரண அச்சத்தில் மனுமகன்

மூன்றாம் முறை மன்றாடித் திரும்பியபோதும்
விழித்திருந்தவர் யாருமிலர்- “விழிப்புணர்வு
ஒரு சுடரிலிருந்து மறு சுடருக்கு தாவிடும்”
அரிய சந்தர்ப்பம் கை நழுவிப்போனது

***இறைவனை அறிந்தவராலேயே ஜெபிக்க முடியும்***
***தந்தையை அறிந்தவர்*** தம் வேண்டுதலை, தவமாய்
விழித்திருந்து காண, விண்ணும் மண்ணும் ஒன்று சேரும் அழகில்
விழிப்புணர்வை வரமாக்கிட சீடர்களை அழைத்தார்

தவறவிட்ட சீடருக்காய் மும்முறை ஜெபித்தார்
தியானமும். பிராத்தனையும் ஒன்றாகும்
அழகை காண்பவர்மேல்-அரிய வரமாய்
விழிப்புணர்வு பொழியப்படும்

***விண் சார்ந்த கொடையை வரமாய் பெற***
***விழிப்போடு இருத்தலே தவம்***

வானவன் கொடையை வரமாக்கிட
அற்புத சூழலை -ஒரு முறையல்ல
மும்முறை உருவாக்கிய கருணாகரன்

***விழிப்புணர்வே சுதந்திரம், தூக்கமே பந்தம்,***
***சிறைவாசம்,*** வரமாய் விழிப்புணர்வை பெற்றிட
சீடரிடம் தவமில்லை-இதயத் தாகமில்லை

இனியும் தூக்கமேன்? நேரம் நெருங்கி விட்டது
எழுந்திருங்கள் எதிர்கொள்ளப்போவோம்-
என்னைக் காட்டிக் கொடுப்பவன் வந்து விட்டான்



தந்தையிடம் சரணடைந்தவர்
சாவைச் எதிர்கொள்ளத் தயாரானார்
உடல் ஆன்மாவிடம் தஞ்சமடைய-மனுமகன்
இறைமகனிடம் சரணடைந்தார்

பந்தங்களோடும், படைக்கலங்களோடும்-
படைவீரர் தொடர வழிகாட்டி வந்த யூதாஸோ சீடன்
“வாழ்க ராபி” என வாழ்த்தி -கன்னத்தில்
முத்தமிட்டு காட்டிக் கொடுத்த துரோகியோ நண்பன்

தோழா, எதற்காக வந்தாய்?- நண்பனாய்
ஏதுமறியாதவர்போல் கேட்டவர்- முன்சென்று
யாரைத் தேடுகிறீர்கள்? என்றார்

நசரேத்தூர் இயேசுவைத் தேடுகிறோம்
“ நான்தான்” என்றார்-

இருப்பாய் இருப்பவர் மோஸேக்கு மொழிந்த
"***இருப்பவர் நாமே***" என்ற இறைநாமம் அதிர
இடி கேட்ட நாகமாய் ஒடுங்கி
அடிபட்டவராய்த் தரையில் விழுந்த படைவீரர்

யாரைத் தேடுகின்றீர்கள்? மீண்டும் வினாவிட
நசரேத்தூர் இயேசுவை

''நான்தான்'' என்று உங்களிடம் சொன்னேனே,
என்னை தேடினால்-என் சீடரைப் போகவிடுங்கள்''
விழிப்புணர்வோடு தம்மைக் கையளித்த யோகி
நல்லாயன் தந்தையோடு வழிநடந்த செம்மறி

சினம் எரிய சிந்தையில் இருள் படிய-சீறிய சீடன்
சீமோன் வாளையுருவி -மால்குவின் வலது
காதை வாளால் வெட்டிட காயமான காது
சீடத்துவத்திற்கு சோதனையான வாது

வாளை உறையில் போடு, வாளை எடுப்போர் வாளால்
மடிவர், நான் வேண்டினால் என்னை காக்க-என்
தந்தை பெரும் படையை அனுப்ப மறுப்பாரோ?

தந்தை தரும் கசப்பை நான் பருகவேண்டும்
கசப்பே மீட்பின் மருந்து -கனிவோடு உரைத்த குரு
மால்குவின் காதை தொட்டுக் குணமாக்கிய திரு



ஒரு கள்வனைப் பிடிக்க வருவதுபோல்
படையோடும், படைக்கலங்களோடும
என்னைப் பிடிக்க வந்ததும் ஏனோ?

நாள்தோறும் கோவிலில் நானிருந்தும்-நீங்கள்
என்னைப் பிடிக்கவில்லை, இருள் ஆளும் நேரம்
மறைநூல் வாக்கு நிறைவேறும் காலம்

காட்டிக் கொடுப்போனையும்-மறுதலிப்போனையும்,
தம்மைக் கைவிட்டு-ஓடிப்போவரையும் -பாதங்களைக்
கழுவியபோது தொடுகையினால் அறிந்த குணாளன்
சீடர் யூதாஸை வெறுக்காதிருக்க-இறுதி நேரத்திலும்
தோழா என அன்போடழைத்து நண்பனாய் மதித்த அருளாளன்

முன்சென்று யாரைத் தேடுகின்றீர்கள்
***காட்டிக் கொடுப்பை மறைத்து-பெருங்கருணையை***
வெளிப்படுத்திய கருணாகரன்

மன்றாடும் வேளையில் சிலுவையை மனதில் சுமந்து
மரண பயத்தை அறிந்து கடந்த குமரகுருபரன்
தந்தை சித்தமே தம் சித்தம் என்றே
எதிர்ப்பின்றித் தம்மை கையளித்த தேவதாஸன்

இறையிட்ட இறைசாயலான கோலம்
ஆதிமனிதனின் ஆணவத்தால் அலங்கோலமானது
பாவத்தின் சம்பளம் மரணமானது



அச்சனிட்ட அழியாக்கோலம் நிலைத்திட
பரிபூரண சரணாகதியடைந்த மனுமகன்
ஆணவம் கழித்து, சிலுவையில்- இயேசு,
கிறிஸ்துவாய் தம்மைப் தாமே பிறப்பித்த அற்புதம்

அமரத்துவமே நிலை வாழ்வு, உயிர்ப்பின் நற்செய்தியானது
உலகெங்கும் பறைசாற்ற-விழிப்புணர்வே ஞான தீபமானது
***உலகின் ஒளி "நானே"-என்னைப் பின்தொடர்பவர்***
***இருளில் நடவாமல்-வாழ்வுக்கு வழிகாட்டும்***
***ஒளியைக் கொண்டிருப்பார்.***

சடங்கான மதங்கள் சாரமற்ற உப்பாக, நடைப்பிணங்களாய்
மானுட வாழ்வு நாறிட, இயேசு போதனையல்ல -மானுடர்
வாழ்ந்தறிய வேண்டிய சத்திய சோதனை

தபோர் மலையில் விண்ணவனாய் இறைகோலம்
கல்வாரி மலையில் மண்ணவனாய் அலங்கோலம்
மனுமகனே இறைமகனான திருக்கோலம்
இறைமகனே மனுமகனான கழுமரக்கோலம்
ஒன்றுக்குள் ஒன்றான உருமாற்றம் இரண்டற்ற அத்வைதம்

**ஓம் சாந்தி ஓம்**

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

*Pax Ravichandra-20-10-2023*

# இறுதிச் சோதனை-*The Last Temptation*

---

வளர்பிறை, தேய்பிறை, பௌர்ணமி,
அமாவாசை, எல்லாம் மாயத்தோற்றங்களே,
சார்புநிலை மாற்றங்களே



நிலவு வளர்வதில்லை-தேய்வதில்லை
மறைவதில்லை -நிறையுண்மை இது.
சூரியன் உதிப்பதில்லை-மறைவதில்லை
பூமியின் சுழற்சி மாற்றங்களே

ஒவ்வொரு கணமும் ஓர் உதயம்
ஒவ்வொரு கணமும் ஓர் அஸ்தமனம்
சார்புநிலை உண்மைகளே

ஆணவம், கன்மம், மாயை- மனிதனை
அலைக்கழிக்க, வானவன் மகனிடம் - அலகை
நீர் தேவகுமாரனாகில்-ஐயத்தை கிளப்பி-
ஆணவத்தை தூண்டித் தோற்றது

ஆசையை தூண்டிட உலக அரசுகளைக் காட்டி
மண்டியிட வேண்டியது, கண்டிக்கப்பட்டது

மேலிருந்து கீழே குதியும், மாயம் செய்யும்
வல்லமையை தூண்டி -வல்ல இறைவனை
மறுத்திட வேண்டியது-மறுத்து ஒதுக்கப்பட
நாணித் தோற்றோடிப்போனது

சோதனை எல்லாம்
ஆணவமனத்தின் ஆசை வடிவங்களே
சோதிப்போன் யாருமில்லை

மரணமோ ஆணவத்தால் வந்த சாபம்
ஆணவம் கழித்தவருக்கு அமரத்துவமே வரம்
மரண பயமே அச்சுறுத்தும் கொடிய நாகம்

கொடிய சிலுவை மரணமோ
மனதை நெரிக்கும் மலையரவம்
எண்ணிட நெஞ்சம் நடுங்க-தந்தையைக்
கெஞ்சிய பிள்ளை மனம்

அன்பு நெஞ்சங்களில் ஒன்று, முத்தமிட்டு
வாழ்த்திக் காட்டிக் கொடுத்திட, மற்றொன்று அறியேன்
என மும்முறை மறுதலித்திட நெஞ்சம் வலித்தது

நீர் வற்றிய பொய்கையாய் நிலை மாறிட, அற்ற குளத்து
அறுநீர்ப் பறவைகளாய், சீடரும் கை விட்டோடிட
சோகத் தீயில் வாடும் குமுதம், ஆம்பலாய், அன்னையும்,
மகதலேன் மரியாளும் உறவு சொல்ல, விம்மிய மனம்.



காறித்துப்பி, கன்னத்தில் அறைந்து, வசையால் வருத்தி,
கசையால் உழுது, பொய்யன், மாயன் எனத் தூற்றி-
சிலுவையில் அறைந்து கொல்லத் துடித்த அலங்கோலம்
மதவாதத்தின் கொடுங்கோலம்

உண்மையா அது என்ன? கண்முன் இருந்த
உண்மையைக், காணாத அகக்குருடனாய் ரோம நீதி
தம்முன் நின்ற இறைமகனை, இறை நிந்தனை
செய்பவனாய் கண்டதோ திருச்சட்ட வாதி

ஓசான்னா பாடிய கூட்டமே-ஒழிக
ஒழிக எனக் கூச்சலிட்டு-பரபாஸை தேர்ந்தது
நீதித்தராசோ கள்வர் பக்கம் சாய
திருச்சட்ட நீதி அநீதத் தீர்ப்பளித்தது



கசை உழுத மேனியோ புண்பட்ட காயம்
வசை உழுத செவிகளிலோ காய்ச்சிய ஈயம்
புன்னகை தவழும் பூ முகத்தில் துப்பிய எச்சில்
மகுடமான முடியிலே வதைக்கும் முட்கள்

பாறைபோல் கனக்கும் பாரச்சிலுவையை தோள் சுமக்க
பலமிழந்த மனுமகனை நடை தடுக்க-குருதி விழி மறைக்க -
பன்முறை முகம் படிய மண்ணில் வீழ்ந்தவரை கசை வதைக்க
பழிக்கும் கூட்டத்திடையே-பரிவோடு பார்க்கும் தாயின் ஈரவிழிகள்

தாயன்பு போதுமென்றே தனயன் மனம் தேறிட
யார் சொல்லுவார் என் தாய்க்கு ஆறுதல்
தவித்த மனம் தந்தையை வேண்டிட-எரி நரகாய்
தீய்க்கும் வேதனையில் தவிக்கும் தாய் சேய் மனங்கள்

ஆடையிழந்து அரை நிர்வாணியாய்
அறையுண்ட உடல் சிலுவையில் நொந்து வாடிட
தணியாத தாகமும், தாங்கொண்ணா வேதனையும்
உயிர் மெய்யை வருத்திட, உள்ளம் கதறியது

என் தந்தையே! என் தந்தையே!-ஏன்
என்னைக் கை நெகிழ்ந்தீர் ?

உற்ற வேதனையில் மனதில் மரணபயத்தின் உச்சம்
மேனி பூத்த வியர்வையிலோ இரத்தம்

மரண பயத்தை மனத்தால் அனுபவித்து
அஞ்சிய பிள்ளை மனம்-தந்தையே!,
கூடுமானால் இந்தத் துன்பக்கலம் என்னை
விட்டகலட்டும் கெஞ்சியது ஒரு கணம்

ஆயினும் என் சித்தமன்று, உம் சித்தம்
நிறைவேறட்டும்-விழித்த மனம் தன்னை
மனமுவந்து கையளித்தது மறுகணம்

உருகித் தந்தையை கெஞ்சி மன்றாடிய உள்ளம்
உறங்கும் சீடரைக் கண்டு வருந்தியது, மனித பலவீனத்தை
அறிந்து தெளிந்த உள்ளம், சோதனைகளை வெல்ல
***விழிப்புணர்வோடு செபியுங்கள்*** கருணையோடு மொழிந்தது

இறைவார்த்தையினால் நிலை வாழ்வு வாழ
மனிதனை அழைத்தவர்-தம் அழைப்பை
விழிப்புணர்வோடு அனுகிடத் தயாரானார்

இன்பம், துன்பம் எனும் இருமை கடந்தவர்
சிலுவை மரணத்தை எதிர்கொள்ள, தேடிவரும் கூட்டத்தை
எதிர்கொண்டு யாரைத் தேடுகின்றீர்கள்? என்றார்

காட்டிக் கொடுப்பை புறந்தள்ளி-பேரன்பைக்
காட்டிய பெருந்தகை-காலன் வரும் நேரத்திலும்
மால்கூஸின் காதை குணமாக்கிய தேவகிருபை

“நாசரேத் ஊர் இயேசுவை”

“நான்தான்” என்றவர் மொழி கேட்டு
நடுங்கிய கூட்டம் பின் வாங்கித் தரையில் வீழ்ந்திட
“இருப்பவர் நாமே என்ற இருப்பாய் அவர் அகமாற்றம்.
யுகபுருஷராய் அவர் கல்வாரிப் பயணம்.



இறுதிச் சோதனையிலும் தோற்ற அலகை
இழிந்த தன் நிர்வாணத்தை மறைக்க, இலைகளைத்
தேடுகின்றது- ஆணவ மனதின்
மாயத்தோற்றங்களாய் உருமாறுகின்றது.

மனம் கழித்து- மரணபயத்தை புரிந்து தெளிந்து, அச்சம்
கடந்த தூய உணர்வு, தம்மை மனமுவந்து கையளித்தது,
தம் சிலுவையை தானே சுமந்து
நம் சிலுவையை நாம் சுமக்க-நம் முன் நடந்தது

காலம், நித்தியத்தை சந்தித்த
பிரம்மம், மாயை சந்தித்த குறியீடு-சிலுவை
காலம் கழிந்ததே நித்தியம்

விரித்த கரங்களோடும்-குத்தி திறந்த இதயத்தோடும்
முள்முடி சூடிய மன்னராய், ஆசீர் வழங்கும்
ஆதியின் வடிவாய் அன்பு மகன் இயேசு

கல்வாரிப் பயணமே வாழ்வு
உயிர்ப்போ சச்சித்தானந்த “இருப்பு”-

உடல், மனம் கழித்த உயர் விழிப்புணர்வில்
துரியாதீத நிலையில்-சுத்த சைதன்னமாய் மாறிட
***கல்வாரியில் நடந்த இரண்டாம் உருமாற்றம்***



மரணம் உடலில் நிகழ்கின்றது
***இயேசு –கிறிஸ்துவான அற்புதமோ***
***உள்ளுணர்வின் உன்னத பரிணாமம்***
***சின்மயனான அக மாற்றம் அதுவே உயிர்ப்பு***

மரணத்தை விழிப்புணர்வோடு எதிர்கொண்டு
மனம் உடல் கழித்து-கிறிஸ்துவாய் புதிய ஆதாமாய்-இயேசு
தம்மை தாம் பிறப்பித்த நிகழ்வு (*Christo Genesis*)

இடம் வலமான-இரு சிலுவை நடுவே “இருமை கடந்த
மத்திமம் வழியாக” இறுக்கமும், தளர்வும் கடந்து-சுந்தர மனம்
இருப்போடு ஒன்றான சின்மயனோ சுத்த சைதன்யம்



மனுவுருவான வார்த்தை-இறையுருவாகிட
ஓம் என ஓங்கார நாதம் அதிர்ந்திட
எங்கும் ஒலித்த பிரபஞ்ச கானம்

வந்த பணி முடிந்திட, வான் நோக்கி எழுந்த அவர் பயணம்,
தூய உணர்வின் உன்னதக் குறியீடு.
அடி முடி காண இயலா சிவத்தின் நிலைப்பாடு

மரணம் முடிவல்ல-மாற்று வாயில்
ஒரு உலகம், இருவாயில்
பிறப்பு-இறப்பு வாயில் வழியே எம் பயணம்

வாழ்க்கை வட்டமானால் துன்ப, துயரத்திற்கு
முடிவில்லை, விழிப்புணர்வில் உயிர்த்தால்
பிறப்பறுத்த ஆனந்தப் பயணம்.

ஞானிகளோ விழிப்புணர்வோடு-தம்
உடலைத் துறக்கின்றார்-அஞ்ஞானிகளோ
விழிப்புணர்வற்றவராய் இறக்கின்றார்
மரணம் என்று ஒன்றில்லை-எல்லாம் மாயை

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை-
பூவுலகில் நன் மனத்தவருக்கு அமைதி
**இறைதரும் அமைதியே மோட்சம்.**

உள்ளுணர்வின் உன்னதமும், நல் மனதும்
ஒன்றே, இறை தன்மை நம்முள்ளே
தூய மனதிற்கே சத்திய தரிசனம்-எளிய
மனத்தவருக்கே இறையரசு

ஆணவம் கழிந்தால் இறைவன் நாமே
அஹம் பிரம்மம் அஸ்மி

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்**
Pax Ravichandra-20-10-2023

# மோட்சத்தின் திறவுகோல்

What is Spiritual Awakening?

To Spiritually Awaken is to remember that who and what you are and have always been is the Infinite, Immortal Sea of Consciousness. One with all that exists. Not as an intellectual understanding but as a real and tangible experience and lifestyle.



மனிதனைத் தன் சாயலாய்ப் படைத்து
மனிதனுக்குள் ***ஆன்மாவாய்த்*** தன்னை
மறைத்த இறைவனோ மகாதேவன்

குழந்தை மனமோ இறை வெகுமதி,
அறிவுக்கனியுண்டு-ஆணவத்தால் வீழ்ந்த
ஆதாம் மனமோ அலகையின் சதி

மனம் தோன்றிடக் காலம் தோன்றியது
புனிதமான குழந்தை உள்ளம் மறைந்திட
ஆணவ மனம் இறை அன்பிற்குத் தடையானது
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம் நிதரிசனமானது

வீட்டை இழந்தவர் வாழ்க்கை போராட்டமானது
ஆணவம் கழித்து வீட்டைச் சேரும் பாதை
அறிவுக்கு எட்டாக் கனியானது-வீடும்
வாழ்வுக்கனியும் கண் மறைந்துபோனது



அறிவுக்கனியுண்டு விழித்த ஆணவ மனம்
“இருமையைத்” தோற்றுவித்தது-இருமையின் தேர்வில்
மனித வாழ்வு ஊசலாட்டமானது-அமைதி கனவானது
வாழ்வு நாளும் போராட்டமானது

மனிதன், மிருகம் எனும் இரு துருவங்களுக்கிடையே
ஊசாலாடும் மானுட வாழ்வு
உள்ளுணர்வின் உயர்ச்சியில் மனிதனோ தேவன்
வீழ்ச்சியில் அவனோ மிருகம்

ஊன் வளர்ப்பதோ மண்ணக உணவு
இறை வார்த்தையோ உயிர் தரும் ஆன்ம உணவு
***மனிதன் அப்பத்தினால் மட்டுமல்ல-இறைவார்த்தை***
***ஒவ்வொன்றாலும் வாழ்கிறான் என்பதோ நனவு***

“விண்ணரசின் திறவுகோல்களை நான் தருவேன்
மண்ணுலகில் நீ தடை செய்வது , விண்ணுலகிலும்
தடை செய்யப்படும், மண்ணுலகில் நீ அனுமதிப்பது
விண்ணுலகிலும் அனுமதிக்கப்படும்”

மண்ணும், விண்ணும் மனிதனுக்குள்ளே
உள்ளுணர்வின் உன்னதமே மோட்சம்
அதலபாதளமோ நரகம்

"நீர் மெசியா, வாழும் கடவுளின் மகன்"
தம்மை அறிந்தவருக்குத் தானமாய் குருவின் வெகுமதி
ஆணவம் கழித்திடும் கலையே-பேதுருவிற்கு
அற்புத "திறவுகோலான" பெருநிதி



செர்க்கம், நரகம் மனதின் இருமை
இருமை கடந்த சுத்த சைதன்யமோ மோட்சம்
அமைதியே இயேசு அருளிய பெருநிதி
நல்மனத்தவருக்கு அமைதி வானவர் சொன்ன சேதி

நேற்று, நாளை என்னும் காலம் கடந்த
நித்தியமே மோட்சம்
***வழியும், உண்மையும், வாழ்வும் "நானே"***
***இயேசு மொழிந்த மகா வாக்கியம்***

***"நான்" என்பதோ ஆணவம் கழிந்த***
***தூய கிறிஸ்து உள்ளுணர்வு-விழிப்புணர்வு***
***அதுவே வழி-அதுவே உண்மை-அதுவே வாழ்வு***
***அதுவே திறவுகோல்***

சொர்க்கம், நரகம் இருமை கடந்து- ஆனந்த
மோட்சத்தில் வாழ இயேசு பெருமானின் அழைப்பு
ஆணவம் ஆகுதியாக நாம் யாக்கும்
பரிபூரண சரணாகதியே யக்ஞம்.




பரிபூரண சரணாகதியில் ஆணவ மனம் அழிந்திட
தூய கிறிஸ்து உள்ளுணர்வு நிலைத்திட
சொல், செயல், சிந்தை எல்லாம் இறை சித்தமாகும்
புரியும் கர்மம் பந்தப்படுத்தாத யோகமாகும்

உம் இராட்சியம் வருக, உம் சித்தம் நிறைவேறுக-தவமாகும்
மண்ணுலகில் தடைசெய்வதும், அனுமதிப்பதும்
விண்ணுலகில் புரியும் செயலாகும்

மனம் கழித்த சூனியமே-தூய மனமே ஆனந்த மோட்சம்
பரிபூரண சரணாகதியே  திறவுகோலான தேவகடாட்சம்
***அகலெவறுமையில் முழுமையின் தரிசனம்***
***சிலுவையோ சரணாகதியின் இரகசியம்***

எளிய மனத்தவருக்கே இறையரசு-தூய மனதிற்கே
சத்திய தரிசனம்-ஆணவம் கழித்திடும் போதனையான
மலைப்பொழிவோ மதம் கடந்த பிரபஞ்ச கானம்

அழியும் நீரை, அழியா இரசமாக்கி
அழியும் மனிதன் -அமரனாக
***ஆணவம் கழித்தலே திருவுகோல் என்ற திரு***

***தியானம், பரிபூரண சரணாகதி, மன்னிப்பு, பிரார்த்தனை***
***ஆணவம் கழித்திடும் திருவுகோல்களை***
வாழ்வாலும், போதனையாலும் வழங்கிய குரு




விழிப்புணர்வில் நிலைத்திருக்கப் போதனைகள்,
விழிப்புணர்வை வாழ்வாக்க
விழித்திருந்து செபியுங்கள்-கெஸ்தமெனியில்
குருதி வியர்வை சிந்தி குருவின் பிரார்த்தனைகள்

வாழ்வளிக்கும் என் வார்த்தைகள்
உங்களில் கலந்து உங்களுக்கு உயிரளிக்கட்டும்
வாழ்வது நான் அல்ல-என்னில்
இயேசுவே வாழ்கின்றார் நிதரிசனமாகட்டும்

அப்ப, திராட்சை இரச உருவகத்தில்
விழிப்புணர்வை வழங்கிய குரு
தானமான பெருநிதியை வெறுமனே உண்டு குடித்து
தவமின்றித் தவறவிட்ட சீடத்துவ உறவு



விழிப்புணர்வை மீண்டும் அருளிட-ஜெஸ்தமெனியில்
***தனித்திருந்து, விழித்திருந்து- பசித்திருந்து செபித்தார்***
தூய மனம் பூரண சரணாகதியடைந்திட-இரண்டற்று
***ஒன்றாய் அவர் தனித்திருந்தார்***

***பூரண விழிப்புணர்வோடு விழித்திருந்தார்***
அறிவு மனம் கழித்து-***இறை மொழிக்காய்***
***இதயம் பசித்திருக்க விழித்திருந்தார்***

ஒளியின் பரிமாறல் நிகழ்ந்தும்-தவமின்றி வரமில்லை
தூங்கியவர்கள் பெற்றுக் கொள்ளும் நிலையில் இல்லை
ஓட்டைப் பாத்திரம் ஜீவதண்ணீரைக் கொள்ளவில்லை
பாதையில் விழுந்த விதை பலனின்றிப் போனது

தூங்கியது போதும் விழித்திடுங்கள்
ஊனுடலோ வலுவற்றது, ஆவியோ ஆர்வமுள்ளது
விழிப்புணர்வோடு ஜெபியுங்கள்

செய் பிழை அறிந்து-மெய்யாய் மனம் நொந்து
மனம் திரும்பிடும் மனிதனுக்குப் ***பாவ மன்னிப்பு***
கர்மவினையழிக்கும் இரகசியத் திறவுகோல்
எந்த மதத்திலும் இல்லாத கருணையின் செங்கோல்
நூற்காத தவத்திற்கு தயாநிதியின் பெருவரமானது




அறிவுக் கனியுண்டு ஆணவத்தால் வீழ்ந்த ஆதாம்
தூய மனதை இழந்தான் -கழுமரத்தில்
பரிபூரண சரணாதியில் ஆணவம் கழித்து-இயேசு
கிறிஸ்துவான புதுப்பிறப்பு ( Christo Genesis )

பரி பூரண சரணாகதியில்-சிலுவையில் இயேசு யாத்த
உன்னத வேள்வி, நான் எனும் ஆணவமே ஆகுதி
பரிபூரண விழிப்புணர்வில் நிலைப்பு
சின்மயமான அக மாற்றமே உயிர்ப்பு

இயேசு வாழ்வுக்கனியான அகமாற்றம்
இறைவார்த்தை-இறைரூபமான தோற்றம்
மரணம் கழித்திட-மாட்சிமிக்க அமரத்துவம்
ஞானி குழந்தையாகும் புனிதத்துவம்




அழிவற்ற ஆன்மா நாம்-மரணம் என்பது மாயை
ஆணவம் கழித்திட பரிபூரணசரணாகதியே
அமரத்துவத்திற்கான திறவுகோல்

உலகெங்கும் போய் அறிவியுங்கள்
அன்பினால் நற்செய்தி எங்கும் பரவட்டும்
வாழ்வு அமரத்துவமானது
அழியும் படைப்பல்ல-இறை படைப்பு

இறைவனே முழுமை-இருப்பே பரப்பிரம்மம்
***நிலை வாழ்வின் வாழும் கலையே இயேசு***

அகமாற்றத்தின் வழியே நிலைவாழ்வு
ஆணவ மனம் அழிந்த விழிப்புணர்வே அமரத்துவம்
விழிப்புணர்வின்றி வாழ்தலே துயரம்

மரித்து, உயிர்த்து மறுபடியும் உலகிற்கு வந்தவரே
மரணம் மாயை என்பதை எண்பித்தார்
வீட்டை அடைந்த புதிய ஆதாமும் அவரே
***உயிர், மெய் கடந்த இருப்பாய், ஆன்மாவாய்-இயேசு***

நானும் தந்தையும் ஒன்றென்ற அத்வைதவம்
அஹம் பிரமஸ்மி என ஆர்ப்பரிக்கும் ஓங்கார நாதம்




சடங்கு, பலி, நம்பிக்கை கடந்த
சத்திய தரிசனத்திற்கான அகப்புரட்சியே-மதம்
வாழ்ந்தறியும் உண்மையை வாழ்வாக்கிட
மோட்சத்தின் திறவுகோல் வரமானது

கிருஷ்ணா, புத்தர், தீர்த்தங்கரர்-இயேசு கிறிஸ்து
எல்லாம் தூய உள்ளுணர்வின் பரிமாணங்களே
***இருப்பெனும் பெருங்கடலில் எழுந்த***
***விழிப்புணர்வின் பேரலைகளே***

என் தந்தையின் இல்லத்தில் எல்லோருக்கும்
உறைவிடங்கள் உண்டு-அகமகிழுங்கள்
***மதங்கடந்த ஆன்மீகவாதி இயேசு***

இருப்பவர் நாமே தந்தையின் திருநாமம்
சக்தியும், சடமும் கலந்தும், கடந்ததுமான பேருணர்வு
***இருப்பாய் இருப்பது தன்னுணர்வே***
***ஒரே விழிப்புணர்வே-அகமகிழுங்கள்***

ஆணவமே அலகையின் வேதம்
"இதோ உம் அடிமை நான்" என்பதோ
அன்னை மரியாளின் கீதம்-என் சித்தமன்று,
உம் சித்தம் நிறைவேறுக" என்பதோ
வார்த்தையான ஓங்கார நாதம்




நம் அனைவருக்கும் இறைவன் ஒருவரே
அவரே நம் தந்தை-அகமகிழுங்கள்
ஆணவம் கழித்தால் அழிவற்ற ஆன்மா நாம்

சீமோனின் விழிப்புணர்வைப் போற்றி -பேதுரு
எனப் பெயர் சூட்டிய குருவே "போ அப்பாலே சாத்தானே" என
சீமோனின் தூக்க நிலையைக் கடிந்தார்
இறை வார்த்தையையும்-அலகையின் வார்த்தையையும்
அறிந்தவரே-மெய்யான குரு

மோட்சத்தின் திறவுகோல் அதிகாரமல்ல
விழிப்புணர்வே மோட்சத்தின் திறவுகோல்,
நம்மை நாம் அறியும் மெய்யறிவு, ஞானம், நிர்வாணம்
ஆணவம் கழித்திட தோன்றும், ஆனந்த விழிப்புணர்வு

உலகின் ஒளி நீங்கள்
உங்கள் ஒளி ஒளிர்வதாக-உலகின் உப்பு நீங்கள்
மானுட உள்ளங்களை வளப்படுத்துங்கள்

ஆன்மீகத்திற்கு வாரிசு இல்லை-மோட்சம்
எந்த மதத்தின் ஏகபோக சொத்துமில்லை
எளிய மனதிற்கே இறையரசு,
தூய மனத்திற்கே சத்திய தரிசனம்,

கட உள்- கடவுள்ளாகிட
எல்லோருக்கும் இறை தந்த திறவுகோல்




ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணமே
சென்றே புகும்கதி இல்லை நும்சித்தத்து
நின்றே நிலைபெற நீர் நினைந்து உய்மினே
திருமூலர்-2104

"உனக்கு நீயே ஒளியாகிப் போ"

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
(லோக சமஸ்தா சுகினா பவந்து)
*Pax Ravichandra-20-10-2023*

# மண் விடுதலை

---



வாக்களிக்கப்பட்ட வளநாடோ-பன்முறை அடிமையானது
வரலாறு-பாலும், தேனும் ஓடும் மண்ணில்
கண்ணீரும், குருதியும் பாய்ந்திட-இன்றும் தேசம்
ரோமையருக்கு அடிமையானது மனதில் காயமானது



யூதேயாவில் பிறந்த சதுசேய செல்வந்தனின் மகன்
யூதாஸ் ஸ்காரியோத், திருமுழுக்கு யோவானின் சீடன்
தீவரவாதமோ குருதியில் கலந்த சிவப்பு
நெஞ்சிலே ரோமையர் குருதியை சிந்திடக் கொதிப்பு

மனந்திரும்பி இஸ்ராயேல் மக்களினம்
இறைவனிடம் சரணடைய-மெஸாயாவின் வருகை,
புதுப்புரட்சி பூத்திட தேசம் விடுதலையடைந்திட
இறைவாக்கு நிறைவேறும் மாறாத நம்பிக்கை

யூதேயாத் தீவிரவாதி யூதாஸ் ஸ்கரியோத்
கல்வியும், சிந்தனையும் நிறைந்த இளைஞன்
நாட்டுப் புறத்து கலிலேய மீனவ, லேவியரிலும்-சீடன்
நான் உயர்ந்தவன் இறுமாப்புமிக்க தேசப்பற்றாளன்

தீவிரவாதியின் மொழியிலே ஆயுதப் புரட்சி
வார்த்தை ஜாலத்திலோ தேசத்தின் எழுச்சி
குருவின் போதனையிலோ அன்பின் புத்துணர்ச்சி
ஆணவ மனதிலே ஏமாந்த காழ்ப்புணர்ச்சி

பரிமள தைலத்தால் பாதபூஜை செய்த -பூவையின்
அன்பைப் புரியாத வியாபாரி-முந்நூறு வெள்ளிக்கு விற்று
ஏழையர்க்கு கொடுத்திடலாம் -செம்புரட்சி பேசிய
பொதுவுடைமைச் சிந்தனையாளனோ கபடவேடதாரி

பொருளாளனாய் குருவின் நியமனம்
நாணயமற்றவன், திருடன்-சீடரின் தத்துவம்
தம்மிடையே யார் பெரியவன் ஓயாத போட்டியில்
தன்னிலை தாழ்ந்த சீடத்துவம்

***போதனையோ வாய்மை***
***வாழும் கலையோ அன்பின் மேன்மை இயேசுவின்***
***இருமை கடந்த இதயமோ தூய்மை***

இறையரசோ விண்ணரசு, என் அரசோ மண்ணரசு
ஆயுதப் போராட்டமின்றி சுதந்திரம் மலராது
அன்புப் புரட்சியாளனாய் இயேசுவைக் கண்டு
தீவிரவாதி யூதாஸ் மனதிலே ஏமாந்த நினைப்பு



ஓசான்னா பாடி ஆரவாரமான நல்வரவேற்பு
ஆலயக் குடமுழுக்காய் முடிந்த புரட்சிக் கூத்து
புரட்சி வெடிக்காத அங்கலாய்ப்பு
தீவிரவாத நெஞ்சிலே தீராத மனக்கசப்பு

திருச்சங்க சந்திப்பே மறுமலர்ச்சி
புரட்சி மனதில் நம்பிக்கையின் புத்தெழுச்சி
“இயேசு மெஸாயா”- நிரூபணமானால்
ரோமையருக்கு எதிராய் வெடிக்கும் பெரும் புரட்சி
அந்நியர் ஆட்சி கவிழ, மலரும் எம்மவர் ஆட்சி

பாதம் கழுவியபோது-தொடுகையால் சீடனை அறிந்த குரு
பாடுகளை முன்னறிவித்தும்-சூசகமாய் காட்டிக் கொடுப்பை
மொழிந்தும்-சீடனின் மனமோ தீவிரவாதத்தில் நிலைப்பு
***செய்யவேண்டியதை விரைவாகச் செய்து முடி*** குருவின் பணிப்பு

முத்தமிட்ட காட்டிக் கொடுப்போ
புதுப் புரட்சிக்கான முதல் எழுச்சி
கல்வாரிக் காட்சியோ-கனவிலும் எண்ணாத
மதவாதத்தின் சதிப்புரட்சி



முப்பது வெள்ளி யூதாஸ் ஸ்கரியோத்தின் விலை
புரட்சியாளனோ குருத்துரோகியான இழி நிலை
சிலுவை மரணமோ திருச்சங்கத்தின் கொடுநிலை
மாறாத குற்றவுணர்ச்சியோ மனதில் ஓயாத அலை

நினைத்தவை பகல் கனவாக-அறைந்து
உயர்ந்த சிலுவையில் குரு- கசப்பான நிகழ்வாக
நெகிழ்ந்து குற்றம் உணர்ந்து வருந்திய மனம்
திருச்சங்கத்திடம் பணத்தை வீசி எறிந்து
தன்னை மாய்த்த தீவிரவாதக்குணம்

***முந்நூறு வெள்ளியோ விலைமகள் காணிக்கை***
***காட்டிக் கொடுப்பிற்கு***
***முப்பது வெள்ளியோ சீடனின் இலஞ்சக் கோரிக்கை***

மெய்விற்றும் பொய் விற்காத விலைமகள்
கண்ணீரால் திருப்பாதங்களை நீராட்டி
பூங்குழலால் துடைத்து-முத்தப் பூக்களைச் சாத்தி
நறுமண தைலத்தால் எண்ணெய்காப்பு வைத்த திருமகள்

பூஜைக்கு வந்த மலரோ பூச்சியன் விரும்பும் மலரானது
பாவ மன்னிப்பை இரஞ்சிய பாவைக்கு அமைதி வரமானது
விசும்பிலும் உயர்ந்த விலைமகள் அன்பிற்கு விலை ஏது?
சீடத்துவ அன்போ முப்பது வெள்ளிக்கு விலைபோனது

முந்நூறு வெள்ளி நறுமண தைலத்திற்கு
விலை மதிப்பட்ட வியாபாரி
முப்பது வெள்ளி கையூட்டாக-குருவை
முத்தமிட்டு காட்டிக் கொடுத்த துரோகி

தன்னைத் தான் விற்றதை அறியாது
அடிமையின் விலையே தன் விலை புரியாத வியாபாரி
உடலை விற்றாலும் ஆன்மாவை விற்காத விபச்சாரி
மனுமகன் அன்பில் நிலைத்த ஆனந்த சுந்தரி

தன்னை வெறுமையாக்கி அடிமையின் கோலம் பூண்டு
மனுவுருவான இறைமகன்-காட்டிக் கொடுக்கப்பட்டு
வாதைகளால் நொருக்கப்பட்டு-சிலுவையில்
மறுரூபமான சிவமோ இரட்சகன்

முத்தமிட்டு காட்டிக் கொடுத்த சீடத்துவமோ விபச்சாரம்
முப்பது வெள்ளிக்கு விலைபோனதோ குருத்துரோகம்
ஆன்மாவை விற்ற தீவிரவாதி
மரணத்தை ஆதாயமாக்கிய ஏமாளி

நறுமண தைலமும்-நொருங்கிய இதயமும்
விலைமகள் பூஜையில் பாதகாணிக்கையானது
முப்பது வெள்ளியும், குருத்துரோகமும்-சீடன்
உயிரை மாய்த்திட மனச்சாட்சியின் தீர்ப்பானது

பாதபூஜை செய்த பாவிக்கு அமைதி வரமானது
காட்டிக் கொடுத்த சீடனுக்கு நிம்மதி எட்டாத நிலவானது
பழிக்கும் மனச்சான்றை ஒழிக்கத் தற்கொலை சாபமானது
நலிந்த நம்பிக்கை மரணத்தை கடக்கத் தடையானது

***மரண சாகரத்தில் மூழ்கிய சீடன்***
***மரணத்தை நடந்து கடந்த குருவோ அமரன்***

வெள்ளிப் பணத்தை மடியில் வைத்தான்-
முறுவலோடு முத்தத்தை கன்னத்தில் வைத்தான்
ராபி வாழ்க வாழ்த்தை வார்த்தையில் வைத்தே-நிலவு
பழுத்த இரவில் குருவைக் காட்டிக் கொடுத்தான்



கண்ணீரை விழியில் வைத்தாள்-
கணிகை எனும் கடுந்துயரை நெஞ்சில் வைத்தாள்
நொருங்கிய இதயத்தை பாதகாணிக்கையாக்கி-முத்தமிட்டு
நறுமண தைலத்தால் பாத பூஜை செய்தாள்

கள்வனும், சீடனுமான இரட்டை வேடம்-யூதாஸ்
உள்ளத்திலோ மாறாத தீவிரவாதம்
குருவோடு வாழ்ந்தும் குருத்துரோகம் திமிர்வாதம்
அருளில்லா வாழ்வோ ஊதாரியான பாவம்

கந்தில் பிணைத்த களிறும் அடங்கும்
மந்திரம் கேட்டு நாகமும் ஒடுங்கும்
வார்த்தை விழுந்தும் முளைக்காத பாலை வனம்
குருவின் தோட்டத்தில் காய்காத அத்தி மரம்





தந்தியறுந்த யாழில் பண்ணில்லை
நிறையிழந்த பெண்மைக்கு அழகில்லை
குறை அறிந்து மனம் திரும்பிய பெண்மை
குறைகுடமோ நிறைகுடமான மனுமகன் புதுமை

சாரமிழந்த உப்பு மிதிபடச் சாலையில் கிடந்தது
சாக்கடையில் விழுந்த நல்வித்து தூக்கிட்டு மடிந்தது
பூக்கடையிலும் பிணவாடை-காட்டிக் கொடுப்பு
மறுதலிப்பு சீடத்துவ வாழ்விலும் சீரழிவு

நல்லாயன் மந்தையிலும் கறுப்பு ஆடு
வளர்த்த கடா மார்பில் பாய்ந்த கதையோ கேடு
ஆடோ படுகுழியில், ஆயனோ சிலுவையில்
விழிப்புணர்வோடு மரணம் கடந்தால் அமரத்துவம்
சிலுவையிலும் கருணையே குரு தத்துவம்

விலைமகளும் குலமகளாகப் பரிமளத்தின் நறுமணம்
சீடனும் குருத்துரோகியாகத் துர்மரணம்
நல்விதை தூவிய வயலிலோ களைகள்
சீடன் மனதிலோ துயர நிலைகள்

***காட்டத்தி மரத்திலோ சவம்  சிலுவை மரத்திலோ சீவம்***

நாடகமான வாழ்வில் சீடனும் போலி
வேடதாரிக்கு ஆன்மீகம் வேண்டாத வேள்வி
குருவை ஆகுதியாக்கிய அசுரவேள்வி
விழித்த மனச்சாட்சிக்கு சீடன் பலியான நீதி



கிடையும், நிலைக்குத்துமான-இரு
மரத்துண்டங்கள் இணைந்த தோற்றமாய்ச் சிலுவை
தூக்கமும், விழிப்புணர்வுமாய் மனித வாழ்க்கை

கிடையான தூக்க நிலையில் மனமோ துக்கத்தில் நிலைப்பு
நிலைக்குத்தான விழிப்புணர்வில் ஆனந்தத்தில் திளைப்பு
தன் சிலுவையைச் சுமந்து தன்னைப் பின் செல்ல
விழிப்புணர்வில் நிலைத்திட-இயேசுவின் அழைப்பு



துன்பத்தில் இறைவனை அழைக்கும் மனித மனம்
இன்பத்தில் நன்றிப் பெருக்கோடு
இறை துதிபாடும் ஞானியர் குணம்




துன்பம் இன்பம் எனும் இரு துருவங்களுக்கிடையே
மனித வாழ்க்கை-தூக்கம் கடந்து
விழிப்புணர்வில் நிலைத்தால் கிட்டும்
மோட்சமே நிலை வாழ்க்கை

திருப்பாதம் அபிஷேகித்த கண்ணீரோ திருமஞ்சனநீர்
குலமகளாய் மாறிய மனதிலோ ஆனந்தக்கண்ணீர்
திருப்பாதம் தழுவிய தைலமோ பரிமளம்
மனம் மாறிய விலைமகளின் மனதிலோ நறுமணம்

உயிர் காத்த உன்தன் அன்போ என் நெஞ்சில் வாசம்
தைலத்தில் கலந்த என் அன்போ திருப்பாதத்தில் வாசம்
பூச்சூடும் என் குழலிலும் பூவாய் உன்தன் வாசம்
விலைமகளை குலமகளாக்கிய உன் கருணையோ என் சுவாசம்

நான் சூடிய முத்தங்களினால்-சத்தியமே
என் இதழ்களில் உண்மையின் வாசம்
புதுவாழ்வு பெற்ற இதயத்திலோ உன் வாசம்
பக்தையின் மாறாத பக்திப் பரவசம்

உயர்வு தாழ்வு சாதியம் கடந்த உள்ளுணர்வு நிலை
துரியத்தில் பிரம்மத்தை அறிந்து, பிராமணனாய்ப்
பிறந்திட குரு தேர்ந்த சீடன்-மண்ணரசைக் காண
குருவை பகடையாக்கி சூதாடிய தரித்திரன்



குருத்துரோகியை மனச்சாட்சி பழிக்க
வெள்ளிப் பணமோ ஆசை மனதை பரிகாசிக்க
கசை, வசை. கல்வாரிப் பயணமும் சிலுவையும்
கண்ட சீடன் நெஞ்சிலே பெருந்துயரம்

வழியும், உண்மையும், வாழ்வுமான ஒளி அஸ்தமிக்க
கதிரும், நிலவுமின்றி வாழ்வு காரிருளில் மூழ்க
ஏமாந்த மனம், நிராசையோடு பணத்தை வீசி எறிந்தது
எல்லாம் முடிந்ததென்று தூக்கிட்டு மடிந்தது

நீயில்லா உலகில் நிம்மதி ஏது?-
நீதானே என் வாழ்வின் பெருநிதி-பாவமன்னிப்பை
இரஞ்சிப் பாதை மாறிய ஊதாரி



செவ்விழிகளிலோ மாரியின் ஈரம்
செப்பிடும் மொழிகளிலோ ஆறாத்துயரம்
மனதினிலே இமயப் பாரம்
கழுத்தை சுற்றிய கயிறோ காலனின் ஆரம்

உள்ளம் குமுறி உருகி அழுது மன்னிப்பை இரஞ்சிய மனம்
உற்ற துயர் பனியாய் கரைந்திட காற்றாய் மாறிய மனம்
கால்கள் நழுவிட கயிறு கழுத்தை நெரித்திட, துடித்து துள்ளிய
உடலோ சவம்-தந்தையிடம், தன் ஆவியை ஒப்படைத்த மகனோ சிவம்

வாஞ்சையோடு வாரியணைக்க -தந்தையோ
விரித்த கரங்களோடு கழுமரத்தில்,
வார்த்தையோடு வாழ்வைப் பிணக்க-மகனோ
மூன்று முழக்கயிறோடு காட்டத்தி மரத்தில்

விலைமகளோ குறைகுடம்
திருப்பாதம் பூஜித்து-அமைதி வரமாக
குலமகளான நிறைகுடம்

கணிகையின் கண்ணீர் பூக்களோ நறுமணம்
குணவதியின் முத்தங்களிளோ பூவாசம்
நற்பரிசான புதுவாழ்வோ பரிமளம்
நங்கைக்கு அன்புப் பரிசான சீடத்துவம்

சீடனின் முத்தத்திலோ குருத்துரோகம்
ஆசை மனதிலோ வெள்ளிப் பணம்
துர்மரணத்திலோ தூய மனமாற்றம்

குருவும், சீடருமாய் கோர்த்த வண்ணப் பூச்சரம்
காட்டிக்கொடுப்பு, மறுதலிப்பு, கைவிட்டோடுதல்
கசை, வசை வாதை என சீரழிந்து, நூலறுந்திட
மண்ணில் விழுந்த வாசப் பூச்சரம்

அன்பிற்கு கரைகளில்லை
எல்லையில்லாத இறைகருணைக்கு
வானமும் எல்லையில்லை

எங்கும் இருப்பது சச்சித் ஆனந்தமே
எலலோருக்குள்ளும் இருப்பது அதுவே
ஆணவம் கழித்தால் நாமே அது

எல்லாப் புகழும் இறைவனுக்கே
இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
Pax Ravichandra-20-10-2023

# யூதாஸ் ஸ்கரியோத்-

-----------------------------------------------------------






முத்தமிட்டுக் "காட்டிக் கொடுத்தவனை"
"தோழா எதற்காக வந்தாய் ?"-தோழமையோடு
காட்டிக் கொடுப்பை புறந்தள்ளிய மாகருணை
முன்சென்று மரணத்தை வரவேற்க
"யாரைத் தேடுகிறீர்கள்" என்றே-தம்மை
மனமுவந்து கையளித்த இறையடிமை

காட்டிக் கொடுத்த நெஞ்சிலோ-"குருவைக் கொல்வார்"
என்ற கொடிய எண்ணம் கடுகளவும் இல்லை,
குருவைக் கைவிட்டோடி- தம்மைக் காத்திட்ட
சீடர் மனங்களிலோ மரணபயத்தின் தொல்லை

ஆணவத்தால் பிளவுபட்ட ஆளுமை
ஆசைக்கு அடிமையான ஏழ்மை
அடிமையின் விலையை இலஞ்சமாய்ப் பெற்று
அன்புக்குருவை காட்டிக் கொடுத்த சிறுமை

பண ஆசையினால் திருச்சங்கத்தின் சதிக்கு
பலிக்கடாவான சீடன்-மறைநூல் வாக்கு நிறைவேற
குருத்துரோகி, கபடனாய் அவன் வேடம்

கருணையின் உச்சத்தில்-யூதாஸை
கடிந்தும் ஒரு வார்த்தை மொழியாத குரு
மறைநூல் வாக்கு நிறைவேறட்டும் என்றே
மரணம் மட்டும் கீழ்படிந்த திரு



நள்ளிரவு தாண்டி நாழிகைகள் சில கடந்த நேரம்,
வெண்ணிலவின் ஒளி வெள்ளத்தில் காட்டத்தி நீராட
கழுத்திலே சுருக்குக் கயிறு
கருத்த முகத்திலே கண்ணீப் பூக்காடு

விழித்த மனச்சாட்சி பழிக்க
வாழ்வா?- சாவா? எனப்போராடும்
யூதாஸ் ஸ்கரியோத்து

வெறித்த பார்வை சூனியத்தில் நிலைக்க
ஈர விழிகளில்-நெஞ்சின் தீராத சோகம் வடியத் தவிக்க
பிரியாத உறவாய்-இடித்துரைக்கும் மனச்சாட்சி
சிலுவையிலோ எல்லாம் முடிந்ததென்ற இறைமாட்சி

முப்பது வெள்ளி -மெய்பொருளுக்கு விலை நிர்ணயித்த மூடன்-
மாசற்ற செம்மறியை முத்தமிட்டுக் காட்டிக்கொடுத்த சீடன்
நெஞ்சுருகி, கண்ணீர் பெருகக் கதறினான்
"ஆண்டவரே பாவி, என்னை மன்னியும்."



செவ்விழிகளில் நீர் வடிய. செப்பிடும் மொழி
அழுகையாய்ப் பிறழ, செய் பிழை மனதை
முள்ளாய் உறுத்த, செய் நன்றி கொன்ற நெஞ்சம்
குருவைக் கெஞ்சிக் கேட்டதோ தஞ்சம்

மனுவுருவாகி இறைவார்த்தை, மானிடர் நம்மிடையே
குடி வந்தது, வாழும் கலையின் புதிய வேதமாய்
மாறாத அன்பின் இனிய நாதமாய்
ஓங்காரத்தின் குரல் நாடெங்கும் கேட்டது

வார்த்தை கேட்டு-அழியும் நீரும்,
அழியாத திராட்சை மதுவானது-பொங்கிய
காற்றும், கடலும் அமைதியானது
மடிந்த இலாசருக்கும் புதுவாழ்வு கிடைத்தது

ஏரோதியர்கள் வியந்து போற்றிட, ஞானமாய் ஒலித்த
இறை மந்திரம், கடல் மேல் நடந்து-மலை மேல் உருமாறி
கடவுள் நம் தந்தை-நீங்கள் என் சகோதரர்  ஏழை, பாவி,
விபச்சாரிகளுக்கு கனிவோடு நம்பிக்கையளித்த திருமந்திரம்



முடவர் நடக்க, குருடர் பார்க்க, செவிடர் கேட்க, மரித்தோர்
உயிர்த்தெழ, வழியும், உண்மையும், வாழ்வுமான ஓங்காரம்
பரிசேயர், சதுசேயர் திருச்சட்ட வல்லுனர் வியக்க,
ஞானமாய் அதிர்ந்த பிரணவம்

விலைமகளையும் , பாவிகளையும் மீனவர்களையும்,
லேவியனையும் சீடராக்கிய ஆன்மீகக் கிளர்ச்சி-
கள்வர் குகையான ஆலயத்திலோ
வரலாறு காணாத புதுப் புரட்சி-

உலகின் ஒளி நீங்கள், உப்பு நீங்கள் என மொழிந்து
அன்பே, இன, மதங்கடந்த ஆன்மீகம்-இன்புற்று
நல்ல சமாரித்தனை நம் அயலவனாக்கிய மாட்சி

திருச்சங்கம் இவரை அறிந்தால்-எதிர்பார்த்த
"மெசியா" இவர்தான் சான்று பகிரும்
புதுப் புரட்சி மலரும்-நம்தேசம் விடுதலை பெறும்



இவரை "கையளிக்கும் நிகழ்வு"
"காட்டிக் கொடுப்பாய்" மாறிட, கண்டவுடன்
முத்தமிட்டு வாழ்த்திய அன்பின் வெளிப்பாடு
பெருந்துன்பத்தில் முடிந்தது.

கன்னத்தில் அறைந்து, தாடியைப் பிய்த்து
காறி உமிழ்ந்து-நேசரை நிந்தித்த காட்சி
பொய்மையின் ஆட்சி-என்னை
ஏமாளியாக்கிய திருச்சங்கத்தின் சூழ்ச்சி

கள்வர் குகையான ஆலயம், களவாணி வர்க்கமோ-
தலைமைக்குருவாய், திருச்சங்கமாய் மாறிய அவலம்
ஆன்மீக அகக்கிளர்ச்சியாளரைக் கொல்ல
அரங்கேற்றிய சதியில்-ஆசையால் சிக்கிய மூடன்
அருந்தவத்தை குலைக்க தவம் கலைத்த சீடன்

கசை அடிகளோ பாதி உயிரைக் கொல்ல,
கல்வாரிப் பயணமோ மீதி உயிரை மெல்ல,
யூதருக்கு அஞ்சி பதவி காத்த கோழை
சத்திய தரிசனம் காணாத ஆளுநனோ ஏழை

வார்த்தை கேட்டு திருச்சங்கம் மனம் மாறும், கண்ட கனவு
கலைந்து பொய்யானது காற்றும், கடலும், நீரும் -அசுத்த
ஆவிகளும் கேட்டுப் பணிந்த வார்த்தையை
ஆணவம் நிராகரித்த அவலம் ஏமாற்றமானது

இறைமகனோ இவன்? எள்ளி நகையாடி
காறித்துப்பி, கசையால் வதைத்து
சிலுவை மரணத்திற்கு தீர்ப்பளித்த கொடூரம்.
நெஞ்சில் ஆறாக்காயமானது

நீரிலலா என் வாழ்வில் பொருளில்லை, நெஞ்சிலோ
நிம்மதியில்லை-சீடருக்கோ என் மீது சிறிதும்
நம்பிக்கையில்லை, பாவி என்னை மன்னியும்
பணிந்து உள்ளம் உருகிடத் தொழுத மனம்

திருச்சங்கத்தின் தீர்ப்பு- கழுமரத்திலோ வாழ்வுக்கனியாகி
மானுட மீட்பானது, அமரத்துவ வாழ்வோ வீடுபேறானது
மனச்சாட்சியின் தீர்ப்பு காட்டு அத்தி மரத்திலே
விலக்கப்பட்ட அறிவுக்கனியானது "அவன் வீடு பாழானது"
சபிக்கப்பட்ட வேதவாக்கானது

கால்கள் மெல்ல நழுவிட-சுருக்கு
கழுத்தை மலையரவம்போல் நெரித்து இறுக்கிட
துள்ளிய உடல் துவண்டிட-இறைமகனே
நின்னடி சரணம் இன்புற்று இயம்பிய மனம்

தொங்கிய உடல் மெல்ல ஆடி அசைந்திட,
கலைந்துபோனது சீடனின் கலையாத கனவு.
எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது.
இருளில் ஒளி பிரகாசித்தது-நாமோ இருளை யாசித்தோம்.

மெசியாவின் வருகைக்காய் காத்திருக்கும் உலகில்
"வழியும் உண்மையும் வாழ்வுமான பாதையை"
வாழ்ந்து புரிந்தவர்களே-
மதம் கடந்த உண்மையை அறிந்தார்

குரு இல்லாத வாழ்வு "பொருள்" இழந்திட
பெருநிதி இழந்த ஊதாரியாய் வாடி,
செய்பிழை அறிந்து மனம் நொந்து வருந்தி,
தூக்கிட்டு தன்னை மாய்த்த அன்புச் சீடன்

முப்பது வெள்ளிக்கு விலைபோன சீடத்துவம்
முடிவில் குருத்துரோகம் பெரும் பாவம்
மரத்தடியில் பெற்ற ஞானம்

ஆசைத் தேவதையை பூசித்துக் கழித்த
"நிர்மாலியமாய்" முப்பது வெள்ளி-அன்புக்குருவை
நிந்தை செய்த பாவத்திற்குப் பரிகாரமாய்த்
தன்னுயிரை மாய்த்து யாத்த அசுர வேள்வி

மதவாதம் எடுத்த பலியோ கழுமரத்தில்
மனச்சாட்சி கொடுத்த பலியோ
காட்டத்தி மரத்தில்

## புதிய பார்வை

உம்மை நான் கண்ட பார்வைக் கோணத்தில்
உம்மை அறியாத சீடர், உமக்கும் எனக்கும்
இருந்த அன்புறவை புரியாத மானுடர்

நமக்கோ உம் விருப்பப்படி நீர்
"***கையளிக்கப்பட்ட இரவு***"
***இவர்களுக்கோ உம்மை நான்***
"***காட்டிக்கொடுத்த நிகழ்வு***"

உம் மீட்புப் பயணத்தில் முத்தமிட்டுக் காட்டிக்கொடுத்த
துரோகி, தந்தை எனக்களித்த துன்பப் பாத்திரம்
இறைசித்தத்தின் இரகசியம், இன்றும் புரியாத அதிசயம்.



***அழிவுறும் உடல் நின்று***
***அழியாத சுயத்தின் வெளிப்பாட்டுக்கு***
***என் பங்களிப்பு-துரோகமானது.***

மானுட மீட்பு, உம் மரணத்தால்
என் பங்களிப்போடு நிறைவேறிட,
***"உம் வார்த்தையே என் பணி"***
***உலகறியாத இரகசியமானது.***



மானுடம் தம் தெய்வீக்தை மறந்த அவலம்
"அஹம் பிரம்மம் அஸ்மி""நானும் தந்தையும் ஒன்றே"
அறியப்படாத அத்வைதம்

யூதாஸின் பாத்திரம்-இறைசித்தத்தில் உன்னதமானது
நன்மை தீமை கடந்தவர்க்கு புரியும் உண்மையது



***மானிட உடலுள் கட்டுண்ட தெய்வீகம்-மறுபடியும்***
***ஒளிரும் ஒளியின் மேகத்தில் கலந்திட***
(Luminous Cloud of Light)
உம் சித்தப்படி என் பங்களிப்பானது

உம் சித்தம் அறியாத சீடருக்கோ நானோ குருத்துரோகி
அன்பின் வேதத்தை கொன்று, தேவ கானத்தைக கலைத்த
திருச்சங்கமோ விபச்சாரகுலச் சந்ததி

உள்ளுணர்வால் அறியப்படவேண்டிய "உண்மை"
கண்முன் இருந்தும்-காணாத ஆணவம்
எளிய மனத்தவருக்கே சத்திய தரிசனம்

வாழ்வளிக்கும் வார்த்தைக்கு மரண தண்டனையோ அநீதி
இறை நிந்தைக்கு மரணமே தண்டனை திருச்சட்ட நீதி
அன்பே இறைவன் வாழ்ந்தறியும் நியதி

தந்தையே என்றும் உம் சித்தம் என் சித்தம்
என்றே பணிந்து இன்புற்ற தூய மனம்-
சிலுவை மரணத்தை பன்முறை முன்னறிவித்தும்
புரியாத புதிராய்ச் சீடர் மனம்

எது நடந்ததோ அது நன்றாகவே நடந்தது
எது நடக்கின்றதோ,
அதுவும் நன்றாகவே நடக்கிறது

உம்மிடம் சரணடைந்தே, அன்பே சிவம்
அனுபூதியல் புரிந்தேன்
உவகையோடு உடல் பிரிந்தே
உம் திருவடி சேர்ந்தேன்






மரணம் உடலுக்கே-ஆன்மாவிற்கோ
மகத்தான விடுதலை
இறப்பின் வழியே இறப்பறியாப் புதுவாழ்வு
அமரத்துவமே நிலை வாழ்வு

கொலை, தற்கொலை என-மரத்தில் குருவும், சீடனும்
மடிந்த துயர நிகழ்வு, அன்பை நீதி அறியாது-ஊதாரிக்கே
தந்தையின் அன்பு குபேரநிதி, அண்ணனுக்கோ
தந்தையின் அன்பிலும் பெரிது வரட்டு நீதி

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra-20-10-2023*

நிர்மாலியம்:-ஒரு தேவதையை
பூசித்து கழித்த பொருள்

# முத்தமும் முப்பது வெள்ளியும்

காதலியைத் தேடும் அன்புக் காதலனாய் இறைவன்
காதலாகி இறைவனும், மனிதனும்
ஒன்றிணைந்தால், உலகே ஏதேன் தோப்பாகும்
வாழ்வோ சிவசக்தி நடனமாகும்



மண்ணில் தன்னை மறைத்து-மண்ணால்
மனிதனைப் படைத்த இறைவன்
ஆணவம் மடிந்த மனதில்
சத்திய தரிசனமாகும் புனிதன்

இறைமகன் இவர் என வானவர் சொல்ல
இறைமகன் என்றே தீய ஆவிகளும் அஞ்சி ஓடிட
வார்த்தை கேட்டு நீரும் இரசமானது,
புயலும், பொங்கிய கடலும் அமைதியானது

வார்தை கேட்டு இலாசரும்-புதுவாழ்விற்கு
எழுந்து வந்தான்-ஜாயிர் மகளும்,
விதவை மகனும்-பெற்றவர் மகிழ
வார்த்தையால் உயிர் பெற்று எழுந்தார்

மலையில் நின்று தள்ளிக் கொல்ல நினைத்தவர்
மலைத்திட, நடுவே நடந்து சென்றார்
வரி செலுத்துவது முறையா? வஞ்சகர் வியந்திட
வார்த்தை ஜாலம், ஞானச்சித்தன் புரிந்தார்

தாவீதின் மகனாய் மக்கள் வாழ்த்தி வரவேற்றிட
மகிழ்ந்த மனம்-கள்வர் குகையான ஆலயத்தை
கசையால் குடமுழுக்கு செய்த புரட்சியாளன்
எழுச்சி கண்டு பூரித்த தீவிரவாதக் குணம்

மனுமகனைத் திருச்சங்கம் மெஸயாவாய் ஏற்றால்
ஆன்மீகமும், அரசியலும் கலந்த புதுப்புரட்சி வெடிக்கும்
மண்ணின் விடுதலையும், மகத்தான இறையரசும்
ஒன்றாய் மலரும் -கனவு கண்ட சீடன்
முப்பது வெள்ளியை கையூட்டாய் வாங்கி
தன் கனவை நினைவாக்க முயன்ற மூடன்

கருவான் குளத்தில் நிலவும், விண்மீன்களும் பூத்தாட
ஊர் அடங்கி உயிர்கள் உறங்கிட-ஒருயிர் மட்டும்
தனித்திருந்து, விழித்திருந்து, மரண பயம் வாட்ட
தந்தையிடம் ஜெபித்திருந்த நேரமது

இரைதேடி ஊரும் மலையரவம் என
பந்தங்களோடும், படைக்கலங்களோடும் படையணி
முந்தி நடந்து வாழ்த்தி முத்தமிட்ட சீடனின்
காட்டிக் கொடுப்போ வஞ்சப் புகழ்ச்சியணி

மனுமகன், திருச்சங்க சந்திப்பிற்கு
என் காட்டிக் கொடுப்பு-திருச்சங்கத்தின்
நம்பிக்கையை வெல்ல-முப்பது வெள்ளிக்கு
குருத்துரோகியாய் என் நடிப்பு

புரட்சி வெடித்து, புதுமை மலர-வார்த்தை நெம்புகோலால்
கல்மனங்களைப் புரட்டி நம்பிக்கையை வென்றெடுக்க
வாழ்த்தி வழங்கிய முத்தம், என் தலைவனுக்கான அன்புப் பரிசு,
களம் காண நான் கொட்டிய வெற்றி முரசு

முப்பது வெள்ளி கையூட்டும் அல்ல
அடிமையின் பெறுமதியும் அல்ல-அன்பு மனம்
ஆடிய நாடகத்தில் வஞ்சகனாய் என் பாத்திரம்
திருச்சங்கம் நம்பிட பணமே தாரக மந்திரம்.

மக்கள் புரட்சி வெடிக்கும் என்று-அஞ்சிய திருச்சங்கம்
இரவில் மனுமகனை கைது செய்தார்,
விசாரணையும், தண்டனையும் இருளில் நடந்தேற
சத்தியத்தை மறுதலித்து மரணத்தை முடிவு செய்தார்

அரியும், நரிகளும் சந்தித்தபோது-ஆணவ நரிகளால்
அம்மான் மகனைப் புரிந்து கொள்ள முடியவில்லை
உணர்வுத்தளத்தின் சிகரத்தில் அன்பு மனம்
இருண்ட அதலபாதாளத்தில் ஆணவ குணம்

சத்தியம் மௌனமொழி பேசிடப் -புரிதலின்றித்
தீர்ப்பிட்ட ஆணவத் திருச்சங்கம்-
என் மனதிலோ தீராத ஆதங்கம்
சத்தியமோ தூய மனதிற்கே தரிசனம்

கட்டிய மனக்கோட்டை மணற்கோட்டையாய் சரிந்திட
வாழும் உண்மை கண்முன் இருந்தும் காணாத குருடர்
இறைவார்த்தை பிரபஞ்ச கானமாய் ஒலித்தும்
சாஸ்திரிய சங்கீதம் புரியாத மதவாத மூடர்

அகக்குருடர் காணக் கண்களில்லை
புரிதல் இல்லா இதயங்களோ கல்லான நிலை
ஆணவத்தில் நிலைத்த மதவாத மனம்
அன்பு மனதைப் புண்படுத்திய அகோரதினம்

சட்டமாய், சாரமற்ற உப்பான மதம்
மிருகபலிகளால் நாறி -வணிகத்தால் ஓம்பி
கள்வர் குகையான ஆலயம்
இருளும், ஒளியும் சந்திக்க இயலாத அவலம்

கதிரை மறைக்கும் கார்மேகமும் சிறு கணம், கரைந்து
மழையாய் வீழ்ந்தபின், நிலையாய் இருப்பதோ நித்தியம்
காட்டிக் கொடுக்க முடியாத சத்தியம் இயேசு
உண்மையோ அகதரிசனம்

மரித்த இலாசரை எழுப்பிய வார்த்தை, மறைநூல் வல்லுனர்,
ஏரோதியார் வாயடக்கிய ஞானம் மௌனித்ததென்ன?
கடல் மேல் நடந்து புயலையும் பொங்கிய கடலையும்
அடக்கிய வல்லமை -கழுமரத்தில் சிறைப்பட்டதென்ன?

நினைத்தவை கனவாக-நிஜமோ வெந்த புண்ணில் வேல் பாய்ந்த
கதையாக, நீர் சிந்தி விழிகள் நொந்து சிவக்க, நினைவேந்தி
நெஞ்சம் உடைந்து நொருங்கமொழியிழந்து வாய் குளறிப் புலம்ப-
***வழியும், உண்மையும், வாழ்வும் நானே*** கலையும் கனவானதே
கிணறு வெட்டப் பூதம் கிளம்பிய கதையானதே

தன்னை இறைவனுக்கு நிகராக்கி
இறை நிந்தை புரிந்தார் குற்றமானது
மரணமே மாறாத நீதி
திருச்சட்டமே உரைகல்லான நியதி

விடியலில் கல்வாரிப் பயணம் -ஊருக்கு
கண்காட்சியான அவலம், என் நம்பிக்கையின் அஸ்தமனம்
இதயத்திலோ ஈட்டி பாய்ந்த துயரம்

கசையும்,வசையும், வாதையும் வருத்திட
கழுமரம் சமந்து குருவின் கல்வாரி யாத்திரை
கண்ட நல்லோர் விழிகளிலோ கண்ணீர்த் திரை
மதவாத மனங்களுக்கோ கேலிக்கை, வேடிக்கை

கண்ட காட்சி நெஞ்சைக் கொல்ல
மனச்சாட்சி விழித்து என்னைப் பழிக்க
கையூட்டாய் வாங்கிய வெள்ளி எள்ளி நகையாட
அம்பு தைத்த வெண்புறாவாய் என் நிலைமை

வாதைகளால் சிதைந்து சிவந்த மனிதனாய்
எரியும் முட்செடியாய் -சிலுவை மரத்தில் அவர் தரிசனம்
சச்சிதானந்த சாந்த சொரூபியாய் அவர் சந்நிதானம்.
அன்பினால் ஒளிரும் அவதாரம்-வதைப்போருக்கும்
மன்னிப்பை வழங்கிய கருணையின் ரூபம்

விழிப்புணர்வும், அன்பும் அவர் போதனை
***அகக்கனல் வளர்த்தல்*** ஐயன் வேள்வி
மதியத்தில் அவரோ சிலுவையில்
அந்தியில் நானோ காட்டு அத்தி மரத்தில்



விற்றுப் பிழைத்திட விழிப்புணர்வான குரு
வெற்றுப் பண்டமுமல்ல-அடிமையுமல்ல
வழியும் உண்மையும் வாழ்வுமானவர் மறைந்திட
வாழ்வே மாயம் சாவே நிஜம் என்றானது

கற்றறிந்திட விழிப்புணர்வு பாடமல்ல
தர்க்கம் உண்மைக்குப் பாதையுமல்ல
வார்த்தைகளால் எச்சிலாக்க முடியாத சத்தியம்
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்

என் நெஞ்சத்து நிம்மதி பறிபோனது
என் பொன்வானத்து கதிரவன் அஸ்தமனமானது
வாழ்வே இருளாக செல்லும் வழி படுகுழியாக
எங்கே நிம்மதி எனத் தவித்த என் மனம்

நீரில்லா என் வாழ்வோ கதிரில்லா வானம்
நீரோடை தேடி ஏமாந்த கலைமானாய் என் உள்ளம்
நினைத்தவை கனவாக, நிஜமோ எரிநரகாக
ஏமாந்து விம்மிய இதயம்

கல் மனம் கனிந்து கண்ணீர் பெருக
பொல்லார் இழைத்த பெரும் கொடுமை
நெஞ்சில் முள்ளாக-எங்கே நிம்மதி?
கதறிய மனதிற்கு மரணமே வழியானது

விழியிழந்த குருடன், மொழியிழந்த ஊமை
புகலிடம் இல்லாத அகதி-பெருநிதி
குருவை இழந்த நிலையில் நானோ பரதேசி
தலைமைக் குருவோ சுகவாசி

இழந்தபின் புரிந்தது இழப்பின் பெருமை
பார்வையிழந்தபின் தெரிந்தது விழியின் அருமை
கேள்வி இழந்தபின் தெரிந்தது செவியின் அருமை
குருவை இழந்தபின் தெரிந்தது என்தன் சிறுமை

விழிகளிலோ கங்கை பாய, நெஞ்சிலோ காங்கை எரிய
அழுதும் தீராத சோகம்- என்னை மன்னிக்க
குரு இல்லாத என் உலகோ எரிநரகம்
வருத்தும் மனச்சாட்சியில் மலராய் தீயும் என் மனம்

ஒளி விளக்கை மலைமேல் ஏற்றத் துணிந்தது சீடத்துவ உரிமை
பன்றிகளுக்கு முன்னால் முத்தை எறிந்தது என் அறியாமை
வழியும், உண்மையும், வாழ்வுமானவர் இல்லாத உலகில் வாழ்வேது
வழியேது- உண்மையேது, என்னே என் பரிதாப நிலைமை?

தந்தையே இவர்களை மன்னியும் , தாம் செய்வது
இன்னதென்று இவர் அறியார் கருணை மழை
கழுமரத்திலும் பொழிந்திட மாரி மழை என் விழிகளில்
உதிர்ந்திட, மனம் திரும்பிய ஊதாரியாய் நிலை மாறியது

குற்றவுணர்வு என்னைக் கொல்ல
என் தன்னுணர்வு விழித்திட -இன்றே
நானும் அவரோடு பரகதியில் வாழ்ந்திட
எனக்கு நானே வழங்கி தீர்ப்பு-தூக்கு

மன்னவனாக்கிட மண்ணவன் கண்ட கனவு மண்ணானது-
விண்ணவனோடு சேர்ந்து வாழ மரணமே வழியானது
மரணமே மறுவாழ்வின் வாயிலாக-என்றும்
மனுமகனோடு வாழ்தல் மோட்சம் என்றானது



விழிகளிலே ஈரம், மொழிகளிலே துயரம்
இதயத்திலோ பெரும் பாரம்
சுருக்கு கயிறோ கழுத்திற்கு மணியாரம்
மனமழிந்தால் சச்சிதானந்தம்

அழுகை மொழி மாறவில்லை-கண்ணீர் சுவை
குன்றவில்லை, பெருமூச்சின் தணல் ஆறவில்லை
குருதி நிறம் மாறவில்லை

வல்லமைதான் மாட்சி மாறவில்லை
உலகை தீமை ஆட்கொண்ட அவல நிலை
என்னை அடிபணிந்தால்-உலகே உன் அடிமை
அலகையின் மொழி வாழும் நிலை?

கசை வதைத்து வசை துவைத்து கழுமரம் சுமந்து
ஆணிகளால் சிறைப்பட்ட குருவின் அலங்கோலம்
காட்டிக் கொடுத்த என் மனதிலோ குருதிக்கோலம்
கயிற்றில் தொங்கிட மனம் கழித்த அமைதிக்கோலம்

கழுமரத்தின் காட்சி இதயத்தை நொருக்க
விழி பொழியும் நீரில் மனப்பாரம் கரைய
அலை கடலாய்ப் பொங்கிய மனம்
அமைதி காண மரணமே வழியான நிஜம்

திசைமாறிய ஊதாரி மனம் மாறி வீடு திரும்பிட
குருவின் கழுமரமே கைகாட்டியானது
தந்தையில்லாத வீடு சுடுகாடாய் மாறிட
என் வாழ்வு இருண்டு போனது

என் அழுகுரல் அன்பருக்கு கேட்டிட, அவர் கருணை
என்னைத் தொட்டது, எங்கள் ஆத்மார்த்த உரையாடல்
அறிவு கடந்தது-இதயம் சார்ந்தது-உலகு அறியாதது.
உண்மையின் பயணம் புரிதலைச் சார்ந்தது

கால்கள் நழுவிட கயிறு இறுகிட-துள்ளிய உடல்
துவண்டு ஓய்ந்தது -குருவோடு சீடன் வாழ
மரணமே வழி என்றானது




மனந்திரும்பிய ஊதாரி மைந்தனாய்
மகிழ்வோடு தந்தை இல்லம் நோக்கி ஓடுகின்றேன்-
விழிப்புணர்வே பாதை-விழித்தவன்
கழித்த உடலோ மரத்தில் தொங்கிய கதை

கண்டுதான் நெஞ்சம் கதிர் கண்ட பூவாய் மலர-வார்த்தையை
உண்டுதான் இதயம் தேனுண்ட மதுகாரியாய் மயங்க
ஆண்டு மூன்று குருவோடு வாழ்ந்த வாழ்வோ இன்பவனம்
காட்டத்தி மரத்தில் முடியும் வாழ்வோ சோகவனம்

மரமேறித் தவமிருந்த சக்கேயுவை-மனமுவந்து
இறங்கி வா- அழைத்து நட்பு கொண்டாடிய நல்லுறவு
தரை நின்ற துரோகியை ஏறி வா என்றே-
விழிப்புணர்வை ஈந்து, தம்மிடம் அழைத்த ஞான குரு

செய்பிழை எண்ணி எண்ணி, அனலில் விழுந்த புழுவாய்
மனம் துடிக்க, வைகறை காணா இருளில் மனம் தவிக்க
குரு இல்லா வாழ்வோ கதிர் இல்லாத உலகானது
என் வாழ்வு நூலறுந்த பட்டமானது

அழுதும் தீராத சோகம்-குருத்துரோகம்
மன்னிக்கமுடியாத மாபாவம்
மரண தண்டனையே நீதியான வேதம்
என் வாழ்வோ சுருதி தப்பிய ராகம்

சக்கேயு மரம் ஏறி மனுமகனைக் கண்டார்
சீடன் நான் மரமேறி மீட்பரைக் கண்டேன்-
இருவர் உள்ளம் உற்ற இன்பம்
இருவரைத் தவிர யாரறிவார்?

அன்பின் மறுபக்கம்- வெறுப்பு
என் இதயத்திலோ மனமாற்றத்தின் களிப்பு
சரணாகதியின் உயிர்ப்பு

விழிகளிலோ மாரிமழை, நெஞ்சினிலோ ஒப்பாரியின
ஓயாத அலை, மனதிற்குள் குமுறும் சோக எரிமலை
மனமழிந்தால் சச்சித்தானந்த நிலை

**குருத்**துரோகி யூ***தாஸ் ஸ்கரியோத்-சீடர்*** தீர்ப்பிட்டாலும்,
கருணாகரன் தீர்பிடமாட்டார், தீர்ப்பிடாதீர்கள்
நீங்களும் தீர்பிற்குள்ளாகமாட்டிர்கள்
மன்னியுங்கள் நீங்கள் மன்னிக்கப்படுவீர்கள்.
அன்பான குருவின் திருமந்திரம்

தீர்ப்பிடாதீர்கள் என்ற அன்பின் திருவடிவத்திற்கே
மரணத் தீர்ப்பிட்ட மதவாத உலகைப் புறந்தள்ளி
பிரியாத உறவோடு என்றும் பிரியாமல் வாழ
பிரியத்தோடு போகும் பிரிய சீடன் நான்

குருவோ விழிப்புணர்வின் உச்சம், குருவோடு வாழ்தலே
சீடனுக்கு மோட்சம், குரு, சீடன் அன்பை அறிந்தவருக்கு
உயர் நட்பை புரிந்தவருக்கு
இது தற்கொலையல்ல-***வடக்கிருத்தல்***



கடலைத்தேடி ஓடிய நதி கலந்தே கடலானது
என் தேடலில் என் ஆணவம் அழிந்திட
என் இறுதி முத்தம் ஒருவிதத்தில் காட்டிக்கொடுப்பே-
என்அன்பை ஆசானுக்கு நான் வெளிப்படுத்திட
ஆழ்ந்த குருபக்தியின் பகிர்வே! மலர்வே!
காட்டிக்கொடுத்தவன், கைகூலி, குருத்துரோகி
என்னைத் தவிர உலகில் எவருமில்லை

பேசப்பட்டேன் உம் சீடரில் ஒருவரென, சீடரால் தூற்றப்பட்டேன
துரோகியென-என்றும் உம்மோடு வாழ ஆசைப்பட்டேன்,
உம்மால் ஆட்கொள்ளப்பட தூக்கிட்டுக் கொண்டேன்
என்னை மீட்டருளும் என் பெருமானே, உம் அரசில்
துரோகி என்னையும் நினைந்தருளும் இறைமகனே

கண்ட பேரழகை கண்களும் உண்டு சுவைக்க
உண்ட சுவை நெஞ்சில் ***மன்னாவாய்*** இனிக்க
கேட்ட மொழியில் உண்மை ஒலிக்க
உம்மோடு வாழ்ந்த காலம் வசந்தம் என்றானது

என் முதலும் கடைசியுமான முத்தம், ஈந்த என் பிரியவிடையானது
மற்றவர்க்கோ காட்டிக்கொடுப்பானது.

ஆடிய உடல் விட்டு ஆவியும் நீங்கிட, பாடிய சோகக் குயிலும்
துணையைத் தேடிப்போயிட. சாடிடும் சீடர் மொழிகள்
காற்றினில் கரைந்திட, வாடிடும் என் மனதை
இறைமகனே அறிவார், வருத்திடும் இதயச் சுமையை
இறக்கிட தாய் மடி தருவார் என் குருநாதர்

இதயம்தான் ஏங்கித் துடிக்க உதயம்தான் மறைந்ததென்று
சீடர் வருந்திட கிளர்ச்சிக் குரு ஒழிந்தான்
திருச்சங்கம் மகிழ்ந்திட, புது உதயம்தான் வந்தது-
புது ஞாயிறை உலகு கண்டது



அறிவுக் கனியால் ஆணவம் பிறந்தது
வாழ்வுக் கனியோ விழிப்புணர்வை ஈந்தது
மனம் கழிந்திட ஆனந்தம் நிரந்தரமானது

அணுக்கத் தொண்டரும் தம்பி உறவு முறையான
ஆனந்த தேரர், புத்த பெருமான் அருகிலிருந்தும்
ஞானம் கிட்டாத கனியானது-எட்டாத தொலைவானது
பெருமான் புத்தரோடு இருந்த சீடர் பலருக்கு
ஞானம் திகட்டாத அமுதானது, கிட்டிய வரமானது

பெருமான் பரிநிர்வாணமடைந்திட பிரிவுத் துயர்
தாங்காமல் அழுத அண்ணல், தாங்கொண்ணாத் துயரில்
ஞானம் பெற்ற தொண்டர், பெருமானின் பிரிவுத் துயரே
ஞானம் பெற வழியானது
ஆனந்த தேரருக்கு ஆனந்தம் பெரும்பேறானது



குருவோடு வாழ்ந்தும்-விழிப்புணர்வு கிட்டாத சீடன்
குருத்துரோகியான மூடன், குருவின் மரணத்தில்
சீடனின் மனமாற்றம், மனம் நொந்து மன்னிப்பை இரஞ்சிட
-பச்சாத்தாபம் பாவமன்னிப்பின் திறவுகோல் ஆனது,
மனம் மாறிய பாவிக்கு-ஞானம்
காட்டத்தி மரத்தடியில் கிட்டிய அமுதானது

இறைலீலையாய் தன் பணி முடித்தவர்,
இறையவன் திருவடி சேர-உயிர் துறந்தார்
ஆன்மாவாய் உருமாறி குருவோடு இன்புற்றார்

குருத் துரோகி என்னை அன்பு செய்ய -தெய்வமே
உம்மைத் தவிர உலகில் யாருமில்லை-என்னைத் தர
உம்மிடம் வருகின்றேன்-என்னையும் ஏற்று
அமைதி அளிப்பாய் என் தேவனே

அன்பு நீதியை அறியாது, நீர் கூறிய உண்மை பொய்க்காது
அன்புருவான பெருமானே, உம்மைச் சரணடைந்தேன்



எல்லாம் இன்பம் என்றானது-என்றும்
என் பேரின்பம் நீரே என்றானது.
**எல்லாம் அவன் செயல் என அறிந்தவருக்கு**
**ஒன்றும் துன்பமில்லை-என்றும் இன்பமயமே**

புது உதயம் வந்ததென்று பூத்தாடும் மலர்கள்போல்
பூபாளம் பாடும் புள்ளினம்போல்
உயிர்த்த மனுமகனைக் கண்டு-ஆனந்தக்
கூத்தாடும் சீடர் உள்ளம்

ஆவிபோன உடல் காற்றிலாடிட
பாவி என்றே உலகம் வசை பாடிட
எங்கே நிம்மதி என்று அமைதி தேடிய மனம்
அடைந்த நிம்மதி நீயன்றி, யாரறிவார்?

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்**
Pax Ravichandra-20-10-2023

# சீமோன் பேதுரு-கண்ணீர்

கைகளைக் கட்டிப் பெருங்கள்வனைப்போல், காரிருளில்,
இயேசுவைக் கைது செய்தார், ஊரார் அறியாமல
படை வீரர் காவலாய்ச் சூழ்ந்து வர-குருவை
கோயில் காவலர் தம்மோடு கூட்டிச் சென்றார்



கணை தைத்த கலைமான்போல் நெஞ்சம் வருந்த
தாயைப் பிரிந்த கன்றாய் மனம் வாட-சீடர்
கண்களில் கசியும் ஈரம் தீராத சோகம் சொல்ல
குரு இல்லாத வாழ்வு கதிர் இல்லாத வானானது

திரள் நரியிடையே அகப்பட்ட கலைமான்போல் நெஞ்சம் வாட-
கரிவாய்ப் பட்ட கரும்புபோல் மனம் நோக-
கத்தாத செம்மறிபோல் படையினர் நடுவே அவர் தோற்றம்
சோக அலைமோதும் கடலாய் சீடர் நெஞ்சத்தின் உருமாற்றம்

தொலை தூரத்தில் யோவானும், பேதுருவும்
யாருமறியாமல் கூட்டத்தைப் பின் தொடர
யாதுமானவனோ-பலியாகும் செம்மறிபோல்
முள்ளான பாதையில் முன் நடந்தார்

முன்னாள் தலைமைக்குரு அன்னாவின் வீட்டில்
கண் துடைப்பான அவசர விசாரணை-உண்மை
கருணை, திருச்சங்கத்தில் மரத்துப்போன சுரணை

நம் இனம் முழுவதும் அழிவதை விட-நம்
இனத்திற்காய் ஒருவன் இறத்தல் சாலச்சிறந்தது
தத்துவம் மொழிந்தவனோ-அன்னாவின்
மருமகன் கயபா-இந்நாள் தலைக்குரு

கூட்டத்தோடு கூட்டமாய் உள்ளே நுழைந்த பேதுரு
உள்முற்றத்தில் குளிர் காய்ந்தவர்களுடன் கூடிக்
குளிர்காய-இதயத்திலோ அச்சத்தின் காயாத ஈரம்
மனதில் திக்குத் தெரியாத காட்டில் அலையும் பாவம்

“இவனும் அவனோடு இருந்தவன்தான்”
கண்ட பணிப்பெண் கருத்தாய் உரைத்திட-சொல்வது
என்னவென்று புரியவில்லை அம்மணி மறுதலிக்க,
கொக்கரக்கோ!, சிறகடித்துக் கூவிய சேவல்

சேவல் தஞ்சிறகாம் கையால் வயிற்றிலடித்து
சீடனை எச்சரித்தது, நன்றோ?
குருவை மறுதலிப்பது முறையோ?
நன்றி கடுகளவும் நெஞ்சில் இல்லையோ?



உறுத்தும் மனதோடு வெளிமுற்றம் சென்றவர்
மனதிலே அச்சம்-கண்ட பணிப்பெண்
கருத்தாய் மீண்டும் காட்டிக் கொடுத்திட
கோழை மனதில் உச்சம் தொட்ட உயிரச்சம்

இல்லை, நான் அவனில்லை மறுதலிக்க-நீ
கலிலேயன் எனக் காட்டும் உன் பேச்சு
கூட்டம் குற்றம் சாட்ட மறுத்து, ஆணையிட்டு
அவனை அறியேன் எனச் சபித்த ஏச்சுப் பேச்சு

அறியேன் அந்த மனிதனை-அவன் ஒழிக
அச்சத்தில் ஆணையிட்டு மறுக்கச், சபிக்க,
மறுதலிக்க-உச்சத்தில் கொக்கரக்கோ!
இரண்டாம் முறை கூவிய சேவல்

இயேசு திரும்பிப் பார்த்திட-கணப்பொழுது
கலந்த விழிகள், கலக்கமுடன் நின்ற விழிகளை
கருணையுடன் நோக்கி -கலங்காதே,
திருவிழிகள் மொழிந்த ஆறுதல் மொழிகள்



சேவல் இருமுறை கூவுமுன்-சீமோனே
என்னை நீ மும்முறை மறுதலிப்பாய் நிஜமாக
எச்சசரித்தும் தவறிவிட்டாய், வருத்தத்துடன்
கேவி கூவிச் சான்று பகிர்ந்த சேவல்

செஞ்சேவல் கையாம் சிறகை வயிற்றிலடித்து
கதறிப் பதறி இரண்டாம் முறை கூவியது
அஞ்சியவருக்கு சதா மரணம்-அஞ்சாத
நெஞ்சத்தவருக்கு ஒரு முறைதான் மரணம்

கூவிய சேவலின் குரலில் சோகம்
சாமாவும், சஹானாவும் கலந்த கழிவிரக்கம்
விடியல் கண்டு பூபாளம் பாடும் சேவல்-குருவின்
அஸ்தமனம் கண்டு கேவிட முகாரியின் ஆலாபனம்

இதுவரை கூவாத இராகம்-இன்று
கூவிய சேவல் மனதில் ஆறாத் துயரம்

எச்சரிக்க சேவலும் கூவி எழுப்பிய மனச்சாட்சி
உயிரச்சத்தில் செவிடன் காதல் ஊதிய சங்கானது
சேவலும் கேவி ஊமையானது, சீடனும் அழுது
சோகத்தை கண்ணீரில் கரைக்கும் துயரானது




“வார்த்தையை” அறியேன் மறுதலித்தவனோ சீடன்
வார்த்தையை அறிந்து பணிந்த பறவையோ
விடியல் கண்டு கூவும் சேவல்-விழித்திடு சீமோன்
என்றோ முதல் முறை கூவி எச்சரித்த அகவல்

உள்ளம் விழிக்க கூவியும்
விடியாத சீடன் மனதிலோ இருளாய்த் திகில்
சேவல் இருமுறை கூவிட நிறைவேறிய
வார்த்தைகளோ ஞாலத்தை ஒளிர்விக்கும் கதிர்



யாரிடம் செல்வோம் இறைவா-வாழ்வு தரும்
வார்த்தையெல்லாம் உம்மிடமே, அன்று போற்றிய நா-
இன்று தூற்றி மௌனிக்க, அன்புக் குருவோ கண் மறைந்த ஒளி
காரிருளான வாழ்வில் செல்ல இனி ஏது வழி?

அஞ்சி மறுதலிக்கும் அன்புச் சீடன் ஆறாத் துயர் கண்டு
நெஞ்சு பொறுக்காமல் அடிவயிற்றில் சிறகால் அடித்து
கெஞ்சிக் கூவிய சேவலின் மொழியில் மறுதலிக்காதே சீடா
மாண்பிழக்காதே மனிதா என்ற பெருந்துயர்

அச்சத்தில் மலரும் முள்ளானது-
உச்சத்தில் மனமும் கோழையானது
கணம் சந்தித்த குருவின் கண்களில் கருணை
நெஞ்சைத் தேற்றிட சஞ்சீவினியான தொடுகை

ஆடை தொட்டு குணமான நங்கை
பாடையில் போனவனை எழுப்பிய வார்த்தை
கொதித்து குழம்பிய காற்றும் கடலும் கண்ட அமைதி
பரிவோடு விழிகள் தொட நெஞ்சில் நிலவிய சாந்தி

விடியல் கண்டு கூவிக் களிக்கும் சேவல்
விழிக்க கூவியும் விழிக்காத சீடன் மனது
அழுது புலம்பியும் ஆறாத மனது
சேவல் கூவும்போதெல்லாம் கேவும் மனது

உயிரச்சம் அறிவைக் கொல்ல-உயிரில்
உயிராய்க் கலந்த உறவை அறியேன் என மனம் கொல்ல-
தக்கன பிழைத்தலான வாழ்வில்
தப்பிப் பிழைத்திட மறுதலிப்பே உபாயமானது

பூப்போன்ற உறவு அச்சத்தில் முள்ளானது
பூபாளமே தாளம் தப்பி அபசுரமானது
சந்தர்பவாதம், சகாயமான வேதமானது



மறுதலித்த வார்த்தையால் உண்மையழிய
உருவழிய, மானம் சிதைய, கொண்ட நட்பழிய
மணமிழந்த சீடத்துவத்தில் பொய்மையின் துர்க்கந்தம்
குருதத்துவத்திலோ கருணையின் மாறாத சுகந்தம

ஆழமற்ற கடலில் மீன் பிடித்த ஏழையை
சீடனாய் அழைத்த ஞானம்-கரியை
வைரமாய் மாற்றிய குருவின் இரசவாதம்
வைரமே கரியாய் மாறிய பரிதாபம்

விழிப்பின்றித் தூங்கிய சீடன்
விழிப்புணர்வைத் தவறவிட்டு -குருவை
அறியேன் என மறுதலித்துச்
சபித்து, ஆணையிட்ட அண்ணகன்



அழுது புலம்பியும் ஆறாது என் காயம்
தொழுது புலம்பியும் தீராது என் துயரம்
ஓயாத அலைகளாய் மனதிலே சோகம்
வாழ்நாள் முழுதும் வருத்தும் என் பாவம்



எரி தணலில் விழுந்த பூந்தளிர்போல்
இதயம் நோக, அன்பு மனம் வேக
அச்சத்தில் மறுதலித்த கோழை-சோகத்தின்
உச்சத்தில் அழுதார், புலம்பினார்

குலைந்த முகமும், சிவந்த விழிகளும் கலைந்த முடியும்,
ஆறாத் துயர் சொல்ல, ஆணையிட்டு மறுத்துச் சபித்த மனதில்
அழுதும் கரையாத பாவம்-தொழுது புலம்பியும் தீராத சோகம்

தனித்திருத்து, விழித்திருந்து, கண்ணீர்த் தவமிருந்து
குருவின் அன்பிற்காய்ப் பசித்திருந்து
உள்ளம் குமுற, உயிர் சோர ஆறாத் துயரோடு
செய் பிழை எண்ணிப் புலம்பிய இதயம்

தொழுது வாழ்த்திய மொழிகள் அழுது புலம்பிட-ஓயாது
அழுத முகத்தில் கண்ணீர் கறையாய் நிலைத்திட
அழுதும் கரையாத இமயச்சோகத்தை இறக்கிட
சுமை தாங்கியின்றிச் சோர்ந்த அன்பு மனம்



எண்ணிப் புலம்பிட இதயத்தில் கோடித் துன்பம்
காயமான மனதில் கனக்கும் துயரோ இமயப் பாரம்
வண்ணமும், வாசமுமிழந்த மலராய் வாடும் மனது
தேன்மலரைத் தேடும் தும்பியாய் அலையும் பொழுது

தன்னை அறிந்திட-ஆணவம் மறைந்திட
ஐயன் பெருமை மனதை நிறைத்திட
ஆட்கொண்டு என்னை அழைத்த குருவே
ஆட்கொள்ளாயோ பாவி என்னைப் புலம்பினார்

கடல் மீது நடக்கத் தூண்டிய ஆணவம்
கடலில் மூழ்கிடக் கரைந்தது
காதறுத்து காட்டிய வீரம்-மறுதலித்துச்
சபித்திட, நாணி ஒடுங்கியது



நீயில்லா உலகில் வாழ்வேது-பெருமானே
நிலை வாழ்வு தரும் வார்த்தை நீதானே
சாரமற்ற உப்பான என் வாழ்வு-நெய்யின்றி
புகையும் தீபம்போல் என் தாழ்வு



எண்ணெய்யில்லை, சுடரில்லை-இன்றோ
எல்லாமானவனே உன்னோடு நானில்லை
என்ஆண்டவரே என் தேவனே!
என் பாவம் பொறுத்தருளும்

கல்லான பாறை-உதிர்ந்து மணலானது
கற்பூர தீபம் அணைந்து கரும்புகையானது
ஆழமற்ற கடலில் வலை வீசிய மீனவன்-குருவை
அச்சத்தில் மறுதலித்தவனோ முதன்மைச் சீடன்

செய் பிழைஅறிந்தவர் மனம் குமுறி அழுதார்
எழுபது தடவை ஏழு முறை மன்னிப்பாய் என்ற கருணை
என்னை மன்னிப்பார் நம்பிக்கை துளிர்க்க
புண்பட்ட நெஞ்சிலே அமைதி, பண்பட்ட மனதிலே நிம்மதி

மேடம், இடபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி,
துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் என
பன்னிரு இராசிகள்



பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரன்
நான்கு வர்ணங்கள் உள்ளுணர்வு நிலைகளாக,
சத்துவம் (அமைதி), ரஜஸ் (செயல் நிலை),
தமஸ்( மந்த நிலை)-எனும் முக்குணங்களாக
ஆட்டுவித்தால் ஆடும் பொம்மையாய் மனித வாழ்க்கை

***பிரம்மத்தை அறிந்தவன் பிராமணனாக***
***தன்னை ஆண்டு எளியோரைக் காப்பவன்***
***க்ஷத்திரியனாக-தன்னுள்***
***மெய்செல்வத்தைக் கண்டவன் வைசியனாக***
***பணி வாழ்வே என் வாழ்வு சூத்திரனாக***
***உயர்வு தாழ்வில்லா குல ஒழுக்கம்***



பன்னிரு இராசி மனிதர்களாய்
யூத கோத்திரங்களும்-இயேசுவின்
பன்னிரு சீடர்களும்



கடுகளவுக் கல்வியும், கையளவு கடலோடி அனுபவமும்
வறுமைக் கடல் நீந்திக் கரைசேரப் போராடும் வாழ்வும்
ஏழை மீனவன் சீமோனின் அழைப்பாக
துன்ப துயரங்களும், வறுமையும் நிறைந்த வாழ்வில்
கண்ட பேரமைதி இயேசு பெருமான் சந்நிதியாக
***வா என் பின்னே-உன்னை மனிதர்களைப் பிடிப்பவன்***
ஆக்குவேன் குருவின் பேரழைப்பானது

அமைதி கண்ட மனம் -ஆனந்தமாய்
அனந்தன் அழைப்பை ஏற்றது
இருமை கடந்த குழந்தை மனம் உறவையும்,
உடமையையும் துறந்து இருப்பாய் இருப்பவரை
பெருநிதியாய் கண்டு பின் சென்றது

கூழாங்கல்லும் வைரமாக குருவின் இரஸவாதம்
பேதுருவாய் குரு நாமம் சூட்டிடப் பெருமிதம்.
-யாரிடம் செல்வோம்-இறைவா
வாழ்வு தரும் வார்த்தை எல்லாம் உம்மிடமே
இறைமகன் நீரே
“விழிப்புணர்வு” வரமாக சத்தியம் மொழிந்த சீடன்

சத்தியனிடம் மாறா நேசம் கொண்ட சிநேகன்
கடல் மீது நடக்க ஆவல் கொண்ட விசுவாசி
பொங்கும் கடலும், புயலும் கண்டு
அஞ்சி மூழ்கிய-அற்ப விசுவாசி



அன்போடு கடிந்து, கரம்பிடித்து காத்த குரு,
பாதம் கழுவிப் பணி வாழ்வைப் புகட்ட-
முன் மறுத்து பின் பணிந்தவரை
அன்பால் அணைத்த திரு



மரணம் மட்டும் உம்மைப் பின் செல்வேன்
வீறாப்பாய் மொழிந்த சீடன்-மால்குஸின்
காதறுத்து குரு பக்தியைக் காட்டிய வீரன்
இருமுறை சேவல் கூவுமுன்-குருவை
மும்முறை மறுதலித்த கோழை

இருமை நிறைந்த வாழ்வில்
பிராமண, க்ஷத்திரிய, வைசியக் கலப்பான
சூத்திரத் தொண்டன்

விழிப்புணர்வும், அவவிசுவாசமும், மறுதலிப்பும்,
மன்னிப்பின் கதறலும், மானுட இயல்பை காட்டிட-
உணர்வுகளின் இன்னிசையாய் ஏற்றமும் இறக்கமுமான
எளிய மனிதனாய் சீமோன் பேதுருவின் வாழ்வு

தலை கீழான சிலுவை மரணத்தை தனக்காய்த் தெரிந்த
பேதுரு, குருவிற்கு ஈடில்லை என்றே
குரு பக்தியை காட்டிய அன்புறவு

பாவி புனிதனான அகமாற்றம்
குருவோ இறைமகனான மெய்த்தோற்றம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
***யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
*Pax Ravichandra-20-10-2023*

# விசாரணை





மறையவர் வேள்வி பலியாய் நாறிட
வேதியர் சீலம் சாரமற்ற உப்பாய் மாறிட
பலி, சடங்கு, சட்டமாய் மதம்
கள்வர் குகையாய் ஆலயம்

மோசே வகுத்த நெறி சட்டமாய் மாறிட
தலைமைக் குரு பதவியும் விலைபோனது
ஏழைகளின் வாழ்வு எரிநரகாய் மாறிட-எக்காளம்,
கொம்பின் முழக்கம் வெற்றுச் சத்தமானது

ஓதும் வேதம் பொருளிழக்க, உண்மையின் நாதம் சுரமிழக்க
பலிகளால் நாறிச் சிவந்த பலிபீடம்-மதவாத
உள்ளமோ இறைவனிடமிருந்து வெகுதூரம்

ஆலயத்தில் அதிரடிப் புரட்சி செய்த கிளர்ச்சிக் குருவுக்கு
மரண தண்டனையே திருச்சட்ட நீதி
மதியிழந்து, மாண்பிழந்து- மதவாதக்
கொடுஞ்சிலந்திகள் பின்னிய சதியோ அநீதி

ஓதித் தொழுதும் உள்ளத்தில் நீங்காத இருள்
நீதி, நேர்மை, உண்மை நிழலின்றி வாடி மனஞ்சோர
கனம், தனம் தேடும் மதவாதக் கணம்,
கணம்தோறும் நிறம்மாறும் பச்சோந்தியினம்

வல்ல எம் போதனைக்கெதிராய், எளிய தச்சன் மகன் போதனை
புதுப்புரட்சியானதென்ன? திருச்சட்டத்தை மீறிப்
புதுச்சட்டம் மொழிவதென்ன? ஏழை, எளியோர், பாவிகள்
தாவீதின் மகன்-மெஸாயா எனப் போற்றவதும் என்ன?

ஆண்டாண்டு காலம் அனுபவித்து வரும் சுகபோகம் நிலைக்காது
தலைமைக் குரு பதவி உறவுகளுக்கிடையே தழைக்காது
அந்தஸ்து, புகழ், பணம், மரியாதை பறிபோகும், அகக்கிளர்சியாளன்
பேச்சை மக்கள் கேட்டால், புரட்சி வெடிக்கும், நம் சாயம் வெளுக்கும்

முளையிலே கிள்ளாவிடில் முற்றிய மரத்தை வெட்ட முடியாது
எம் ஆட்சி நிலைத்து அதிகாரம் தழைக்க கொலையே வழி
கொன்றால் ஒழியப் புரட்சி அடங்காது-பலியாகும்
செம்மறியை-இரவில் கைது செய்வதே சாலச் சிறந்த விதி

பகலிலோ, மக்கள் பொங்கியெழுவார்-எம்
வாழ்வு, வெட்டுண்ட வாழைபோல் சாயும்
இறைநீதி மறந்த மதவாத நரிக்கூட்டம்
இரகசியமாய் கூடி தீட்டிய சதித் திட்டம்

சீறிச் சினந்து நச்சரவம்போல் படம் எடுத்து
கொத்தத் துடித்த திருச்சங்கம்-உச்சத்தில்
மனுமகன் போதனையை அரசியலாக்கி
கொல்லத் தீட்டிய சதியோ இறை பங்கம்

ஆசை வலையில் சிக்கிய சீடனின் பங்கம்-முத்தமிட்டு
காட்டிக் கொடுப்பதோ சூழ்ச்சியின் ஓர் அங்கம்
முப்பது வெள்ளிக்கு விலைபோன சீடத்துவம்
முடிவில் குருவும், சீடனும் மடிந்த கோரம்

விசாரணையோ விதண்டாவாதம்
எம் இனம் மடிவதைவிட- எம் மக்களுக்காய்
ஒருவன் மடிவது மேல்-கயபாகுவின் வேதம்
பொம்மலாட்டம் ஆடிய திருச்சங்கம்

மதவாதம் பூத்த மறையவர் மண்டபத்தே-அன்பே
வேதம் எனும் அருளாளன் கைதி- தலைமைக்குரு
கயபா கருநாகம் எனப் படமெடுத்தாட
மாமன் அன்னாவோ மகுடி ஊதும் பாம்பாட்டி

ஆலயப் புரட்சி ஆறாத காயமாக, தீராத கோபமாக
ஆலயத்தை வணிக மையமாக்கி
ஆளும் குடும்ப ஆட்சி கவிழுமோ? அச்சமாக
கிளர்ச்சிக் குருவைக் கொத்தப் படம் விரித்த நாகம்

வஞ்சகன் நெஞ்சில் நஞ்சிருக்கும், வார்த்தையில்
தேனிருக்கும், ஆடை அலங்காரத்தில் தலைமைக்குரு,
ஆடும் நடனத்தில் நச்சரவத்தின் உரு

நாடோடிப் போதகன் மெஸாயா-காதுக்கும், நெஞ்சுக்கும்
நஞ்சான தேவராகம்-ஒருவன் இறப்பதால் முழு இனத்திற்கும்
ஆசிர்வாதம், கயபா சொல்லிக் கொடுத்த வேத பாடம்

வசையும் இசையாக, வன்முறை கலாச்சாரமாக
திருச்சட்டத்தை மதியாது ஓய்வு நாளை அனுசரிக்காது
தன்னை மெஸாயா என்றுரைக்கும் பொய்யன்
வாழ்ந்தால் ஆபத்து-மடிந்தால், நிலைக்கும் நம் சொத்து

இருளின் ஆட்சிக்காலம் -இறைமகனுக்கு
எதிரான சதி எரிமலைபோல் குமுறிய நேரம்
குற்றவாளிக் கூண்டில் கிளர்ச்சிக் குரு
நீதி இருக்கையிலோ தலைமைக் குரு



கண்களைக் கட்டி நீதிதேவதையின் பார்வையை மறைத்தார்
கரத்தில் கள்ளத் தராசைக் கொடுத்து-மதவாதிகள்
நீதியைத் தம் கரங்களில் எடுத்தார்

யார் நீ ? உன் போதனைதான் என்ன?
கர்ச்சித்த தலைமைக்குரு -பதவியை இச்சித்த
வஞ்சகன் கேள்வியில் நரியின் தந்திரம்

எதையும் நான் மறைவாகக் கூறவில்லை
எல்லோரும் அறிய ஆலயத்திலும்,
தொழுகைக் கூடத்திலும் என் போதனை,
அன்பே இறைநாதம், இரக்கமே இறைவேதம்

நிமிர்ந்த நெஞ்சும், நேர் கொண்ட பார்வையுமாய் உரைத்த பதில்
பணிவை எதிர்பார்த்த வஞ்சக நெஞ்சுக்கு ஏமாற்றமானது
இப்படியா தலைமைக் குருவுக்குப் பதில் சொல்வது-கன்னத்தில்
அறைந்த அடியாள் செயல் குரு மனதிற்கு உவப்பானது

தலையாடாமல் வாலாடி-அடியாள்
திருச்சங்க முறைமையை அவமதித்த குற்றம்-கண்டும்
காணாத குருவோ அடியாளுக்குச் இன்றோ சுற்றம்



தவறாகப் பேசியிருந்தால் தவறைச் சுட்டிக் காட்டும்
சரியாகப் பதிலுரைத்தால் ஏன் என்னை அடிக்கிறீர்?
மனுமகனின் வாதம்-செவிடர் காதல் ஊதிய சங்கானது
மகுடியின் நாதத்தில் மதவாத நாகம் படம் எடுத்தாடியது.

பல்லாண்டு பாடுபட்டுக் கட்டிய திருக்கோயில்
பாழாய்போக இடியுங்கள்-மூன்று நாளில்-இறை
வல்லமையால் வேறொன்றைக் கட்டியெழுப்புவேன்,
இயம்பிய பொய்சான்றுகள் வேரின்றிச் சாய்ந்தன

கொத்தும் நச்சரவம் படம் விரிக்க
கத்தும் ஆழ்கடல் சுழியும் கொடுவாய் திறக்க
சொத்தும், சுகபோகமும் நிலைக்க-புயலில்
பொங்கும் கடலாய் குரு மனதில் ஆவேசம்

நாகம் படமெடுத்தாட-நல்நாதம் கைதியாக,
சூதும் வாதும் வேதமென ஓதும் வேதியன்
சுந்தரனை சூழ்சியால் வெல்ல-நல்லாயனைக்
கொல்லப் காய்களை நகர்த்திய சாணக்கியன்

நெஞ்சில் நஞ்சை வைத்து, மொழியில் தேனை வைத்த
தலைமைக் குரு தந்திரமாய் வினவினான் போற்றுதலுக்குரிய
கடவுளின் மகனாகிய மெசியா நீதானோ? சொல்

சொன்னால் நம்பமாட்டீர்கள்
நான் கேட்டாலும் பதில் சொல்ல மாட்டீர்கள்
"***நானே அவர்***"

***இது முதல் மானுட மகன்-வல்லவராம்***
***கடவுளின் வலப்புறம் வீற்றிருப்பதையும்***
***வானமேகங்கள் சூழ வருவதையும் காண்பீர்கள்***

"***நானே அவர்-இறைவன் திருமொழி***" இறை நிந்தையாக
கோபத்தால் கொதித்த கும்பல் கூச்சலிட்டது
அப்படியானால் நீ இறைமகனா?

***நான் இறைமகன் என நீங்களே சொல்கின்றீர்கள்***

விறைத்த கல் மனம்-மதப்போதையில் திளைத்த ஆணவம்
கண்முன் உண்மை இருந்தும் காணாத அந்தக இனம்
ஓதும் வேதத்தில் உண்மையை காணாத சாபம்
ஒழுகும் வாழ்வோ உண்மையைப் பழிக்கும் பாவம்

இன்னும் நமக்குச் சான்று எதற்கு? -இவன்
வாய் மொழியே போதும் இறை நிந்தைக்கு கொலையே
தண்டனை, ஆடையைக் கிழித்து,
ஆவேசமாய்க் கத்திய தலைமைக் குரு

சீறிச் சினந்து படமெடுத்த நாகம்
செப்பிய வார்த்தைகளோ நஞ்சில் தோய்ந்த சாபம்
ஆடும் நடனத்தில் ஆயிரம் பாவம்
ஆடையை கிழித்ததில் தர்மத்தை நிந்தித்த ஆணவம்

உங்கள் கருத்து என்ன? ஒப்புக்காய் வினவிய
வினாவிலே மிரட்டலில் ஆவேசம்
சுருதியும், முழக்கமுமிழந்த வேதமோ
சுரம் தப்பிய ராகம்

இவன் சாகவேண்டியவன்
ஊளையிட்டு நீதியை பழித்த திருச்சங்கம்
வாழும் இறைவனை நிந்தித்த பங்கம்

சாட்சியம் சார்ந்ததோ சட்ட நீதி
சத்தியம் சார்ந்ததோ இறைநீதி-உண்மையோ அனுபூதி
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்-தலைமைக் குருவுக்கு
சத்தியத்தின் சாட்சியம் தேவதூஷனமானது

காறித்துப்பிப் பழித்து முட்டியால் குத்தி
கண்களைக் கட்டி, கன்னத்தில் அறைந்து
அடித்தது யார் மெசியாவே சொல், பரிகாசமானது
சத்தியத்தின் சாட்சியம் செல்லாக்காசானது



கனிதரும் பச்சை மரத்திற்கு எரியூட்டிய கயவர்
வாழ்வு தரும் வார்த்தையில் குற்றம் கண்ட குருடர்
கல், முள், பாறை, பாதையில் விழுந்த வார்த்தை
தூய மனத்திற்கே சத்திய தரிசனம் மாறாத கீதை

கண்ணிழந்த மனிதர் முன் சத்தியம் கேலிச்சித்திரமானது
கழைக்கூத்தாடிகளுக்கு தேவராகம் அபஸ்ரமானது
நிந்தையும், நிஷ்டூரப்பாடுகளும் வந்தனையாக
மௌனத்தில் நிலைத்த இறை வார்த்தை

மிருகபலி கொடுக்கும் மதவாதம்-''மனுமகனை''
நரபலியாக்கிட உறுதி பூண்டது
மனுவுருவான வார்த்தைக்கு -மரணம்
மதவாதம் வழங்கிய நீதித்தீர்ப்பானது

வதையும், கல்வாரிப்பாதையும், கழுமரமும்
ஆணவத்தின் அசுர வேள்வி
மனுமகன் உயிரோ ஆகுதி

இறை வார்த்தையோ சத்தியம்
எழுத்தும், மொழியும் கடந்த அன்புக் காவியம்
இயேசுவின் வாழ்வும், போதனையும்
வாழும் கலையான அன்பின் வேதம்

கல்லில் பொறித்த கட்டளையும்,
திருச்சட்டமும், பலியும் கடந்து-கல்மனங்கள்
கனிந்து அன்பில் நிலைப்பது எக்காலம்?

ஆச்சாரம், நியமம், அனுட்டானம் துறந்து
ஆன்மா லயம் பெற்று சின்மயனாவதோ பொற்காலம்
வேதம் கடந்து-உள்ளொலிக்கும் நாதம் அறியும்
மெய்யறிவு பெறுவதோ ஆனந்தம்

அன்பும், உண்மையும் ஆகமங்களிலும் மேன்மை
அனுபூதியில் அறிந்து இன்புறுவதோ உயர் தன்மை
நாடகமான விசாரணை-
நீதியை விபச்சாரம் செய்த வேதனை

மரண தண்டனையோ சத்தியசோதனை
நல் மனங்களில் தீராத வேதனை
சத்தியனின் மௌனமோ-தந்தையிடம்
சரணாகதியான போதனை

கோடி மனிதர் எனக்குத் தீங்கு செய்ய நினைத்தால் என்ன?
இறைவன் நினைந்ததே நடக்கும், நிர்மலமான மனம்
நிமலனிடம் சரணடைந்த தேவகுணம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
***யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***
Pax Ravichandra-20-10-2023

# கசையும், வசையும், கழுமரமும்

***என்ன குற்றம் செய்தான் இவன்***?
ஆளுநன் வினா அதிகாரத்தைப் பறைசாற்ற
குற்றம் புரியாதவனை-தலைமைக் குரு "நான்"
உம்மிடம் கையளிப்பேனோ?





ஆணவம், அதிகாரத்தைப் பரிகாசிக்க
நீங்களே இவனுக்குத் தீர்ப்பிடுங்கள், நான் எதற்கு?
அலட்சியம் தலைமைக் குருவை அவமதிக்க
ஆணவத்தின் இரு துருவங்கள் மோதிய அலங்கோலம்

கொல்வதற்கு சட்ட பூர்வ அதிகாரம் எமக்கில்லை
சொல்லிய வார்த்தைகளில் குரூரத்தின் கோரம்
ஆளுநனை வியப்பில் ஆழ்த்திய அகோரம்
குருவின் நெஞ்சிலோ கொலை வெறியின் விகாரம்

செந்தாமரை முகத்தில் நிந்தைகள் பூசிய சேறாய்ச்
சோகம், மதுகாரிகள் சூழும் வண்ணத் தேன்மலரை
மந்திகள் சூழ்ந்திட மயங்கிய பாவம்

தந்தை சித்தம் என் சித்தம் என்றே தங்கமகன்
அமைதியில் நிலைத்திருக்க, காற்றையும், கடலையும்,
அசுத்த ஆவிகளையும் கனிவோடு குணமாக்கிய
இறை வார்த்தை, மௌனராகம் இசைத்த நேரம்

கண்ணாடியான சாட்சி பாவமும்-கள்ளம் கபடில்லாத்
தோற்றமும் உண்மையைச் சொல்ல-காணத்தவறிய
ஆளுநனோ ஆணவக் குருடன், அதிகாரப் பித்தன்



***யூதர்களின் அரசனா நீ*** ? நடையிலே ஆணவம்,
மொழியிலே அதிகாரம், வினாவிலே கேலி-
விழிகளிலோ வியப்பு, நெஞ்சிலே இறுமாப்பு

நீராக இதைக் கேட்கின்றீரா? இல்லை மற்றவர்கள்
சொன்னதை வைத்துக் கேட்கின்றீரா?

நான் என்ன யூதனா? உன் மக்களும், உன் தலைமைக்
குருக்களும், உன்னை என்னிடம் ஒப்புவித்தார்கள்
என்ன குற்றம் செய்தாய் நீ?

செயலாய் புரிந்திடும் பாதகமே குற்றம்
மனதால் எண்ணிடும் பாதகமோ பாவம்

என் ஆட்சி இவ்வுலக ஆட்சி போன்றதன்று
இவ்வுலக ஆட்சி போன்று இருந்தால்- என்
காவலர்கள், எனக்காய்ப் போராடியிருப்பார்கள்
***என் அரசோ சுயம் சார்ந்த இறையரசு***

அப்படியானால் நீ அரசனோ?,



அரசன் என்று நீர் சொல்கிறீர் "***உண்மையை*** எடுத்துரைப்பதே
என் பணி , இதற்காகவே உலகிற்கு வந்தேன், உண்மையைச்
சார்ந்தவர் என் குரலுக்குச் செவி சாய்க்கின்றார்

உண்மையா? அது என்ன-அலட்சியமும், ஆணவமுமான
வினாவிலே கேலி, கண்முன்னிருந்த சத்தியத்தைக்
காணாத அதிகாரமோ ஏமாளி, உண்மையோ அனுபூதி-
மதவாதமும், ஆணவமும் அறியாப் பெருநிதி

குற்றம் ஒன்றும் காணேன், குற்றவாளி ஒருவனை
விடுவிப்பது, பாஸ்கா காலத்து முறைமை-யூதர்களின்
அரசனை விடுவிக்க விருப்பமா? குற்றம் புரியாதவன்
நிரபராதி-விடுவிக்க கோருவதோ முறையற்ற நீதி

மதவெறி ஆளும் மனங்களில், தலை விரித்தாடும்
கொலைவெறி, இவனில்லை பரபாஸே வேண்டும்,
வாலாட்டும் கும்பலைத் தூண்டி-நிலை
வாழ்வை மறுதலித்த திருச்சங்கத்தின் பெருஞ்சதி

தனித்து இருப்பதோ சுயம்-சுயத்தை இழந்ததோ கூட்டம்
எச்சில் சோறும், எலும்பும் உண்டு வாலாட்டும் நாய்களுக்கு
சத்தியமும், நீதியும் வேண்டாத ஆதாரம், தலையாட்டி
பொம்மைகளுக்கு சுயம், சுதந்திரம் கிட்டாத அருமந்திரம்



சாரமற்ற உப்பான மதம்-சாலையில் மிதிபட
ஏற்றிய தீபம் இருளில் மூழ்கிட
கொல்லக் கோஷமிட்ட கூட்டத்தின் கயமை
அடிமைகளுக்கு உண்மை வேண்டாத மேன்மை

குற்றமற்ற செம்மறியைக் வதைத்தால்-கும்பலின்
கொலைவெறி தணியும்-கல் மனங்கள் கனிந்து இளகும்
ஆளுநனின் அரசியல் சித்தாந்தம்-மதவாதமோ
ஆளும் வேதம், ஆளுநன் அறியாத சாணக்கியம்

மேலாடையைக் கழற்றி-அணைத்து ஆறுதல் தந்த
கரங்களை -கற்றூணில் இறுகப் பிணைத்து
பொன்முதுகை வீரர் கசையால் அடித்துக் கிழிக்க
இன்புற்ற மதவாதம், துன்புற்ற நல்மனங்கள்

கசையடி ஒவ்வொன்றும், விசையோடு மேனியை
உழுது கிழிக்க, குருதி பொங்கிக் கொப்பளிக்க
வலியால் துடித்தும் வாய் திறவாத செம்மறி

அடித்த கசை குருதியில் நீராடிச் சிவக்க, அடித்தவர்
வியர்வையில் குளித்துக் களைக்க, கல்லான மதவாத
மனங்களிலோ மகிழ்ச்சி, பட்ட அடியெல்லாம் தம்மேல்
பட்டதென நல்மனங்களிலோ நெகிழ்ச்சி

**மனிதரில் எத்தனை நிறங்கள்-இருமையில்**
**ஒளியும், இருளுமான நிலைகள்**

பொன்னும் அடிபட்டு நகையானது, கல்லும்
சிற்பி கைவண்ணத்தால் உளிபட்டுச் சிலையானது
கசையும் பொன்மேனி உழுது சிவப்பானது
கல்மனங்களோ களிப்புற்று இரும்பானது

வார்த்தை கேட்டு நீரும், திராட்சை மதுவானது
கடலும், புயலும் கனிமொழியால் அமைதியானது
பிணமும் வாழ்வு பெற-கோதையும் குணம் பெற
வாழ்வளிக்கும் வார்த்தை ஊமையானது

இறைமொழியோ அவதாரம்
மனித அறிவுக்கு எட்டாத அன்பின் வேதம்
திருசங்கமும், ஆளுநனும் புரிந்திட
ஆணவம் தடையான அவலம்.

தலையாட்டிப் பொம்மைகளாய் கூட்டம்
மும்மலம் நாறும் மதவாத மனங்களோ திருச்சங்கம்
அதிகாரத்தில் நிலைக்க-நீதியை பலிக்கடாவாக்கிய
ஆளுநனோ அண்ணகன், கருணை உருவான மனுமகன்,

பலி, சடங்கு, சட்டமாய், அன்பே சிவம் அறியாத வேதம்
கண்முன் உண்மை இருந்தும் காணாத குருட்டு நீதி,
உண்மைக்குச் செவிகொடாத மதவாதி, புண்பட்டும்
கதறாத செம்மறி, தீமையை எதிர்க்காத கருணாநிதி

இனியும் அடித்தால் இறப்போ நிச்சயம்
ஒன்று குறைய நாற்பது கசையடிகளோ
உச்ச வாதையின் கொடூரம்.

முள் மகுடமாக, மூங்கில் செங்கோலாக
செந்நிற மேலங்கி ஆடையாக அலங்காரம்
முழந்தாட்படியிட்டு யூதர்களின் அரசே வாழி
சத்தியத்தை நிந்தித்த பரிகாசமோ ஆராவாரம்

கசை கழித்த மேனியிலே குருதிப்பூக்கள்
இசை பாடிய குயிலை, பழிக்கும் வசைப்பாக்கள்
முள் சிதைத்த அழகு முகத்திலோ பேரமைதி
கல்லான திருச்சட்ட நீதி, இரக்கமே இறை நீதி

முள் தைத்து முகத்தாமரை வாட, கசை கிழித்து தேகம்
செம்பூவாய் மாற, வசை கேட்டு செவிகள் நோக-
வாடியதோ இறை வார்த்தைக்குச் செவி கொடாத
ஆணவ மனிதர் அறியாமை கண்டு மனுமகன் இதயம்

கசை கிழித்த முதுகோ காயம்-வசையோ
காய்ச்சிய ஈயம் அன்ன காதுகளுக்குள் ஓயாது பாயும்
முள் சிதைத்து, முறுவல் மறைந்து கலையிழந்த முகம்
கல்மனதும் கனியும், கண்டும் கனியாத மதவாதம்

திருமுடி தைத்த முள் முகத்தைச் சிதைக்க
கசை கீறிக் கிழித்த திருமேனி கந்தைபோல் நசிய
வசைபாடிடும் மதவாத மனம் குளிர-இசையோடு
ஒலித்த ஆளுநன் குரல் “ **இதோ மனிதன்**”

மதவாத மனங்களிலோ தீராத குரோதம்
ஆளுநன் மனதினிலோ பதவி மோகம்
ஊளையோ மதவெறியின் அலங்கோலம்
வார்த்தையோ மனுமகனான அவதாரம்

கசையால் நிறம் மாறி மேனி சிவக்க
முள்ளால் முகம் குலைந்து மூளிச் சிற்பமாக
வஞ்சகர் மனங்களில் கருநாகம்-படம்
எடுத்தாடும் கோலத்தில் கொத்தும் பாவம்

வதைபட்ட மேனியோ சிவப்பு, வஞ்சக மனங்களில்
நஞ்சின் கொதிப்பு, ஆளுநனோ நீதியை மறுதலிக்கும் இழிபிறப்பு
பொய்மையோடு புணரும் இழிந்த விபச்சாரம்
திருச்சங்கத்தின் வியாபாரம்

முள் கிழித்து முகத்தாமரை வாட-கசை கிழித்த மேனியை
கடும் வலி ஆள, சிதைந்த சிற்பமாய், சீர் இழந்த ஓவியமாய்
கல் மனதைக் கரைய வைக்கும் காட்சி-மதவாத
மனங்களுக்கு கேலிக்கையான நிகழ்ச்சி

காணும் விழிகளை அவலக் காட்சி வருத்தும்
கல்மனங்களில் கருணை பிறக்கும், சூது வாதறியாச்
சுந்தரனுக்கு விடுதலை கிட்டும், ஆளுநன் கனவோ
கிணறு வெட்டப் பூதம் கிளம்பிய கதையான நிகழ்வு

சிலுவையில் அறையும்! சிலுவையில் அறையும்!
வான் முட்டிய கோஷம், இரக்கமோ வெறும் வேஷம்.
தலைமைக் குரு மனமோ எரிநரகான தோஷம்

கொலைத் தண்டனைக்குரிய குற்றம் ஒன்றும் நான் காணேன்-
நீங்களே அவனைச் சிலுவையில் அறையுங்கள்.



இறைமகன் நான் என்று- தன்னை இறைவனுக்கு
நிகராக்கியவன், திருச்சட்டப்படி கொல்லப்படல் நீதி
குற்றம் சாட்டிய குருவோ திருச்சங்கவாதி

அச்சமறியாத ஆளுநன் அஞ்சிட, வார்த்தைகள்
நெஞ்சை ஈட்டிபோல் துளைத்திட
இயேசுவை உள்ளே அழைத்தவன் வினவினான்
***எங்கிருந்து வந்தாய்***? மௌனம் பதிலானது

பேச மறுக்கின்றாயா? உன் வாழ்வும், சாவும் என் கையில்-
மெய் கொல்லும் அதிகாரம், பொய் என அறியாத ஆணவம்
சத்தியத்தின் சங்கீதம் புரியாத ஆளும் வர்க்கம்

நீரை மதுவாக்கி, நிலை வாழ்வைப் போதனையாக்கி,
காற்றையும், கடலையும் கடிந்து-மடிந்த இலாசரை எழுப்பி
சட்ட வல்லுனரும், ஏரோதியாரும் வியக்க நயம் பட
ஞானம் உரைத்த நா மௌனராகம் இசைத்தது
வார்த்தை கடந்த உண்மை வாய்மை காத்தது
***தூய மனத்தவருக்கே சத்திய தர்சனம் நிதர்சனமானது***

தந்தை தராத அதிகாரம் தரணியில் என் மீது உமக்கில்லை

விடுவிக்க வழி தேடி விடையின்றி ஆளுநன் தவித்திட
நீர் இவனை விடுவித்தால், சீஸருக்கு நண்பரல்ல-தம்மை
அரசராக்கிக் கொள்ளும் எவரும் சீஸருக்கு எதிரி

பரந்து விரிந்த ரோம சாம்ராஜ்யத்திற்கு சீஸர் ஒருவரே மன்னர்-
தம்மை மன்னர் எனக் கூறும் எவருக்கும் மரணமே தண்டனை
மாறாத ரோம நீதி, இயேசுவைக் கொல்ல இதுவே ஒரே வழி
பிலாத்துவை மண்டியிட வைத்த வஞ்சகர்களின் சதி

சீஸரைத் தவிர வேறு அரசர் எமக்கில்லை, அதிகாரம் காட்டி
மதவாதம் மிரட்டிட, அதிகாரம் பறிபோகும் அச்சத்தில்
அநீதிக்கு மண்டியிட்ட ஆளுநனோ கோழை

அன்றோ பாரோவுக்கு அடிமைகள், இன்றோ சீஸருக்கு
அடிமைகள் -அன்று புலம்பியவர், இன்றோ பெருமை கொண்டாட
ஆணவமே அடிமைத்தனம் அறியாத மடத்தனம்

இறையடிமை நான்-அன்னையின் பெருமை, அண்ணலின்
பாதணி வாரை அவிழ்க்க, அடியேனுக்குத் தகுதியில்லை,
யோவானின் பெருமை, சீடர் பாதங்களைக் கழுவிச்
சிலுவை மரணம் வரை தன்னைத் தாழ்த்திய மகனால்
தந்தை இறைவனுக்குப் பெருமை

மாக்கள் நடுவில் புனிதனாய்,
சேற்றின் நடுவே செந்தாமரையாய்
இருளின் நடுவே ஒளிரும் சுடராய் அவர்

கொலைஞன் பரபாஸோடு, -வாழும் கலையின்
அற்புதக் கலைஞனை ஒன்றாக்கி
நடுவர் இருக்கையில் அமர்ந்த கோழை
"***இதோ உங்கள் அரசன்***" ஏலமிட்ட ஏழை

இயேசுவா? பரபாஸா? வாழ்வுக்கும் சாவுக்குமான ஜனநாயக
வாக்கெடுப்பு, கேலிக்கூத்தான நிகழ்வு, நீதியா, பதவியா?
இருதலைக் கொள்ளி எறும்பான நிலையில்-தக்கன பிழைத்தலாய்
பஞ்ச தந்திரம் தாண்டிய தந்திரம் ஆளுநனுக்கு கைவந்த கலையானது

சிலுவையில் அறையும்! சிலுவையில் அறையும்!
கொலை வெறியின் கொடுங்கோஷம் வானை முட்டிட
மதவெறியர் ஊளை நரபலியை வற்புறுத்திட
உங்கள் அரசனை நான் கொல்வதா?

சீஸரைத் தவிர வேறு அரசர் எமக்கில்லை-யூதர்களின்
கோஷம் வானை முட்டிட, நீரால் கைகளை கழுவித் துடைத்து
"இவன் இரத்தப் பழியில் எனக்குப் பங்கில்லை"
நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள் வழுவிய நீதி

"இவனுடைய இரத்தப் பழி எங்கள் மேலும், எங்கள் பிள்ளைகள்
மேலும் விழட்டும்" உரிமை கோரிய அநீதி, "கல்தளமும்" அசைய-
நீதி பிறழ, இயேசுவுக்குச் சிலுவை மரணம், பரபாஸீக்கு விடுதலை
அதிகாரம் நிலைக்க, வழங்கிய அநீதத் தீர்ப்பு

கோஷம் அச்சுறுத்தக் கோணியது செங்கோல்
நடுநிலை விலகியது நீதித்தராசின் முள்,
அரசுமும், மதமும் வழங்கிய நீதியோ அநீதி
சத்தியத்தின் சாட்சியம் செல்லாக் காசான நியதி?

கோலும் கோணிட ஆளும் நீதி தவறிட
ஆளுநன் மனதில் வருத்தம்- கழுவிய
கைகளுக்குள் நீதி நழுவிட-பதவி நிலைத்திட
சந்தர்பவாதம் கோழைக்குச் சாணக்கியம்

ஆளுநனும் நீயோ? அஞ்சி நீதி பிறழ்தல் முறையோ?
நீதி இருக்கையும், அநீத நடுவனுக்குச் சீரோ?
சிறப்போ?, தர்மத்தை நிந்தித்த அதர்மம்
வல்லமையே நீதி என்றான குதர்க்கம்

மனச்சான்று இடித்துரைக்க-மனுமகன்
நீதிமான் விடுவியும் மனையாள் எடுத்துரைக்க
அதிகார மோகத்தில் அஞ்சிய கோழை- கைகளைக்
கழுவி நீதியைப் புறந்தள்ளிய அதிகார ஏழை

வாழும் உண்மை கண்முன் இருந்தும்
காணாத அந்தகன், உண்மையா அது என்ன?
அதிகார மமதையில் -கேள்வியை
வேள்வியாக்காத அநீத நடுவன்

தூய மனதிற்கே சத்திய தரிசனம்
தந்திரி ஆளுநனுக்கு கசையும், வசையும் வரைந்த
கண்முன் நின்ற சத்தியமோ கேலிச்சித்திரம்

பகை அறிந்த உண்மையைப் பதியும் அறிவான்
வதி உரைத்த உண்மையை வாழ்வாக்க
அரியணையைப் பலியாக்க துணிவில்லாக் கோழை
பலிக்கடவாய் மனுமகனை பலியாக்கிய கொடுமை

பொய்மை வாழும் உலகில் உண்மைக்கு மதிப்பில்லை-
பன்றிகள் முத்தை அறிந்ததில்லை-பாறையில்,
பாதையில் விழுந்த விதையாய் இயேசுவின் கதை

சட்டம், பலி, சடங்கு என நாறிடும் மதம்
நாளும் பலியாய் சிந்தும் இரத்தம் கண்டும்
பலிலை அல்ல இரக்கமே இறை வேண்டும் தனம்
வேதியர் அறியாத மடத்தனம்

கல்லில் பொறித்த சட்டத்தை வழிபட்டு
கல்லான அரக்க குணம்-இரக்கத்தை மறந்து
இறை நிந்தை புரிந்தான் என்றே-மதவாதம்
இயேசுவை கொன்ற கறுப்புத் தினம்

ஆளுநனோ அதிகார மோகம் படைத்த தந்திரி
திருச்சங்கமோ விபச்சார குலச்சந்ததி
அடிமைகளாய் வாழ்ந்த இனம்
மிருகவதையை வழிபாடாக்கிய அரக்க குணம்
மரத்துப்போனதோ இரக்க குணம்

ஆளுநன் இதயத்திலும் அணுவளவு ஈரம்
மாறுபடும் விழிப்புணர்வு நிலைகளில்
தேவனும், அரக்கனுமாய் மனித கணம்



கசையை முதுகில் வைத்தார்-கடும் வசையை
செவிகளில் வைத்தார், முள்ளை சிரசில் வைத்தார்-
கழுமரத்தை முதுகில் வைத்து-கல்வாரி நோக்கி
மனுமகனை நடத்திச் சென்றார் படையினர்

பாரச்சிலுவையை தோள் சுமக்க
கல்வாரிப் பயணத்தை கும்பல் கண்டு இரசிக்க
கள்வர்கள் நடுவே-பெரும் கள்வனாய் அறைந்து
இறை புகழ்பாடிய மதவாத மாச்சரியம்.

முடி தரித்து, மரம் சுமந்து, குருதி சிந்தி மனுமகனின்
கல்வாரி யாத்திரை, மகன் படும் வாதைகளை
மனம் சுமக்க, மாதா விழிகளிலோ கண்ணீர்த் திரை

ஏர் உழுத கழனிபோல் கசையுழுத செம்மேனி
சீர்முகத்தைச் சிதைக்கும் முட்களோ கூராணி
வசை பாடும் மனங்களோ நாறும் கேணி
இசைபாடிய குயிலை முடமாக்கிய மூன்றாணி



ஆடை களைந்திட அரைநிர்வாணி, கழுமரத்திலோ வாழ்வுக்கனி,
நல்ல கள்வருக்குப் பரகதி, புளித்த காடியை சுவைத்த
நெஞ்சிலோ, எல்லாம் நிறைவேறிற்று என்ற நிம்மதி

தந்தையே தாம் செய்வது என்னவென்று அறியாதார்
இவர்களை மன்னியும், தந்தையை நெஞ்சில் வைத்தவர்
கருணையை மொழியில் வைத்தார்
அன்னையைச் சீடனுக்கு தாயாய் அளித்தார்

வசைபாடிப் பரிகாசித்த கல்மனங்களோ வேதியர் குலம்
கண்ணீரோடு துயர் பகிர்ந்த கனிந்த மனங்களோ தாய்க்குலம்
சோகக்கூர்வாள் தாங்கி அழுத அன்னையோ இறைகுலம்

கார்மேகம் கூடி வந்து நண்பகலிலும் கண்ணீர் சிந்தியழ
இடியும், மின்னலும் இறை கோபத்தைச் சொல்லிச் சீறிட
***என் தந்தையே என் தந்தையே ஏன் என்னைக் கைநெகிழ்ந்தீர்***
புண்ணியனும் கதறிடப் நடுங்கிய பூமி

சத்தியத்திற்குச் சாட்சியமான போராளி, எதிரியையும் அன்பு
செய்த கருணாநிதி, இறைவனுக்குத் தன்னை நிகராக்கிய
குற்றவாளி , கொல்லப்படல் திருச்சட்டநீதி-பலியும்
சடங்குமான மதமோ மோஸே வகுத்த நியதி

கண்ணிழந்த மனிதர் முன் காட்சியான அன்பின் ஓவியம்
காதில்லாத மனிதர் முன் இசைபாடிய தேவராகம்
சத்தியத்திற்கு சான்று பகிர்ந்த காவியம்
கல் மனங்களில் இறை வார்த்தையை தூவிய திரவியம்

இருளோ, ஒளியை ஏற்காத சாபம்-
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம் மாறாத பாவம்




வாழ்வே தவமாக-அன்பே சிவமாக-
வாழ்வும், போதனையும் ஒன்றான வாழ்வு
கழுமரத்திலோ இழிந்த கொடுஞ் சாவு
இயேசு- கிறிஸ்துவான புது மலர்வு

மதம் நிறுவனமாகிச் சாரமிழக்க, சத்தியமே தெய்வம்
என்ற மனிதர்கள், பூக்களாய் மணம் பரப்பிட-இயேசு
*சத்தியத்திற்கு சாட்சியமான அகக்கிளர்ச்சியாளர்.*

*வேதம் நெறியிழக்க-வேதியர் சீலம் அழகிழக்க*
*திருச்சட்டம் கட்டளையிழக்க*
*ஆளுநன் நீதி நிறையிழக்க-திருமகனுக்கு*
*கழுமரத் தண்டனை நீதியானது*



நீதி கேட்டு அவர் விழிகள் சிவக்கவில்லை
நியாயம் கேட்டு குரல் ஓங்கி ஒலிக்கவில்லை-தந்தை
சித்தத்திற்கு தன்னைக் கையளித்த சரணாகதி
இயேசு கிறிஸ்துவான அக மலர்ச்சி

தீமையை எதிர்த்துப் போராடாத சாத்வீகவாதி
உண்மையின் வழியோ அனுபூதி
இயேசுவின் பாதையோ பரிபூரண சரணாகதி

சத்தியத்தில் நிலைத்த சுயக்கிளர்சியாளராய்
*மதம் கடந்த அன்பின் அகக்கிளர்ச்சியாளர்*
*இயேசு கிறிஸ்து*

*ஒரு தனி மனித விழிப்புணர்வின் அதி உன்னத மலர்ச்சியே*
*ஆன்மீகம்-அன்பே மாறாத தேவராகம்*

*எல்லாப் புகழும் இறைவனுக்கே*
*இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க*
Pax Ravichandra -20-10-2023

# பரபாஸ்-Jesus Barabbas

வேதம் நெறியிழக்க-வேதியர் சீலம் நிறையிழக்க
திருச்சட்டம் கட்டளையிழக்க-வாக்களிக்கப்பட்ட
வளநாடோ சீஸர் வசம்-கள்வர் குகையான
ஆலயமோ திருச்சங்க வசம்.





வல்லமைதான் மாட்சி-அகிம்சை கோழைகளின் ஒப்பாரி,
எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து-இஸ்ராயேலரை
மீட்ட வல்ல யாவேயின் பாதையில்-உளவியல்,
உயிரியல், இரசாயன ஆயுதங்களின் ஆட்சி

***உலகின் முதல் மதப்பயங்கரவாதி***
***இறைவனுக்கோ மகத்தான மாட்சி***
அலகையும், கடவுளும் -வல்லமை எனும்
நாணயத்தின் இரு பக்கங்களான காட்சி

ரோம வல்லரசின் அடிமை நுகமும், தீரா வறுமையும்,
கருணையில்லாச் செல்வர் வாழ்வும், வரட்டு வேதமும் வாட்டிட
வறுமைச் சிறையில் ஆயுட் கைதிகளான ஏழைகள்-காணாத
இறைவனோ, திருச்சட்ட விதிகளில் சிறைப்பட்ட மாயைகள்

ஏழையின் அழுகுரல் கேட்க -எட்டாத வானில் வாழும்
இறைவனோ சொர்க்க வாசி- சுகபோக முதலாளி
கண்ணீரில் மூழ்கி கவலையில் மடியும் ஏழைகளோ
சேரி வாசி- உழைக்கும் பாட்டாளி



வர்க்கபேதங்கள் ஒழித்து-வல்லரசின் அடிமை நுகத்தை
முறித்திட, கங்கணம் பூண்ட போராளியாய்-பரபாஸ்-
தந்தையின் மகனாய்- Jesus Barabbas
ராபாயின் மகனாய்-அவன் நாமம்.

கண்ணிற்கு கண்- பல்லிற்குப் பல்-பழிக்குப் பழி
விடுதலைச் சித்தாந்தமானது-நம் வேதனையின் வலி
எதிரிக்குப் புரிந்தால் ஒழிய
அடிமைக்கு மீட்பில்லை வேதமானது.

எகிப்திய-பபிலோனிய-அசிரிய, கிரேக்க, ரோம
அடிமைத்தனமே யூத வரலாறு -போராளியாய்
வாழும் யூதனுக்கு வெட்கக்கேடானது

போராடிக் குருதி நீராடி வரும் வழியில்-நெஞ்சைத் தொட்ட
நாடோடிப் போதகனின் வார்த்தைகளோ அன்புப் புரட்சி
ரோமச் சிப்பாய்களிடமிருந்து-தப்பிக்க-கூட்டத்தில்
தன்னை மறைத்த பரபாஸோ ஆயுதப் புரட்சியின் எழுச்சி




இளமையின் வடிவம், எளிமையின் கோலம்
முற்றும் துறந்த ஞானியின் ஆன்மீக கானம்
நாடோடி போதகரின் அன்பின் உபதேசம்
நல்மனங்களுக்கோ ஆனந்தப் பரவசம்

ஏழையரின் உள்ளத்தோர் பேறுபெற்றோர்- ஏனெனில்
விண்ணரசு அவர்களதே, துயருறுவோர் பேறுபெற்றோர்
ஏனெனில் ஆறுதல் அடைவீர்கள், பசியால் வாடுவோரே
நீங்கள் பேறுபெற்றோர், ஏனெனில் நிறைவு பெறுவீர்

செல்வர்களே உங்களுக்கு ஐயோ கேடு, ஏனெனில்
சுகபோகமே உங்கள் சொர்க்கம், சுயநலமே உங்கள்
சித்தாந்தம், செல்வர் இறையாட்சிக்கு உட்படுவதை விட
ஊசியின் காதில் ஒட்டகம் நுழைவது எளிது

அன்பே இறைவன்-அன்பில் நிலைத்திருங்கள்
இறைவன் உங்களில் நிலைத்திருப்பார்
எதிரியையும் அன்பு செய்யுங்கள்
பகைமையைப் பகைமையால் வெல்ல முடியாது



தீமையை எதிர்க்கவேண்டாம்-எதிர்த்தால்
தீமை உங்களை பெருநோயாய் பற்றிக்கொள்ளும்
நீங்களும் தீயவராவீர்

அன்பே அமைதியின் வழி-எதிரியையும் அன்பினால் வென்று
நண்பராக்குங்கள், அமைதி உங்கள் உரிமைச் சொத்தாகும்
இறைவனுக்கு மகிமை உண்டாகும்

நாடோ சீஸர் வசம்-பலி, சட்டம், சடங்கான மதமோ
திருச்சங்க வசம், வளமோ செல்வர் வசம்
வறுமை, பிணி, அடிமைத்தனம் ஏழையர் வசம்
ஏழைகளோ, இயேசுவின் திருவடி சரணம் என்பதே நிஜம்.

அன்பின் வேதம் நெஞ்சைத் தொட
ஆயுதப் புரட்சியோ இயேசுவைப் பரிகசித்திட
கண்ட காட்சி மறைந்தும்-நெஞ்சில்
மறையாத நாடோடி இளைஞனின் முகம்

வளமையும், செழுமையும் மாளிகை வாசம்
விருந்தும். கேளிக்கையுமாய் வாழ்வோ உல்லாசம்
வறுமையும், நோயும் ஏழையின் சொந்தம்
ஏழைகளோ, இயேசுவின் நிழலில் தஞ்சம்

வறுமையும், அடிமைத்தனமும் ஆசிர் என்றால், வாழ்வே நீங்காத
சுமையாகும், மரித்தபின் ஏழைக்குச் சொர்க்கம் என்றால்
எரிநரககே ஏழையின் வாழ்வாகும், தேச விடுதலையோ கனவாகும்
சமத்துவ பொதுவுடமைச் சமுதாயமோ எட்டாத வான் நிலவாகும்



வர்க்கபோராட்டத்தை மறைத்து-வார்த்தை ஜாலத்தால்,
ஏழைகளின் எழுச்சிக்கும், புரட்சிக்கும் , தடைபோடும்
அன்புப் புரட்சியாளனா? விடுதலைப் போராட்டத்தை
முளையிலே கிள்ளிவிடும் முதலாளித்துவ முகவரா இயேசு?
பரபாஸின் மனதை ஆட்டிப்படைக்கும் கேள்வி

இரண்டு சட்டையுள்ளவன் இல்லாதவனோடு பகிரட்டும்
“இரண்டே” பெரும் செல்வம் என முழங்கும்-யோவானோ
புரட்சியாளன், அகிம்சாவாதியா?-அன்புப் புரட்சியாளனா?
ஆளும் வர்க்கத்தின் கைகூலியா-இயேசு? புதிரானது

உழைப்பைச் சுரண்டி உரிமையைப் பறித்து அடிமையாக்கி
பட்டும் பீதாம்பரமும் உடுத்தி-உண்டு, குடித்து, நாளும் விருந்தாடி
வாழ்வைக் கொண்டாடும் முதலாளி வர்க்கத்துக்கு வாழ்வே
நாளும் சொர்க்கம், ஏழைகள் வாழ்வோ எந்நாளும் எரி நரகம்



நாளும் பலியாகும் ஆடுகளின் நிணத்தில் விருந்தாடி வாழும்
ஆசாடபூதி -காணாத தேவனை ஆராதிக்கப் பணிக்கும்
வேதிய ஜாதி, முதலாளித்துவத்தின் பிரதிநிதி

ஆலயமோ அதிகாரத்தின் மையம்
ஏழைகளை “நம்பிக்கையால்” சுரண்டிடும்
திருச்சங்கத்தின் வணிக மையம்

ஆச்சாரம் என்பது ஏழைகளுக்குத் தண்டனை, வேதியருக்கோ
பகட்டான போதனை, பலியாகும் செம்மறி இறைவனுக்கு விருந்து
ஏழையின் உழைப்போ செல்வருக்கு தேன்கரும்பு?

சொர்க்கவாசி இறைவனும்-இருவேளை கொழுத்த கன்றும்,
திராட்சை மதுவும் உண்டு குடித்து விருந்தாடி-உழைக்காமல்
ஏழைகளின் உழைப்பைச் சுரண்டும் முதலாளி
அபினியும் போதையுமாய் மதம், மனிதா சிந்தி

மதமே உன் அடையாளம்- ஏகன் இறைவன்
நம் தலைவன், வணங்கி வழிபடு, கட்டளை
உன்னைப்போல் உன் அயலவனை நேசி
ஒழுக மறந்த கற்பனை

இறை விருந்தைப் பகிர்ந்தளித்தால் பசிபோகும்
ஏழையின் சிரிப்பில் இறைவன் வாழும் நிலையாகும்
இயேசுவும் காணாத கனவு-
மதமோ மானுடத்தை சுரண்டும் இழிவு

போராடாத வர்க்கம் அடிமையே, உரிமைப் போராட்டம்
மனித மாண்பிற்கு மகிமையே, திருச்சட்டத்திலும்
சமத்துவமில்லை, பொதுவுடமைச் சமூகத்திற்கு-பலியும்
வெற்றுச் சடங்குமான மதத்திலும் இடமில்லை

வலிய சாம்ராஜ்யங்களுக்கு நலிந்த நாடுகளை
அடிமை கொள்ள வல்லமையே வகுக்காத நியதி
மானுடத்தை அடக்கியாள திருச்சட்டமே நீதி

பாலும் தேனும் ஓடும் வாக்களிக்கப்பட்ட பூமியிலே
மானுடத்தை அடிமைகளாய் விற்றிடும் இழிவு
தந்தை தன் மகளை விற்றிடலாம் (வி.ப.21:7, நெகேமியா5:5)
விதவை தன் கணவன் பட்ட கடன் தீர்க்க
பெற்ற குழந்தைகளை விற்றிடலாம் (2அரச4:1)
கடன் தீர்க்க கடனாளி தன்னை விற்றிடலாம் (லேவி:25:39)
பெண்மையும் தன்னை விற்றிடலாம் (இ.ச.15:12)

அபினும், மதுவுமாய் மதம், மனிதனை விற்றுப் பிழைக்க,
அடிமை வியாபாரம் உரிமம் பெற்ற ஒன்றானது
இறை குயவன் செய்த திருப்பண்டம்-அடிமைச்
சந்தையில் மலிவு விலையான மட்பாண்டமானது

அடிமைதனம் ஒழிய, நம்மை நாம் ஆள
***புதிய மோசேயாய் இயேசு இல்லை***
யாவேயும் எம்மை மறந்த நிலை- பலமுறை
நம்மினம் அடிமையானதே வரலாறான இழிநிலை

பாலியல் தொழிலே உலகின் ஆதித்தொழிலானது
ஏழை விதவைகளுக்கு வாழ்வாதாரமானது
விபச்சாரியை கல்லால் எறிந்து கொல்லல் நீதியானது
தன்னை விற்றிட பெண்மைக்கும் உரித்திருந்தது
தாய்குலத்தின் சிறுமை வேதனையானது

ஓய்வு நாள் அனுசரிப்பில் விலங்குகளுக்கு உயர்நிலை
ஒடுக்கப்பட்ட ஏழைகளோ பன்றிகளிலும் இழிந்த நிலை
திருச்சட்டமே இரும்பு நுகம்-ஏழை முதுகோ கூனலான ரகம்

ஏழ்மையோ நீங்காத இருள்-வாக்களிக்கப்பட்ட வளநாடோ
அடிமைத்தனத்தில், ஏங்கிடும் விடுதலையோ எட்டாத வானில்
அகிம்சையும், சாத்வீகமும் கோழைகளுக்கே, வீரனுக்கு
மரணம் ஒரு முறை-கோழைகளுக்கோ நாளும் பன்முறை

எட்டாத வானகத்து இறைவன் -எழுச்சியை நசுக்கிடும்
வெற்று “ நம்பிக்கை” -உண்மைக்குத் தடைபோடும்
முதலாளித்துவக் கட்டுக்கதை மதம்

இறந்த பின்னரே ஏழை இலாசருக்குச் சொர்க்கம்
செல்வனுக்கோ நாளும் வாழ்வே சொர்க்கம்
வர்க்கப்போராட்டத்திற்கு எதிரான மதப்போதனைகள்
முதலாளித்துவத்திற்கு சாமரம் வீசும் வேதனைகள்

பாட்டாளியே! நீ போராடாவிடில்-
உனக்காய் யாரும் போராடமாட்டார்
***உனக்கு “இறைவன்” நீயே***
***ஒரு முறையே வாழ்வு –வீரனுக்கு ஒரு முறையே சாவு***

எட்டாத வானில் வாழும் இறைவனைக் கூவியழைத்தும்
பலனில்லை, எட்டும் தொலைவில் உள்ள சுதந்திரத்திற்கு
ஆயுதப் புரட்சியே முடிவான உண்மை

இருப்பதைப் பகிராத சுயநலமே கொடுமை
ஏழை, செல்வன் வர்க்கப் போராட்டம் ஒழிய,
ஒடுக்கப்பட்டோருக்கு ஆயுதப்போராட்டமே
முடிவான உரிமை, விடிவான உண்மை?

ஆளும் உரோமையர் இரத்தமோ ஆகுதி
விடுதலைப் போராட்டமோ மாறாத என் வேள்வி
ஆயுதப்புரட்சி பரபாஸின் பாதையானது
அன்புதான் இறையரசின் பாதை இயேசுவின் அழைப்பானது.

போராளி பரபாஸின் பாதையிலோ-நாளும் ருத்ர தாண்டவம்-
அமைதிப் பிரியர் இயேசுவின் போதனையோ ஆனந்தத் தாண்டவம்
மதமோ பலி, சடங்கான வறுமை, ரோம அடிமை நுகமோ
இரும்பாய் மாறி ஏழையர் முதுகெலும்பை நெரிக்கும் கொடுமை

காலங்கள் மாறிட-
"***இதோ மனிதன்- உங்கள் அரசன்***"
அடிமை யூதரைக் கேலி செய்யும்
ஆணவ ஆளுனனின் அதிகாரக் குரல்



கசை கிழித்த மேனியிலே குருதிக்கோலம், மதவெறியர் மனங்களோ
வசைபாடும் அலங்கோலம், இசைபாடிய பூங்குயில் இதழ்களிலோ
மௌனராகம், கைதி பரபாஸின் கண்களிலோ ஈரம் படிந்த நேரம்
முள்முடி சூடி-முகத்தாமரை வாடிட, இயேசுவின் பரிதாபக் கோலம்

அன்பின் பாதையில் அவரோ பலியாடு, புரட்சிப் பாதையில்
எதிரியை வேட்டையாடுதலே நம் கோட்பாடு-மதமே
மனிதநேயத்தைப் நரபலி கொடுக்கும் புதிய கோட்பாடு
பரபாஸீக்குப் புரியாத சதியின் நிலைப்பாடு

விடுதலைப் போராளி , வன்முறைவாதி பரபாஸா?
அன்புக் கிளர்ச்சியாளன், அகிம்ஸாவாதி இயேசுவா?
பாஸ்கா கால மன்னிப்பு வழங்கிட-அண்ணகன் பிலாத்துவின்
ஜனநாயக வாக்கெடுப்பு, பதவி காத்திடும் கண் துடைப்பு

மதவாதச் சத்தி மக்களைத் தூண்டிட, அன்புக் கிளர்ச்சியாளனுக்கு
சிலுவை மரணம், வன்முறைவாதிக்கு விடுதலை, மதவாதத்தின்
மாறாத தீர்ப்பானது, பரபாஸின் நெஞ்சிலும் நெகிழ்ச்சியின் ஈரம்
மதவெறியர் நெஞ்சங்களிலோ பழி தீர்த்த குரூரம்

மானுடத்தை அடக்கியாள மகுடம் தேடும் மதவாதம்,
பிணவாடை நாறிட அரியணை தேடும் பயங்கரவாதம்
ஏழையும், செல்வனும் சிந்திடும் குருதிக்கோலம்
மாறாத சிவப்பு வண்ணம், என்றும் அழியாத கோலம்



ஆணவ வடிவங்களாய், யூதாஸ், பேதுரு, அன்னாஸ்,
கைபாஸ், பரபாஸ், பிலாத்து -ஆணவம் கழித்து
தூய மனமாய் மலராதவரை மீட்பு நமக்கில்லை,

வல்ல யாவேயின் வன்முறைப்பாதையில், பரபாஸீம்,
திருச்சங்கமும் நடைபயில-இயேசுவின் ***அன்புப் பாதை-***
***இன்றும் வாழப்படாத ஒன்றானதே உண்மை***

இயேசுவை நரபலி கொடுத்து, இறைகோபம் தணித்திட்ட
பொய்மை, ஆயுதப்புரட்சியும் நரபலிகளால் நாறிடும் கொடுமை
இயேசுவின் இறப்பே மனுக்குலத்தின் மீட்பு -பகுத்தறிவு கடந்த
பரிசேய யூதன் பவுலின் கட்டுக்கதை

உண்மையே விடுதலை அளிக்கும், உன் சிலுவையைச்
சுமந்து என் பின்னே வா, இறைமகனும், மனுமகனும் நாமே
மானுட மீட்பு நம் பணியே-இன்றும் அழைக்கும்
இயேசுவின் அகப்புரட்சி-அன்பின் வேள்வியானது



இரு கரம் நீட்டி கேள்-இறைவன் உன்னைக் காப்பாரோ பார்ப்போம்?
இறைவனைப் பழித்து இயேசுவை சிலுவையில் அறைந்த மதம்-
பொய்மையை வழிபட்டு வன்முறையின் வடிவானதோ நிஜம்
பாரோவும், யாவேயும் ஒன்றான அவலட்சனம்

இனமோ, மதமோ, தேசமோ, குழுவோ சாராத
உண்மைக்கான தனி மனிதக் கிளர்ச்சியே
***இயேசுவின் அகப்புரட்சி!***

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்
பூவுலகில் நல்மனத்தவருக்கு அமைதியும்
அகக்கிளர்ச்சியின் உன்னத மாட்சி

பாரோ, யாவே, ஏரோது, பிலாத்து
அன்னாஸ், கைபாஸ், பரபாஸ் கைகளில்
மனித இரத்தத்தின் மாறாத சிவப்பு-கழுமரத்தில்
மனுமகனோ வாழ்வுக்கனியான உன்னத பிறப்பு

சிவந்தது செங்கடல் அன்று-சிவந்த மண்ணாய்
மாறிடும் பூமியோ நாளும் இன்று
பரபாஸை தேர்ந்து- இயேசுவை கொன்றிடும்
கொடுமை இன்றும் மாறாத ஒன்று



புராணம், சட்டம், மரபு சார்ந்த மதங்கள் தாண்டி
அன்பு, உண்மை, கருணையை வாழ்வாக்கும்
வாழ்வோ தெய்வீகம்-தேவராகம்

அன்பு மனங்களில் இயேசு வாழ்ந்திட
அமைதி நன்மனத்தவருக்குச் சொந்தமானது
வன்முறை மனங்களில் பரபாஸ் உலாவிட-நிம்மதி
பறிபோனது-வன்முறை தொடர் கதையானது

மதவெறியர்களக்கு மனுமகனின் கொலை நீதியானது
மதப்பயங்கரவாதம் மாறாத நிலையானது
அன்பு, உண்மை, கருணை, சகோதரத்துவம் கண் மறைந்திட
புதர் மண்டிக் காடாகும் பாதையில்-கைகாட்டி மரமாய்
சிலுவை, அரை நிர்வாணியாய் கொலையுண்ட இயேசு

போதி மரத்தடியில் தியானத்தில் புத்தர்
குருஷேத்திரத்தில் புல்லாங்குழலோடு கண்ணன்
போரும், அமைதியும் நாம் வாழும் உலகானது
அன்பே சிவம்-வாழ்வே தவம் வாழ்ந்தறியும் உண்மையானது

மதம் கடந்த தனி மனித அன்பின் அகக்கிளர்ச்சியே
ஆன்மீகம், இறைவன் நம்பிக்கையல்ல,
வேதம், தர்க்கம் கடந்து வாழ்ந்தறியும் அனுபவம்
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்

இறைவனை நம்பிக்கையாக்கி, பலி
சடங்கு, ஆசாரங்களை வழிபாடாக்கி
மானுட சிந்தையை முடமாக்கும் மதம்
மதவாத வேசித்தனம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra -20-10-2023*

# இரண்டாம் உருமாற்றம்

---

***வரலாறுக்கு முற்பட்ட காலத்தே வாழ்ந்தறியும் உண்மையை***
அனுபூதியில் ***தரிசித்தவர் சிலர், வார்த்தை கடந்த சத்தியத்தை***
***"தரிசனம்" என்று வாழ்த்திப் போற்றியவரோ மெய்ஞானிகள்,***
***வாழ்ந்து காட்டியவர்களோ அவதார புருஷர்கள்***



அன்பே சிவம் அறியாத மானுடம், அஞ்சி நடுங்கிட
ஆயிரம் போலித்தெய்வங்கள், மிருக, நரபலிகளால்
நாறிச் சிவந்த பலிப்பீடங்கள்-வானை மறைத்த
எரிபலிகளின் கரும்புகைகள்

Everything, we hear is an opinion, not a fact. Everything we see is a perspective, not the truth
Osho

***பலியை அல்ல இரக்கத்தையே விரும்பும் அன்பே இறைவன்***
***எரிபலிகளைவிட கடவுளை அறியும் அறிவை விரும்பும் தேவன்***-(ஓசாயா 6:6)
***பலியை விட நீதி நேர்மையைவிரும்பும் தேவன்***- (நீதிமொழிகள் 21-3)

அன்பு மகனை எமக்களித்து அன்பினால் இன்புற்ற
இறைவன், வழியும், உண்மையும், வாழ்வுமானவரால்
நிலைவாழ்வை வரமாக்கிய ஈசன்
***பாவ நிவாரண பலியாய் தம் மகனை கேட்பாரோ***?

***ஆபிரகாமின் பலி***

--------------------------

தள்ளாத வயதில் குலம் தழைக்கத் தந்த
ஓர் வாரிசையும் தமக்குப் பலியிடக் கேட்டாரே-
விண்மீன்களும், கடற்கரை மணலும்போல் பெருகும்-உன் சந்ததி
பேரினத்தின் தந்தை என்ற பெயரே நாம் தரும் பெருநிதி

இறை வாக்குறுதியும் கலையும் கனவோ? பழங்கதையோ?
மனம் நொருங்கிட நொந்தழுதார் -வயது
நூறு கடந்த தந்தை ஆபிரகாம்.



சிந்தை நொந்தழுத இரவுகள்-எரியும் மனச்சிதையிலே
கருகும் பாச உணர்வுகள், மூன்று இரவும் பகலும்-
புத்திர சோகம் வாட்டிட, எரி நரகான வாழ்வு-காட்டுத்தீயில்
சிக்கிய கலைமான்போல் கணந்தோறும் மனதில் சாவு

மெய் சோர்ந்து உயிர் நடுங்கி-கண்ணீர் சிந்த, இதயம்
நொருங்கி, மொழி குழறத்-தந்தை நெஞ்சோடு மகனை
அணைத்தழுத நாட்கள், நிம்மதியிழந்த பொழுதுகள்

கொஞ்சும் மொழி பேசும் அஞ்சுகத்தை
நெஞ்சிலும், தோளிலும், மடியிலும் விளையாடும்
செம்மறிக் குட்டியை-அஞ்சி ஆவி நடுங்கிட
துஞ்சிடக் கடவுளும் பலியிடக் கேட்டாரே

இறைவா ஏனிந்தச் சோதனை ? கொஞ்சி மகிழ்ந்த
குலக்கொழுந்தை-பலி கொடுக்க அஞ்சிய நெஞ்சம் நடுங்கியது
அள்ளி அணைத்து மகிழ்ந்த தந்தை உள்ளம், முடிவில் உம்
சித்தமே என் சித்தம், நீ தந்தது உனதே என்று கீழ்ப்படிந்தது.

தடுத்தாட் கொண்ட வானகத் தந்தையோ
**புத்திரபாசம் இறையன்பிற்கு எத்துணை தடை** –எண்பித்தே
தளராத தந்தையின் விசுவாசத்தைப் போற்றினார்

உண்மையை நீ புரிந்திட பலியை அல்ல -இரக்கமே நாம்
விரும்புவது, அறிந்திட நாம் ஆடிய திருவிளையாடல் இது
அன்பு இறைவனை அகமும் முகமும் பூவாய் மலர
மகிழ்ந்து தொழுதார் தந்தை ஆபிரகாம்.

- - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - - -

அன்பின்றி, உண்மையின்றிச் சாரமற்ற உப்பாய்
சடங்காய், சட்டமாய், மரபாய் உருவழிந்த மதத்தில்
குளிர்காயும் மதவாதக் கும்பல் திருச்சங்கமானது-
ஆலயமோ கள்வர் குகையானது

அதிகார மையமாய்த் திருச்சங்கம், வணிக மையமாய்,
குபேரபுரியாய்க் கோயில், அரியணையிலோ சீஸர்
அடிமைக்கோலத்திலே யூதர், கூனிய கோலத்தில்
ஏழைகள்-தலைமைக் குருக்களாய் ஆசாட பூதிகள்

மனுவுருவான இறைவார்த்தை மங்கலமாய் ஒலித்தது
"மனந்திரும்பி நற்செய்தியை விசுவாசியுங்கள்"
உங்கள் உண்மை உணர்வு நிலைக்குத் திரும்புங்கள்-
இரண்டாம் பிறப்பிற்கான அறைகூவல்

அன்பு, கருணை, உண்மை, மன்னிப்பு இறை தன்மை
நம்மை நாம் அறியும் அறிவே மெய்யறிவு
விழிப்புணர்வே நம் சுதந்திரம்

***விழிப்புணர்வே ஆன்மீகம்! விழிப்புணர்வே விடுதலை!***
***விழிப்புணர்வே இறைதன்மை! விழிப்புணர்வே வாழ்வு !***

தூய மனதிற்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு-*விழிப்புணர்வின்*
*வியத்தகு படிப்பினை மலைப்போதனை*

அந்நியனாய், அஞ்சத்தக்கவராய், எட்டாத வானில்
வாழும் இறைவனை,அப்பா, தந்தாய் என்று அழையுங்கள்
அன்பே இறைவன்-உலகே ஓர் குடும்பம்

ஞானமாய் அவர் வாக்கு
எதிரியையும் அன்பு செய் என்ற
அமைதியின் புதிய நோக்கு

ஏழைகளை, ஒடுக்கப்பட்டவர்களை, விலைமாதரை,
புது வாழ்விற்கு அழைத்து-நண்பனாய் உறவாடி-ஒன்றாய்
உண்டு மகிழ்ந்து நல்வழி காட்டிய நாடோடிச் சித்தன்

"*பிறர் உங்களுக்கு என்ன செய்யவேண்டுமென்று*
*விரும்புகிறீர்களோ, அதையே நீங்களும் அவர்களுக்குச்*
*செய்யுங்கள்*" பொன் விதி அருளிய பெருமான்

அன்பினால் திருச்சட்டத்தை புடமிட்ட ஆன்மீகன்
உடல் இருப்பில் மனுமகனாய் , உள்ளுணாவில் இறைமகனாய்,
இறைவனையும் மனிதனையும் இணைக்கும் பாலமாய் இயேசு

ஆபிரகாமிற்கு முன் நான் இருக்கிறேன்
"நானும் தந்தையும் ஒன்று"
அறிவு கடந்த கிறிஸ்து உணர்வுநிலை
மதவாத யூதருக்கு புரியாத அத்வைதம்

சத்திய தரிசனம் காணாத மதவாதக் குருடர்
நற்செய்தியை கேட்கச் செவியில்லாச் செவிடர்
சிலுவை மரணத்தைப் பரிசளித்த மூடர்

## முதல் உருமாற்றம்

---

உருமாறி, உடை மாறி, ஒளிரும் சுடரான சுந்தரனோ
இறைமகன், திருச்சட்டமும், இறைவாக்கும் இவரில் நிறைவுறு
மோசேயும், எலியாவும் உரையாடி இன்புற
"*இவரே என் பிரிய மகன்-இவருக்கு செவிகொடுங்கள்*"
வாழ்த்திய தந்தையோ வாழும் இறைவன்

## இயேசுவின் இரண்டாம் உருமாற்றம்

-----------------------------------

அச்சமும், துயரும் வாட்டிட- மரணபயம் ஆட்கொள்ள
அழுகை குழந்தை மனதின் ஜெபமானது
ஆழ்துயரத்தில் சிந்திய வியர்வை குருதியானது

தந்தையே உமக்குச் சித்தமானால் இத்துன்பக்
கிண்ணத்தை, என்னிடமிருந்து அகற்றும்.-ஆனாலும்
என் சித்தமன்று உம் சித்தம் நிறைவேறட்டும்



வண்ணம் கலைந்த சித்திரமாய், வடிவம் குலைந்த
மூளிச் சிற்பமாய், ***உருக்குலைந்த தோற்றத்தில்***
***மனித சாயலே மறைந்த அவலமாய்***
சிலுவையில் இயேசுவின் உருமாற்றம்

கசையுழுது கனிந்த முதுகு துயர் சொல்ல
கழுமரச் சுமையால் கன்றிய தோள் வலி சொல்
ஆணிகளால் இறுகப் பிணைத்த உடல்,
வலி சொல்ல வார்த்தையின்றி குருதி சிந்தியது

வசைபட்டுப் பூஞ்செவிகள் வாட, முள்முடி சூடி
முகத்தாமரை சோர, நா வரண்டு தாகம் சொல்ல-இதயம்
நொந்து அம்மா என்று தாயை அழைத்தது

பங்கம் செய்யும் கள்வன் ஒருவன், பரகதி நாடும்
திருடன் ஒருவன், இரு கள்வர் நடுவே-மனுமகனோ
மானுடர் மனங்கவர்ந்த பெருங்கள்வன்

இரு கள்வர் நடுவில் -இருமை கடந்து, மனந்திரும்புதலுக்கும்-
விழிப்புணர்வுக்கும், சரணாகதிக்கும் -ஆணவத்திற்கும்
இடையே, சிலுவையில் தொங்கிய கோலம்
மானுட நிந்தையின் அலங்கோலம்

***காலம் நித்தியத்தை சந்தித்த அடையாளம்***
***பிரம்மம், மாயையை சந்தித்த குறியீடு சிலுவை***

''தந்தையே, அறியாமல் செய்யும், இவர்தம் பிழையைப்
பொறுத்தருள்வீர்'' கொடுஞ்செயல் புரிவோரையும்
தண்டனைத் தீர்பில் நின்று மீட்ட கருணாநிதி
***இறை கருணையின் மறுரூபமாய்த் தயாநிதி***

***இயேசு தம் அளப்பரிய அன்பினை***
***மன்னிப்பின் வழியாய் சிலுவையில் காட்டிட***
***தூய மனத்தோரே அவரைக் கண்டார்***



மதவாதம் கண்களை மறைக்க-மாச்சாரியம் இறங்கி வா,
உன்னை நம்புவோம் எனப் பழிக்க, “மனுமகனை”
“இறைமகனாய்” காண, கள்வர் டைஸ்மஸ் வரம் பெற்றார்
உள்ளுணர்வில்  சுத்த சைதன்யமாய் இன்புற்றார்

உயர நோக்கியும் உண்மையைக் காணாத குருடர்
உதிர்த்த வார்த்தைகளைக் கேட்டும்
இறை கருணயைப் புரியாத மூடர்

கண்முன் இருந்த உண்மையைக் காணத் தவறிய
ஆணவக் குருடன் பிலாத்து,
அதிகார மதபோதையில் தலைமைக் குரு

இயேசுவின் கொடிய மரணம், மதவாதத்தின் இழிந்த
நிர்வாணம், இறைவனோடு தன்னை நிகராக்கியவனை
கொல்லுதல், திருச்சட்டமான வேதம், மதப் பயங்கரவாதம்

இறைவன் விடுவிக்கின்றார்-இறை அபிஷேகம் பெற்றவர்
இயேசு என்பதன் பொருள், என் உயிரைக் கொடுக்கவும்
அதை மீளப் பெற்றுக்கொள்ளவும் , அதிகாரம் படைத்தவராய்,
ஆன்மாவாய் -திருச்சங்கம், அறியாத சின்மயனாய் இயேசு

***உடலைக் கொல்வோரால்-கிறிஸ்து***
***உணர்வைக் கொல்ல முடியாது***
அவர் தம் ஆவியை விழிப்புணர்வோடு
தந்தையிடம் கையளித்தார்

மரணத்தில் வாழ்வதன் மூலமே, மரணத்தைக் கடக்கவும்-
நித்தியத்துடன், ஒன்றாகவும் அவரால் முடிந்தது.
உடல் கழித்திட, ஆன்மா ஒளிர்ந்தது

இறைவன் தம் ஒரே பேறான மகனை
சிலுவையில் அறைந்து கொல்லுமளவிற்கு
***மானுடர்க்குச் சுதந்திரம் அளித்தார்***

மனிதர் தம்மை அறிந்திட, பரிபூரண சரணாகதியே-
மெய்ச் சுதந்திரம், புரிந்து மனம் திரும்பிட -இறை
கருணையின் வெளிப்பாடாய்ச் சிலுவையில் இயேசு

***“ஏலி ஏலி லாமா சபக்தானி”***
என் தந்தையே! என் தந்தையே ஏன் என்னைக் கை நெகிழ்ந்தீர்
“உண்மையின்” கதறல் இருப்பை அழைத்தது

பூரண சரணாகதிக்கு முன் புண்ணியனின் சிறு தடுமாற்றம்
கடலோடு சேரமுன் கங்கையின் மனக் குழப்பம்
வித்து மடிந்து நாற்று முளைத்திடும் புண்ணிய காலம்
பூரண சரணகாதி பூரித்து மலரும் உதயகாலம்
விழிப்புணர்வாகி இருப்போடு ஒன்றான அற்புதம்

***“உண்மையின் பெருவிதை மடிந்து, வாழ்வளிக்கும்***
***மரமாய் வெளிப்படும் அற்புதம் நடந்தேறியது***
இறைவன் முற்று முழுதாய் இயேசுவை இறக்க விட்டார்
மரணத்தின் வழியான விதையின் புது மலர்வே உயிர்ப்பு

இயேசு மரிக்கவில்லை, மாறாகத் தம் உயிரை
விழிப்புணர்வோடு கையளித்த பரிபூரண சரணாகதி
இயேசு கிறிஸ்துவாய் மலர்ந்த புதிய உரு மாற்றம்
வித்து முளைத்து நாற்றாய் மாறிய அற்புதம்



மனிதனும், இறைவனும் இணைந்திட
இறைமகனாய் அவர் உருமாற்றம்
மனுமகனாய் துன்புற்று- பூரண சரணாகதியில்
இயேசு-கிறிஸ்துவாய் உருமாறிய அமரத்துவம்

***விதை முளைத்து வாழ்வளிக்கும் மரமானது***
***வித்தை கண்டவரால் மரத்தைக் காண முடியவில்லை***
உயிர்த்த இயேசுவை- நெருக்கமாய் உறவாடிய
சீடர்களாலும் அடையாளம் காண முடியவில்லை

இயேசு, கிறிஸ்துவாகும் அகமலர்ச்சி , மரணத்தால் நடந்தது-
இல்லையேல், வெறும் அற்புதமே நிகழ்ந்திருக்கும்
உடலை வதைத்தவர்களால்-ஆன்மாவை ***விழிப்புணர்வுவை***
கொல்ல முடியவில்லை உடலுக்கே மரணம்-என்றும்
வாழும் ஆன்மாவிற்கு இறப்பில்லை

தம் பாடுகள் வழியாய்-உலகம் தம் அகநிர்வாணத்தை
அறிந்திட-தந்தை, அவரைக் கைநெகிழ்ந்தார்
“உம் இராட்சியம் வருக, உம் சித்தம் நிறைவேறுக”
இறைசித்தத்திற்கு சரணடைதலே நிலை வாழ்வு
வாழ்வாலும், சாவாலும் -இயேசு
சத்தியத்திற்குச் சான்று பகிர்ந்த நிகழ்வு

அகங்காரம் அழிந்த தூய உள்ளமே “ உண்மைச் சுதந்திரம்”
அதுவே நிலை வாழ்வு, அதுவே நம் மெய்யான இயல்பு
அதுவே விழிப்புணர்வு

வழியும், உண்மையும், வாழ்வுமான போதனையும், வாழ்வும்.
சத்தியம் சாவதில்லை-என்றும் நித்தியம் என்பதற்கே
அற்புத உடல் உயிர்ப்பு-அமரத்துவத்தில் நிலைப்பு

“நான்” என்ற உணர்வு -ஒன்றைத்தவிர
நம் சொந்தமென ஏதுமில்லை-
திருடவோ, கொள்ளையிடவோ முடியாத
ஆணவப் பொய்யே “நான்”



இருப்பவர் நாமே எனும் இறைதன்மையே மெய்யான “நான்”
கடவள் ஒரு நபரல்ல, இருப்பது கடவுள் தன்மையே
“நான்” என்ற அகங்கார உணர்வின் அழிவே மீட்பு

பலிகளால் நாறி இரத்த கறைபடிந்த ஆலயம்
இடிந்து கற்சுவராய் மாறிட இறைமகன் இட்ட சாபம்,
இறை குலம் நாமே ஆணவம்-மெஸியாவிற்காய்
காத்திருத்தல் தொடர் கதையான யாகம்

***“ விழித்தவர்” உண்மையின் ஒளியைக் கண்டார்-மற்றவர்***
***குருடனுக்கு குருடன் வழிகாட்ட குழியில் வீழ்கின்றார்.***
அன்பு இறைவன்-நரபலி கேட்கும் அரக்கன் அல்ல, தலை மகனைப்
பலி கேட்கும், கொடூர மோலேக் தெய்வமும் அல்ல

சத்தியத்திற்கு சாட்சியமான வார்த்தை,
வாழ்வும், போதனையும் ஒன்றான அன்பே கீதை
மானுட மீட்பிற்காய், தன் உயிரைக் கையளித்த மனிதன்
பொய்மையோடு சமரசம் செய்யாத புனிதன்

***அப்பமாதோ அமத பதங்-விழிப்புணர்வே இறவாமை***
(தம்மபதம்-அப்பமாத வக்கோ-1)
பூரண சரணாகதியால்-பூரணத்திடம் சரணடைந்த பூரணம்
சம்பூரணரானார், சுத்த சைதன்யத்திற்கு மரணம் இல்லை
***என்றும் வாழ்வே-அதுவே நிலை வாழ்வு***

பூரண சரணாகதி-இராஜ யோகமாக
விழிப்புணர்வின் உச்சத்தில் தம் ஆவியை கையளித்து
இயேசு கிறிஸ்துவாக மலர்ந்தார் (*Christo Genesis*)

பக்தி யோகம். ஞானயோகம், கர்ம யோகம் காட்டிய-
மகரிஷியாய், மனுபுத்திரனாய், புராணம் கடந்த
அவதார புருஷராய் அவர்

உண்மையை அன்பால் வாழ்வாக்கி வாழ்வோர்
மதம் கடந்து இன்புற்றார்-
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
வாழ்ந்தறியும் உண்மையே இயேசு

**பிரக்ஞானம் பிரம்மம்.**
**ஏஸ தன்மோ சனந்தனோ-என்றுமுள்ள தர்மம்**
**இதுவே இறை தன்மை**

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra -20-10-2023*

# கல்வாரிப் பயணம்

தாய்க்குலம் மகிழ்ந்து வாழ்த்திட
தந்தை தாயான அன்புறவு-ஏழை
எளியோர் போற்றிப் புகழ்ந்திட-மனுமகனாய்,
இறைமகனாய் வார்த்தையின் நல்வரவு





கசையிட்ட குருதிக்கோலங்களோ பொன்மேனியில்
வசையிட்ட கோலங்களோ பூஞ்செவியில்
முள்ளிட்ட கோலங்களோ சிரசில், மூங்கிலும்
கோலாக, சிவப்பு அங்கியும் ஆடையாக, "அரசே வாழி"
வாழ்த்தும் கேலியோ படையினர் மொழியில்

கானமிசைத்த பூங்குயில் ஊமையானது
ஆடிக்களித்த கலாபமயில் ஊனமானது-செம்மறியின்
தோள்களிலே சிலுவை பாரச் சுமையானது
தாளாத சோகம் தாயின் பூ நெஞ்சிலே வாளானது

கசை உழுது கனிந்த முதுகிலே தீராத வலி
வாழ்த்திப் போற்றிய மனம் புண்பட ஓயாத வசை மொழி
மணிமுடி சூட மறுத்தவர் சிரசிலோ முள்முடி
சிலுவை சுமந்திட இசையோடு ஒலிக்கும் கசையடி



கண் மறைத்த குருதியிலே வழி மறையும்
கழுமரப் பாரத்திலே பலம் நலியும்
ஊனுடலின் வேதனையில் நடை நலியும்
வீழ்ந்தவரைப் பார்த்த அன்னையர் விழிகள் நனையும்



கசை உழுத முதுகை கழுமரம் நசுக்கிட
முகம் படிய வீழ்ந்த சிரசை முட்கள் ஆழத் துழாவிட
புண்ணான மேனியில் பொங்கிடும் செந்நீர்
கண் பார்வை தந்தவர் விழிகளை மறைத்த கண்ணீர்

இசையோடு விசையாய்க் கசை அசைய
வசை தூற்றிப் பரிகசிக்க-வீழ்ந்தவர் தள்ளாடி
வேதனையோடு எழுந்து சிலுவையைச் சுமந்திட
தொடரும் மரண யாத்திரை

காணாத பெரும் துயர் கண்டு- பூ இதயம் துடிக்க
அன்ன நடையும், அணி நடையும் தளர்ந்திட
அழுதன கயல்கள், புலம்பின செவ்வாய்கள்
மெலிந்தன கொடி இடைகள்

ஆலிழை வயிறும் வேக, பொன் மார்பில் சுவாசமும்
சூடேறித் தகிக்க, மணங்கமழ் குழலும் கலையத்-தளிர்க்
கரங்களால் மார்பறைந்து அழுத நங்கையர்



மங்கையர் தம் சேல்விழிகள் சிவக்க வடித்த
கண்ணீரோ ஆறு, குலமாதர் மார்பறைந்து புலம்பியதோ
முகாரி ராகத்தில் ஏது? பாதையெங்கும் திரண்ட கூட்டம்
பார்த்த கொடிய காட்சியோ வரலாற்றில் ஏது?



கன்னித் தாயவள் நெஞ்சில் பாய்ந்த
வாளுக்கு இருபுறமும் கருக்கு-அன்று
சீமோன் முன்னுரைத்த பொய்க்காத வாக்கு

அன்னையர் கூட்டம் அழுது புலம்பி மாரடித்து
ஆறாத் துயர் சொல்ல-அண்ணலும் உரைத்தார்
“எஜெருசலேம் குமாரத்திகளே! எனக்காக அழவேண்டாம்
உங்களுக்காகவும், உங்கள் சந்ததிக்காவும் அழுங்கள்

கனி தரும் பச்சை மரத்திற்கே இக்கதியென்றால்
கனிகொடாப் பட்ட மரத்திற்கு- நேரும் கதி என்ன?

வடியும் குருதி கண்களை மறைக்க, வாதையால் நொந்த மேனி
இளைப்பாறத் துடிக்க, நாவரண்டு தாகம் என-மெய்வருந்தி
நோகுது என, தாய் கண்டு சேய் மனம் அம்மா என வெந்தணலில்
வீழ்ந்த பூந்தளிர்போல் அன்னை மனம் ஆனதென்ன?



நலிந்த தோளை நசுக்கிடும் பாரச்சிலுவை நடையைத் தடுக்கிட
விழுந்தவர் சிரசை முட்கள் துளைத்து வேதனையைக் கூட்டிட
அன்னையர் விழிகளில் ஆறாய்க் கண்ணீர்
பொன்மேனியிலே கசை பட்டுப் பொங்கிடும் செந்நீர்

ஓநாய்க் கூட்டத்தின் நடுவே-அஞ்சாது ஓடிவந்த வஞ்சிமகள்-
வெண்துகிலால் முகம் துடைத்து ஆறுதல் ஈந்த குலமகள்
அண்ணலின் ஆடை தொட்டு குணம் பெற்ற மங்கை-
மனுமகனிற்கு உடன் பிறவாத் தங்கை

முகம் படிந்த வெண்துகிலில்-அகம் படும் துயரின்
“பாவங்கள்” விளங்க, திரு முகம் பதித்தே
நன்றியை, அன்பால் பகிர்ந்த மனுமகன்

கண்ணயர்ந்த காயங்கள்- துயில் கலைந்த
மழலைகள்போல் அழுது கண்ணீர் சிந்திட, மேனியோடு
ஒட்டிய ஆடையை உரித்துக் களைந்தவர்
கண்பட்ட மேனி புண்படச் சிலுவையில் அறைந்தார்.

சீரிய நெற்றியிலே செஞ்சந்தனம் ஒப்ப பூசிய குருதி
சிரசிலே அரசன் என பரிகாசிக்கும் முள்முடி
செவ்விதழ் சோரக் கனிரசமாய்ப் பருகிடப் புளித்த காடி
கூரிய விழியும், குறு நகையும் மறைய, ஓயாத கேலி



நில மாந்தர் உய்வுற வந்த தேவமகன்
கழுமரத்தில் ஆணிகளால் சிறைப்பட்டதென்ன?
இரு கள்வரிடையே பெருங் கள்வனாய் மாறிடப்
புரிந்த குற்றம்தான் என்ன?

முள் கிழித்த மலரின் வலியை முழுவுடலும் அனுபவிக்க
தங்கமகன் அங்கமெல்லாம் பெருவலியால் துடிக்க
அம்மா எனக் கதறியவர் அழுகையும் மௌனிக்க
அன்னை நெஞ்சில் பாய்ந்த கொடுவாள்

அறைந்தவர் நெஞ்சில் துளி ஈரமுமில்லை
மேலாடையைப் பகிர்ந்து, அங்கிக்காய்
சீட்டுப்போட் மனதில் கடுகளவு வெட்கமுமில்லை



ஆதாமின் சந்ததி தன் நிர்வாணம் மறைத்திட-தன்
ஆடையைச் சூடக்கொடுத்த கருணாநிதி
வாழ்வுக்கனியாய் சிலுவையில் தொங்கிய தயாநிதி

***தந்தையே தாம் செய்வது இன்னதென்று அறியார்***
***இவர்களை மன்னியும்*** அறியாமையின் அவலத்தை சுட்டி
அன்புத் தந்தையிடம் மன்னிப்பை இரந்த இறையன்பு
வழியும், உண்மையும், வாழ்வும், போதனையும் ஒன்றாக
வதைப்போருக்கும் வாழ்வளித்த பேரன்பு

***இன்றே நீர் என் கூட பரகதியிலிருப்பாய்***
விழிப்புணர்வைக் கள்வருக்கு வரமாக்கிய மாகருணை

***அம்மா இதோ உன் மகன்-இதோ உன் தாய்***

தாய்க்கொரு மகன் எனக் காட்டி
தாயைப் பராமரிக்கும் பேற்றை தனயன் நிறைவேற்றி
அன்னையை உலகிற்கு தாயாய் தந்த வள்ளல்
என் சகோதரன் நீ என்ற அண்ணல்

***தாகமாயிருக்கின்றேன்***-மாங்காய்ப்பால்
உண்டு மலைமேல் இருப்பவருக்கு-தேங்காய்பால்
ஏதுக்கடி குதம்பாய் பாடும் சித்தருக்கோ-காடி
இனிக்கும் தாய்ப்பால் சுவைத்த கிள்ளை
இறுதியில் புளித்த காடியைச் சுவைத்த முல்லை

***ஏலி ஏலி லமா சபக்தானி-என் தந்தையே***
***என் தந்தையே ஏன் என்னைக் கை நெகிழ்ந்தீர் ?***
அனுவாய் நின்ற ஆணவம் அழுது கழிந்திட
அமைதியில் நிலைத்த தூய மனம்




***எல்லாம் நிறைவேறிற்று*** என அறிந்தவர்
***தந்தையே என் உயிரை உம் கையில் ஒப்படைக்கிறேன்***
கசப்பை தந்தவர் நெஞ்சம் இனிக்க
தன்னுயிரை உவந்தே கையளித்த மனுமகன்

என்னால் உயிரைக் கொடுக்கவும் முடியும்
என் உயிரைத் திரும்பவும் பெற்றுக் கொள்ளவும் முடியும்
ஆழியா ஆன்மா நான் -அறிந்தவர் உடல் நின்று,
சுத்த சைதன்யமாய், ஆன்மாவாய்ப் பிரிந்த இறைமகன்

ஊன் ஆகி, உயிராகிக் -கன்னி உதரத்தில் மகனாகி
வழியும், உண்மையும், வாழ்வுமான மனுமகன்
கழுமரத்தில் வாழ்வுக்கனியாகி
சத்தியத்திற்கு சாட்சியமாய் மலர்ந்த சிவன்



தபோர் மலையில் முதல் உருமாற்றம்
கல்வாரி மலையில் -இயேசு
கிறிஸ்துவான அக மாற்றம்.(*Christo Genesis*)
மண்ணவரோ மடிந்திட-விண்ணவரோ
விழிப்புணர்வோடு தம் உடலை உதிர்த்திட
சின்மயனாய் அவர் அகமாற்றம்



கசையால், வசையால், கழுமரச் சுமையால்
ஆணிகளால் வதைபட்ட மேனியோ குருதிக்கோலம்
தந்த உயிரைத் தந்தையிடம் ஒப்படைத்து-தாயிடம்
உடலை ஒப்படைத்து மாண்ட திருக்கோலம்

இன்னுயிர் ஈந்த உடல்-குழந்தைபோல்
அன்னை மடியில் இளைப்பாறத்-தாய்
விழிகளிலே கண்ணீர் -பூ நெஞ்சினிலோ
கூர் வாள் பாய்ந்திட கசியும் செந்நீர்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra -20-10-2023*

# திருமுகம்

---

## அன்று



இளமையில் முதுமை பாவைக்கு நோயீந்த சாபம்
வளமும், நலமும் வைத்தியத்தால் நலியும் பாவம்
களம் நிறைந்த கண்ணீரோ நோயால் வந்த சோகம்
மங்கை மனதிலோ நாளும் முகாரி இராகம்

தீரா நோய் வாட்டும் தேகமோ சருகான மலர்
ஆறாத் துயரில் மூழ்கிய மனதிலோ
அனலில் விழுந்த பூந்தளிரின் துயர்




ஆண்டுகள் பன்னீரண்டு நோயால் வாடி
வைத்தியரிடம் சொத்தும் சுகமுமிழந்த சோகம்
சீயோன் மலையை முட்டும்-
சுந்தரேசன் ஆடையைத் தொட்டதினால்
விசுவாச நங்கைக்கு கிட்டிய சுகப்பேரின்பமோ-
இதயவானில் முரசம் கொட்டும்.

நலம் கேட்டு இரந்திட்ட நங்கையின் பூங்கரத்தை
சுகம் சொல்லிக் குலக்கியது சுந்தரர் ஆடை
வரம் கேட்டு வந்தவள் பாலை உள்ளத்திற்கு
வசந்தம் ஈந்து வாழ்த்தியதோ மாறாத ஈகை

உத்தமர் தொடுகை பட்டவுடன்
ஓடி மறைந்தது மங்கையை வாட்டிய பீடை
உத்தமியாள் விசுவாச அறிக்கை கேட்டவுடன்
உவகையாள் பூரித்தது மரியன்னை நூற்ற ஆடை.

வானவரும் காணத்தவமிருக்கும் தேவர் மகனை
இறைவாக்கினர் வாக்குரைத்த காவிய நாயகனை
கண்டாள் மகிழ்ந்தாள் கரம் நீட்டி ஆடை
தொட்டே சுகம் பெற்றாள்- மங்கை வெரோணிக்கா

நலம் வாழ எந்நாளும் வாழ்த்துகள், நலமீந்தவர்
எந்நாளும் வாழ நலம் பெற்றவள் பாடும் கீதம்
சுகம் பெற்றவள் நெஞ்சில் சுந்தரன் முகமோ
***பகலிலும் ஒளிரும் பௌர்ணமி***

# இன்று

கண் பார்த்து நெஞ்செழுதிய அன்புக் காவியத்தை, மண்ணவரை மீட்க
விண்ணீந்த மா கொடையை-கழுமரம் சுமந்து காயமே , காயமாய்ச்
சிவந்திட, கல்வாரிப் பாதையில் பலிக் கடாவாய்க் கண்டாள்
கண்ணில் நீர் ஏந்தி, நெஞ்சில் துயர் எழுதி நொந்தாள் காரிகை

முள் தைத்த முகமோ வண்ணம் குலைந்த சித்திரம்
வாதையால் நொந்த தேகமோ மூளியான பளிங்குச் சிற்பம்
விழி மறைக்கும் குருதி வழி மறிக்க, நடை தடுக்கிட
புழுதியில் வீழ்ந்த வண்ணப் பூச்சரம்

ஊர் மொய்க்கும் விழிகளுக்கோ இயேசு வேடிக்கை
கார் மொய்க்காத வானும் கரைந்தழ-திருமகன்
கழுமரச் சுமையால் கால் தடுக்கி-மண்ணில்
விழுந்ததோ, கல்மனங்களுக்கு கேலிக்கை



கரம் தொடச் சுகமீந்த சுந்தரன் அங்கி
குருதி, வியர்வையால் ஈரமாகிப் புழுதியில் புரள,
கழுமரச் சுமை தாங்காது சாய்ந்திட்ட சுமை தாங்கி,
கண்டவள் பூ நெஞ்சம் நிலைகுலைந்தது ஏங்கி

கண்ணீரில் நீந்திடும் அன்னையர் கயல்களிலோ
சோகத் தூண்டிலை விழுங்கிட்ட அவலம்
மண்ணில் விழுந்து எழும் மனுமகன் நெஞ்சினிலோ
என்றும் உம் சித்தமே, என் சித்தம் எனும் தவம்

ஆண்டு பன்னிரண்டு பட்ட துயரோ கடுகளவு
கழுமரத்தோடு, மனுமகன் படும் துயரோ மலையளவு
படையினர் நடுவே துணிந்து சென்ற நங்கை-திருமுகம்
துடைத்து மாறாத அன்பைச் சொல்லிய மங்கை

குருதியும், வியர்வையும் விழி மறைக்க
கழுமரமோ தோள் நசுக்கி நடை தடுக்க-
முகம் குப்புற வீழ்ந்தவர் முகத்தை முள் துளைக்க
கசையும், கழுமரமும் மெய் வருத்திய கொடுமை

முள்வதைத்த திருமுகமோ புயலழித்த பூவனம்
வசை கிழித்த பூ இதயமோ-இறகொடிந்த புள்ளினம்
தோள் நசுக்கும் சிலுவையோ மதவாத ஆணவம்
ஏந்திழையாள் வெண்துகிலிலோ மனுமகனின் திருமுகம்

விழி பொழியும் நீர் மழையா? நதியா? எனப் பெருக்கெடுக்க
மொழி சொல்லும் ஆறுதலில், அன்னையின் அணைப்பும்
பெண்ணவள் நன்றிப் பெருக்கும் வெளிப்பட, குருதி,
வியர்வை, புழுதியில் வருந்திக் குளித்த இயேசுவின் ஆடை
குதூகலித்து கூறிய நன்றியிலோ அன்பின் வாடை

வெண்துகில் பற்றிய தோகை-ஈர விழிகளோடு
திருமுகத்தை அன்போடு ஒத்தி எடுத்த பாவை
முழுமதியை மறைத்த கார் முகிலும் கலைந்திட
பூந்துகிலில் தம் முகம் பதித்த திருமகனின் ஈகை

முத்தமிட்டு காட்டிக்கொடுத்த முழுமதியை
முத்தமிட்டு அன்பைச் சொன்னது வெண்துகில்
சத்தமிட்டு மறுதலித்த சத்தியத்தை-மறவேன்
நித்தியத்திற்கும் எனச்சான்று பகிர்ந்தது பெண்மயில்

கசையும், முள்ளும், கழுமரமும் வதைக்க
வசைமொழிகள் ஏளனமாய்ப் பழிக்க
மண்ணில் விழுந்தெழுந்து மனுமகன் தள்ளாடி நடக்க
மனம் தள்ளாட தாளாத் துயரில் மூழ்கிய மங்கை

பொங்கும் கண்ணீரெல்லாம் மழையாய் மாறி
தங்கமுகத்தின் கறையைக் கழுவிப் போக்காதோ?
விம்மிடும் நெஞ்சுக்குள் விழிக்கும் எரிமலையும்
வதைக்கும் நீசரைச் சுட்டு எரிக்காதோ?

கல்லில் வடித்த சிலையென சுகம் ஈந்த சுந்தரன் முகம்
காலத்திற்கும் நெஞ்சினில் நிலைத்தே பூபாளமிசைக்க
முள்ளில் விழுந்த மலரென நொந்தழும் அருள் முகம்
வெண்துகிலில் பதிய மங்கை நெஞ்சிலோ தீராத சோகம்

பூபாளம் பாடிய மனதில்-முகாரியின் அவலம்
பூங்கமிழ் வாவியான நெஞ்சில் பூகம்பம் வெடித்த அனர்த்தம்
வானம் பூசிய நீலம்போல்-உன்னைப் பூசிய என்தன் மனசு
கானக் கோகிலமாய் உன்தன் பெயர் சொல்லும் இளவயசு

உன்னால் மலர்ந்த புத்துயிர்ப்பு-இன்றோ,
உன் துயரால் என் நெஞ்சில் பெருந்தவிப்பு
என் கண்களிலோ ஏழ்கடலின் ஈரம்-எந்தன்
சின்ன இதயத்தை எரிநரகு வாட்டும் கொடுந்துயரம்

இனியவனே உந்தன், கல்வாரிப் பயணமோ
இனியாள் இதயத்தை நொருக்கிய கொடுந் துன்பம்
நீயல்லா என் வாழ்வோ நிலவில்லா வானம்-என்
மலர் வனத்தை தீ அழிக்கும் பெருந்துயரம்

கொதிக்கும் பாலையென இளநெஞ்சம் தவிக்க
சருகான பூ மனமோ மலரத் துடிக்க
பூத்த கண்ணீர் உறைந்து வருத்த-சொல்லியழ
வார்த்தையின்றி ஊமைக் குயிலான மங்கை



ஆடை தொட்டு குணமான மங்கை
ஆடை கட்டி ஆடும் நிலவான நங்கை-காதல்
ஓடையிலே நீராடிய பாவை-கழுமரம்
சுமக்கக் கண்டு கருகிச் சருகான பூவை




**காதல் பாவமல்ல-மனுமகனைக்**
**காதலியாதவர் கன்னியரல்ல**

அண்ணகர் உலகில் நான் கண்ட ஒரே ஆண்மகன்
திருநங்கையர் உலகில் திருமங்கையின்
உள்ளம் கவர்ந்த காதலன்

பக்தியால் உன்னைத் தொழுது நலம்பெற்றேன்
பாசத்தால் உன் திருமுகம் துடைத்து-உன்
கொடும் பயணத்தில் துணை நின்றேன்-நேசனே
நெஞ்சத்தில் உன்னை வைத்து, காதலால் துடிக்கின்றேன்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra -20-10-2023*

# அன்னையும் மகனும்

---



விசையோடு அசையும் கசையோ சாமரமான சூது
விறைப்போடு சிரம் தைத்த முள்ளோ முணிமுடியான கேடு
கரம் பற்றிய கழுமரமோ செங்கோலான வாதை
படை சூழப் பவனியோ ஊர் காண பரிகாசமான நிந்தை



நடை பிறழ, விழுந்த மேனியை நசுக்கும் மரம்
கலையிழந்த நிலாமுகத்தில் கார்முகில் ஒப்ப புழுதி
கல்லும் கனியும் காட்சியோ அவலச் சித்திரம்
கண்ட அன்னை இதயத்தை துளைத்த சோக அஸ்திரம்

கசையும், வசையும், முள்ளும், கழுமரமுமோ வாதை
கண் மறைத்த குருதியிலே மறையும் பாதை
வடிவம் சிதைந்த சிற்பம் ஒப்ப மைந்தன்
வண்ணம் குலைந்த ஓவியம் அன்ன அன்னை

கங்கைதான் பங்கய விழிகளில் பொங்கிப் பாய
காங்கைதான் தாய் வயிற்றைத் தீய்க்க
பொங்கிய மங்கலம் புண்பட்டுத் தரையில் விழ
பூ நெஞ்சுக்குள் புயலும் பூகம்பமுமான சோகம்

கபால மலையின் கொடுமுடி நோக்கி
கழுமரம் சுமந்து மனுமகனின் மரண யாத்திரை
சோகக் கூர் வாள் பூ நெஞ்சைத் துளைக்க
அன்னையின் விழிகளிலோ கண்ணீர்த்திரை



இழிந்த மதவாதம் -ஏழை எளியவருக்கு
இனியவனாய் நற்செய்தி வழங்கி
நம்பிக்கையளித்த நாடோடிப் போதகனுக்கு
வழங்கிய கொடிய மரணதண்டனை சிலுவை

சங்கம் வைத்து சமயம் வளர்த்த மதவாதம்
பங்கம் செய்து மனுமகனை வதைத்த சிறுமை
அங்கம் சிதைத்த கயவரையும் மன்னித்த கிருபை

கசை உழுத மேனி செம்பூவாய்க் காட்சிதர
வசை உழுது செவிகள் சருகாய் சாட்சியம் பகிர
சிரம் வழியும் உதிரும் விழி மறைக்க நடை பிறழ
கழுமரப் பாரத்தால் மண்ணில் வீழ்ந்த மகன்



விசையோடு விழுந்த கசையடிகள்-எழுந்திடு,
சுமந்திடு ஆணையிட- தாய் நெஞ்சம் நடுங்கிட
கண்ணீர் விழுவதா, உறைவதா எனப் பயந்திட
எழுந்து தள்ளாடி நடந்திட உதிரும் செந்நீர்

கசையால் வதைத்து, வசையால் நிந்தித்து
கழுமரம் சுமந்த மனுமகனின் கல்வாரி யாத்திரை
அன்னையர் விழிகளிலோ கண்ணீர்த் திரை
விழிப்புணர்வில்லா மனங்களோ நித்திரை

ஆளுநன் வழங்கிய மரண தண்டனை -நீதி தேவதைக்கோ
பெருநிந்தனை-மதவாதிகளுக்கோ இறை வந்தனை

தாயை அறியாத கன்றில்லை, தன் கன்றை
அறியாத தாயுமில்லை, அன்பு மனங்களிலோ அழுகை
ஆணவ மனங்களிலோ உவகை

இடம், வலம் கடந்த இரு கள்வரிடையே
பெருங்கள்வனாய்-நடுவில்
நன்மை தீமை கடந்த பெருநிலையில்
சிலுவையில் இயேசு



*"தந்தையே தாம் செய்வது இன்னதென்று
அறியாமல் செய்கிறார்கள்-இவர்களை மன்னியும்"*

வதைப்போரையும் குணமாக்க வரம் வேண்டி
தவமான மைந்தன் மன்றாட்டு-வலப்புறக்
கள்வன் டைஸ்மஸ் வியந்து மனந்திரும்பிட
நல் மருந்தான கருணையின் விருந்து

"உம் இராட்சியத்தில் வரும்போது, அடியேனை
அருள்கூர்ந்து நினைந்தருளும்" வரம் கேட்ட கள்வனுக்கு
"இன்றே நீ என்னோடு பரகதியிலிருப்பாய்"
விழிப்புணர்வை வரமாக்கிய பிதாமகன்

நிலைவாழ்வு பெரிதென்றே-வானவன் மனதில், நிலைத்த
எண்ணமாய் ஏனும் வாழ-தவமின்றிக் கேட்ட பெருவரம்
அமைதியே வரமான அருள் வரம்

"இறைமகன் நான் என்றான், இறைவன் காப்பாரோ
பார்ப்போம்"- எள்ளி நகையாடிய கும்பலில்-ஒரு
நாயாய் ஊளையிட்ட இடப்புறக் கள்வன் கெஸ்டஸ்

மடியும் வேளையிலும் மடியாத ஆணவம்
மமதையோடு மொழிந்தது- "**இறைமகன் நீயானால்
உன்னையும் என்னையும் காப்பாற்று**"

" **தாகமாயிருக்கிறது**" –பொய்யான மெய்யின்
வலி தணிக்க, புளித்த காடியோ மருந்து-
கல்மனங்களுக்கு கொலையும் கலையான விருந்து



காலம் நித்தியத்தை சந்தித்த வடிவாய்
இடம், வலம், மேல் கீழ் எண் திசை கடந்த
"**இறையிருப்பாய்**"
விரித்த கரங்கள் ஆசிர் வழங்கிட
விழிப்புணர்வோடு சிலுவையில் இயேசு

முள் தைத்த வேதனையை முடி சொல்ல
கசை கிழித்த சோதனையை முதுகு சொல்ல
ஆணிகள் துளைத்த காயத்தை அங்கங்கள் சொல்ல-
இழுத்துப் பிணைத்த அங்கம் எங்கும் கொடிய வலி
இளைப்பாற மரணம் ஒன்றே சீரிய வழி?



அடித்துச் சிதைத்து குற்றுயிரோடு
கோமகனைச் சிலுவையில் கண்ட தாயுள்ளம்
பட்ட துயரோ கொடிது-பார்த்து துடித்த
மகன் துயரோ உற்ற வாதையிலும் பெரிது

கண்ணீரால் பாதம் கழுவி-கூந்தலால் துடைத்து
நறுமணதைலத்தால் அபிஷேகம் செய்த
"விலைமகள்" அன்போ விலையில்லா நறுமணம்
அன்னைக்கு துணையான அன்பில் பரிமளம்

ஆடை தொட்டு குணமான மங்கை
திருமுகம் துடைத்து அன்பைச் சொல்ல
ஓவியமாய்த் தன் முகத்தை பதித்தே-நங்கைக்கு
நன்றி சொன்ன அன்போ காவியம்

காட்டிக்கொடுப்பு, மறுதலிப்பு என அழகிழந்து
ஓடிக் கண் மறைந்து மணமிழந்த சீடத்துவம்
அவர்களைப் போகவிடுங்கள்-சீடரைக் காத்த
மனுமகன் கருணையோ மகத்துவம், இறை தத்துவம்

***"ஏலி, ஏலி லமா சபக்தானி"***
என் தேவனே என் தேவனே ஏன் என்னை கைநெகிழ்ந்தீர்?
ஆற்றாமையால், அணுவளவு எஞ்சிய-ஆணவத்தின்
குரல் எழுந்து அடங்கிட-எங்கும் நிலைத்த பேரமைதி

என் சித்தமன்று உம் சித்தம் நிறைவேறுக
பூரண சரணாகதியடைந்த தூய மனம்
எல்லாம் முடிந்தது என்றே பூரித்த தேவகுணம்



***"தந்தையே, என் ஆவியை உம்மிடம் ஒப்படைக்கின்றேன்"***
விழிப்புணர்வோடு தன் உயிரைத்
தந்தையிடம் ஒப்படைத்து உடல் கழித்த சின்மயன்

வித்து மடிந்து நாற்று முளைத்திட, அம்மை, அப்பனின்றி
***இயேசு, கிறிஸ்துவாய் தம்மைத் தாமே பிறப்பித்த அற்புதம்***

மதியத்தில் அந்தகாரம் பூமியை ஆட்கொள்ள
மண்ணும் அதிர்ந்திட-விண்ணும் கொதித்து
இடியாய் முழங்கிடப் பெருமழை பொழிந்தது
இயற்கை அழுதிட இருப்பும் அழுதது

ஆலயத் திரைச்சீலை மேலிருந்து கீழ் நடுவில்
இரண்டாய்க் கிழிந்திட, தந்தையும், மகனும் இணைந்து
உறவாடத் தடையான "**மதத்திரை ஒழிந்தது**"



அன்பையும், உண்மையையும் வாழ்வாக்கி வாழும்
அக வாழ்வே-மெய் வழிபாடு அறைகூவலானது
யூதருக்குச் சொந்தமான இறைவன்
யாவருக்கும் சொந்தம் நற்செய்தியானது

கண்ணுக்கு மணியான மகனை கசை கிழித்திடக் கண்டாள்-
மகனே என் மகனே எனப் போற்றிய மாபெரும் செல்வத்தை
வசைகள் தூற்றிடக் கேட்டாள், மணிவயிறு சுமந்த மகன்- பாரக்
கழுமரம் சுமக்கக் கண்டாள்-தாய்ப்பால் சுவைத்த மழலை
தாகம் எனத் தவிக்கக் கண்டாள்

அணைத்து மகிழ்ந்த கரங்களையும்-தொலைந்த
ஆடுகளைத் தேடி அலைந்த கால்களையும்-துளைத்த
ஆணிகளையும் கண்டாள்-நெய் சூடி வாரி மகிழ்ந்த குழல்
வாடி முள்முடி சூடிடக் கண்டாள்-நேசமகனுக்கு
நெய்த ஆடையை-கள்வர் கொள்ளையிடக் கண்டாள்

எளிதான நுகம் படைத்த இளையவன் தோள்களில்
வலிதான நுகமாய் பாரச் சிலுவையும் கண்டாள்
வலிக்குமே என் மகனே அழுத அன்னை -மகனோடு
***நெஞ்சில் பாரச்சிலுவை சுமந்தாள்***

தோளிலும், மடியிலும், மார்பிலும் பூமாலைபோல்
சூடித் தாலாட்டிய பிள்ளை, வரமாய் கிடைத்த
இறை கிள்ளை -வதையால் வாடி மடியக் கண்டாள்



பெற்ற மணிவயிற்றில் சோகப் பூகம்பம் வெடித்திட
பார்த்துப் பூரித்த விழிகளில் கங்கை பெருகிட
உம் நெஞ்சை ஓர் வாள் ஊடுருவும்-சிமியோன்
வார்த்தைகளை எண்ணியழுதாள் அம்மை

ஆணவத்தால் ஆதாம் இழந்ததோ இறையன்பு
தந்தையே சரணம் என-இயேசு சுவைத்ததோ
வாழும் இறைவனின் வற்றாத பேரன்பு



வீட்டை அடைந்த மகன் இன்புற , வாழ்க்கை வட்டம்
பூர்த்தியானது, ஆணவம் கழித்த பூரண சரணாகதியே
நிலைவாழ்விற்கு வழியானது

நம் சிலுவையை நாம் சுமந்து, அவரைப் பின்பற்றி
நடப்பதே நம் மீட்பு, இயேசுவாக நாம் மாறாதவரை
இறைவனை அறியவும் முடியாது, அன்பு செய்யவும் முடியாது





விண்ணைத் தேர்ந்தால் வாழ்வு,
***மண்ணைத் தேர்ந்தால் சாவு***
இருபுறம் தொங்கிய -இரு கள்வர்களாய்
இருமையின் வடிவம் நாமே

நாமே கெஸ்டஸ்-நாமே டைஸ்மஸ்
மத்தியிலோ இறைமை-தேர்வோ நம் உரிமை

சிரம் துளைத்த முள்ளும், அங்கம் துளைத்த ஆணிகளும்
இதயம் துளைத்த ஈட்டியும்-குருதியில் தோய்ந்து
மௌனத்தில் நிலைத்த சோகம்
பங்கம் செய்த சங்கத்தின் மனதிலோ ஆனந்தம்

இதயம் துளைத்த ஈட்டிக்கு-துளிக் குருதியையும்,
நீரையும் பன்னீராய்த் தெளித்து -பரிவோடு
நல்வரவு கூறி அன்பைச் சொல்லிய இதயம்

பார்த்தவர் கண்களிலோ ஈரம்
குத்தியவர் இதயத்திலோ பெருந்துயரம்

எல்லாமுமாகி எல்லோருள்ளும்
ஒளிரும் மெய்ப்பொருள்
எளிய மனத்தவருக்கு இறையரசானது
தூய மனத்தவருக்கு சத்திய தரிசனமானது

மார்பினும், தோளினும் போட்டு மகிழ்ந்த வண்ணப் பூமாலை,
அன்னை மனத்தில் நாளும் மணந்த அன்புச் சோலை,
அம்மா என்றழைக்கும் வாச முல்லை-இன்றோ புழுதியில் புரண்டு
அணையும் தீபமாய் புயலில் வாடும் கொடுமைதான் என்னே!

பாலூட்டி வளர்த்த கிளியை மலையரவம் கொல்ல,
பழம் கொடுத்துப் பார்த்த கிள்ளையை வல்லூறுகள் கொத்த,
கண்ணீர் மழை பெருக, கனி நெஞ்சு நொருங்க
எல்லாம் வல்லவரை தொழுது அழுதாள் அன்னை



***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra -21-10-2023

# பொற்பாதம்

---

**அன்று**

கண்படும் செங்கமலப் பாதங்களை
புண்பட வருத்திய புழுதி கண்டு கலங்கிய மங்கை
கண்ணீரால் கழுவி, நறுமண தைலத்தாள் அபிஷேகித்து
வாசக்கூந்தலால் துடைத்து பூஜை செய்த நங்கை





**இன்று**

நெய்யின்றிச் சுரிகுழல் வாடக்-குருதி வடிந்தோட
சுந்தரன் சிரசில் முள்முடி கண்டாள்
மந்திரமோ, மாயமோ, வஞ்சகர் தந்திரமோ
அமுதை பொழிந்த முழுநிலவை அறைந்து கொல்ல
ஆலைவாய்ப் பட்ட கரும்புபோல் துவைந்த பூவை
நேசரை நெஞ்சிலிருத்தி, நித்தம் பூஜித்த பக்தை

ஆணி துளைத்த பங்கயப் பாதங்களைத் தழுவி
ஐயனே என் ஆண்டவரே அழுதவள் நுதலில்
ஒழுகும் குருதி குங்குமாய் சங்கமிக்க-தாளத்துயரில்
அனலிடைப் புழுப்போல் துடித்த கங்கை



அணை உடைத்த வெள்ளமெனக் கண்ணீர் பெருக
காஞ்சன மேனியும் பூஞ்சடையும் புழுதியில் புரள
கணை தைத்த மான்போல் கோதை நெஞ்சம்
கட்டியணைத்து அழுதிட மரி அன்னையே தஞ்சம்

வானுயர்ந்து நின்றவர்-தன்னுயிரை, வானகத்
தந்தையிடம் கையளிக்க, என்னுயிரை யாரிடம்
கொடுப்பேன் இன்னுயிரே, என்னுயிரே என நெஞ்சு புலம்பிட
நீள்விழிகளில் நீர்ப்பூக்கள் பூத்துச் சொரிய
பாதங்கள் பற்றிப் பொருமினாள் புலம்பினாள்
திங்கள் காணாத செவ்வாய் மங்கை அல்லி

நின்னடிமை நான் என்றே- கண்ணீர் மஞ்சன நீராக
இன்றும் திருப்பாதங்களை அபிஷேகித்த மங்கை
சோக அம்பு தைத்த இதயத்தை சொந்தமாக்கி
துயர் பகிர்ந்த நங்கை, அன்பின் கங்கை



**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-21-10-2023

# சோதனை

---

வண்ணம் குலைந்த ஓவியமோ? வடிவம் சிதைந்த சிற்பமோ?
சுருதி குலைந்த நாயனமோ? சுந்தரம் கலைந்திட-
அந்தரத்தில் தொங்கி நிற்பது, மானுடமோ? இல்லை
வேறினமோ? நல்மனங்களுக்கோ சோதனை, தீராத வேதனை?





முள்முடி சூடி மூன்றாணிகளில் தொங்கிடும்
முகத்திலோ மானுட சாயலின் அஸ்தமனம்-மதவாத
நெஞ்சங்களிலோ ஆனந்தக் களிப்பின் உற்சவம்

உயரத் தொங்கியவருக்கு, உலக இராட்சியங்களைக்
காட்டிய அலகை, மண்டியிட்டு என்னை மனதால் வணங்கு
மறு நொடியே வாழ்வு மாறி மீட்சி உரித்தாக
மாட்சி, மகிமை உனதாகும்

மண், பொன், பெண் இன்பம் -
மனுமகனே நீ அறியாத பேரின்பம் -இளமையில்
மடிவதானால் யாருக்கு என்ன இலாபம் ?
உன் மக்களோ உன்னை நிராகாகரித்த பாவம்

பொன்னும், மணியும், குபேர நிதியும், புள்ளுறையும்
சோலைகளும், பூங்கமிழ் வாவிகளும் நிறைந்த வளநாட்டின்
மணிமுடி உனதாகும்-ஏவல் செய்ய அரசரும், எண்ணிக்கையில்
அடங்காச் சேனையும் உன் வலி பறைசாற்றும்

நாடோடி வாழ்வெதற்கு?-ஊர் போடும் விருந்தெதற்கு?
நாளும் அறுசுவை விருந்துண்டு வாழ-
உன் குடிகளும் உன்னை மனதாரப் போற்ற
முள்முடி எதற்கு மணி முடி சூடு



கழுமரம் எதற்கு அரியணை ஏறு, ஆணிகள் துளைத்த
கரத்தில் செங்கோல் ஏந்து, குற்றப் பத்திரம் தலை மேல் எதற்கு?
கட்டியம் ஒலித்திட, வெண்கொற்றக் குடை விரிந்திட
அரியணை அமர்ந்து, இராஜாதி இராஜனாய் உலகை ஆளு

அரைக்கச்சை எதற்கு-பொன்னும், மணியும் பதித்த
பரிமளப் பட்டாடை சூடி மன்னாதி மன்னனாய் மாறு
கோலம் மாறிடச் சிரசில் மகுடம் ஏறிட, கோல் ஏந்தி,
அரியணை அமர்ந்திட, படை துதிக்க, பாவலர் புகழ் பாடுவார்

மண்ணாள, மகளீர் சுகம் காண இறங்கி வா
தூற்றியவர் அஞ்சிப் போற்றுவார், இழிவாய்
மடியும் நேரத்திலேனும் மனம் மாறு
மங்காத பெருவாழ்வு உனதாகும்-




வேலோ விழிகள், வில்லோ புருவம், இளமாங்கனிபோல் பருவம்-
நூபுரம் சிலிர்க்க, மேகலை சினுங்க, பூங்கமழ் கூந்தலில்
பரிமளம் மணக்க, அன்ன நடையும், சின்ன இடையுமாய்
அழகிகள் பல்லாயிரம் அந்தப்புரம் வாழ மண்ணிலோ சொர்க்கம்
நாளும் மஞ்சத்திலே காதல் வைபோகம்

கொடியிடையாளோ கற்பகத்தின் பூங்கொம்பு
கொவ்வை இதழ்களிலோ காமதேனுவின் நறுந்தேறல்
பெண்ணின்பமோ பேரின்பம் -திகட்டாத காமசுகம்-
அழகு மங்கையரோ காமத்துப்பாலின் அட்சய பாத்திரம்

பூ மலர்ந்த கார்குழலில் மாறாப் பூவாசம்
புன்னகை மலர்ந்த செவ்விதழ்களில் நறுந்தேறலின் வாசம்
மதிவதனத்தில் மங்காத காதலின் நிலவொளி
மலர்மேனியெங்கும் அழகின் தணணொளி



சங்குக் கழுத்தும், செங்கலச மார்பும், மூங்கில் தோள்களுமென
சந்தனத்தில் செதுக்கிய சிற்பம், சிற்றிடையில் மேகலை குலுங்க
சிறு பஞ்சுப்பாதங்களில் சிலம்பு சினுங்க, காந்தளோ கைகள்,
கருங்குவளையோ விழிகள், காஞ்சனமேனியில் நாணமோ அணி

கண் பார்த்து நெஞ்செழுத காவியம், மண் பார்த்த
நாணத்தை மனந்தீட்ட ஓவியம், மொழியில் கோகிலம்,
சாயலில் தோகை, காதல் மனம் பூத்தாட மங்கையோ
மணக்கும் முல்லை, காதலே சொர்க்கம்-கன்னியோ வாசல்
காதல் கடலில் மூழ்கி மடிந்தால்-கிட்டும் மோட்சம்



கன்னியர் அழகை நீ கண்டதில்லை, காமப்பெருஞ்சுவை
நீ சுவைத்தில்லை, அறியாப் பெருஞ்சுவை அறிந்து இன்புற
எல்லாம் என் வசம்-என்னைப் பணிந்தால்
மறுநொடி அனைத்தும் உன் வசம்

கல்லை நீ அப்பமாக்கவில்லை-இன்றோ புளித்த காடியை
திராட்சை மதுவாக்கு, கசப்பான வாழ்வு இனிக்கும்-கரம் துளைத்த
ஆணியைச் செங்கோலாய் மாற்று-முள்முடி மகுடமாய் மாறிட
ஆளுநனும் தலைமைக் குருவும் மண்டியிட்டு வணங்குவார்

கல்லில் உன் பாதம் மோதாது வெறும் சொல்லாக,
ஆணிகள் துளைத்த அவயவங்கள் ஆறிட, இறைமகனானால்
இறங்கி வா-உலகு உனதாகும்-மண்டியிட்டு, மானுடர்
இறைமகன் நீ என்பார், மாயம் செய்-வல்லமையே இறைதன்மை

அலகையின் வார்த்தைகளில் அலங்காரம்
ஆண்டவன் வார்த்தையோ அலங்கோலம்
இறுதிச் சோதனையிலும் கலையாத திருக்கோலம்
இறைவனே சரணம் என்ற சச்சிதானந்தம்



மண்ணரசு தேடிய மாமன்னரெல்லாம்
மாண்டு புழுதியானார்-மகுடம் கைமாறிட
வரலாற்றில் வெற்று ஏடானார்

பெண் இன்பம் பேரின்பம் என்ற ஞானியரும் பேதையராய்
பெருமை இழந்தார், இளமையில் உடற்சுகம்-முதுமையில்
ஏது சுகம்? எல்லாம் கானல் நீரே, மூப்பு. பிணி, சாவு
வருத்தும்-மெய் கடந்த விழிப்புணர்வே பேரின்பம்

இன்ப துன்பம் உடலுக்கேயன்றி, உள்ளிருக்கும்
சுயத்துக்கல்ல, மரணம் உடலுக்கேயன்றி
ஆன்மா அழிவதில்லை, அறிவாய் அலகையே

உலகமெல்லாம் உனதானாலும், தன்னை இழந்தால்
பயனேது? வெளியே தெரிவது உலக ஆட்சி
எனக்குள் ஒளிர்வதோ சுயத்தின் மாட்சி

மண்ணரசெல்லாம் மண்ணாய்ப் போகும்
மறையாத இறையரசோ தூய என் உள்ளம்,
மண்ணை வெல்வது வெற்றியல்ல
மனதை வெல்வதே மெய்யான வெற்றி

மண், பொன், பெண் இன்பம் எல்லாம் வெளியே, தன்னை அறிந்த
மெய்யறிவோ ஞானம், வெளியில் இருப்பதைக் கொண்டு உள் வெளியை
நிரப்ப முடியாது, ஒன்றை விற்றுப் பலவற்றை வாங்குபவன் மடையன்,
உள்ளதெல்லாம் விற்று-மெய்ஞானம் கண்டவனோ ஞானி

நிரந்தரமற்றதை தேடும் மனித வாழ்வு
மரணத்திற்கான வெறும் காத்திருத்தலே
தன்னுள் நிரந்தரத்தை கண்டவன் வாழ்வோ
காலம், மரணம் கடந்த அமரத்துவமே

உலகில் இருப்பவை எல்லாம்
மனதின் ஆசையிலும், கனவிலும் இருப்பவை
மனம் மடிய எல்லாம் மறையும்

தந்தை ஒருவர் நமக்கிருக்க-தரணி எல்லாம் உத்தமர்
தாள் பணிந்து தொழுதிருக்க, சிந்தை எல்லாம் அப்பா
உன் சித்தம் என்றே திருவடி தொழுது மகிழ்ந்திருக்க
அலகையே ஏது குறை எமக்கு?



மண்ணால் ஆனது மண்ணிற்குப் போக, விண்ணால்
ஆனது விண்ணேக உடலல்ல, அழியாத ஆன்மா
வழியும், உண்மையும், வாழ்வும் ''நானே''

வார்த்தை கேட்டு வாடிய அலகை, நாணிக் கூனி நாறும்
நெடுமேனி வாட தோற்று ஓடி மறைந்த பொய்மை
கொண்டு வந்ததும் ஏதுமில்லை, கொண்டு போவதும் ஏதுமில்லை
சூனியமே நாம்- சுத்த சைதன்யமே-நாம்
சத்தியம், சிவம் சுந்தரமே நாம், சின்மயமே நம் சொரூபம்

மண் காட்டி, பொன் காட்டி, மாட்சி காட்டி
மாதர் சுகம் காண பெண் காட்டிய அலகை
மெய் சுவைக்கும் இன்பமெல்லாம் பொய்யென்றே
மெய்கண்டான் தாள் பணிந்த வார்த்தையிலோ
வாதையிலும் மாறாத உவகை
வீடு பேறோ முப்பால் கடந்த பேருவகை



அலகை என ஏதுமில்லை, ஆணவ மனமே அலகை
மனம் அழியும் கணத்தில்-ஆணவத்தின் தாண்டவம்-
காமத்தை துாண்டி, கர்வபங்கம் செய்யும் ஆணவம்

மனம் அழிந்த நிலையே மானுடத்தின் சுதந்திரம்-பூரணம்
துாய மனமே கிறிஸ்து, கிருஷ்ணா, புத்த நிலை
அதுவே மானுடத்தின் உண்மை நிலை

இருப்பெனும் பெருங்கடலில் எழுந்த
விழிப்புணர்வெனும் பேரலையாய்-இயேசு கிறிஸ்து,
கடலும், அலையும் ஒன்றே

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-21-10-2023*

# தவமின்றிக் கிடைத்த வரம்-DISMAS



***ஆதி மனிதனுக்குச் சோதனை வந்தது***
***ஆண்டவன் போலாகும் ஆசையும் பிறந்தது***
***ஆணவமே சாபமாய் நிலைத்திட***
***இறை தரிசனம் கண் மறைந்து போனது***



விலக்கப்பட்ட கனியை உண்டவன் கலக்கமுற்றான்
நன்மை தீமை அறிந்தவன் நாணிட விழித்த மனச்சான்று
இழிந்த "நிர்வாணத்தைப்" பழித்திட அத்தியிலையை
ஆடையாக்கி, குற்றவுணர்வால் ஓடி ஒளிந்த நிர்வாணி

குற்றம் மறுத்தவன்-பெண்ணைக் குற்றம் சாட்ட, பெண்ணோ
பாம்பைச் சாட்ட-குற்றத்தை ஏற்காத ஆணவம்
வெட்கத்தில் நிலைத்திட, ஏதேனை இழந்த ஆதி மானுடம்

***தூய உள்ளமே*** இறை சந்நிதி, ஆணவம் பிறந்திட,
வீடு மறைந்திட-பேரானந்தம் கனவாய் கலைந்து
பழங்கதையாய் ஆனது, வாழ்வு போராட்டமானது

"தந்தையும் நானும்" ஒன்றென்றது அத்வைதம்
இறைவனுக்கு தன்னை நிகராக்கிய மானுடனை
கொல்லல் இறை நீதி என்றது மதவாதம்

****

கசை உழுது, வசை கேட்டு, அடி பட்டு
கழுமரம் சுமந்து, வாதையுற்று காயமான காயம்
கட்டியணைத்து ஒட்டிக்கிடந்த தாயார் நெய்த
அங்கி சிவந்திட குருதியே சாயம்

ஒட்டிய அங்கியை உரித்துக் கழற்றிடப், பற்றிய காயங்கள்
கதறிச் செந்நீர் சிந்திட, ஆவி துடிக்க அங்கம் துளைத்துச்
சிலுவையில் அறைந்து அகமகிழ்ந்த சிந்தையிலோ குரூரம்.
வதைப்போருக்கும் மன்னிப்பை இரந்த மனமோ தெய்வீகம்

***கழுமரத்தில்*** மனுமகனோ ***வாழ்வுக் கனி***
***குணமளிக்கும் வெண்கலப் பாம்போ***
***விழித்த குண்டலினி***

கொலை விழாக் காணவந்த கூட்டமோ நடைப்பிணம்
கழுமரத்தின் அதிசயம் காணாத அந்தக இனம்

இரு கள்வர் நடுவே பெருங்கள்வனாய் கழுமரத்தில் மனுமகன்
கதிரவன் முகம் மறைத்துக் கலங்கிட, கூடிவந்து
முகம் கறுத்த கார்மேகம், பூமியெங்கும் அந்தகாரம்
மதவாத மனங்களிலே ஆணவத்தின் ஆரவாரம்



அன்பினால் திருச்சட்டத்தைப் புடமிட்ட அகக்கிளர்ச்சியாளன்-
எதிரிக்கும் அன்பு என்ற அன்புப் புரட்சியாளன்
"***தந்தையே இவர்களை மன்னியும்-தாம்***
***செய்வது இன்னதென்று அறியாமல் செய்கிறார்கள்***"
தம் போதனையும் வாழ்வும் ஒன்றெனக் காட்டிய கருணாகரன்

வதைப்போர், நிந்திப்போரை மன்னித்திட
வல்ல இறைவனை தந்தை என வேண்டுபவர்
மனுமகனோ? இல்லை இறைமகனோ?

வலப்புறக் கள்வன் ***டைஸ்மஸ்*** வியந்து நோக்கிட
இடப்புறக் கள்வர் ***கெஸ்டஸ்*** இகழ்ந்தான்
" ***மெசியா நீர் என்றால்***
***உன்னையும் எங்களையும் காப்பாற்றும்***"

மடியும் வேளையில் வாழ்வே மாயம் என அறிந்தவன்
முடிவும் நெருங்கிட, செய் பிழைக்காய் மனம் வருந்தினான்
"***நாம் தண்டனை பெறுவது நீதியே***
***இவரோ குற்றமற்ற செம்மறி*** மொழிந்தவன்
கண்ணீர் சிந்தி கருணையை இதயத்தால் பூஜித்த பக்தன்



அரசரென சிரசணிந்த முள் முடி, அரியணையோ கழுமரம்-
பூமியோ கால்மனை, வார்த்தையிலோ கருணையின் இசையொலி
விண்ணுக்கும், மண்ணுக்குமிடையே விரித்த கரங்கள்
ஆசீர் அருளிட -மனித ரூபம் கடந்த பிரணவம்

கருணையின் திருவடிவம் இறை மன்னிப்பை, ஈவு இரக்கமற்ற
கொடியவருக்காய் வேண்டிடத், தன்னிலை உணர்ந்தவனோ
பெருநிதியாய் தயாநிதியைக் கண்டு சரணடைந்த பக்தன்
பாவி மனந்திரும்பிட வாழ்வளிக்கும் வார்த்தையோ அற்புதம்

வெற்றுடம்போடு குற்றுயிராய் நின்றவரிடம், ஆண்டவரே,
ஆட்சியுரிமை பெற்று நீர் வரும்போது பாவி என்னை நினைந்தருளும்
கண்ணீர் தவமாக, நிலையற்ற செல்வம் திருடி வாழ்வை இழந்த
கள்வர், நிலை வாழ்வை வரமாய் வேண்டிய உத்தமன்

வாட்டிடும் பெருவலி அங்கங்களை ஆட்டிப்படைக்க
சாட்டையின் கொடுவலி முதுகைச் சிதைக்க, உச்சத்தில்
நா வரண்டு தாகத்தால் தவிக்க, வரம் கேட்ட மனம் கவர்ந்த
கள்வனை, வியந்து கண்ணோக்கிய கருணாகரன்

அரசனும், ஆளுநனும், தலைமைக் குருக்களும்
அறியாத இரகசியத்தை அறிந்தவர் யாரோ?
சீடரும், சிநேகிதரும் கேட்காத வரத்தை மடியும்
வேளையில் கேட்பவர் கள்வரோ? ஞானியோ?

பரம்பொருளாய்த் “தன்னைக்” கண்டவரை கண்டு
பூரித்த உள்ளம்-உறுதியாய் மொழிந்தது
“***இன்று நீர் என் கூட பேரின்ப வீட்டிலிருப்பீர்***”
புரியாத தவத்திற்கு மோட்சம் பெருவரமானது



நாம ரூபம் கடந்த சின்மயன்,
தவமாய்க் கேட்டவர், வரமாய்ச் சுவைத்திட
ஆனந்தப் பிரக்ஞை அருளிய சச்சிதானந்தன்

தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு
கல்வாரியிலும் பொய்காத சத்தியம்

பிறந்தவர் இறப்பதும், இறந்தவர் பிறப்பதும் இயற்கையின் நியதி-
தன்னை அறிந்தவர் ஆன்மா நான் என அறிந்தவர்
மரணத்தை சுவைக்க மறுபடிப் பிறப்பதில்லை
என்றுமுள்ள தர்மத்தின் நீதி

கருணையின் மொழியில் விழித்த கள்வரோ
மடியும் நேரத்தில் மனம் மாறி-வாழ்வைத் தவமாக்கி
நிலைவாழ்வை வரமாக்கிட்ட மாமுனி

உள்ளுணர்வின் உன்னத நிலையே மோட்சம், பரகதி,
ஆணவத்தின் இறப்பும்-தூய உள்ளுணர்வின் பிறப்புமாய்
நல்ல கள்வரின் அக மாற்றம்-இரண்டாம் பிறப்பானது
இருப்போடு இன்புறும் பரமானந்தமானது

நிலையற்றதை திருடிய கள்வர் வாழ்வில் ஏது நிம்மதி ?
கழுமரமே கொடுந் தண்டனையாக-மரணவாசலில் கண்ட
கருணாநிதியோ குபேரநிதி, மனம் மாறிச் சரணடைய
தயாநிதியோ பெருநிதி, வானகச் செலவமாய்ப் பரகதி

இறைவன் நம் தந்தை, நீங்கள் என் சகோதரரே
உலகின் ஒளி நீங்கள்- உப்பு நீங்கள்
ஒளியோ வழிகாட்டும், உப்போ உணவுக்குச்
சுவையூட்டும், உணவைப் பாதுகாக்கும்

தந்தை தூயவராய் இருப்பதுபோல் நீங்களும்
தூயவராய் இருங்கள்
***அத்வைத நிலையின் ஆனந்தம் சுவைக்க***
***அழைக்கும் ஞானச்சித்தர்***

பொன், பொருள் தேடும் திருடன்-நிலைவாழ்வை அருளும்
தயாநிதியை கண்டதும் அதிசயம், மடியும் நிலையில்
நிலைவாழ்வை-அருள்நிதியிடம் வரமாய் கேட்டதோ பேரதிசயம்
தவமின்றிப் பெற்றதோ சுந்தரம், சுவரஸ்யம்

மரணவேளையிலும் மாறாத கருணை, மனம்மாறிய கள்வருக்கு
வரமளித்த தேவகிருபை, தெரிதலும், புறக்கணித்தலும் நம் உரிமை
அறிந்தவர் தெரிந்தார் -இறை கருணையால் "வீட்டை" அடைந்தார்
இறைவனைத் தேர்ந்தவனோ இறந்தும் வாழ்ந்தான்
இழிவைத் தேர்ந்தவனோ கள்வனாய்ச் செத்து மடிந்தான்

"இயேசு மெஸியா, வாழும் இறைவனின் மகன்" ஞானியரும், விவேகிகளும்
அறியாத இரகசியம், சீமோனுக்க வரமான தேவரகசியம்- சமாரியப்
பெண்ணுக்கு கருணையால் இயேசு வெளிப்படுத்திய பிரமரகசியம்,
கள்வருக்கு புரிந்திட வார்த்தை மொழிந்த கருணையோ அதிசயம்



***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-20-10-2023

# இறுதிப் பொன் மொழிகள்

---



அன்பினால் இன்புற்று மானுடம் மீட்புற
அருங்கொடையாய்த் தன் மகனை ஈந்து
நம்மீது தாம் கொண்டுள்ள தம்
பேரன்பை காட்டிய அன்போ சிவம்

***அறிவுக்கனியுண்***ட ஆதாமின் சந்ததி-ஆணவ
***வெம்பல்களாய்*** தரையில் சிதறிக்கிடக்க-கழுமரத்தில்
பரிபூரண சரணாகதியில் பூரண விழிப்புணர்வில்
நிலைத்த இறை மகனோ ***வாழ்வுக்கனி***




இரு கள்வரிடையே-நடுவில் பெரும் கள்வனாய்
இடம் வலம் கடந்து- இருமை கடந்த
இருப்பாய் இயேசு

மனுவுருவான வார்த்தை, மனந்திரும்பிட மானுடத்தை அழைத்த
" சத்திய கீதை", எதிரிக்கும் அன்பு இயம்பிய கருணை
தம்மை வதைப்போரையும் மன்னிக்க இறைவனை வேண்டிய
வாழ்வும், போதனையும் ஒன்றான உண்மை, இறைதன்மை

வாதை செய்வோரையும் மன்னிக்கும் கருணாகரனை
வாழ்வளிக்கும் இறைமகனாய்க் கண்ட கள்வர் டைஸ்மஸ்,
இழிந்த மரணத்திலும் இறைமகனை நிந்தித்து
பழித்த இடப்புறக் கள்வர் கெஸ்டஸ்

வதைப்போரை மன்னிக்க வல்ல இறைவனை
தந்தை என வேண்டுபவர் வாழும் இறைமகனோ
அறிவு கடந்து இதயம் விழிக்க-.இழி செயல்
புரிந்த மனம் வருந்தி மன்னிப்பை இரந்தது

பழிக்கும் கெஸ்டஸ்ஸின் நாவடக்கி "நாம் பெறும் தண்டனையோ நீதி
ஆளும் மனித நீதி நம்மைத் தண்டிக்கின்றது-வாழும் இறை கருணையோ
மன்னிக்கின்றது" "இவரோ மாசற்ற செம்மறி"-மனம் நெகிழ,
மொழிந்தது பொன் மொழியாய் நீதி

இறை கருணையை அறிந்த மனம் வேண்டியது-***ஐயனே***
***இறையரசில் நீர் ஆட்சியுரிமை பெற்று வரும்போது***
***எளியவன் என்னை நினைந்தருளும்***
சட்டம் தண்டிக்கும், அன்போ மன்னிக்கும்
நிதரிசனமான உண்மை, நிலைவாழ்வுக்கு வழியானது

“இருக்கை” நாடும் சீடர்களிடையே, யாரும் அறியாத
பேருண்மையை, மரிக்கும் நிலையில் அறிந்த கள்வரை
அறிந்த உள்ளம் பூரித்தது

***இன்றே நீர் எம்மோடு பரகதியிலிருப்பீர்***

நேற்று, நாளை என்று காலத்தில் ஏதுமில்லை
என்றும் இருப்பது நிகழ்காலம் ஒன்றே
இறை மன்னிப்பிற்கு கால நேரமில்லை-நீதி
கடந்த தேவனோ இரக்கம் நிறைந்த அருளாளன்

இறக்கும் வேளையிலும் இரங்கிட்ட தயாபரன்
இரந்தவருக்கு விழிப்புணர்வை வரமாக்கி
அமைதியை ஆசிராக்கி- மகிழ்ந்த
அளவில்லா அருளாளனாய் தேவராஜன்

அன்னையின் துயரோ ஏழ்கடலிலும் ஆழம், உயிர் மூச்சிலே
சோகப் புயல் வீசிடும் அவலம், ஈன்றவள் துயர் அறிந்தவர்
கண்களில் ஈரம், இதயத்திலே அம்மா என்ற முகாரியின் ஓலம்

இறை அடிமை நான் என்றே இன்புற்ற கன்னி
இன்றும் தனக்காய் வாழும் புனிதவதி
உயிரோடும் உதிரத்தோடும் ஒன்றாய்க் கலந்த உத்தமி
படும் துயர் கண்டு உருகிய உள்ளம் உரைத்தது

***அம்மா இதோ உன் மகன்***, அன்பன் யோவானை
நோக்கி-***இதோ உன் தாய்*** -

அன்னைக்கு அன்புச் சீடனை மகனாக்கி, மானுடத்திற்கு
மரியாளைத் தாயாக்கி, அன்னையைப் போற்றி-
பெற்றோரைப் பேணல் பெரும் கடன் என்ற திருமகன்

என் மகனிற்கு ஈடாய் இன்னொருவர் உண்டோ?
ஒப்பில்லாத் தாயோ ஒப்பிடவில்லை, இறை கொடையாய்
ஈன்ற மகன் , ஈந்த கொடையை வரமாய் ஏற்று-தவமாய்
அன்பை வாரி வழங்கிய தாயுள்ளம் வானிலும் பெரிது

பாலைவனச் சுயசோதனை முடிந்திட இயேசுவிற்கு
பசியெடுத்தது- பாடுகளின் உச்சத்தில் இயேசுவிற்கு தாகம் எடுத்தது.
உடல் உணர்வில் மனுமகன், உள்ளுணர்வில் இறைமகன்
வசை, வாதை, நிந்தை பசி, தாகம் வாட்டும் திருமகன்

கசை உழுத முதுகில் பெருவலி நிலைக்க, கை, கால்களை
ஆணிகள் வதைக்க, முள்ளோ சிரசின் ஆழம் பார்க்க
கழுமரச் சுமையால் கனிந்த தோள் வருந்த, நா வரண்டு
வாதையின் உச்சத்தில்-***தாகமாயிருக்கிறேன்*** என்றார் இயேசு

நான் தரும் நீரைப் பருகுபவர் உள்ளத்தில் பொங்கும் ஊற்றாய்ப்
பெருக்கெடுக்கும் “விழிப்புணர்வு” வற்றாத கொடையை
வழங்கிட விரும்பியவர்-அன்று சமாரியப் பெண்ணிடம் நீர் கேட்டார்
மரிக்கும் வேளையிலும் விழிப்புணர்வை வழங்கிட
***தாகமாயிருக்கிறேன்*** - வதைப்போரிடம் நீர் கேட்டார்

அறிவுக்கனி ஞானம் தராது, அறிவு மனம்
உண்மையைத் தரிசிக்காது, தூய மனதிற்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு

மதப்போதையில் திளைத்த மதவாதம், மனுமகன் தாகத்தை
அறியவில்லை, குடிபோதையில் வீரரும் அறியவில்லை
இறை தாகம் கல்நெஞ்சங்களுக்கு இல்லை

புளித்த காடியை பருகக் கொடுத்தவர்-இறை கொடையை
இழந்து கசப்பை சுவைத்தார், தாம் இழந்தது குபேரநிதி
அறியாதவரோ, இறையரசைத் தேடாத தாழ்ந்த சாதி

***என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக்***
***கை நெகிழ்ந்தீர், ஏலி, ஏலி லமா சபக்தானி***
இயேசுவின் குரல் ஏக்கத்தோடு தந்தையை அழைக்க
ஒலித்த குரலில் எஞ்சிய ஆணவமும் மடிந்து மறைய
இன்னிசையான மௌனம் இருப்பின் மொழியானது

இசைக்கும் மௌனராகம் இயேசுவுக்குப் புரிந்திட,
அனுவளவாய் ஒட்டிக் கிடந்த ஆணவமும் கழிந்திட,
தீயில் புடமிட்ட பசும் பொன் ஒளிர்ந்தே
“ ***எல்லாம் நிறைவேறிற்று*** ” என்று இன்புற்றது

***தந்தையே என் ஆவியை உம்மிடம் கையளிக்கிறேன்***
விழிப்புணாவோடு இயம்பித் தலை சாய்த்து ஓய்வு கொண்டது

ஆதியில் ஒளிர்ந்த ஆனந்த ஜோதி, மனுவுருவான அன்பின்
சுருதி, கிறிஸ்துவாய் மலர்ந்த கருணையின் பேரொளி.
சுடர் வந்தவிடமோ , போனவிடமோ-மானுட
அறிவுக்கு எட்டாத மெய்ஞானப் பெருவெளி

வித்து மடிந்து நாற்று முளைத்திட-இயேசு
**கிறிஸ்துவாக மலரும் ஆன்மீகப் பொழுது**

“**ஆன்மா**” நான் என அனுபூதியில் அறிந்த
மெய்ஞானிகளுக்கு மரணமில்லை-
**கிறிஸ்து பிரக்ஞைக்கு மரணமில்லை**

அறிவுக்கனியுண்டு ஆணவத்தால் வெம்பி
ஆதாம் வீட்டை இழந்தான், பரிபூரண சரணாகதியில்-
வாழ்வுக்கனியாய் இயேசு வீட்டை அடைந்தார்

ஆணவம் கழித்தவருக்கு, வாழ்வு கொண்டாட்டமானது-
ஆணவத்தில் நிலைத்தவருக்கு வாழ்வு துக்க சாகரமானது
வீடு எட்டாக் கனியானது

ஆறு நாட்கள் ஒலித்த இறை வார்த்தையால்
பிரபஞ்சம் தோன்றியது-ஏழாம் நாளில்
இறைபணி முடித்து இறைவன் ஓய்ந்திருந்தார்
ஏழு வார்ததைகள் மொழிந்து-மனுமகனும் பணி முடித்து-
ஏழாம் நாள் தந்தையோடு ஒன்றானார்



நானும், தந்தையும் ஒன்றென்ற அத்வைதம்
அஹம் பிரம்மம் அஸ்மி -பிரக்ஞானம் பிரம்மம்
மஹா வாக்கியமான இறை வார்த்தையோ -பிரணவம்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-21-10-2023

# பாஸ்கா






மறையவர் வேள்வி பலியாய் நாறிட, திருமறை
வரட்டு ஒழுக்க நெறியாய் மாறிட
அன்பு, இரக்கம், மன்னிப்பு வேண்டாத தவமானது
கொம்பும், முழக்கமும் வெற்றுச் சத்தமானது

ஆலயம் கள்வர் குகையாய் மாறிட, தலைமைக் குரு
பதவியும் விலைபோனது, தர்மம், நீதி நூற்காத
வேள்வியாயிட, அன்பே தெய்வம் பழங்கதையானது

கண்ணிற்கு கண், பல்லிற்குப் பல்
மதவாதத்தின் கொரூர நியதி
அன்பே சிவம் அறியப்படாத உயர் நீதி

ஆகமங்கள் தோற்சுருள்களுக்குள் ஒடுங்கிட
கட்டளைகளோ திருப்பேழைக்குள் அடங்கிட
தூயகத்தை மறைத்த திரைச்சீலை
ஆசாடபூதிகள் ஆயன்களான இழிநிலை

“என் தந்தையின் வீடு- ஜெபவீடு” மந்திரமாய் முழங்கிட
கசையால் நடத்திய ஆலயக் குடமுழுக்கு
திருச்சங்கத்திற்கு சவாலானது-கிளர்ச்சியாளனைக்
கொல்லுதல் திருச்சட்ட நீதியானது

***சத்தியத்திற்குச் சாவுமணி அடித்து, நித்தியத்தை நிந்தித்த மதவாதம்***
பொய்மையின் மறு ரூபம்-மனுமகனாய் வாழும்
கருணையோ கண் மறைத்த இறை சொரூபம்

மிருகம், தெய்வம் எனும் இரு துருவங்களுக்கிடையே
ஊசாலாடும் மானுட உள்ளுணர்வு
ஆணவம் கழிந்திட தேவனாய் அவன் உயர்ச்சி
ஆணவம் நிலைத்திட விலங்காய் அவன் வீழ்ச்சி

என் சித்தமன்று உம் சித்தம் நிறைவேறுக, அன்பினால்
இன்புற்றுத் தந்தையிடம், சரணடைந்த மனுமகன்
மதவாதத்திடம் தன்னைக் கையளித்த மனுமகன்

மௌனம் உண்மைக்கு சாட்சியம் பகிர்ந்திட
மதவாதம் பொய்மையால் தர்க்கம் புரிந்திட
பறிபோகுமோ பதவி -நீர் வார்த்துக் கையளித்த
நீதி வழுவிய ஆளுனனோ சந்தர்பவாதி

தனி மனித ஆன்மீகக் கிளர்ச்சியின் புது வடிவம்
ஆண்டுகள் மூன்று நடத்திய அன்புப் புரட்சி
அமர தீபமானது-சிலுவையில்
அவர் மாட்சி உண்மைக்குச் சான்றானது

கசை வதைத்து முள்முடி தரித்து –காயமான
“மனித நேயம்” காண அன்பு இதயங்களில்லை,
மதவெறியும், கொலைவெறியும் நிலைத்த ஆணவ
மனங்கள், அகக்குருடான அவலநிலை

கசையுழுத மேனியிலே குருதிப் பூக்கள்
வசை கிழித்த செவிகளிலே அவலப் பாக்கள்
மரம் சுமந்த தோளிலே மாறாத வலிகள்
ஆணி துளைத்த அங்கங்களிலே ஆழ் குழிகள்

பாவத்தால் படைப்பு மாயையில் சலித்திருக்க
பாவத்தின் சம்பளம் மரணம் நீதியானது
வாழ்வு சலிப்பூட்டும் நடைப் பிணமானது
நிலை வாழ்வு எட்டாத நிலவானது

வசையோ கட்டியம், வாதையோ சாமரம்,
சிரசிலோ முள்முடி கரத்திலோ கூராணி,
சிலுவையோ சிம்மாசனம்-அரை
நிர்வாணியாய், ஆணவமிட்ட அலங்கோலம்

ஆலயத்தை இடித்து மூன்று நாளில்
கட்டி எழுப்பும் மாயனே-மெசியாவானால்
உன்னையே விடுவித்துக்கொள்
மதவாதத்தின் ஏளனம் சுரம் தப்பிய நாயனம்

நிலை வாழ்விற்கு இசை பாடிய கோகிலம், நிலைத்த
இரும்பாணிகளில் சிறைப்பட்டிருக்க “ பரிபூரண சரணாகதியே ”
நிலை வாழ்விற்கு வழி , வழி தவறிய மானுடத்திற்கு
கைகாட்டியாய், வானுயர்ந்த சிலுவையில் மனுமகன்

கூட்டம் கூடி வந்தது பெரும் புதுமை காண, சங்கம் நின்றது
கொலை விழாக்காண, வேதம் மேயும் கூட்டம் நின்றது
நாதன் மொழியில் குற்றம் காண
நல் நாதமாய் ஒலித்ததோ கருணையின் கீதம்

தந்தையே இவர்களை மன்னியும், தாம் செய்வது என்னவென்று
இவர்களுக்குத் தெரியவில்லை-கழுமரத்திலும்
கருணை மழை பொழிந்த கருணாகரன்
தன் வாழ்வும் போதனையும் ஒன்றான கிருபாகரன்

**நசரேத் இயேசு யூதர்களின் அரசன்,** ஆளுநனின்
குற்றப்பத்திரம், நானே! வாழும் இறைவனின் மகன்-
சத்தியத்தின் சாட்சியமோ
வண்ணம் குலைந்த அவலச் சித்திரம்.

பொய்மையோடு சமரசம் செய்யாத சத்தியன்
சிலுவையிலும் அன்பே சிவம் என
உண்மைக்குச் சாட்சியமான சின்மயன்

பெய்தாரைபோல் கருணை மழை பொழிந்தே, வைதாரையும்,
வதைப்போரையும் மன்னித்து. வாதையைத் தவமாக்கிய மேன்மை
நற் கள்வருக்கு பரகதியை வெகுமதியாக்கிய ஈகை

கங்கையே, காய்ந்து தாகம் சொல்லிட கதறித் துடித்த
தாய்மை, புளித்த காடியைச் சுவைத்த இறையாண்மை
அன்னையை அருமைச்சீடருக்குத் தாயாக்கி
மானுடரோடு சொந்தம் சொன்ன கிருபை



ஆயிரம் இதழ் தாமரை மலரும் பொழுதாய்
சமாதி கிட்டும் வேளை-கடலோடு
சங்கமிக்க கணப்பொழுது தயங்கிய கங்கை
மனித பலவீனத்தின் உச்சத்தில் கூவிய வார்த்தை

என் தந்தையே, என் தந்தையே ஏன் என்னைக்
கைநெகிழ்ந்தீர்? சிந்தை நொந்து கரைந்த பிள்ளை மனம்
தம்மைச் சரணாகதியாக்கிய தேவகுணம்

தன்னுயிரை ஆகுதியாக்கிய அன்பின் வேள்வி
எல்லாம் முடிந்ததென்றே தன் ஆவியைத் தந்தையிடம்
விழிப்புணர்வோடு கையளித்த ஞான யோகி

கசை கிழித்து, வசை சிதைத்து, மரம் நசித்து-முள்ளும்
ஆணிகளும் துளைத்த அங்கத்தில்-உள்ளதோ உயிர்
இல்லை வானகம் போனதோ உயிர் -விடை நாடி
இதயத்தை குத்தித் திறந்த ஈட்டி

இதயம் தூவித் தெளித்த துளி நீரும், குருதியும்,
பூவும், பன்னீரும் போலாகி நல்வரவு சொல்லப், பார்த்தவர்
இதயங்களிலோ சோகம், குத்தியவர் விழிகளிலோ ஈரம்,
இயேசுவோ ஈர விழிக் காவியம்

நெறியிழந்தது வேதம்-நிறமிழந்தது வேதியர் சீலம்
நிறையிழந்தது ரோம நீதி-சிகரத்திலோ தர்மம்
அதலபாதாளத்திலோ அதர்மம்

கல்லறையும் கொள்ளுமோ-நித்தியத்தை
காலனும் கவருமோ சுத்த சைதன்யத்தை
***இயேசு மரிக்கவில்லை-விழிப்புணர்வோடு***
***தம் ஆவியைக் கையளித்தார்***

மெய் நின்று உயிர் பிரிந்திட-இயேசு
கிறிஸ்துவாக மலர்ந்தார்.
வித்து மடிந்திட -நாற்று முளைத்தது



அழிவற்ற ஆன்மாவாய்-இயேசு
கிறிஸ்துவான அக மலர்வு-சமாதியும்
ஞானமுமான பூரணனோ சின்மயன்

" என் உயிரை யாரும் பறித்துக் கொள்வதில்லை,
நானாகவே அதைக் கொடுக்கிறேன், உயிரைக் கொடுக்கவும்
எனக்கு அதிகாரம் உண்டு, அதை மீண்டும் பெற்றக் கொள்ளவும்
எனக்கு அதிகாரம் உண்டு, என் தந்தையின் கட்டளைப்படியே
நான் இப்படிச் செய்கிறேன்-(யோவான் 10:-18)

ஆதாமிற்கும் இறைவனுக்கும் -இடையே அமைந்த
இணைப்புப் பாலம் இயேசு, விழிப்புணர்வற்ற நிலையே ஆதாம்
பாதி விழிப்புணர்வில் மனுமகனாய் இயேசு
பூரண விழிப்புணர்வில்- இறை மகனாய் கிறிஸ்து




மனுவுருவான இறைவார்த்தை-கழுமரத்தில் வாழ்வுக் கனியானது-
அறிவுக்கனியுண்ட ஆணவ மனங்களுக்கு புரியாத இரகசியம்
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்

மேலிருந்து கீழ், இரண்டாய்க் கிழிந்த திரைச்சீலை
மூடி மறைத்த யூத இறைவன் -யாவருக்கும்
சொந்தமான இறை லீலை

அன்பே இறைவன் ஓங்கார நாதமானது, தந்தையும், மகனும்
உறவாட-இடைத் தரகர்கள் இனி எதற்கு வேள்வியானது
வழிபாடு அக வேள்வியானது

*The audience is more interested in Entertainment than*
*in Enlightenment, Enlightenment is an individual's search*
*Entertainment is the feast of the foolish mass*
*Rituals and beliefs become pseudo faith*

சத்தியத்தைப் புறந்தள்ளி- பொய்மையைத் தெரிந்திடும்
கூட்டம், அன்றும், இன்றும் ***இயேசுவைப் புறந்தள்ளி***
***பரபாஸைத் தெரியும் நிலையோ நிதர்சனம்***
மதவாதமோ மனித நேயத்திற்கு அவமானம்

இறைவனும் மனிதனும் இணைதலே நிலை வாழ்வு
இறைவனையும், மனிதனையும் இணைக்கும்
***மனிதநேயப் பாலமாய் -மதம் கடந்த***
***மைத்திரேய புத்தராய் இயேசு***

***அன்பே இறைவடிவம்***
***அகவெறுமையில் முழுமையின் தரிசனம்***
***சிலுவையோ சரணாகதியின் இரகசியம்***
ஆணவம் கழிந்த அகநிலையே ஆனந்த மோட்சம்



ஆணவமே அலகையின் வேதம்
“இதோ உம் அடிமை நான், அன்னையின் கீதம்
-என் சித்தமன்று, உம் சித்தம் நிறைவேறுக” என்பதோ
வார்த்தையான ஓங்கார நாதம்

வாழ்ந்தறியும் உண்மை வழிபாடாய்ச் சிதைந்திட
“வார்த்தை” நலிந்து-சத்தியம் மறைந்திட
அறிவுக்கனியே ஆண்டவனாகும் வழி-
***அலகையின் பசப்பு வார்த்தை வேதமானது***
அமைதியிழந்த வாழ்வு போராட்டமானது







கல்வாரியிலோ அன்பின் கீதை
குருஷேத்திரத்திலோ பகவத் கீதை
போதி மரத்தடியிலோ தம்ம பாதை
***மனிதனின் தெரிவோ இன்றும் யுத்தப் பாதை***

***உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை***
***உலகில் நன் மனத்தவருக்கே அமைதி***
உலகம் நடைபோடாத அதிப் பாதையில்
கைகாட்டி மரமாய்ச் சிலுவை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-21-10-2023

சின்மயன்:- ஞான ரூபியான ஆன்மா

# அன்பின் வேதம்

---

நாடோடி இடையர்களாய் அலைந்து-எகிப்தில்
நானூறு ஆண்டுகள் அடிமைகளாய் அல்லலூற்றவர்
நாடாளும் ஓர் இனமாய் மாறிடப்-பாரோவை
நடுங்க வைத்த யாவேயின் வல்ல செயல்கள்



எக்காளமும், கொம்பும் முழங்க
“ஏகன் இறைவன் இஸ்ராயேலரின் தேவன்
வாழ்த்தப்படுவாராக” -வழிபாடாய்
நாளும் முழங்கும் வாழ்த்தொலிகள்”

இஸ்ராயலே செவி கொடு, நம் கடவுளாகிய ஆண்டவர் ஒருவரே
உன் முழு இதயத்தோடும், உன் முழு உள்ளத்தோடும்,
உன் முழு ஆற்றலோடும்-உன் கடவுளாகிய ஆண்டவரிடம்
அன்பு கூர்வாயாக-காலையும், மாலையும்
மறவாது ஓதிடும் திருமந்திரம் (ஷீமா)



பஞ்சாகமங்கள் வேதமாக, திருச்சட்டம் நீதியாக
மதவாத அரியணையில் திருச்சங்கம்
இறை மக்கள் நாம் என்ற மாறாத கர்வம்
அடிமைகள் மனதில் ஆணவமான பங்கம்

நெறிகேடான பாலியல் குற்றங்கள், வல்லுறவுகள்
(லேவி:18:- 6-23, 20:10-21)( இச.22:25)
ஒரு பால் இனச்சேர்க்கை (லேவி18: 22,: 20:13)
விலங்கோடு புணர்தல் (வி.ப 22:19. லேவி: 20:15)
வேற்றுத் தெய்வங்களை வழிபடல் (இ.ச.13:7-12)
இறை நிந்தை-(லேவி 24:16)- சூனியக்காரிகள்-(வி.ப.22:18)
பிள்ளைகளைப் பலி கொடுத்தல் (லேவி:20:1-3)
யூதனைக் கடத்தி விற்கும் யூதன் (இ.ச.24:7)
***போலித் தீர்கதரிசிகள்*** (இ.ச.13:5 .18:20)
சோதிடக்காரர், சூனியக்காரிகள் (லேவி: 20:27, வி.ப.22:17)
பெற்றோரைச் சபிக்கும், அடிக்கும் பிள்ளைகள்
(வி.ப 21:12, 17) (இ.ச.21:21)
***ஓய்வு நாளை அநுசரியாதோர்*** (வி.ப: 31:15)
கொலைகாரன் (லேவி: 24: 17)
மணமாகுமுன் கற்பிழந்த பெண் (இச:22:21)
மரண தண்டனைக்கான குற்றங்களானது
மோசே வகுத்த மாறாத நீதி திருச்சட்டமானது

கண்ணுக்கு கண்-பல்லிற்குப் பல்
அன்பை, இரக்கத்தைப் புறந்தள்ளி
அடிமை மனங்களை ஆண்டு நடத்த
மோசே வகுத்த ஆளும் நீதியானது

கதறும் செம்மறியின் குரல் விம்மி விக்கிட, விறைத்த விழிகளோ
வானத்தை வெறித்து நோக்கிட, வெந்திடும் நிணமும், சிந்திடும்
குருதியும், திராட்சை மதுவும் வானக இறைவனுக்குப் பலியானது
நாளும் உயிர் கொன்று, புலால் உண்டு, மதுவருந்தி
விருந்தாடுதல் வேதியர் வழக்கானது



மன்னன் சாலமோன் காலம்-யூத சரித்திரத்தில்
பொற்காலமானது, விண்ணவனுக்கு எழுப்பிய திருக்கோயில்
யூதருக்கு எழுச்சிமிகு வரலாறானது

திருக்கோயில் இடியுண்டு பாழாக, பலமுறை அடிமைகளான
யூத இனம்-பல்லாண்டு சொல்லொண்ணாத் துயரில்
அல்லலுற்று, மனம் திரும்பிட, இரங்கிய இறை மனம்

தாவீதின் மரபில்-தாம்பத்திய உறவில் மெஸாயாவின் வருகை-
ஆண்டவரின் திருக்கோயில் அமைந்துள்ள மலை-வானோக்கி
இறுதி நாளில் உயர்த்தப்படும் மேன்மையோ வல்லமை

வாள்கள் கலப்பைக் கொழுக்களாகவும்
ஈட்டிகள் கருக்கரிவாள்களாகவும் மாறிட
எங்கும் அமைதி நிலவும்-அனைத்து மானுடரும்
இறைவனை தேடிவருவார் உண்மையாகும்

இறைவனின் நல்லுறவு உடன் படிக்கை என்றும் நிலைக்கும்
இறைவன் தம் இறையில்லத்தில் நம்மோடு வாழ்ந்திட
இஸ்ராயேலர் இறைமக்கள் எனப்போற்றப்படுவார்
எங்கும் சிதறிய இனம் ஒன்று சேரும் (எசேக்:37: 26-28)
எதிர்பார்ப்பாக, நம்பிக்கையோடு காத்திருக்கும் யூத இனம்

மறையவர் வேள்வி குன்றி, மோசே வகுத்த நெறி மாறி
களவாணிகள் கூட்டமோ திருச்சங்கம், ஆலயமோ கள்வர்
குகையான பங்கம், பலி, சடங்கு, சட்டமோ நாறிடும் வேதம்
கல்லில் பொறித்த சட்டங்களோ கனத்திடும் நுகம்
கூனிய ஏழைகள் வாழ்வில் எந்நாளும் சோகம்

எளியமனத்தோர் பேறுபெற்றோர்-விண்ணரசு அவர்களதே
துன்புறுவோர் பேறுபெற்றவர்-அவர்கள் ஆறுதல் பெறுவார்

இரக்கமுடையோர் பேறுபெற்றோர்- ஏனெனில்
அவர்கள் இரக்கம் பெறுவர்

பழிக்குப் பழியல்ல-எதிரிக்கும் அன்பு
தூய மனத்திற்கே சத்திய தரிசனம்
அன்பே கடவுள்-அன்பில் நிலைத்திருங்கள்-
இறைவன் உங்களில் நிலைத்திருப்பார்

மன்னியுங்கள் நீங்கள் மன்னிக்கப்படுவீர்கள்
ஒரு கன்னத்தில் அறைபவனுக்கு மறு கன்னத்தையும் காட்டு
கண்ணுக்கு கண், பல்லிற்குப் பல் என்றால்
உலகே குருடாகும்-பகைமைதான் மிஞ்சும்

மனிதர் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்
என நீங்கள் விரும்புகின்றீர்களோ
அதை நீங்கள் மற்றவருக்கும் செய்யுங்கள்



உலகின் ஒளி நீங்கள், உலகின் உப்பு நீங்கள்
விழிப்புணர்வோடு வாழுங்கள்
இருப்பவர் இல்லாதோரோடு பகிர்ந்து
அன்பை வாழ்வாக்குங்கள்

நொருங்குண்ட இதயத்தை இறைவன் நேசிக்கின்றார்
உன்னைப்போல் உன் அயலவனை அன்பு செய்யுங்கள்
உங்களை மறுத்து, ஆணவம் கழித்து-நாளும்
உங்கள் சிலுவையை சுமந்து என் பின்னே வாருங்கள்

பலியல்ல இரக்கமே மேன்மை-நொருங்குண்ட
இதயமே, இறை வேண்டும் காணிக்கை-மனிதன்
ஓய்வு நாளுகல்ல-ஓய்வு நாள் மனிதனுக்கே

அன்பே கடவுள்-அன்பில் நிலைத்திருங்கள்
இறைவன் உங்களில் நிலைத்திருப்பார்
உடலைக் கொல்பவருக்காய் அஞ்சாதீர்கள்
ஆன்மாவைக் கொல்ல வல்லவருக்கே அஞ்சுங்கள்

ஏழை, பாவி, விபச்சாரிகளின் நண்பன்
நோயாளரை ஓய்வு நாளில் குணமாக்கி
இறைவன் நம் தந்தை, நீங்கள் என் சகோதரர்
இறைமக்கள் நீங்கள் விளம்பிய அன்பன்

வழியும், உண்மையும், வாழ்வும் ‘‘நானே’’
நீங்களே உங்கள் மீட்பர்-மனிதன்
உலகமெல்லாம் ஆதாயமாக்கிக் கொண்டாலும்
தன்னை இழந்தால் என்ன பயன்?

உண்மையே உங்களுக்கு விடுதலையளிக்கும்
விழிப்புணர்வைத் தவமாக்குங்கள்
சகோதரத்துவத்தை , மன்னிப்பை, இரக்கத்தை
வாழ்வாக்கிடப் போதித்த நாடோடிப் போதகன்
அதிகாரமிக்க ஆன்மீக அகக்கிளர்ச்சியாளன்



அன்பையும், உண்மையையும் வாழ்வாக்குதலே
உண்மையான இறை வழிபாடு-பலி, சடங்குகளை புறந்தள்ளி
***உள்ளம் பெருங்கோயிலாக, அக வழிபாடு வாழ்வாக,***
***நானும் தந்தையும் ஒன்றென்ற அத்வைதவாதி***

திருச்சட்டத்தால் அன்பை விளங்கிடும்
மதவாதிகள் நடுவே, அன்பை உரைகல்லாக்கி
அன்பினால் திருச்சட்டத்திற்கு உயிர் கொடுத்த-தனி மனித
அகக் களிர்ச்சி மதவாததத்திற்கு சவாலான புதுப் புரட்சி

தாயும், சகோதரரும் நம்மிடையே வாழ
தச்சன் மகன் தன்னை மெஸாயா என்பதோ?
கோபத்தால் கொதித்து-உச்சி மலை நின்று
நின்று தள்ளி கொல்ல முயன்ற ஊரார்

என் தசையும், குருதியுமே நிலை வாழ்வுக்கான மெய்யான
உணவும் பானமும், உண்டு குடியுங்கள் என்றவரை-உறவாடிய
பல சீடர்களும் விட்டுப் பிரிந்தார், இடறல் பட்ட
திருமுழுக்கு யோவான் சீடரை அனுப்பி ஐயம் தெளிந்தார்

பேயோட்டி, பேயெல்சேபுவின் நண்பன்,
பேய் பிடித்தவன் என மதவாதிகள் பழிக்க
உறவுகளும் சித்தபிரமை பிடித்தவர் என்றே நினைக்க
சமாரியரும் ஊர் கடக்கத் தடை விதித்தார்

மெஸாயா பற்றிய இறைவாக்கு -நூற்றாண்டுகளாய்
ஏட்டுச் சுருளில் முடங்கிக் கிடக்க
இயேசுவின் அகப்புரட்சியை புரிந்தவர் யாருமிலர்
பராபாஸை ஆதரித்தவருக்கும் குறைவில்லை

அன்பினால் திருச்சட்டத்தைப் புடமிட்டு, மதவாதிகளோடு-
வாதம் புரிந்து பாவிகளோடு உண்டு, குடித்து விருந்தாடி
அன்பின் வேதம் மொழிந்த பக்தி யோகி, திருக்கோயிலை
இடியுங்கள் மூன்று நாளில் கட்டுவேன் என்ற கர்மயோகி

அமுதகானமான அன்புப் போதனை எளியோருக்கு
இன்பமானது-அவர் இருப்போ சத்சங்கமானது
தனி மனித ஆன்மீகக் கிளர்ச்சி -மரபு,
சட்டம், வேதம் கடந்த புதுப்புரட்சியானது

என் தந்தையின் வீடு ஜெப வீடு, நீங்களோ
அதைக் கள்வர் குகையாக்கினீர்கள்
கோபத்தில் கடிந்த பிள்ளை மனம் -சாட்டையால்
கோயிலை கும்பாபிஷேகம் செய்த தேவகுணம்



மதவாத அதிகாரத்திற்கு சவாலான நிகழ்வு
கொழுந்து விட்டெறியும் கோபத்தீக்கு-நெய் வார்த்த
கதையானது, இயேசுவைக் கொல்வது முடிவானது

நாடோடிப் போதகன்-மதவாதிகளுக்கோ-அடங்காத
அதிகாரமிக்க ஆன்மீக அகக்கிளாச்சியாளன்
பாரம்பரிய திருச்சட்டத்தின் எதிரி-நீறு பூத்த
நெருப்பாய் நெஞ்சில் நிலைத்த பகைமை

கைதும், விசாரணையும் காரிருளில் நடந்திட
பிலாத்துவை மிரட்டிப் பணிய வைத்த கோஷம்
நீதி தேவதையை நிந்தித்து இயேசுவிற்கு
சிலுவை மரணத்தை தீர்ப்பளித்த ஆக்ரோஷம்

இரும்பாய் ரோம நுகம் முதுகை வளைக்க,
இயேசுவின் வாழ்வும் , போதனையும் -எதிர்பார்த்த
மெஸாயாவிற்கும், இறைவாக்கிற்கும் எதிரான நோக்கு
இயேசு மெஸாயா இறை நிந்தையானது
மரண தண்டனை திருச்சங்கத்தின் தீர்ப்பானது

பண் அறியாத அசடர் முன் பிரபஞ்சகானம் ஒலித்தது
கண்ணில்லாத மூடர் முன் ஞானதீபம் ஒளிர்ந்தது
உண்மையைப் பரிகசித்து அவமதித்த சங்கம்
இயேசுவைச் சிலுவையில் அறைந்த பங்கம்

கண்ணிழந்த மனிதர் முன் கசை வதைத்த ஓவியம்
காதிழந்த ஆளூநன் முன் சத்தியத்தின் கானம்

புள்ளி வைத்துப் போட்ட வஞ்சகக் கோலமோ
தலைமைக் குரு நெஞ்சினிலே
புள்ளி வைக்காது போட்ட வதைக்கோலமோ
மனுமகன் பொன்மேனியிலே

அன்பும், உண்மையுமான கீதை-ஆணவ
தலைமைக் குருவிற்குப் புரியாத பாதை
விழிப்புணர்வின் நாதம்-ஆசாடபூதிகள்
அறியாத சாஸ்திரிய சங்கீதம்



மகனோ செந்நீரில் நீராட-அன்னை மனமோ கண்ணீரில்
நீராட, இறைமகனானால் இறங்கி வா- நம்புவோம்
மதவாதிகளின் எள்ளி நகையாடல்

நிறை நித்திலமோ ஆழ்கடலில்
நவரெத்தினங்களோ பூமியின் அடியில்
கஸ்தூாரியோ மான் வயிற்றில்-வாழும்
சத்தியமோ மனுமகன் உருவில்




வண்ணம் கண்களை மயக்க-வாசம் சுவாசத்தை நிறைக்க-
அருந்து அமுதோ விருந்து-மலர் மொழி அறியும் தேனி
கண் முன் நின்று உண்மை உரைத்தும், சத்தியம் அறியாத
ஆளுநன் மனமோ நாறும் கேணி

செந்தணலின் சாற்றைப் பிழிந்து-செழுஞ் சீதச்
சந்தனமென்றோ கசையால் மேனியில் பூசினார்
நிந்தையைப் பண்ணாக்கி நித்தியனைப் பரிகாசித்து
கழுமரத்தை சுமக்கப் பணித்தார்

கசையால் நைந்த மேனி கழுமரம் சுமக்க
முள்ளால் சிதைந்த பூ முகம் வேதனையில் வாடிட
கல்வாரி நோக்கி மனுமகனின் யாத்திரை
தாய்க்குலம் கதறியழக் கொடிய சித்திரவதை

***“தந்தையே தாம் செய்வது இன்னதென்று
அறியாமல் செய்கிறார்கள்-இவர்களை மன்னியும்”
தந்தையிடம் மன்றாடிய பிள்ளை மனம்***

கசை, வசை, முள் உளுது, ஆணிகள் துளைத்த மேனியோ
சிவப்பு, கருணை இசைபாடிய மனமோ அன்பில் நிலைப்பு
மதவாத மனங்களில் காழ்புணர்வின் கசப்பு
உண்மையைப் புரியாத உலகோ இருளில் நிலைப்பு

வதைப்போருக்கு மன்னிப்பை வேண்டிய கருணை
வரம் கேட்ட கள்வருக்குப் பரகதி ஈந்த ஈகை
தாய்க்கு அடைக்கலம் கொடுத்த கடமை

சீனாய் மலையிலே பத்துக் கட்டளைகள்
கல்வாரி மலையிலே அன்பின் கீர்த்தனங்கள்
வாழ்வும், போதனையும் ஒன்றான புனிதன்
ஆணவம் கழித்து மரணம் கடந்த அமரன்

என் தந்தையே! என் உயிரை உம் கரங்களில்
ஒப்படைக்கிறேன், விழிப்புணர்வோடு உடல் உதிர்த்து
இருப்போடு ஒன்றான சின்மயன்

தன்னுள் வாழும் தந்தையிடம் மகனின் சரணாகதி
பரிபூரண சரணாகதியே சுதந்திரம்
புரிதலில் மனதிலோ அமைதி-இயேசு
கிறிஸ்துவான மலர்விலோ இறை சந்நிதி



உயிர் தந்தவரிடம் உயிரைக் கொடுத்து
உடல் தந்த தாயிடம் உடலைக் கொடுத்தார்
உஞ்ஞுணர்வான சுயமோ சூனியத்தில் ஒன்றாக
பரிபூரணத்தில் ஒன்றான பரிபூரணன்

சுடர் வந்தவிடமும் தெரியவில்லை, போனவிடமும்
புரியவில்லை, சத்தியம், சிவம், சுந்தரமாய்ச் சின்மயன்-
இருப்போடு ஒன்றான அதிசயம்

சுட்டெரித்த பகலவனும் சூடு தணித்து
கார் முகிழில் முகம் மறைத்து துயர் பகிர
வெட்டும் மின்னலும், வீசும் சூறைக்காற்றும்-கொட்டும்
பறையென இடியும் முழங்கிடப் பெய்யும் பெருமழை

அன்னையர் கண் புனல் பொழியும் காலம்
அன்பு மகன் கண்ணயர்ந்த காலம்
அந்தகாரம் சூழ, விண்ணும், மண்ணும் அதிர்ந்திட
இடியோடு மழை பொழிந்து இயற்கை அழுத காலம்

வார்த்தையும் அடங்கிட, வலியும் ஓய்ந்திட
வான் சென்றதோ மனுமகன் ஆவி
அன்னை உள்ளம் நொருங்கிட -திருமகனைக்
கொன்ற மதவாதிகளோ பாவி

அன்னை நெஞ்சுக்குள் ஏழ்கடலின் ஓலம்
அழுது புலம்பியும் தீராத துயரம் இறையடிமை நான்
என்ற கீதம், வெறுமைக்குள் மூழ்கிட்ட பரிதாபம்

கருவறையில் துள்ளிக் களித்த மகன், கல்லறைக்குள்
பிணமாய் அடங்கிட, கண்ணீருக்குள் ஒடுங்கிய தாய்மை
ஆணவ மனங்களிலோ இருளின் ஆளுமை



***"இவனுடைய இரத்தப்பழி எங்கள் மேலும்***
***எங்கள் பிள்ளைகள் மேலும் விழட்டும்"***
ஆணவத்தின் அலங்கோலம்-சத்தியனை
நிந்தித்து ஆர்ப்பரித்த மதவாதம்

இறைவனுக்கு நிகராக்கியவனைக் கொல்லுதல்-
யூதர்களுக்கோ திருச்சட்ட நீதி, பவுலின் பாதையில்
பயணிக்கும் கிறிஸ்தவர்களுக்கோ-படுகொலையோ
இரட்சிப்பின் பாவ நிவாரண பலி, இறையிலான நீதி?

பரிபூரண சரணாகதியில் பலியானவரோ
வாழ்வுக்கனியான அகமாற்றம்
இயேசு, கிறிஸ்துவான சம்பூரணம்

ஆண்டவனாக ஆசைப்பட்டு அறிவுக் கனியை உண்டவன்-
அகநிர்வாணத்தை அறிந்து வெட்கி ஒளிந்தான், பற்றறுத்து
பரிபூரண சரணாகதியில், வாழ்வுக்கனியாய் இயேசு
கிறிஸ்துவாய்த் தம்மைப் பிறப்பித்து உயிர்த்தார்



இறை வழிபாடு என்று நரபலி கொடுத்த மதவாதம்,
நரபலியாய் ஈசாக்கை ஏற்க மறுத்து, இறை வணக்கத்திற்கு
புத்திர பாசம், தடையெனக் காண்பித்த அன்பின் வேதம்

மனுமகன் காட்டிய பூரண சரணாகதியே
மானுடர் மீட்பிற்கு வழி-
சத்தியவழி நடந்த இயேசு -தந்தையோடு
ஒன்றித்து கிறிஸ்துவான ஒளி

இதயம் துளைத்த ஈட்டி, சிந்திய இறுதித் துளிக் குருதியும்,
நீரும் கூறிய ***அன்பே சிவம் எனும் நீதி***
கதிர் மறைந்து, அந்தகாரம் சூழ- நிலம் அதிரக்
மழை பொழிய இறைவன் கண்ணீர் சிந்திய நேரம்.

அகதியும், நாடோடியுமான வாழ்வில்-அன்னை
தந்தையோடு வாழ்ந்த இன்பம் நினைவானது-சத்தியத்
தேடலான வாழ்வு, மரணத்தில் அமரத்துவமானது



பசி, தூக்கம், அழுகை, வாதை, நிந்தனை
கழுமரத்தில் கொடிய சாவு-மனிதனாய்
அனுபவித்த சொல்லொண்ணா வேதனை
பட்ட பாடுகளோ சத்திய ஆராதனை

கண் கவர் ஓவியம்-நெஞ்செழுதிய அன்புக் காவியம்-
செவி சுவைத்த நாயனம், அன்பு மணம் வீசிய பங்கயம்
மனம் சுவைத்த நறுந்தேறல்- உள்ளம் குளிர்வித்த ஈரமதி
கூழாங்கற்களை வைரங்களாய் மாற்றிய இரசவாதி
உயிர் ஈந்த இறை மொழி- ஓங்காரத்தின் நல்நாதமணி

உயரத்தில் விழிப்புணர்வின் சிகரம்
அதலபாதளத்திலோ காழ்ப்புணர்வின் நரகம்
வார்த்தையோ இறைவனின் சொல்லோவியம்
வாழ்வுக் கலையான அன்பின் காவியம்

தன்னை அறிந்தவரே இறைவனை அறிவார், இறைவனை
அறிந்தவருக்கே சரணாகதி சாத்தியம், பூரண சரணாகதியில்
இயேசு இறைவன் கையில் வெற்றுப் புல்லாங்குழல்,
பிரபஞ்ச கானம் ஒலித்திட இயேசு கிறிஸ்துவான அக மலர்தல்



தூய மனதிற்கே சத்திய தரிசனம்
எளிய மனமே-பணிவோடு பரமன் தாள் பணியும்
***இயேசுவின் கல்வாரிப்பலி பூரண சரணாகதியின் வழி***
புரிந்தவர் மதம் கடந்து அகமகிழ்ந்தார்
புரியாதோர் மதவாதம் வளர்த்து தம்மை இழந்தார்

கட்டளைகள் கடந்த இறைவார்த்தை
கருணையினால்-கடவுளாக மனிதனை அழைக்கின்றது
அன்பே சிவமாய் அதன் குரல் ஒலிக்கின்றது

சிந்தை தந்தையை கூவிக்களைக்க செம்மறி ஒன்று
பலியானது-இன்று இறை நிந்தை செய்வதறியாத மூடர்-
கொலையை, இரட்சணியம் என்ற மடையர்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-21-10-2023*

# சிலுவைப் பலி

---





கறை பட்டது மறையவர் சீலம்
கள்வர் குகையானதோ தூயவர் ஆலயம்
சீர் இழந்ததோ சீடத்துவம்
சிலுவையில் ஒளிர்ந்ததோ குரு தத்துவம்

ஆணவக் கறை பட்டது குருகுலம், சிறைபட்டது நீதி
அண்ணக ஆளுனனிடம், மறையவனைக் கொன்று பழி
தீர்த்த மதவாதம், மடிந்து உயிர்த்து வாழ்வு அமரத்துவம்
என்றது, நானும் தந்தையும் ஒன்றென்ற அத்வைதம்

சிரம் தரித்ததோ முள்முடி, முதுகைச் சிதைத்ததோ
கொடிய கசையடி, இடை அணிந்ததோ ஒரு முழத்துணி
அங்கம் துளைத்ததோ இரும்பாணி
உயிர் துறந்த பின்னும், இதயம் துளைத்த ஈட்டி




கசையால் வதைத்து, வசையால் மனம் சிதைத்து, முள்முடி சூட்டி
சிலுவையில் அறைந்து, கள்வர் நடுவே பெருங்கள்வனாய் நிறுத்தி
மரணத்தை பரிசளித்து மகிழ்ந்த மதவாதம்
பச்சை மரத்திற்கு தீயிட்ட திருச்சட்டமோ வேதம்

மந்தை விலகிய ஆடுகளை மீட்டிட நிந்தையும்,
நிஷ்ூரப் பாடுகளும் பட்டு, கழுமரத்தில் பலியான தயாநிதி
தம் பேரன்பைத் தரணிக்கு காட்டிய அருள்நிதி

வழியும், உண்மையும், வாழ்வுமான வார்த்தை
மனுவாகி மானுடர் நம்மிடையே குடிவந்தது,
பரி பூரண சரணாகதியே நிலை வாழ்வின் வழி
இன்னுயிர் ஈந்து சொல்லிய அருள்மொழி

சத்தியத்திற்கு சாட்சியமாய் அவர் வாழ்வு
ஆணவத்தைப் பலியாக்கிச் -சிலுவையில்
அழியாத ஆன்மாவாய் உருமாறிய அற்புத நிகழ்வு
இயேசு- கிறிஸ்துவான மலர்வு

எண்ணம்தான் குழம்பிக் காணும் கண்கள்தான் நீர் சிந்திக் கலங்க
வண்ணம்தான் குலைந்து மானுட வடிவம் சிதைந்திட-சிலுவையிலும்
திண்ணம்தான் பிறழாமல் கருணை மழை பொழிந்தே-அன்பின்
பண்ணும்தான் கலையாமல் வாழ்வும், போதனையும் ஒன்றென்ற சிவம்



எளியோர் மனங்கவர் காதல் எங்கே? என
வலியோர் முள்ளும், கசையும், ஆணிகளும்
எள்ளிருக்கும் இடமின்றி உயிரிருக்கும் இடம் நாடி
உடல் புகுந்து தேடிக் களைத்தனவே

இதயம் துளைத்த ஈட்டிக்கு, துளி நீரையும், குருதியையும்
பன்னிராய்த் தெளித்து-பரிவோடு நல்வரவு கூறி
இதயக் கதவைத் திறந்து காட்டிய இதயம்
பார்த்தவர் விழிகளிலோ ஈரம்
குத்தியவர் இதயத்திலோ பெருந் துயரம்

அந்திவானும் விழி சிவக்க அழுது கண்ணுறங்கிட
எங்கும் இருள் சூழ்ந்தது-நிலவும் முகம் மறைத்திட
கல்லறையை கல்லும் மூடிட- கண்களில் அருவி பாய்ந்திட
கனத்த மனங்களை எரித்த கொடுந்தீ தணலாய் மாறியது

மறையவர் குலம் மகிழ்ந்த காலம்
நல்லோர் மனதை பெருஞ்சோகம் தீய்த்த கலிகாலம்
மாதா நெஞ்சைக் கூர் வாள் துளைத்த கொடுங்காலம்
மனுவுருவான வார்த்தை மௌனித்த இருண்ட காலம்

விழிகள் கண்ணீர் மாலை தொடுத்திட
மொழிகளில் முகாரியின் ஆலாபனை
நெஞ்சில் சோக பூகம்பம் வெடித்திட-நிம்மதி
கனவாய் கலைந்து வான்மதியான சோதனை

தந்தை மடி சேர்ந்தது உயிர்
தாய் மடியில் இளைப்பாறியது மெய்
அன்பு மனங்களை சேர்ந்தது உன் கருணை
நல் மனங்களில் வாழ்வது உன் அமைதி

மின்னல் ஒளி சிந்த, மேகப் பறை இடியென முழங்க
கதிர் முகம் மறைக்க, கார் கரைந்தழ-கண்ணீர்
சிந்தி தாய் முகம் வெளுக்க-எல்லாம் முடிந்ததென
இன்னுயிரைக் கையளித்த திருமகன்

மெய் சிலிர்த்து மேனி நடுங்க-தலைமேல் கரம் குவித்து
நெஞ்சம் தாள் பணிய, நன்றிக் கண்ணீர் ததும்ப
வழியும், உண்மையும், வாழ்வும் “நானே”
என்றே மெய்பொருளே வாழி

மண்ணுயிரெல்லாம் தன்னுயிர் என்றே, தன்னை வெறுமையாக்கி
அடிமையின் கோலம் பூண்ட இறைமகன் மரணம் வரை
என் சித்தமன்று-தந்தையே உம் சித்தம் என்றே-பூரணனைச்
சரணடைந்து பூரணமான புண்ணியன்




தொழுவத்தில் பிறந்து, நாடோடிப் போதனாய்
வாழ்ந்து, சத்தியத்திற்கு சான்று பகிர்ந்து
அகாலமாய் மடிந்த மனுமகன்
இரவல் கல்லறையில் அடங்கிய ஏழை மகன்

மண்ணாலானது மண்ணைச் சேர
விண்ணவன் வார்த்தை விண்ணேக
அஸ்தமனம் கடந்து அமரனாய்
உயிர்த்த கதிரவனோ இறைமகன்

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்
உலகில் நல் மனத்தவருக்கு அமைதியும்
மாறாத வாழ்த்தானது-தூய மனத்தவருக்கு
சத்திய தரிசனம் உரித்தானது

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra-21-10-2023*

# துயரம்-Peter

அச்சத்தில் அறியேன் என மறுதலித்தேன், உச்சத்தில் ஆணையிட்டுச்
சபித்தேன், மொத்தத்தில் மும்முறை மறுதலித்தேன், சேவல் இருமுறை
கூவுமுன் -என்னை நீ மும்முறை மறுதலிப்பாய் வேத வாக்கானது
அஞ்சிடும் கோழை நான், உள்ளங்கை நெல்லிக் கனியானது

***"என்னைப் பின்செல்-உன்னை மனிதர்களைப்***
***பிடிப்பவனாக்குவேன்"***
குருவாய் அழைத்தவரைக் குற்றவாளியாய்ப்
பிடித்துச் செல்ல-வாளெடுத்து மால்கஸின் காதறுத்த வீரன்
அறியேன் என கைபாஸின் இல்லத்தில் மறுதலித்த கோழை

கடல்மேல் நடந்தவரோடு கர்வமாய் நடந்திடத் துணிந்து
அஞ்சி மூழ்கிய சிறுமதி, மலைமேல் மறு ரூபமான சுந்தரனை
"இதோ என் பிரிய மகன்"- இறைவன் வாழ்த்திட
மூன்று கூடாரம் அமைப்போம் என்ற அறிவிலி

இறைமகன் நீர், கடவுளின் மெஸாயா, இறையருளால்
மொழிந்திட, பாறை என குருவால் போற்றப்பட்டவன்
அச்சத்தின் உச்சத்தில் மறுதலித்து மணல் வீடாய் உதிர்ந்திட
மனச்சாட்சியால் தூற்றப்பட்டவன்

கழுமரம் சுமந்து செல்வதைப் மறைந்திருந்து பார்க்க
மனதில் துணிவில்லை , உம் பாடுகளைக் காண என் நெஞ்சில்
உரமில்லை, ஆழமற்ற கடலில் அல்லாடும் மூடச்செம்படவன்
விழியிருந்தும் உம்மைக் காணாத அந்தகன்

ஆதியும் அந்தமுமில்லாச் சோதியே, என்னை அறியாதவன்
உம்மை அறிவேன் எனச் சொல்வதெப்படி? தெய்வமே
நீர் பட்ட துயர் கொடிது, என்னால் உற்ற மனத்துயரோ
பெரிதும் கொடிது, என்னை மன்னித்தருளும் என் பெருமானே

உமக்காய் இறக்கவும் தயார், இறுமாப்போடு மொழிந்தவன்
இழிந்தான், கர்வமழிந்தே தாழ்ச்சியைக் கற்றான்
நீர் சிந்திச் சிவந்த விழிகள், நொந்தழுது நொருங்கிய மனம்,
நோன்பிருந்து பாவமன்னிப்பை இரஞ்சியது, கனத்த மனம்
காற்றாய் மாறிட, என் நேசர் என்னை மன்னிப்பார்-நெஞ்சம்
திடம் கொண்டு, சுட்ட பொன்னாய் ஒளிர்ந்தது

இறைமகன் பட்ட துயரை இதயம் எண்ணித் துடித்திட
மூன்றாம் நாள் உயிர்ப்பார் என்ற எண்ணம்
புதுத்தெம்பளிக்க, அமைதி கண்ட உள்ளம்.

உம்மோடு வாழ்ந்தும் உம்மை நான்
அறியவில்லை-என்னை நான் அறிந்திட
என் ஆணவம் இடம் தரவில்லை

குருவாய், நண்பனாய், மனிதநேயனாய் எம்மிடையே
குடிவந்து கோவே, என் குறையறிவு போதாது உமையறிய
இறையருளன்றி உம்மையறிய வழியில்லை
பாவி என்னை மன்னியும் என் தெய்வமே

ஆசை அலைக்கழித்த பாவி, அச்சத்தில் உம்மை
மறுதலித்த துரோகி, நடைப்பிணமானேன்-
சீடத்துவத்திற்கே இழிந்த இலக்கணமானேன்

உண்மைக்குச் சான்று பகிரத் தந்த வாய்ப்பை
மும்முறை இழந்து உயிரைக் காத்த பொய்யன்
மலர்போல் பூத்த மனம் சருகானது -கர்வமழிந்து
இறைமகனே உன் திருப்பாதம் சரணடைந்தது

நீயில்லா உலகில் வாழ்வேது?-தெய்வமே
நீயின்றி எனக்கு நிலைவாழ்வு ஏது?
கண்களில் கங்கை -காயமான நெஞ்சில்
கருணை மன்னிப்பார் திடமான நம்பிக்கை

யான் பெற்ற பேறு யார் பெற்றார் இவ்வுலகில்
மீனவன் என்னையும் வா என் பின்னே
உன்னை மனிதர்களைப் பிடிப்பவன் ஆக்குவேன்
சீடனாக அழைக்கப் பேறுபெற்றேன்

நீர் மெஸாயா வாழும் இறைவனின் மகன்
உண்மை இயம்பிட அருள்பெற்றேன்
பேதுறு என நாமம் சூடி-பெருமானால்
போற்றப் பெற்றேன்

மனுவுருவான வார்த்தை-மறுவுருவானதை
கண்டு களிக்கப் பேறுபெற்றேன்
கடல் மேல் நடந்து அச்சத்தில் மூழ்கிட
அன்போடு கடிந்து காப்பாற்றப்பட்டேன்

பாதம் கழுவ மறுத்து-என் பரமானந்தத்திடம்
தாழ்ச்சியைக் கற்றேன், யாரிடம் செல்வோம் இறைவா
வாழ்வு தரும் வார்த்தை எல்லாம் உம்மிடமே
வாஞ்சையோடு வாழ்த்திடப் பேறு பெற்றேன்

யான் பெற்ற பெரும் பேறு, வானவன் தந்த கொடையாக-
இன்றோ, சேவல் இரு முறை கூவுமுன் மும்முறை குருவை
மறுதலித்தது ஆணவத்தின் அவல நிலையானதே

ஆணவம் அழிந்திட-யார் பெரியவன் போட்டி மறைந்திட
கண்ணீரால் என் திருமுழுக்கு, நீயில்லா என் வாழ்வில்
ஏது நிம்மதி ? நீதானே என்றும் என் இறை சந்நிதி
உன்னிடம் எளியவன் என் சரணாகதி

அழுது சிவந்த விழிகள்-அண்ணாந்து
வான் நோக்கித் தொழுதது
காற்றாய் மனம் மாறிட வழி நடந்தது

வார்த்தை கழுமரத்தில் வாதையால் வருந்திட
வாடிய யூதாஸின் உடல் மரத்தில் ஆடித் தொங்கிட
நம்பிக்கை இழந்தாயே நண்பனே
கருணையின் வடிவம் நம்மை மன்னிப்பாரே

உயிர் கொடுக்கும் தெய்வம் அவர்
உனக்கும், எனக்கும் புது வாழ்வளிப்பாரே
ஐயோ என் நண்பனே!அழுதார் பேதுறு

அன்பினால் இன்புற்ற மனம்
அஞ்சிக் கோழையாய் மறுதலித்த குணம்
மன்னிப்பை நம்பியது மனம் மாறியது

முத்தமிட்டுக் காட்டிக் கொடுத்த மனம்
கசையால் வதைபட்டு கழுமரத்தில் -மனுமகன்
தொங்கும் நிலை கண்டு தன்னை நிந்தித்தது
தாள் பணிந்து மன்னிப்பை இரஞ்சியது

மதவாதத்தின் அநீதத் தீர்ப்போ கழுமரத்தில்
மனச்சாட்சியின் தீர்ப்போ காட்டத்தி மரத்தில்
தீர்ப்பிடாதீர்கள்-தீர்ப்பிற்குள்ளாக மாட்டிர்கள்
இன்று தீர்ப்பானதே?

மறுதலித்தவரோ அழுது புலம்பி மனம் வருந்தி
பச்சாத்தாபத்தால் புது வாழ்வு பெற்றார்
குரு பாதையில் நடந்த சீடன், இறைபணிக்காய்
பின்னாளில் தன்னுயிரை அர்ப்பணித்த புனிதன்

காட்டிக் கொடுத்த கசப்போ நஞ்சாய் நெஞ்சைக் கொல்ல
கையூட்டாய்ப் பெற்ற வெள்ளியோ எள்ளி நகையாட
கழுமரத்தில் திருமகனின் கொடிய வேதனை -கண்டவர்
மனதினிலோ ஈட்டி பாய்ந்த சோதனை




வருந்தி அழுதவர் மனதிலே ஆறாத் துயரம். குரு இல்லாத
உலகோ எரிநரகான அவலம், கால்கள் நழுவிட-கயிறு
கழுத்தை இறுக்கிடதுடித்த உடல்- துயர் கழித்த மனம்
குருவோடு வாழ சீடனின் புதுப்பயணம்?

முதல் நிலைச் சீடனோ அஞ்சி மறுதலித்தான்,
கடை நிலைச் சீடனோ ஆசை வலையில் வீழ்ந்து
அம்மானைக் காட்டிக் கொடுத்தான்-வருந்தி அழுது
மனந்திரும்பியர்கள் வாழ்வோ அரிதான படிப்பினை

மனம் நொந்தழுதால்
மன்னிப்பார் இறைவன் மகத்தான போதனை
நீதி கடந்த அன்பே வேதம்-நித்தியன்
வாழ்வும், போதனையுமோ அன்பின் கீதம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-21-10-2023*

# துயரம்-Peter

அச்சத்தில் அறியேன் என மறுதலித்தேன், உச்சத்தில் ஆணையிட்டுச்
சபித்தேன், மொத்தத்தில் மும்முறை மறுதலித்தேன், சேவல் இருமுறை
கூவுமுன் -என்னை நீ மும்முறை மறுதலிப்பாய் வேத வாக்கானது
அஞ்சிடும் கோழை நான், உள்ளங்கை நெல்லிக் கனியானது

***"என்னைப் பின்செல்-உன்னை மனிதர்களைப்***
***பிடிப்பவனாக்குவேன்"***
குருவாய் அழைத்தவரைக் குற்றவாளியாய்ப்
பிடித்துச் செல்ல-வாளெடுத்து மால்கஸின் காதறுத்த வீரன்
அறியேன் என கைபாஸின் இல்லத்தில் மறுதலித்த கோழை

கடல்மேல் நடந்தவரோடு கர்வமாய் நடந்திடத் துணிந்து
அஞ்சி மூழ்கிய சிறுமதி, மலைமேல் மறு ரூபமான சுந்தரனை
"இதோ என் பிரிய மகன்"- இறைவன் வாழ்த்திட
மூன்று கூடாரம் அமைப்போம் என்ற அறிவிலி

இறைமகன் நீர், கடவுளின் மெஸாயா, இறையருளால்
மொழிந்திட, பாறை என குருவால் போற்றப்பட்டவன்
அச்சத்தின் உச்சத்தில் மறுதலித்து மணல் வீடாய் உதிர்ந்திட
மனச்சாட்சியால் தூற்றப்பட்டவன்

கழுமரம் சுமந்து செல்வதைப் மறைந்திருந்து பார்க்க
மனதில் துணிவில்லை , உம் பாடுகளைக் காண என் நெஞ்சில்
உரமில்லை, ஆழமற்ற கடலில் அல்லாடும் மூடச்செம்படவன்
விழியிருந்தும் உம்மைக் காணாத அந்தகன்

ஆதியும் அந்தமுமில்லாச் சோதியே, என்னை அறியாதவன்
உம்மை அறிவேன் எனச் சொல்வதெப்படி? தெய்வமே
நீர் பட்ட துயர் கொடிது, என்னால் உற்ற மனத்துயரோ
பெரிதும் கொடிது, என்னை மன்னித்தருளும் என் பெருமானே

உமக்காய் இறக்கவும் தயார், இறுமாப்போடு மொழிந்தவன்
இழிந்தான், கர்வமழிந்தே தாழ்ச்சியைக் கற்றான்
நீர் சிந்திச் சிவந்த விழிகள், நொந்தழுது நொருங்கிய மனம்,
நோன்பிருந்து பாவமன்னிப்பை இரஞ்சியது, கனத்த மனம்
காற்றாய் மாறிட, என் நேசர் என்னை மன்னிப்பார்-நெஞ்சம்
திடம் கொண்டு, சுட்ட பொன்னாய் ஒளிர்ந்தது

இறைமகன் பட்ட துயரை இதயம் எண்ணித் துடித்திட
மூன்றாம் நாள் உயிர்ப்பார் என்ற எண்ணம்
புதுத்தெம்பளிக்க, அமைதி கண்ட உள்ளம்.

உம்மோடு வாழ்ந்தும் உம்மை நான்
அறியவில்லை-என்னை நான் அறிந்திட
என் ஆணவம் இடம் தரவில்லை

குருவாய், நண்பனாய், மனிதநேயனாய் எம்மிடையே
குடிவந்து கோவே, என் குறையறிவு போதாது உமையறிய
இறையருளன்றி உம்மையறிய வழியில்லை
பாவி என்னை மன்னியும் என் தெய்வமே

ஆசை அலைக்கழித்த பாவி, அச்சத்தில் உம்மை
மறுதலித்த துரோகி, நடைப்பிணமானேன்-
சீடத்துவத்திற்கே இழிந்த இலக்கணமானேன்

உண்மைக்குச் சான்று பகிரத் தந்த வாய்ப்பை
மும்முறை இழந்து உயிரைக் காத்த பொய்யன்
மலர்போல் பூத்த மனம் சருகானது -கர்வமழிந்து
இறைமகனே உன் திருப்பாதம் சரணடைந்தது

நீயில்லா உலகில் வாழ்வேது?-தெய்வமே
நீயின்றி எனக்கு நிலைவாழ்வு ஏது?
கண்களில் கங்கை -காயமான நெஞ்சில்
கருணை மன்னிப்பார் திடமான நம்பிக்கை

யான் பெற்ற பேறு யார் பெற்றார் இவ்வுலகில்
மீனவன் என்னையும் வா என் பின்னே
உன்னை மனிதர்களைப் பிடிப்பவன் ஆக்குவேன்
சீடனாக அழைக்கப் பேறுபெற்றேன்

நீர் மெஸாயா வாழும் இறைவனின் மகன்
உண்மை இயம்பிட அருள்பெற்றேன்
பேதுரு என நாமம் சூடி-பெருமானால்
போற்றப் பெற்றேன்

மனுவுருவான வார்த்தை-மறுவுருவானதை
கண்டு களிக்கப் பேறுபெற்றேன்
கடல் மேல் நடந்து அச்சத்தில் மூழ்கிட
அன்போடு கடிந்து காப்பாற்றப்பட்டேன்

பாதம் கழுவ மறுத்து-என் பரமானந்தத்திடம்
தாழ்ச்சியைக் கற்றேன், யாரிடம் செல்வோம் இறைவா
வாழ்வு தரும் வார்த்தை எல்லாம் உம்மிடமே
வாஞ்சையோடு வாழ்த்திடப் பேறு பெற்றேன்

யான் பெற்ற பெரும் பேறு, வானவன் தந்த கொடையாக-
இன்றோ, சேவல் இரு முறை கூவுமுன் மும்முறை குருவை
மறுதலித்தது ஆணவத்தின் அவல நிலையானதே

ஆணவம் அழிந்திட-யார் பெரியவன் போட்டி மறைந்திட
கண்ணீரால் என் திருமுழுக்கு, நீயில்லா என் வாழ்வில்
ஏது நிம்மதி ? நீதானே என்றும் என் இறை சந்நிதி
உன்னிடம் எளியவன் என் சரணாகதி

அழுது சிவந்த விழிகள்-அண்ணாந்து
வான் நோக்கித் தொழுதது
காற்றாய் மனம் மாறிட வழி நடந்தது

வார்த்தை கழுமரத்தில் வாதையால் வருந்திட
வாடிய யூதாஸின் உடல் மரத்தில் ஆடித் தொங்கிட
நம்பிக்கை இழந்தாயே நண்பனே
கருணையின் வடிவம் நம்மை மன்னிப்பாரே

உயிர் கொடுக்கும் தெய்வம் அவர்
உனக்கும், எனக்கும் புது வாழ்வளிப்பாரே
ஐயோ என் நண்பனே!அழுதார் பேதுரு

அன்பினால் இன்புற்ற மனம்
அஞ்சிக் கோழையாய் மறுதலித்த குணம்
மன்னிப்பை நம்பியது மனம் மாறியது

முத்தமிட்டுக் காட்டிக் கொடுத்த மனம்
கசையால் வதைபட்டு கழுமரத்தில் -மனுமகன்
தொங்கும் நிலை கண்டு தன்னை நிந்தித்தது
தாள் பணிந்து மன்னிப்பை இரஞ்சியது

மதவாதத்தின் அநீதத் தீர்ப்போ கழுமரத்தில்
மனச்சாட்சியின் தீர்ப்போ காட்டத்தி மரத்தில்
தீர்ப்பிடாதீர்கள்-தீர்ப்பிற்குள்ளாக மாட்டீர்கள்
இன்று தீர்ப்பானதே?

மறுதலித்தவரோ அழுது புலம்பி மனம் வருந்தி
பச்சாத்தாபத்தால் புது வாழ்வு பெற்றார்
குரு பாதையில் நடந்த சீடன், இறைபணிக்காய்
பின்னாளில் தன்னுயிரை அர்ப்பணித்த புனிதன்

காட்டிக் கொடுத்த கசப்போ நஞ்சாய் நெஞ்சைக் கொல்ல
கையூட்டாய்ப் பெற்ற வெள்ளியோ எள்ளி நகையாட
கழுமரத்தில் திருமகனின் கொடிய வேதனை -கண்டவர்
மனதினிலோ ஈட்டி பாய்ந்த சோதனை




வருந்தி அழுதவர் மனதிலே ஆறாத் துயரம். குரு இல்லாத
உலகோ எரிநரகான அவலம், கால்கள் நழுவிட-கயிறு
கழுத்தை இறுக்கிடதுடித்த உடல்- துயர் கழித்த மனம்
குருவோடு வாழ சீடனின் புதுப்பயணம்?

முதல் நிலைச் சீடனோ அஞ்சி மறுதலித்தான்,
கடை நிலைச் சீடனோ ஆசை வலையில் வீழ்ந்து
அம்மானைக் காட்டிக் கொடுத்தான்-வருந்தி அழுது
மனந்திரும்பியர்கள் வாழ்வோ அரிதான படிப்பினை

மனம் நொந்தழுதால்
மன்னிப்பார் இறைவன் மகத்தான போதனை
நீதி கடந்த அன்பே வேதம்-நித்தியன்
வாழ்வும், போதனையுமோ அன்பின் கீதம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-21-10-2023*

# அன்னையின் துயரம்

வசையால் நொந்து, முள்ளால் நைந்து
கசையால் பிய்ந்து, கழுமரம் சுமந்த காயம்
ஆணிகள் துளைத்திடத் தீராத வேதனையோ
ஏழ்சுரம் கடந்த சோக ராகம்

நீலநயனங்கள் கண்ணீரில் நீராடிச் சிவக்க
தோகையிழந்த கோலமயில்போல் நெஞ்சம் தவிக்க
வேடன் கணைபட்ட கலைமான்போல் விம்மித்
தாளாத சோகத்தில் ஊமையான தாயுள்ளம்

வாதையால் வெந்து வருந்திடும் செம்மேனி-ஆறுதல்
சொல்ல வார்த்தையின்றி தவிக்கும் மனமோ துன்பக்கேணி
காயமான காயமோ கன்னித் தாய்க்குப் பெருங்காயம்
அன்னையின் துயரோ மகனுக்கு ஆறாத் துயரம்

கசை கிழித்த பொன்மேனியில்-காயங்கள் ஆயிரம்
வசை கிழித்த செவிப்பறையில்-துயரங்கள் ஆயிரம்
தோளும், துளைத்த அவயவங்களும் பட்ட துயரோ
பல்லாயிரம், சொல்லியழ வார்த்தையில்லாத அவலம்

மணி முடி வேண்டாத மைந்தனுக்கு முள்முடி சூட்டினார்
தீர்ப்பிடாதீர் என மொழிந்தவருக்கு மரணத் தீர்வையிட்டார்
பகைவரையும் நேசி என்றவரை, பரம வைரியாய்ச்
பரிகசித்து, சிலுவையில் அறைந்தார் கொடியோர்

புண் சுமந்த செம்மேனி கண்டு, பூ விழிகளும்
கண்ணீர் சிந்திச் சிவக்க, மண் சுமந்த பாவத்தை
திருமகன் சுமக்க,
மகன் துயரத்தை மாதா மனம் சுமந்ததே

கண் சுமந்த காட்சி -தாயின் பூ நெஞ்சை
கூர் வாளாய்ப் பிளக்க-சிமியோன்
வாக்கும் பலிக்க சிலுவைச் சோகத்தை
பூ நெஞ்சில் சுமந்த தாய்மை

தெய்வத்தை நெஞ்சில் வைத்தாள்
தேவனுக்கே நான் அடிமை என்று
“நைவேத்தியமாய்த்”
தன்னை அர்ப்பணித்தாள்

பக்தியை பதியிடம் வைத்தாள்
பாசத்தை மகனிடம் வைத்தாள்-இன்றோ
இமயத்துயரத்தை இறக்கி வைக்க-ஒரு
சுமை தாங்கியின்றிச் சோர்ந்து நின்றாள்

கண்ணே, மணியே, கலைமானே பொன்னே, மானே,
மலைத்தேனே, வானமுதே எனப் பாடி மகிழ்ந்த வாய்
குழறி வார்த்தையின்றி மௌனித்த தாய்

பெற்று, வளர்த்து இன்புற்ற பேரின்பம், உற்ற சொந்தமெனும்
இறையின்பம் -இறைவா என் மகனுக்கு ஏன் இந்தப் பெருந்துன்பம்?
விம்மியழுத உள்ளம் விடியலின்றிக் கனவாய்ப்,
பழங்கதையாய்ப் போன என் சொர்க்கம்

பொங்கிடும் சோகம் சொல்ல, கங்கையை கண்ணில் வைத்தாள்
நொருங்கிய இதயத்தைச் சொல்ல பூகம்பத்தை நெஞ்சில்
வைத்தாள், தங்கமகன் படும் வேதனையை தாயுமனுபவிக்க
எரிநரகை தாய் நெஞ்சில் வைத்தார் கொடியோர்

செஞ்சந்தனமென்றோ பூ மேனியில் செந்தணலைக்
கசையால் பூசினார், மலர்கீரீடம் என்றோ முள்ளை
முடியாய்ச் சூட்டினார், சிம்மாசனம் என்றோ
என் மகனைக் கழுமரத்தில் அமர்த்தினார்



அரைக் கச்சையோடு அம்மணமாக்கி
தாய் மனம் எரிநரகில் வேகத்-தனயனை
கள்வனாய்க் காட்சிப் பொருளாக்கினார்

மறையவர் குலம் மகிழ்ந்து கொண்டாட, செம்மறியைப்
பலியாக்கிய பாஸ்கா காலம், மங்கையர் குலம் மார்பறைந்து
அழுது புலம்பிட அன்னையர் மனதிலோ சோக வெள்ளம்
இடியும், மழையும், இருளும் சூழ இயற்கை அழும் காலம்

இறை அடிமை என்று இன்புற்ற மங்கை
என்றும் இறை சித்தமென்றே வாழும் நங்கை
***இறைவார்த்தைக்கு*** ஆறுதலாய் ஒரு *வார்த்தை*
சொல்ல வார்த்தையின்றி வாடிய அம்மை



கன்னியிடம் பிறந்து-அன்னையென மகிழ்ந்து
தந்தை சித்தம் தன் சித்தம் என வாழ்ந்த மகன்
அன்புச் சீடனுக்கு அன்னையைத் தாயாக்கி
அடைக்கலம் கொடுத்து-தன்
ஆவியைத் தந்தையிடம் கையளித்த சிவன்



வானுறையும் தேவனின் வார்த்தை
மனுவுருவாக உதரத்தை ஈந்த பெண்மை
உன் அடிமை நான் என்றே -தன்னை
உகந்த காணிக்கையாய் ஈந்த அன்னை

தோகையிழந்த கலாபமயில் ஆடல் மறந்தாள்
கானமிழந்த சோகக்குயில் கானம் இழந்தாள்
தீயில் விழுந்த மலர்போல்-அன்னை
சிலுவை அடியில் நெஞ்சம் கருகிட நின்றாள்

மகன் படும் துயர் கண்டு மாதா உதரம் பதற, அனலில் விழுந்த
புழுப்போல் நெஞ்சம் துடிக்க, கொஞ்சி மகிழ்ந்து வளர்த்த அஞ்சுகம்
என்னைக் கொஞ்சி மகிழ்ந்த பெருஞ்சுகம், இறை தந்தை அளித்த
பேரின்பம்-என்னை அழவிட்டுப்போன பெருந்துயரம்தான் என்னே!

நினைந்து, நினைந்து நெஞ்சம் உருகிப்
பனிபோல் கரைய-அன்பால் நெகிழ்ந்து, நெகிழ்ந்து
இதயம் அனலில் விழுந்த புழுப்போல் துடிக்க
கண்ணீரும், கம்பலையுமாய் அன்னையின் கோலம்



நீர்மாலை சூடி விழிகள் நீர் சிந்திச் சிவக்க
பூமாலையாய் சூடிய பிள்ளை-வாடிய மலர்
மாலைபோல் மடியில் பிணமாய்க் கிடக்க
என் மகனே என் மகனே என அழுத அன்னை

பெற்ற வயிற்றில் அணையாப் பெருந்தீ வளர
இன்றும் உன் அடிமை நான் என்று மனம் குழற
என்றும் உன் சித்தம் நிறைவேறுக இதயம் பணிய
மடிமேல் மகனை வைத்து மாதா அழுதாள்

தவமின்றிக் கிடைத்த வரம்
தாய் மனதிலோ துயரமோ இமயப்பாரம்
அன்பே சிவம், வாழ்வே தவம்,
பரிபூரண சரணாகதியே உன்னத அறம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-21-10-2023*

# தாயின் மடியில்-Jesus

அந்தகாரம் பூத்த வானில் அண்டம் அதிர, இடி, மின்னலின்
ஊழித்தாண்டவம், ஆலயத்தின் திரைச்சீலை மேலிருந்து,
கீழ் இரண்டாய்க் கிழிந்திட-இறைவனும்,
மனிதனும் இணைந்தாடும் ஆனந்தத் தாண்டவம்.





சுட்டெரிக்கும் சூரியனும் சூடு தணிக்க,
பட்டப் பகலில் கார்மேகங்களின் படையெடுப்பு
புண்பட்ட திருமேனியை மழை தழுவிக் கரைந்தழ
ஆறாத இயற்கையின் மனக் கொதிப்பு

முள் தைத்து முகம் குழைய-கசை கிழித்து மேனி
வருந்த, ஆணிகள் துளைத்து அங்கங்கள் சிதைய
அரைநிர்வாணியாய்ச் சிலுவையில் அறைந்து
பங்கம் செய்து பகை தணித்த திருச்சங்கம்

செந்நீரில் தங்கமகன் சிதைய, கண்ணீரில்
கமலமுகம் குழைய, கார்கூந்தல் காற்றில் அலைய
ஆடை புழுதியில் வாட, ஆறாத் துயரில் அன்னை மனம்
அறைந்து உயர்த்திய சிலுவையிலோ அன்பு மனம்

விண்ணிற்கும், மண்ணிற்கும் இடையே மனுமகன
மண்ணிற்கும், மகன் காலடிக்குமிடையே
கண்ணீர் கறைபட்ட மாதாவின் திருமுகம்



அங்கம் துளைத்த ஆணிகள்-அவயவங்களை இழுத்து
சிலுவையில் பிணைத்து ஆறாத் துயர் தர,
கசை கிழித்த பொன்மேனியிலோ செம்பூக்கள்
செவிகளிலோ மதவாதிகளின் வசைப்பாக்கள்

தாய் மனமோ வானவனைக் கெஞ்ச,
தங்க மகனோ எல்லாம் முடிந்ததென்று
ஆவியைக் கையளித்து இளைப்பாறத்-தணலில்
விழுந்த பூந்தளிர்போல் கருகிய தாய்மை

கண்படும் அழகு, புண்பட்டுச் சிதைய, புண்பட்ட உடலை
நெஞ்சோடு சேர்த்து கொஞ்சி என் மகனே எனப் புலம்பியழுத தாய்மை
செந்நீரில் நீராடிய மைந்தன் உடலை , கண்ணீரால் கழுவி
நெஞ்சத் துயரைச் சொல்ல வார்த்தையின்றித் தவித்த அம்மை

பெற்ற மகனை மடியில் தாங்கிய
அன்னை மனதில் அன்றோ புகழ்பாக்கள்
மடிந்த மகனை மடியில் தாங்கிய
அன்னை மனதில் இன்றோ பூகம்பங்கள்



கொன்று தந்த பொன்னுடலில்-கழுகுகள் கொத்திக் கிழித்த
காயங்கள் நெஞ்சை வருத்த, கொஞ்சி மகிழ்ந்த
அஞ்சுகத்தை-கொடிய ஓநாய்கள் வதைத்த கொடுமை
நினைவை எரிக்க ஓ வென்று அழுத அன்னை

பொன்மகன் பூமடியில் உறங்க
கண்மலரில் ஓயாது நீர்பூக்கள் உதிர
கைம்மலரால் உடல் வருடி- ஒன்றாய் வாழ்ந்த
பொற்காலத்தை நினைந்தழுத அம்மை

அழுது புலம்பி ஆறாத்துயரை ஆற்றிவிடு என்றோ?
மார்பிலும். தோளிலும். மடியிலும்
போட்டுக் கொஞ்சி மகிழ்ந்த அஞ்சுகத்தை
நெஞ்சு துடிக்க கொன்று மடியில் தந்தார் வஞ்சகர்

துஞ்சிட்ட தன் மகனை மடியில் கிடத்தி, விம்மிக் கரைந்து
விழிநீரால் மஞ்சன நீராட்டி, அஞ்சுகமே என் ஆனந்தமே
உன்னைக் கசையால் உழுது, வசையால் வாட்டி
அறைந்து கொல்ல செய் பிழைதான் என்ன!



கண்ணீர் புனலில் கயல்கள் நீராட
கார்குழல் புழுதி சூடி வாட
அங்கமெல்லாம் புண்ணான தன் மகனை
மடியில் வைத்து மாதா அழுதாள்

என் சிந்தையும் மனமும் சிதைந்ததே
என் செல்வமே, என் பிரிய சிநேகிதனே
நீயில்லா உலகில் எனக்கேது வாழ்வு
நீயே என்றும் என் நிலை வாழ்வு

பூவிழிகள் கண்ணீர் சிந்திச் சிவந்திருக்க, பூமனதில் வெடித்த சோகப்
பூகம்பம் நெஞ்சை சிதைத்திருக்க, என் மகனே, என் செல்வ மகனே
வாய் கரைந்துருக, கனியான நெஞ்சை துளைத்த சோகக்கூர்வாள்
அன்றுரைத்த சிமியோன் வாக்கு இன்று பலித்த கரிநாள்

கங்கையை கண்களில் வைத்தாள்
காங்கையை நெஞ்சில் வைத்தாள்-புண்பட்ட
மகனை மடியில் வைத்த மாதா
என் மகனே எனப் புலம்பியழுதாள

என் உதயமே நீ மறைந்ததென்ன-என் வாழ்வு
என்றும் கலையாத இருளில் மூழ்கியதென்ன?
நான் பெற்ற செல்வம்-என் மடியில்  மூச்சிழந்து, பேச்சிழந்து
பிணமாய் வாடிக் கிடக்க செய் பிழைதான் என்ன?

நினைந்து, நினைந்து நெஞ்சம் உருகி உருகிப் பனியாய்க் கரைய
உணர்ந்து, உணர்ந்து-அன்பால் நெகிழ்ந்து, நெகிழ்ந்து
இதயம் விம்மித் துடிக்க, மூச்சும் பெருமூச்சாய் நெஞ்சை எரிக்க
தாய்மனதிலே பெருஞ்சுமை, சேல் விழிகளிலே கண்ணீர்ச் சுனை



கைம்மலர் குவித்து வானவனைத் தொழுதாள்
கண் மலர்களில் நெடும் புனல் பாய
ஊனும், என்பும் ஒன்றாய் குழைய-மூச்சும்
பெருமூச்சாய் அலைய கன்னித்தாய் அழுதாள்

கண்ணீர் கறைபட்டது மதிமுகம்
புண்பட புழுதிக் கறைபட்டது பொன்னுடல்
பூ நெஞ்சை சோகம் காட்டுத்தீபோல் எரித்திட
இதயத்தில் வெடித்தது சோகப் பூகம்பம்

மடி படர்ந்த வாசமுல்லையை -அன்று
கொஞ்சி மகிழ்ந்த அன்னை-இன்று
உதிரம் காய்ந்து சருகான மலரை
மடியிலிட்டு புலம்பி அழும் அம்மை



பஞ்சைப் பற்றிய தீபோல் நெஞ்சை சோகம் எரிக்க
நெடும்புனல்போல் கண்களில் நீர் வடிய
சொல்லியழ முடியாத சோகத்தை மொழி கொல்ல
மழுவிலே விழுந்து புழுப்போல் மாதா நெஞ்சம்

மதிமுகம் குலைய-மாதா விழிகளும்
கண்ணீர் மழை பொழிய-செவ்வாய் குளற-
சுவாசத்திலே சோகப்புயல்
இதயத்திலோ அணையாத் தனல்

சின்னச் செம்மறியை வாட்டி. வதைத்துக் கொன்ற பின்னரும்-
இதயத்தை ஈட்டியால் குத்திப் பார்த்த கொடுமை நெஞ்சை வருத்த
அன்புத்தாய் அழுது புலம்ப, மானுடர்மேல் கொண்ட
மாறா அன்பை தன் மகன் மூலம் காண்பித்த இறைவன்
மழையோடு தன் கண்ணீரைக் கலந்த தகப்பன்



பொன்மகனைச் சுமந்த உதரம்
பொற்கோயிலாய் நின்ற வடிவம்-மகனை
மடியில் கிடத்தி ஓவென்று அழுதகோலம்
மதவாதமிட்ட கொடுங்கோலம்.

கண்பட்டோ என பொன்மேனி எங்கும் காயங்கள்
முள்ளிலும், கசையிலும், ஆணிகளிலும்,
கழுமரத்திலும் குருதியின் ஈரங்கள்-மனுமகன்
நெஞ்சினிலோ மடியாத மானுட காதல் சோகங்கள்

இதயத்தை துளைத்து உயிரைத் தேடிய ஈட்டி
பன்னீரும் பூவும் என குருதியும், நீரும் தூவி -காதலைச்
சொன்ன இதயம் -கண்டவர் கண்களிலோ ஈரம்
குத்தியவர் இதயத்திலோ துயரம்

மனிதனை தம் சாயலாய் படைத்த இறையன்போ அன்பின்
காவியம், தன்னுயிரால் மண்ணுயிரை மீட்க, வழியும்,
உண்மையும், வாழ்வுமான மனுமகன் காதலோ
அன்புக் காவியம், அழியாத ஓவியம்



செவ்வானில் கதிர் மறைய
கருவானில் நிலா எழும்ப-கல்லறையிலோ
உலா வந்த தேனிலவு -தனிமையின்
தாளாச் சோகத்தில் தாயோ தேய்ந்த நிலவு

கானம் மறந்த குயில், நடனம் துறந்த தோகை
மயில், சோகத்தீயில் வேகும் வெண்பங்கயம்
சூதும், வாதும் வாழும் மனங்களோ
திருச்சங்கம், அன்பு இறைவனுக்கோ பங்கம்

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra-21-10-2023*

# கருவறையிருந்து கல்லறைக்கு

அன்பு இதயங்களில் வாழ ஆவலாயிருக்கும் இறைவன்-
அன்பு மகன் பிறந்திட அன்றும் இடம் கொடுக்வில்லை
தொழுவமே இல்லமான நிலை-இன்றும் கல் மனங்களில்
இடமில்லை, சிலுவை மரணமே தீர்ப்பான அவலநிலை






***ஆணவம் கழித்தவர் சூனியமானார்-இருப்போடு***
***இரண்டறக் கலந்து சத் சித் ஆனந்தமானார்***

வார்த்தை மனுவுருவாக-கன்னியிடம்
வரம் கேட்ட தந்தை-உதரத்தைக்
கோயிலாக்கி உள்ளம் பூரித்த மங்கையோ
இறை அடிமை நான் என்ற தேவகங்கை

தாய், மகனைக் காத்து வழி நடத்திட-கணவனும்
காவலனுமாய் சூசையை வேண்டிய இறைவன்
கன்னித் தாயின் கரம் பற்றி- மண வாழ்வைத்
தவமாக்கிய சூசையோ மாமுனிவன்

கொல்லத் தேடிய கொடிய ஏரோதிடமிருந்து, எகிப்திற்கு தப்பி
ஓடிய குழந்தையோ அகதி, தலை சாய்க்க ஓரிடமின்றி தவமாய்
ஆண்டுகள் மூன்று, நற்செய்தி சொன்ன போதனோ நாடோடி
உலகம் ஓர் சத்திரம் என அறிந்த ஞானயோகி

அகக் கனல் தூண்டி -மானுடத்தில்
“*விழிப்புணர்வு*” ***எனும் தீபத்தை ஏந்திய ஞானதீபன்***
***தந்தையும், நானும் ஒன்றென்று***
***தன்னையறிந்த மெய்யறிவால்*** பூரித்த ***அத்வைதன்***

அன்பே தெய்வம் எனும் நாயனம்
திருச்சட்டம் கடந்த மனிதநேயமே கீர்த்தனம்
அன்பினால், கருணையால் சகோதரத்துவத்தை
மலரச் செய்த ***ஆன்மீகப் புரட்சியாளன்***

இறைவன் நம் தந்தை, நான் உங்கள் சகோதரன் என முழங்கிய
***ஆன்மீகக் கிளர்ச்சியாளன்,*** கழுமரத்திலும் கருணை முரசு கொட்டிய
மாதவன், மதவாதம் ஈந்த வெகுமதியோ கழுமரம் மகனை இழந்த
அன்னையோ தனிமரம், கணை பட்ட சிறு மானாய்க் கதறிய உள்ளம்
மடை உடைத்துப் பாயும் கண்ணீர் வெள்ளம்

உயிர் மெய் உற்ற நோய் தீர்த்த மகனின் உடலைக் கொடியவர்
சிதைத்துக், கழுமரத்தில் ஆணிகளால் பிணைத்தார்
நீரை இரசமாக்கி, வாழ்வை மணவிழாவாக்கிய மகனுக்கு
புளித்த காடியைப் கொடுத்துப் பரிகசித்தார்

வதைப்போரையும் மன்னித்த நின்தன் கருணையை
கொடியவர் அறியவில்லை-வருந்திய கள்வருக்கும்
நிலைவாழ்வு அளித்த உன்தன் ஈகையை
வாழ்வோரும் அறியவில்லை



உள்ளம் உருகிடத் தந்தையை அழைத்தாய்
எல்லாம் முடிந்ததென்று என் மகனே
இன்னுயிரைக் கையளித்தாய்

ஒன்றாய் வாழ்ந்த காலம்-இன்பத்தேனாய் நெஞ்சில் இனிக்க-
தாயும் சேயும் வாழ்ந்த இல்லாம் கோயிலாய்ச் சிறக்க-இன்றோ
என் ஆனந்தம் கனவாய் கலைந்து பழங்கதையாய் ஆனதென்ன
மகனே-சோகச் சுனாமி என்னை மூழ்கடிப்பதுமென்ன?

கை கழுவிப் பிலாத்து உன்னைக் கொல்லக் கையளிக்க
நெய் தடவி வாரிய நீள்முடி குருதியில் நீராட முள்முடி சூட்டினார்
மெய் தழுவிப் பாதங்கள் தொடப்-பாசமாய் அன்னை நெய்த
ஆடைக்குச் சீட்டுப் போட்டு உன்னை அரை நிர்வாணியாக்கினார்



சீராட்டித் தடவிக் கொடுத்த பொன்முதுகை
கசையால் வாரி உழுதார்-தேவகானமாய்த்
தாலாட்டுக் கேட்டுக் குளிர்ந்த செவிகள் நொந்திட
வசையால் உன்னை வதைத்தார்

தங்கமேனி நடுங்க, பெற்றவயிறு பற்றி எரிய
அங்கத்தை ஆணிகளால் துளைத்தார்
மானுடர் சுமை தாங்கிய தோள்கள் கன்றிக் காயமுற
பாரச் சிலுவையைச் சுமக்க வைத்தார்

அன்பு பொங்கும் உன் பூ இதயத்தை ஈட்டியால்
குத்தித் திறந்து உன் இறப்பை உறுதி செய்தார்
ஐயகோ என் மகனே, அழுது புலம்பினார் அன்னை

மதம் கடந்த அன்பிறைவன் தந்தையாக
மகனே நீ பெற்ற வரம் பெரிது
மதவாதம் மாறாத் தொழுநோயாக
கொடியவர் பெற்ற சாபம் எரிநரகிலும் கொடிது

கருவறை தந்த எனக்கு -கல்லறை ஈய வழியில்லை, தாய்ப்பால்
ஈந்த எனக்கு-நின் தாகம் போக்கிட, ஒரு கிண்ணம் நீர்
தர முடியவில்லை-மடியில் தாங்கி மகிழ்ந்த மகனை
மடியில் வைத்துப் புலம்பும் கொடுமைதான் என்னே!



கார்முகில் சூழ, வையகம் இருள
இடி, மின்னலோடு பெருமழை பொழிய
இயற்கையும் அழுது இறைமகன் உடலை
தழுவிக் கழுவி மனம் வெம்பியது

ஒன்றாய் வாழ்ந்த அன்புச் சீடர்களோ
அஞ்சித் தலைமறைவாகிட-யாருமறியாத
அன்புச் சீடர்களாய் அரிமத்தியா யோசேப்பு,
திருச்சங்க உறுப்பினர் நிக்கேதேமு



ஆளுனன் அனுமதியோடு அரிமத்தியா யோசேப் வந்திட
அங்கம் துளைத்த ஆணிகளை பொங்கும் கண்ணீரோடு கழற்றி
சிரம் தைத்த முள்முடியைச் சிரத்தையோடு அகற்றி
மெதுவாய் இறக்கி அன்னை மடியில் மகனைக் கிடத்திய அன்பர்

அன்பு மகனை அன்னை மடியில் கிடத்தி-
சோகம் பகிர்ந்த நல்ல சமாரியர்கள்
சீடத்துவம் கடந்து சீரிய பணி புரிந்த உத்தமர்கள்



பண்பட்ட மகனைப் புண்பட இடமின்றி வதைத்துச் சிலுவையில்
அறைந்து கொன்ற இழிந்த மதவாதம் இறைவேதமோ?
கைகளைக் கழுவி கடமை தவறிய -அண்ணக
ஆளுநனும் நீதியின் காவலனோ?

மடியில் கிடத்தி, கண்ணீரால் நீராட்டி
வதைத்த பொன்னுடலைத் தடவிக் கொடுத்து
ஈட்டி துளைத்த மார்பில் முகம் புதைத்து-அன்னை
என் மகனே! என் மகனே! எனப் புலம்பினாள்

பெற்ற மணி வயிறு தீப்பற்றி எரிந்திட-காட்டுத் தீயில்
சிக்கிய சின்னக் கலைமான்போல் உள்ளம் துடித்திட
***ஏலி ஏலி லமா சபக்தானி*** என்று உருகிப் புலம்பியது
உன்னடிமை நான் என்ற அன்னை உள்ளம்



ஆடி மகிழ்ந்த வண்ண மயிலுக்கு கால்கள் முடமாகிட, தோகை
சுமையானது, பாடி மகிழ்ந்த புள்ளிக் குயிலுக்கு-கானமே
அழுகையும், முகாரியுமானது- இதோ நான் உன் அடிமை என்ற
இதயம், இறைவனிடம் பரிபூரண சரணாகதியானது

ஓயாத அலைகளாய் சோகம் நெஞ்சில் அலைமோத,
மாரி மழையெனச் சேல் விழிகள் நீர் சொரிய, அன்னையின்
துயருக்குள்-அழுதும் ஆறுதல் காணாத இராக்கேல்,
புலம்பியழுதும் பிள்ளைத் துயர் தணியாத பெத்லேகம் தாய்கள்

ஈன்ற மகனைக் காத்திட-அகதியாய்
எகிப்திற்கு ஓடிய அவல யாத்திரை-அன்று
இறந்த மகனை மடியில் தாங்கி புலம்பிடும்
கண்ணீர் யாத்திரையோ இன்று

உண்மைக்குச் சான்று பகிர்ந்த, உத்தமன் வாழ்வோ
அன்பின் புது வேதம், கொலையும், இறை பலி என்ற
பொய்மையோ வரண்ட மதவாதம்

பொங்கும் துயர கங்கையில்-இன்று அன்னைக்குப்
புதிய திருமுழுக்கு நெஞ்சில் பாய்ந்த
சோகவாளுக்கு இருபுறமும் கருக்கு

வெள்ளைப்போளமும், சந்தனத்தூளும்
நிக்கதேமுவின் காணிக்கை-தோட்டக் கல்லறையோ
யோசேப்பின் காணிக்கை






பிறந்த குழந்தைக்கு ஞானியர் காணிக்கை
இறந்த மகனின் நல்லடக்கத்துக்கு
பக்தர்களாய் அன்பர்களின் காணிக்கை

உலகின் ஒளி நானே மொழிந்த வார்த்தை
ஒளியிழந்த கல்லறைக்குள் அடங்க,
வையகம் ஒளியிழக்க, வான் ஒளி மங்க
நல்லோர் மனங்களை வாட்டிய சோக இருள்

நெடும்புனலாய் ஓடிய அன்னையர் கண்ணீர் விழி ஒடுங்க,
விம்மலும், பெருமூச்சும்-நெஞ்சில் நிலைத்து நினைவைத் தீய்க்க
அஞ்சுகமாய்க் கொஞ்சி மகிழ்ந்த அன்னை நெஞ்சுக்குள்
ஆறாத் துயராய் நிலைத்த கொடுவாள்

புது உதயம் சொன்ன பொன் கதிரோன் அஸ்தமிக்க
பூங்கமிழ் வாவியில் மலர்கள் ஒடுங்கின
புள்ளுறை சோலையில் புள்ளினம் அழுதன


Pietà by Michelangelo

வான் இழந்த கதிராய்-நீரிழந்த பொய்கையாய்
ஆனந்தம் வற்றிட ஓடி ஒளிந்த சீடர் நெஞ்சுக்குள்
சோகமோ ஏழ்கடலினும் ஆழம்-ஆயனில்லா ஆடுகளோ
திக்குத் தெரியாத காட்டுக்குள் அலையும் அவலம்

கருவறைக் குளத்தில் பூத்த வண்ணமலர்
இருண்ட கல்லறைக்குள் அடங்கிய துவைந்த மலர்
பொங்கிய ஆனந்தப் பொய்கை வற்றிட-ஞாயிறும்,
திங்களுமின்றி தாயின் வானம் இருண்டு போனது

அன்னாய், கைபாஸ் மனதில் குரூர ஆனந்தம்
ஆளுநன் மனதிலே மனச்சாட்சியின் ஆதங்கம்
கல்வாரியிலோ வெற்றுக் கழுமரம்-மனச்சாட்சியை
ஆணவக் கறையான் அரித்த கொடிய தினம்

கனிதரும் பழமுதிர்ச்சோலை கருகிட புள்ளினங்கள் கதறின-
பூங்கமிழ் வாவி வற்றிட தேன் தும்பிக்கள் அழுதன-ஏழைகளுக்கு
நடைப்பிண வாழ்வு சொந்தமானது-எளியோர்
நம்பிக்கை கயிறறுந்த பட்டமானது

"***விழிப்புணர்வும், பரிபூரண சரணாகதியும்***" நிலை வாழ்வின்
இரு வழிகளாக, விழிப்புணர்வில் நிலைத்து -தந்தையே
என் சித்தமன்று உம் சித்தம் நிறைவேறுக
பரிபூரண சரணாகதியடைந்த மகனோ ***இராஜயோகி***

இறையடிமை நான் என இன்புற்றுக் களிப்போடு வாழ்வைக்
காணிக்கையாக்கி , மகன் சுமந்த பாரச்சிலுவையை
தன் மனதில் சுமந்த கன்னித்தாயோ-பரிபூரண
***சரணாகதியில் பக்தி யோகி***

ஏலி, ஏலி லமா சபக்தானி இருவர் நெஞ்சுக்குள்ளும் ஒலித்த
தொனி, உலகுய்ய ஓங்கார நாதத்தோடு ஒன்றாக
தாய், சேய் அடித்த இறைவனின் ***ஆராய்ச்சி மணி***

கல்லறையும் கொள்ளுமோ நித்தியனை,
உடலின் இறப்பு உயிர்ப்பிற்கு வழியானது,
உண்மைக்குச் சாட்சியமான வாழ்வோ
மதவாதிகளுக்கு புதிய அறை கூவலானது




தூயகத்தை மறைத்த துணி மேலிருந்து கீழ் இரண்டாய்க்
கிழிந்திட, மூடி மறைத்த இறைவன்-யாவருக்குமானார்
தந்தையும், மகனும் உறவாடத்-தடையான மதவாத
இடைத்தரகர், இனித் தேவையில்லை என்றானார்

உள்ளிருக்கும் தெய்வத்தைக் காணத் தடையான
அக்ஞானத் திரை கிழிந்திட-இருமை அகன்றிட
தூய மனத்தவருக்கு சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு நிதரிசனம்

நிலம் அதிர்ந்து, நீத்தார் உயிர்த்து
இறைமகன் இவரெனச் சாட்சியம் பகிர்ந்திட
ஆன்மா அழிவதில்லை அனுபூதியில் அறிந்தவர்
***அஹம் பிரம்மம் அஸ்மி என்றே அக்களித்தார்***

"உடலைக் கொல்ல வல்லவருக்கு அஞ்சாதீர்
கொன்ற பின் ஆன்மாவை
எரி நரகில் தள்ள வல்லவருக்கே அஞ்சுங்கள்"

"உயிர்ப்பும், வாழ்வும் நானே"
***ஆணவம் கடந்த தூய கிறிஸ்து உணர்வே"நான்"***

அன்று பொங்கும் கடல் மீது நடந்து, புயலிற்கும், கடலிற்கும்
சாந்தி என்றார், இன்று கல்வாரி மலை மட்டும்
கழுமரம் சுமந்து, புயலாய், கடலாய் பொங்கிடும்-கொடிய
மனங்கள் அமைதி காணத் தம்முயிர் ஈந்தார்



ஆணவம் கழித்த தூய மனம்- கழுமரத்தில்
***வாழ்வுக் கனியானது, அறிவுக் கனியுண்ட***
***ஆதாம் வாரிசுகளோ,*** ஆணவம் நிலைக்க,
***தரையில் வீழ்ந்த வெம்பல்களாயின***



பகைமையைப் பகைமையால் வெல்ல முடியாது
பகைமையை அன்பினால் ஆட்கொள்ளுங்கள்
அன்பின் நாதமாய், சத்தியமாய் -மரித்தோரிடையே,
உயிர்த்தோராய் வாழும் மனங்களில் இன்றும்
இயேசு ஜீவிக்கின்றார்

விண்நோக்கி உயர்த்திய வெண்கலப் பாம்பு
சர்ப வடிவான குண்டலினி சக்தி உச்சம் தொடும் உருவகமே
பூரண ***விழிப்புணர்வில்-இயேசு***
***கிறிஸ்துவான அகமலர்வே*** (*Christo Genesis*)

பாலைவன யாத்ரீகர் நாம்-பாலும் தேனும் ஓடும்
வாக்களிக்கப்பட்ட வளநாடு தூய உள்ளமே
எளிய மனத்தவருக்கே இறையரசு, தூய மனதிற்கே
சத்திய தரிசனம் ஒலிக்கும் சத்திய முரசு

பாடையில் போனவன் எழுந்திட
கல்லறையில் உறங்கியவன் எழுந்து வர
காலனைக் கடிந்த வார்த்தை
ஆசந்தியில் உறங்கி கல்றை போயிட
கலங்கிய தாய் மனது






***கருவறை தொட்டு கல்லறை வரை மனித யாத்திரை***
***விழிப்புணர்வில் நிலைத்தவர் உடல் கழித்தல் யோக நித்திரை***
***உள்ளுணாவின் உன்னதமே இறைவன்***
ஆணவமே நம்மையும், இறைவனையும் பிரிக்கும் திரை

**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-21-10-2023

# தாயின் பெருமை- Mother Mary



பிறப்பதற்கு இருப்பிடம் தேடித் தந்தை அலைந்திட
இல்லை இடமில்லை என்று ஊரார் கைவிரித்திட
இறைவன் வழி காட்டிட தொழுவமே இல்லமானது-
இறைமகனுக்கு முன்னிட்டியே தொட்டிலானது



கருப்பையைக் கருவறையாக்கி
உதிரத்தைப் பாலாக்கிய தாயோ பேராலயம்
தாயிற் சிறந்த கோயில் இல்லை
என்றும் மாறாத சத்தியம்

இதோ உம் அடிமை, இறைவனுக்கு அடிமையான
மங்கை, இறை வார்த்தையை வாழ்வாக்கி-
தாயும், நண்பியுமான நங்கை

தொழுவத்திலும் கலங்காத தாய்மை
அகதியானபோதும் நம்பிக்கை தளராத பெண்மை
விதவையானபோதும் புலம்பாத அம்மை
சோகவாளை நெஞ்சில் தாங்கிய மென்மை
சிலுவையடியில் மனுக்குலத்திற்கு தாயான அம்மை



கண்களில் நீர் வடிய-கலங்கிய பூ நெஞ்சில்
உதிரம் வடிய , மடிந்த மகனை மடியில் கிடத்தி
என் மகனே!. என் மகனே என விம்மும்
இறையடிமை நான் என்னும் தாயுள்ளம்




நரிகளுக்கு வளைகளும், ஆகாயத்துப் பறவைகளுக்கு
கூடுகளுமிருக்க, மனுமகனிற்கு தலைசாய்க மடி ஈந்த
தாய்மை, அன்னையைப்போல் ஒரு தெய்வம் இல்லை
தாயிற் சிறந்த கோயிலுமில்லை இன்றும் உண்மை

மனிதருள் மாணிக்கம், மங்கையர்
குல திலகம், இறைவன் தோந்த அம்மை
நின் அடிமை நான் என்ற மங்கை-என்றும்
எமக்காய் பரிந்துபேசும் தாய்மை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-21-10-2023

# சந்திப்பு-மதலேன் மரியாள்

---

தூக்கம் துறந்த சேல்விழிகளில் நீங்காத துயரம்
துடிக்கும் ஏக்கம் நிறைந்த இதயத்தில் ஆறாத காயம்
புனைமயில் சாயல் மங்கை நெஞ்சில் தோகை இழந்த வாடல்
பூவிழந்த பூங்குழலி இதயத்திலோ எழுதி அழிக்கும் கூடல்

மயங்கிய நெஞ்சம் தெளியும், பூ மனம் நடுங்கும்
இதயம் விம்மும், இரு விழிகளிலும் அருவி பாயும்
இடை மெலிந்து நடை சோரத்-துயிலாத விழிகள்
துயர் சொல்லிச் செவ்வானம்போல் மாறும்



பகலவனைப் பார்த்துப் பார்த்து பரவசத்தில்
பங்கயமாய்ப் பூத்து பூரிக்கும் மங்கை-இன்று
கங்கையைக் கண்களில் வைத்து-நெஞ்சுக்குள்
காங்கையை வைத்துக் கதறும் நங்கை

நெய்யின்றிக் கலைந்து நீள் குழல் வாட
மையின்றி நீர் சிந்தி கயல் விழிகளும் சோர
அணையின்றிப் பாயும் விழிநீரோ கங்கை
அணங்கின் நெஞ்சில் தைத்த ஆணியாச் சிலுவை

அழுது சிவந்த சேல்விழிகள் அழியாச் சோகம் சொல்ல
கலைந்த கார்குழலும், கசங்கித் தூசு படிந்த ஆடையும்
கலையாத கனவு கலைந்தது எனத் தவிக்க-மரணம்
நிலையானது, மாறாது சோகம் என்றான வாழ்வு



எண்ணம் தீட்டிய வண்ண ஓவியமும் கலைந்திட
இதயம் செதுக்கிய அழகுச்சிலையும் நொருங்கிட
நூல் அறுந்த காற்றாடியோ சகதியில்
தந்தி அறுந்த மரகத வீணையோ புழுதியில்

அணைத்து ஆறுதல் மொழிந்த கரங்களையும்-நல்
ஆயனாய்த் தேடி அலைந்த பாதங்களையும்
ஆணிகள் துளைத்து சிலுவையில் பதித்திட
பூ நெஞ்சை சிலுவையில் அறைந்த துயரம்

கனிமொழி உதிர்த்து, குறுநகை பூக்கும் திருவாய்
புளித்த காடியைச் சுவைத்திட கசந்த நெஞ்சம்
அமைதி அருளும் வெண்புறாவிற்கு முள்முடி சூட்டிட
முள்ளில் சிக்கிய மாடப்புறாபோல் தவித்த உள்ளம்

அன்புச் சித்தனுக்கு பைத்தியம் எனும் வசை மொழி
மனுமகனுக்கு கழுமரமோ அரியணையான நீதி
உலகை அதர்மம் ஆளும் சூழ்ச்சி-பூ நெஞ்சுக்குள்
சோகப் பூகம்பம் வெடித்த துயரக் காட்சி



எண்ணிப் புலம்பிட ஏழ் கடல் நீரை விழியில் வைத்தாள்
இமயச் சோகத்தை நெஞ்சில் வைத்தாள்-மோகனம்
இசைத்த நெஞ்சுக்குள் முகாரியை வைத்த பூவை

சோடிக் குயில்போல் பாடிய கானக்குயில்
ஒற்றைக் குயில்போல் கரைந்தழ
சோகப் புயலில் சிதையும் நந்தவனம்,
பாலைபோல் வாடும் பூவை மனம்

கதிர் காணாத நாளாய் நீளும் பொழுது
கண் விழிக்காத மலர்போல் கூம்பிய மனது
கூவி களைத்தும் பதில் இல்லை
ஆவி துடிக்க அழைத்துக் களைத்த இளவயசு

பாசமலரோ கல்றைக்குள் அடங்கிட
வாசம் வீசிய மலரில் சோகத்தின் வாடை
சூடிக் கொடுக்கத் தெய்வமில்லை
சூடும் மலரும் கருகிடத் துயரத்தின் கோடை



அழுது தொழுது விழுந்து விம்மி
அனலிடைப் புழுப்போல் துடித்தாள்
ஆற்றொண்ணாத் துயருக்கு
மாற்று மருந்து அறியாத பேதை

ஆடிக் களித்த மயில் முடமானது
பாடிக் களித்த கானக்குயில் ஊமையானது
சந்திரனைக் காணாத அல்லி சோர்ந்தது
கதிரவனைக் காணமல் செந்தாமரை கூம்பியது

அழுதும் கரையாத சோகத்தை ஆற்றிட-மரி
அன்னை மடியில் தஞ்சம் கோரிய நங்கை
மாலை வருமுன் வாடிச் சருகான பூவை-சோகத்தை
நெஞ்சுக்குள் வைத்த தாயோ இறை அடிமை

அணைத்த கரங்கள் முதுகை வருடி ஆறுதல் மொழிய
அன்பரை எண்ணி ஊமைக் குயில்போல் மனம் கரைய
அன்னை மடியில் நங்கைக்கு ஆறுதல்-ஆறாத
அன்னை மனதிற்கு இறைவனே தேறுதல்

ஆயிழையாள் நெஞ்சில் ஓயாத அலைகளாய்ச் சோகம்
தோகைமயிலாள் கால்களோ முடமான பாவம்
துயர் படிந்த மங்கையோ புகை படிந்த ஓவியம்
மூளியான சிற்பமோ சோக காவியம்



மயிலோ சாயல், கானக்குயிலோ சந்தம்-மான்விழி மூட
கனவிலும் துயரம்-சேல்விழி திறக்க நினைவிலே
கலக்கம், மான் இளம்பேடை கொல்புலி சூழ
நெய்யில்லா விளக்கெனப் புகைந்தாள்

அலையிடைத் துரும்புபோல் அலைந்தாள் பேதை
அசோகவனச் சீதையும், கானகத்து தமயந்தியும்
பட்ட துயரை ஒன்றாய் உற்ற கோதை

காயும் குளிர் நிலவே கண் மறைந்து கொள்
காங்கையாய் என் நெஞ்சைத் தீயக்கும் சோகம்,
கயல் பாயும் நெடும் புனலே ஓய்வு கொள்
என் நெஞ்சை மூழ்கடிக்கும் துயர வெள்ளம்

பூவிழிகள் சிவக்க, கனி மனம் துவள, இரவே செல்,
ஈர நிலலே முகம் மறைத்து நில், கமழ்ந்த பூங்கொடியே
வாசம் வீசாதே, என் மனதிலே சோகத்தின் வாசம்
கங்குலே நீளாதே-கல்லறைக்குள் என் தீபம்



என் இறைவன் உற்ற துயர் மனதைக் கொல்ல
துயர் சொல்லிப் புலம்பிட வார்த்தையின்றி
கையில் தலைவைத்து தரையில் மெய் சாய்த்து
தேன் மொழியாள் செய்வாள் தவம்

கதிரணைக்க கமலம் முகை நெகிழ-கண்விழித்த புள்ளினம்
பள்ளியெழுச்சி பாட, நீல விழிகள் திறந்து யோக துயில்
கலைய, நிலம் அதிர்ந்து மகிழ-நெகிழ்ந்து விலகி
தாள் திறந்த கல்லறையை மூடிய கல்

பூபாளமிசைத்து புள்ளினம் துயில் எழும்ப, பூவிழித்
தாமரை முகை நெகிழ, துயிலாத விழிகளை கண்ணீரால்
துடைத்து, துவண்ட கரங்கள் பரிமளம் ஏந்த
கல்லறை நோக்கி கருக்கலில் சென்ற கோதை

கருக்கலில் கல்லறை சென்றவள் கண்டதோ கருவூலம் இல்லாக்
வெற்றுக் கல்லறை, கதறிப் பதறி உள்நுழைந்தவள்
கண்டதோ வெண்ணாடையில் இருவரை வினவியதோ
“ அம்மா ஏன் அழுகிறீர்?”

"என் ஆண்டவரைக் காணோம்
எங்கே வைத்தனரோ தெரியவில்லை?"



திங்கள் காணாத அல்லியின் முகத்தில்
தேய்பிறையின் வாடல்-நெஞ்சம் பதைபதைக்க
பொங்கிடும் கண்ணீர் பார்வையை மறைக்க
நறுமணம் இல்லாப் பரிமள மனதிலோ தேடல்

ஏனம்மா அழுகிறாய்? யாரைத் தேடுகிறாய்?
இசையாய் ஒலித்த குரல் இதயத்தை தொட
துயரம் பார்வையை மறைக்க திரும்பியவள்
தோட்டக்காரர் என்றெண்ணிப் புலம்பினாள்

என்னவர் உடலை எடுத்துச் சென்றிருந்தால் ஐயனே
தாரும் , நான் எடுத்துச் செல்வேன் , இதயம் சூடிய
பூஞ்சுமை-இன்று, இமயச் சோகமாய்க் கனக்க-தேன்மொழி
இயம்பிடும் வார்த்தை தேம்பி ஒலிக்க அழுது மங்கையை
அன்பு பொங்க "மரியா" என அழைத்தார் இயேசு



உயிர்த்தவர் தோற்றம் உருமாறிடப்-பார்ப்பவர்
விழி கடந்த குவியத் தூரமாக
"மரியே" என்றழைத்தே தம்மை வார்த்தையால்
அடையாளம் காட்டிய இறை வார்த்தை

உதயம்தான் வந்ததோ?-இதயத்தை தொட்டது தென்றலோ
பாடி அழைப்பது கல்யாணியோ? இல்லை காம்போதியோ?
பதைபதைத்து கண்ணீர் வடிய முகாரி பாடிய மனம்
பரவசத்தோடு திரும்பிய நெஞ்சிலோ பூபாளம்

ஆனந்தக் கூத்தாடி மனம் ஹிந்தோளம் இசைக்க
உள்ளம் குளிர உரோமம் சிலிர்த்துரைய. தள்ளவிழி நீரரும்ப-
ரபோனி என்றழைத்து, மண்டியிட்டு மனுமகன் கால்களைப் பற்றி
திருவடிகளில் முகம் புதைத்து விம்மிய பூவை

உள்ளம் நெகிழ்ந்து மெய்யும் சிலிர்க்க
கண்கள் பனித்து ஆனந்த கண்ணீர் துமிக்க
புண்ணான பொன்னடிகளைப் பற்றி
அர்ச்சனைப் பூவான பூவை

கதிர் முகம் கண்ட பங்கயமாய் மனம் பூத்தாட
கார் கண்ட தோகையாய் இதயம் கூத்தாட
உதயம் கண்ட புள்ளாய் மனதிலே பூபாளம்
ஆயிழையாள் நெஞ்சிலோ வண்ண மலர்க்கோலம்

குளிர்ந்தன மொழிகேட்டு கோலச்செவிகள், மலர்ந்தன புது உதயம்
வந்ததென குவளை விழிகள், மொழி நவில வழியின்றி துடித்தன
செவ்விதழ்கள், பூமழையில் நனைந்தது பொன்னுடல்-பூரித்த
கன்னியின் களிப்போ பொங்கிடும் அலைகடல்



உவகை வெள்ளம் நெஞ்சில் பெருக்கெடுக்க
ஆனந்தக் கண்ணீர் விழிகளில் பொங்கி நிற்க
விம்மிடும் மார்பில் ஆனந்தம்
நெஞ்சுக்குள்ளோ சப்தஸ்வரத்தின் ஆலாபனம்

காணத் தவித்துக் கண்டதுவும்
கானமாய்ப் பெயர் சொல்லி அழைத்ததுவும்
நெஞ்சைத் தொட நெகிழ்ந்தாள்- திருப்பாதங்களில்
தஞ்சமென மலர் முகம் பதித்தாள் மங்கை

நெஞ்சம்தான் இறக்கை விரித்துப் பறக்க, இதயம்தான் இன்னிசை
பாடிக் களிக்க, புது உதயம்தான் வாழ்வில் வந்ததென-வாடிய
பங்கயம் குதுகலமாய்க் பூங்கதவு திறந்து சிரிக்க
இன்பம் பொங்கிய இளங்காலைப் பொழுது

கதிர் கண்ட குமுதம்போல் முகம் மலர
கார் கண்ட தோகையென உள்ளம் கூத்தாட
உதயம் கண்ட கோகிலம் என மனம் இசை பாட
ஆயிழையாள் மனதிலே ஆனந்தப் பூமழை

எத்தனை கோடி இன்பம் தந்தாய் என் இறைவா, துன்பம்
எல்லாம் பனிபோல் கரைய. நாறிய உள்ளமோ பரிமளம்போல்
நறுமணம் வீச, உயிர்ப்பின் மாட்சியாய் உன் திருக்காட்சி
இனி என் வாழ்விலோ என்றும் இறையாட்சி

சீலமும் காட்டி -உயிர்த்த கோலமும் காட்டி
ஞாலமும் உலகிற்கு காட்டிய நித்தியனை
காலனும் வெல்லுமோ? கல்லறைதான் கொள்ளுமோ?

ஆணி துளைத்த கால்களை -ஆனந்தக்
கண்ணீரால் கழுவிக் கூந்தலால் துடைத்து
வாசனைத் தைலத்தால் பூஜித்து-இதயம்
பொங்கும் அன்பைச் சொல்லிய கோதை

பற்றிய பாதங்களில் இதழ் பதித்த மங்கை-பூச்சியன்
காலடியில் பூவாய் தன்னைக் காணிக்கையாக்கி
பூஜை செய்த நங்கை-மனுமகன்மேல்
மாறாத நேசம் கொண்ட அன்புக் கங்கை



தொழுதாள், தாமரை விழிகள் பூத்துச் சிரிக்க
அழுதாள்,திருவடி பணிந்து மகிழ்ந்தாள்
மெல்லிடை மேனி சிலிர்க்க, சொல்லும் மொழி குளற
காணத் தவித்தவரைக் கண்டேன் என அகமகிழ்ந்தாள்

சுற்றிய பூங்கொடிபோல் பற்றிய கரங்களை
தொட்டுப் பரிவோடு உரைத்தார்
மரியே என்னைப் பற்றிப் பிடிக்காதே
தந்தையிடம் நான் இன்னும் செல்லவில்லை

சென்று என் சகோதர்களிடம் கூறும்
என் தந்தையும் உங்கள் தந்தையும்
என் கடவுளும், உங்கள் கடவுளுமானவரிடம்
நான் செல்லவிருக்கின்றேன்

பொங்கிடும் மகிழ்வினால் பூரித்த நங்கை
திங்கள் கண்ட பங்கயம்போல் மலர்ந்த பூவை
வியந்திட-அன்பே சிவமான தந்தையின் மகன்
இன்புற்று மெல்லக் கண் மறைந்த கதிரவன்



உன் பிறப்பின் நற்சேதியை வானவர் சொல்லி மகிழ
உன் உயிர்ப்பின் நற்சேதியை சீடர்களுக்கு
வானவர்போல் நானும் சொல்லி அகமகிழ
இறைமகனே நீ ஈந்த வரம் பெரிது

கண்களில் ஆனந்தக் கண்ணீர் பூத்துச் சொரிய
மொழிகளில் கவிதையும் கானமும் கலந்தே ஒலிக்க
சோகம் கலைந்தவள் மெய்யில் அழகு சோபிக்க
புதுமலராய் இதழ்விரித்துப் புன்னகை பூத்தாள்

அழகின் நடையில் அன்னமும் சேர்ந்திட, ஆனந்தத் துள்ளலில்
மான்களும் கலந்திட, மொழியிலே யாழும், குழலும்,
குயிலும் கலந்த, பரவசம் இசையாய் ஒலித்திட-இறக்கை
விரித்து வானம்பாடிபோல் எழுந்து பறந்த இதயம்

இனிச் சோகமில்லை என்றும் ஆனந்தமே! கண்ணீரில்லை
என்றும் அக்களிப்பே. அன்புத்தாயிடம் அதிசயம் சொல்ல
கடல் தேடும் நதிபோல் ஓடிய கங்கை

ஆயிரம் இதழ் பூத்த தாமரைபோல் அன்னையின் அழகு
அன்பு மகனைக் கண்ட தாயோ முழுநிலவு, அன்னைக்கு மங்களம்
அணங்கனே சொல்லிட, அன்பு மனங்களில் பொங்கும் மங்களம்
ஆனந்த முரசொலியிலோ ஓயாத குதூகலம்

கண்ணீர் இமையொடுங்க, கனத்த மனம்
காற்றாய் மாறிட-நாறிய மனம் நறுமணம் வீச
துன்பமும், துயரமும் கண் மறைந்திட
இனி என்றும் இன்பமே என் இன்புற்ற மனம்

காணத் தவித்த செவ்விழிகள் கண்டு பூத்திடப் பங்கயம்
பேசத் தவித்த செவ்வாய் பேசி மகிழ்ந்திட
இதயத்திலோ சப்த ஸ்வரத்தின் ஆலாபனம்



துள்ளாத இதயம் துள்ளி மகிழ்ந்திட
நெஞ்சத்திலே நீரோடை கண்ட கலைமானின் இன்பம்
ஏங்கித் தவித்த இதயத்தை இதயகீதம் வருடிட
நெஞ்சுக்குள் நறுமணம், நேசரின் அன்போ பரிமளம்

புள்ளுறையும் சோலைபோல் நெஞ்சம் மாறிட
நாளும் இசைக்கோலத்தின் ஆட்சி
பூங்கமல வாவிபோலான ஆனந்தி உள்ளத்தில்-
நாளும் ஆனந்தப் பூக்களின் கண்காட்சி

கதிர் வந்தால் காரிருள் கலையும், பூங்கமிழ்
வாவி பூத்து மணம் கமழும், புள்ளுறை சேலையில்
இசை தவழும்-மாதவனைக் கண்டதால்
மலர்ந்து பாடும் மங்கை மனம்



புள்ளினம் இசை பாட, பூவினம் கோலம் போட
நிலவு துயில் கொள்ள- நீலக் கடல் பொங்கி ஆட
கதிரவனின் புது உதயம்-வையம் துயில் கலைய
மரியாள் நெஞ்சம் இசைக்கும் சுப்ரபாதம்

அன்னை மரிக்கு மகனாய் வந்துதித்த அமலனே,
மனுவுருவான இறை வார்த்தையே, ஞாயிறு புலர்ந்திட,
திங்கள் மறைந்திட, புள்ளினம் பூபாளம் இசைக்கப்-
பூவினம் முகை நெகிழ்ந்தது-

கல்லறை தாள் திறந்து கனிமுக தரிசனம் தர
கன்னி மகனே கண் மலர்வாய்,
எனையாளும் எம் பெருமானே ஈசனே
கனி முகம் காட்டி ஞாலம் ஒளி பெற எழுந்தருள்வாய்

கதிர் முகம் கண்டு எம் இதயக் கமலம் பூக்க
கன்னி மகனே கதிராய்த் தரிசனம் தருவாய்
எழுந்தருள்வாய், இறை மகனே
இறப்பை வென்ற திருமகனே காட்சி தருவாய்



கசை பட்டு, முள்சூடி, கழுமரம் சுமந்த திருமகனே
ஆணிகள் துளைத்திட அறையுண்டு-வதைபட்டு
வதைப்போரையும் மன்னித்த கருணாகரனே
ஈட்டி துளைத்த இதயமே-கண் மலர்வாய்

உயிர்ப்பின் மாட்சி நாம் காண
இறைமகன் நீ என இதயம் போற்ற
மாதவனே உன் தாள் பணிந்து வணங்க
தூயவனே, அமரனே எழுந்தருள்வாய்

கைவண்ணம், கால் வண்ணம், கலிங்க வண்ணம் ,
சொல் வண்ணம் காட்டி, கண்ணீர் துடைத்த கருணை வண்ணமே
அன்பின் பெருவண்ணமே- நின் முகவண்ணம் காண
கண் மலர்வாய், எழுந்தருள்வாய், எம் மன இருள்
வண்ணம் போக்கிட தரிசனம் தருவாய்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-21-10-2023*

கூடல்:- தலைவனைப் பிரிந்த தலைவி, அவன் வருகையின்
நிமித்தம் அறிய மணலில் வரையும் சுழிக்குறி

***சுப்ரபாதம்***- கடவுளுக்கு காலை வணக்கம் செலுத்தி அவரை எழுப்புவது-

# உயிர்ப்பு உடலின் புது மலர்வு



கல்லறையும் கொள்ள முடியாதவரை
காலனும் வெல்ல முடியாதவரை -வைத்த
கல்லறையின் பெருங்கல்லைப் புரட்டுவது எங்ஙனம்?
கருக்கலில் கல்லறை நாடி வந்து கவலையோடு
கருத்து பரிமாறிக் கொண்ட தாய்க்குலம்.

புரண்டு கிடந்த கல்லும், திறந்து கிடந்த கல்லறையும்
பேரதிர்ச்சி தர-புதுப்புரட்சி சொல்ல
கை நழுவிய நறுமண தைலங்கள்-அஞ்சிக்
குழம்பிய மங்கையர் உள்ளங்கள்



பார்த்தவர் விழிகள் நிலைக்குத்தி நின்றிட
வெண்ணாடை அணிந்த மனிதர்
வியப்பூட்டும் சேதி சொல்லிட -பரிதி கண்ட
பங்கயமாய் பூத்து மகிழ்ந்த பூவையர்

உயிர்த்தவரை மரித்தோரிடம் தேடுவதும் ஏனோ?
வாழ்வுமானவரைச் சாவும் காவு கொள்ளுமோ?
வியந்து களிப்புற வியப்பான நற்செய்தி
சீடர்களோடு பகிர்ந்து இன்புற உயிர்த்த ஜெகஜோதி

மகிழ்ந்த மனம் பூவாய் மலர
இறக்கை விரித்த இதயம் எழுந்து பறக்க
கோகிலாம்போல் கூவும் மனம்- பூ மழையில்
நனையும் ஆனந்த தினம்

உயிர்த்த சேதி கேட்டு- யோவானும், சீமோனும்
உயிர்ப்போடு கல்லறை நோக்கி கடுகி ஓடிட
முந்திய யோவான் பிந்திய சீமோன்

உடலைச் சுற்றிக் கட்டிய துண்டு-ஒழுங்காய்
மடித்து ஓரிடத்தில் வைத்திருக்க-கல்லறைக்குள்
முந்தி நுழைந்த சீமோன் கண்டார்
காணாப் பேருண்மையை நம்பினார்

வெள்ளைப்போளமும், சந்தனத்தூளும் கலந்த கலவையைப்
பூசிக் கட்டிய துணி காயத்தை எ.:குவாய்ப் பற்றிட
கட்டிய துணியை கழற்றி மடித்து வைத்தல், மடிந்தவர்
புரிய முடியாத, மானுடம் காணாத அதிசயம்



ஒட்டிக் காய்ந்து உடலோடு ஒன்றாகும் துணியை ஓரிடம் மடித்து
வைத்து -தம் உயிர்ப்பை இறைமகன் சொல்லாமற் சொல்லிட
கண்ட விழிகளோ கதிர் கண்டு பூத்த பங்கயம்
உள்ளங்களில் உயிர்ப்பின் புது நர்த்தனம்

பட்ட காயங்கள் துணியில் பதிந்திருக்க, உற்ற துயரம் பனிபோல்
உருகிக் கரைந்திட வரண்ட வைகையில் புது வெள்ளம்
இருண்ட நெஞ்சங்களில் நம்பிக்கையின் புது உதயம்
இருவர் உள்ளங்களிலும் பொங்கிடும் பேரானந்தம்

துண்டை நெஞ்சோடு அணைத்து
தூயவர் உடல் வைத்த இடம்தனைத் தொழுதார்
இதயம் நெகிழ கண்ணீர் பொங்கிட அழுதார்
யோவானை அணைத்து, சீமோன் அகமகிழ்ந்தார்

பாடித்துதிக்கும் உள்ளம் கானக்குயிலாக
ஆடி மகிழும் நெஞ்சம் கலாபமயிலாக
நெஞ்சுக்குள் கானங்கள் கோடிப் பண்ணிசைக்க
இதயவீணையில் ஓயாத ஆனந்த ராகங்கள்

நீரில் இனிய மதுச்சுவை வைத்தான்-நோயால்
நொருங்கிய மாதின் நெஞ்சுக்குள் புன்னகை வைத்தான்-
காரிருளில் மூழ்கிய விழிகளுக்கு ஒளி கொடுத்தான்
முடவர் நடந்திட கால்கள் கொடுத்தான்

மரித்த இலாசரை எழுப்பி புது வாழ்வு கொடுத்தார்
கடலையும், காற்றையும் கனிவோடு
அமைதி காத்திட அழைத்தார்-தந்தையிடம்
தன்னை வதைப்போரையும் மன்னிக்க இரந்தார்

வழியும், உண்மையும், வாழ்வுமானவர்
விழிப்புணர்வை வரமாய்த் தந்து
அன்பைத் தவமாய் வாழ அழைத்தார்
என்னே அவர்தம் இறை கருணை!

கல்லறையும் கொள்ளுமோ அன்னையின்
கருவறைக் கருவூலத்தை-காலனும் கைப்பற்றுமோ
வழியும், உண்மையும், வாழ்வுமான தெய்வத்தை

கண் காணக் கதிர் மறைந்தது மேற்கில்
கிழக்கிலோ புது உதயம், சுற்றும் பூமியில்
கணந்தோறும் உதயம், கணந்தோறும்
கண் மறையும் கதிரின் மாயம்

கைவண்ணம் விழிகளில் கண்டேன்-
கால் வண்ணம் கடலில் கண்டேன்
சொல் வண்ணம் மதுவில் கண்டேன்
கலிங்க வண்ணம் மங்கையில் கண்டேன்
போற்றிப் பாடுகிறேன்

முக வண்ணம் முள்ளில் கண்டேன்
முதுகு வண்ணம் கசையில் கண்டேன்
கருணை வண்ணம் மரத்தில் கண்டேன்
மனம் வாடுகிறேன்

கதிர் வண்ணம் மலையில் கண்டேன்
உயிர்ப்பின் வண்ணம் கல்லறையில் கண்டேன்-
வாழ்த்துப் பாடுகிறேன்



இறை வார்த்தையோ அன்பின் வண்ணம்
இதயமோ கருணையின் வண்ணம்
கல்லறையிலோ உயிர்ப்பின் வண்ணம்
சீடன் எண்ணத்திலோ களிப்பின் வண்ணம்

ஒளியிலோ பல வண்ணங்கள், ஏழு சுரங்களில்
எத்தனை இராகங்கள், மனுவுருவான வார்த்தையில்
வழியும், உண்மையும், வாழ்வுமான
அன்பின் கலைநயங்கள்

தொழுவத்திலோ எளிமையின் தாண்டவம்
ஆலயத்திலோ ருத்ர தாண்டவம்
சிலுவையில் கருணைத் தாண்டவம்
கல்லறை அதிர்ந்திட சின்மய தாண்டவம்

விண்ணுயர அடி முடி காணா இறை தாண்டவம்
அன்புக் கூத்தனோ அதிரும் ஓங்காரம்

மனு வண்ணம் கடலில் கண்டேன்
இறை வண்ணம் வாழ்வில் கண்டேன்
இறைவன் நீயே என்றேன்
மரணமோ அஸ்தமன வானம்
உயிர்ப்போ உதயகாலத்து பூபாளம்

***எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-21-10-2023*

# உயிர்ப்பு ஆன்மாவின் உடை மாற்றம்

---

ஆன்மாவிற்கு அழிவில்லை, மரணமில்லை
உடலில் ஏற்படும் நிலை மாற்றமே-ஆன்மா
உடை மாற்றும் தோற்றமே மரணம்



உடலைக் கொன்றபின்-ஆன்மாவை
எரிநரகில் தள்ள வல்லவருக்கே அஞ்சுங்கள்,
தன்னுயிரை, விழிப்புணர்வோடு, சுதந்திரமாய்
தந்தையிடம் கையளித்தவர் மரிப்பது எங்ஙனம்?



*என்னால் உயிரைக் கொடுக்கவும் முடியும்*
*மீண்டும் எடுக்கவும் முடியும்*
*விழிப்புணர்வெனும் பெருங்கடலில் எழுந்த பேரலை*
*கண்மறைந்த காட்சி-கடலோ இருபான சாட்சி*

*அலையும் கடலும் ஒன்றான மாட்சி*
*அலையும் கடலே,*
*அறிந்தவருக்கோ அகமகிழ்ச்சி*

சடமும் சக்தியும் ஒன்றுக்குள் ஒன்றாக
ஒன்று மற்றொன்றாய் மாறுபடும் நிகழ்வாக
மறுபிறப்பை மதங்கள் எடுத்துரைக்க
வாழ்வு மாறுபடுகிறதேயன்றி
அழிக்கப்படுவதில்லை மாறாத உண்மை.

சமாதி நிலையில் ஓய்ந்திருந்தவரை
உயிரிழந்தார் என்று நம்பிய சீடர்
ஓய்வு நாளில் ஒளிந்திருந்து-ஓய்ந்திருந்து
மூன்றாம் நாள் வரைக் காத்திருந்தார்



மூன்றாம் நாள் கண்டதோ
காலம் கடந்த சீடர் கண்ட நிகழ்வு

எல்லை கடந்த இருப்பாய்
இருமை கடந்த முழுமையாய்-
என்றும் வாழும் இறைவன்

உயிர்த்தெழுதலும், வாழ்வும் நானே
என்னிடம் நம்பிக்கை கொள்பவன்
இறப்பினும் வாழ்வார்-

உயிரோடு இருக்கும்போது
என்னிடம் நம்பிக்கை கொள்பவர்-எவரும்
என்றுமே சாகார்-(யோவான்-11:25)



இறந்தோரை உயிர்த்தெழச் செய்தவர் மரிப்பது சாத்தியமா?-
இயேசுவின் உடல், தோற்றம் மாறியதேயன்றி அழியவில்லை,
மறுரூபமானவரை அறியாதோர்-ஓய்வில்
உறங்கி எழுந்தவரை அறிவாரோ?

உயிர்த்து உருமாறியவரைக் காண-மதலேன் மரியாளும்-
எம்மாவுஸ் சீடர்களும் தடுமாறியது புதிதல்ல-
உள்ளுணர்வின் உயர்தளத்தில் நிகழ்ந்த மாற்றம்
விழிகடந்த மூன்றாம் விழி காணும் தோற்றம்

விழிகள் வெளியே காண்கின்றன
உள்ளே காண- மூடிய விழிகளும்
மூன்றாம் கண்ணும் தேவை-மனமழிந்த
தூயமனமே இறைவனைக் காணும்.

சடமும் சக்தியுமான சகுணபிரம்மமாய்
உரு கடந்த நிர்க்குண பிரம்மமாய்
அறிவு கடந்த- பரிபூரண ஞானமாய்
சூனியமாய்-இறைவன்.

ஆன்மாவின் பயணம்
வீடு சேரும் வரை முடிவதில்லை



சடமும் சக்தியுமாய்- சிவசக்தியாய்
நிர்க்குண, சகுண பிரம்மமாய்-இருப்பு
சமநிலையில் ஒரு தராசின் இரு தட்டுக்கள்
இருமை கடந்து சாட்சி பாவமாய் கண்டால்
உண்மையின் தரிசனம் காண்போம்
உயிர்ப்பை அறிவோம்.

மண்ணால் ஆன கூடு கண் மறைந்திட
ஆணவம் கழித்திட தூய மனமாய்த் துரியம் நிலைத்திட
உள்ளுணர்வின் அதி உன்னத மாட்சி உயிர்ப்பு
இயேசு கிறிஸ்துவான அக நிகழ்வு

ஆண்டுதோறும் வரும் பண்டிகையல்ல-உயிர்ப்பு ஞாயிறு
ஆணவம் கழித்து துரியத்தில் நிலைக்கும் அக நிகழ்வு




உள்ளுணர்வில் உயர்ந்து-விழிப்புணர்வில் நிலைக்கும்
நானும் தந்தையும் ஒன்றென்ற ஆனந்த உணர்வு

அதுவே நம் உயிர்ப்பு
நாம் இறந்து உயிர்க்காதவரை--இது
வருடந்தோறும் வரும் வெற்றுப் பண்டிகை

அகக்கனல் ஏற்றி ஆணவ இருள் மறைந்திட
புதுப் புனலாய் உள்ளுணர்வு பொங்கி
சத்தியம்- சிவம்- சுந்தரம் நாமே என முழங்கிட
விழிப்புணர்வில் நிலைக்கும் நிலையே மெய்ஞானம்-
உயிர்ப்பு-நிர்வாணம்

ஞானத்தின் மொழி மூடருக்குப் புரியாது
ஒளியை இருள் அறியாது, உங்கள் ஒளி ஒளிரட்டும்
நம்முள் கிறிஸ்து உணர்வு பிறப்பதே
மெய்யான உயிர்ப்பு

*Easter Sunday is not an external celebration*
*It is an internal feast to realize one's true nature*
*Realization of Truth*
*I and Father are one is the absolute truth*
*Raising in consciousness-*
*elimination of unconsciousness and ego*
*is the true celebration of Easter*

**எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-21-10-2023

# உயிர்ப்பின் சந்திப்பு- சீடர்





காணத் தவித்து கண்டதுவும், கதைகள் பலபேசி
மகிழ்ந்ததுவும், வாழ்வு தரும் வார்த்தையை
உண்டு மகிழ்ந்ததுவும் கனவானது

ஊர்கள்தோறும் நற்செய்தி மொழிந்ததுவம்
ஒன்றாய் கூடி உண்டு மகிழ்ந்து, உறங்கி, எழுந்து
உறவு வளர்த்ததுவும்- பழங்கதையானது

நெஞ்சில் சோகம் மலையாய் கனத்திட
அஞ்சி, ஏங்கித் தவித்த சீடர் மனதில்
வாழ்வு மாயை என்றானது

அச்சமும், ஆழ் துயரமும் வாட்ட -ஊனொடுங்கி
உயிர் நடுங்க ஒளிந்து வாழும் சீடர் புத்துயிர் பெற
வாதைகள் பட்டு மரித்து உயிர்த்த மனுமகனின் திருக்காட்சி
வாழும் இறைமகனோ அமரன் என்பதற்கு
வழியும், உண்மையும், வாழ்வுமானவரின் சாட்சி

நெய்யின்றிச் சுடரோ நிலை தடுமாற, நிலவில்லா வானோ
அமாவாசை இரவாக, குருவில்லா உறவு நீர் வற்றிய
குளமாக, அல்லியும், ஆம்பனுமாய் பூட்டிய அறைக்குள்
குழுமியிருந்த சீடத்துவ உறவுகள்

வாடலின் சாயலோ முகத்தில் -நெஞ்சுற்ற
வருத்தமோ அகத்தில்-சுரம் தப்பிய
பாடலாய் சோகம் மனதில்-குரு வரவேண்டும்
நூற்றிடும் தவமோ முகையான மனதில்

உங்களுக்கு அமைதி உரித்தாகுக! வாழ்த்தித் தோன்றிய
இறை மகன், வார்த்தைக்குள் அடங்காத உயிர்ப்பை
வடிவமாய் காட்டிக் களித்த தெய்வமகன்

அச்சம் திகிலும் ஆட்கொள்ள-மனதிலே
ஆவியைக் காண்பதான பிரமை,
இறந்தவர் உயிர்ப்பது சாத்தியமோ?
வந்தவர் குருதான் சத்தியமோ?

உயிர் அச்சமோ வல்லினம்,
ஆயனை விட்டோடிய செம்மறிகளோ இடையினம்,
கண்டு கலங்கிய விசுவாசமோ மெல்லினம்
அருவம் என்று ஐயத்தில் தடுமாறிய மானுடம்

கலக்கமேனோ? அச்சமேனோ? ஐயமும் ஏனோ?
என் கை, கால்களைப் பாருங்கள்-தழும்புகள்
என்னைத் தொட்டுப் பாருங்கள்
எலும்பும், சதையும் ஆவிக்கில்லை

நம்பமுடியாத வியப்பு நல்மனங்களை ஆட்கொள்ள
ஆனந்தக் களிப்பு உள்ளத்தில் பூத்தாட
காண்பது கனவா? நனவா திகைத்த சீடர் மனம்

உண்பதற்கு ஏதேனும் உண்டோ? தனக்கே உரித்தான
உண்ணும் முறையால் தன்னை எண்பிக்க
உறவாய் வினவிய தேவகுணம்

உண்ணும் முறையைக் கலையாக்கிய கலைஞன்
உயிர்ப்பை உறுதிப்படுத்தி விசுவாசத்தை திடப்படுத்திட
வேகவைத்த மீன் துண்டை விருந்தாய் அமர்ந்து
அபிநயத்தோடு உண்டு மகிழ்ந்த அமரனோ அபிநயன்

உண்ணும் முறையால் குருவை அறிந்தவர்
மனங்களிலோ ஆர்ப்பரிக்கும ஆனந்தப் புதுவெள்ளம்
இறப்பைக் கடந்து வாழ்கின்றார்-எண்ணமே இனிக்க
குயில் தோப்பான மனங்களிலோ இசை வெள்ளம்

மறைநூல் வாக்குகளை மேற்கோள் காட்டி, பாடுகள், உயிர்ப்பை
எடுத்துக் கூறி, மனக்கண்களை திறந்தவர்-எனக்கு நீங்களே சாட்சி
உன்னதத்திலிருந்து வரும் வல்லமையைப் பெறும் வரை
இந்நகரத்திலேயே தங்கியிருங்கள் உரைத்தவர் கண் மறைந்தார்

கண்டு மகிழ்ந்ததும், கேட்டு இன்புற்றதும் இறைமகனோ?
மனம் உண்டு மகிழ்ந்தது வானமுதோ? விழி மகிழ்ந்து,
செவி குளிர்ந்து, இதயம் பூரிக்க, உயிர் மெய் சிலிர்க,
உவகையால், ஆனந்தக் கண்ணீர் துமித்த விழிகள்

***எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-21-10-2023*

# புனித தோமாஸ்-பகுத்தறிவாளர்





"மருண்டவன் கண்களுக்கு இருண்டதெல்லாம் பேய்"
மாண்டவர் மீண்டும் வந்ததில்லை
மானுடர்க்கு மரணமே இறுதி முடிவு
மனம் வெதும்பிடக் குலுங்கி அழுதார் தோமா

உயிருக்கஞ்சி அவரைத் தனியே விட்டோடி
எம்முயிரைக் காத்த கோழைகள் நாம்
கள்வனாய் கழுமரத்தில் அவர்
காட்டிக்கொடுத்து, மறுதலித்த சீடர்களோ நாம்

இறைமகன் நான், எதிர்பார்த்திருந்த மெஸாயா நான்
சத்தியத்திற்கு சான்று பகிர்ந்தவரை, இறை நிந்தை
புரிந்தார் எனக் குறை கண்ட திருச்சங்கம்-பிலாத்துவை
மிரட்டிப் பணியவைத்து கொன்று பழி தீர்த்த பங்கம்

துயர் குடிகொண்ட நெஞ்சில் அவநம்பிக்கையின்
ஆதிக்கம், இயேசு மெஸியா என்பது-பொய்யாய்,
கனவாய், பழங்கதையாய் மாறிட-நம்பிய
இதயத்திலே தாங்கொண்ணாத ஆதங்கம்

குரு மரித்திட கொண்ட நம்பிக்கை கருகிட
காட்டிக் கொடுத்தவர்-தூக்கிட்டுத் தன்னை மாய்த்தார்
காதறுத்து வீரனாய்ப் போராடியவரோ-கோழையாய்
குருவை மும்முறை மறுதலித்தார்



அஞ்சி மறுதலித்தவர் அழுது புலம்பி
அனலில் விழுந்த மெழுகுபோல் உருகிக்கரைந்து
ஆண்டவர் மன்னிப்பார் என்ற நம்பிக்கையில்
நம்மோடு இருக்கின்றார்

ஆண்டவர் உயிர்த்தார் அவரைக் கண்டோம்,
உங்கள் கூற்றுக்கு சான்று ஏது?
சான்று இல்லாக் கூற்று சபை ஏறாது

கண்டதனால் நம்புகின்றீர்கள்
காணாமல் என்னை நம்பச் சொல்கிறீர்கள்
அவரோடிருந்தும் அவரை நாம் அறியவில்லை
நம்மை எமக்கே தெரியவில்லை

குருவோடு வாழ்ந்தும்-மெய்யறிவு எனக்கில்லை,
ஏன் நமக்கில்லை, ஆசைச் சேற்றில் புதைந்த மனிதர்கள்
நம்மில் யார் பெரியவன் என்ற ஓயாத போட்டி
தாழ்வுமனப்பான்மை நம்மை வருத்தும் கூரிய ஈட்டி

காட்சி கண்டதற்கு சாட்சி நீங்கள்
கண்டதே காட்சி கொண்டதே கோலம் உங்கள் வாதம்
நம்பிட ஏது வேதம்? நம்பாதவை நடந்து முடிந்திட
இனி நம்பிட ஏதுமில்லை

உண்மைக்கு நிரூபணம் தேவை
நம்பிக்கை நலிவானது, உண்மைக்குத் தடையானது
ஆண்டவர் உயிர்த்தார் என்பதை நம்பவில்லை-
உண்மையைத் தரிசிக்க ஆவலாயுள்ளேன்

வெற்றுக் கல்லறையோ, மடித்து வைத்த துண்டோ
குரு உயிர்த்தார் என்பதற்கு சான்றாகாது,
உயிர்ப்பு மானுடம் அறியாத ஒன்று

ஆபிரகாம் மாண்டார், மோயீசன் மரித்தார்
தாவீதும், ஞானி சாலமோனும் இறந்தார்
திருமுழுக்கு யோவான் கொலையுண்டார்
யாரும் உயிர்க்கவில்லை-எவரும் இதை மறுக்கவில்லை

உயிர்த்தவரைக் காண ஆவலாயிருக்கின்றேன்
விரித்த கரங்களின் தழும்புகளை தொட்டு
ஈட்டி குத்தித் திறந்த மார்பை தழுவி
சாட்டை உழுத முதுகை தடவிப் பார்க்கவேண்டும்

ஐயம் தீர அவர்தான் என நான் அறியவேண்டும்
மெய் தழுவி, கண்ணீரால் கழுவி
மெய்யப்பனை நான் தொழவேண்டும்

குழம்பிய குட்டைபோல் உங்கள் மனம், குற்றவுணர்வில்
கயிறறுந்த பட்டம்போல் நம்முள்ளம். வெற்று
வார்த்தைகளை நம்பிட நான் தயாரில்லை, உயிர்த்தார்
என்பதற்கு அவர் திருக்காட்சியே, நான் வேண்டும் சாட்சியம்

குமுறிக் கரைந்து, குருவே என அழுது பேசி முடித்தவர்
விழிகளில் காயாத ஈரம், நெஞ்சில் தாளாத சோகம்
ஏனையவர் காண உம் திருக்காட்சி-உம்மைக்
காணாத ஏழைக்கு ஏனோ இந்த இகழ்ச்சி

உம்மைக் காணமல் என் கண்கள் நம்பாது
உம்மைத் தொடாமல் என் மனம்
சீடர் சாட்சியத்தை ஏற்காது

ஐயனே என் அவவிசுவாசம் நீங்கிட தரிசனம் கொடு
உம் மாட்சியே என் வாழ்வின் மகிழ்ச்சி
வாழ்நாளெல்லாம் வாழ்வால் உமக்கு சாட்சியம் பகிர
காட்சி கொடு என் கவலையைப் போக்கிவிடு



வாரம் ஒன்று கழிந்திட, வார்த்தையானவரை எண்ணித்
துயரில் மூழ்கிய சீடர் குழாம் ஒன்றாய் குழுமி இருக்கையில்,
வார்த்தை ஒளிர்ந்து அதிர்ந்தது
***"அமைதி உண்டாகுக"***

வாடிய பயிருக்கு வான் மழையின் அபிஷேகம்
பாடல் மறந்த குயிலுக்கு கான மழையின் உற்சவம்
காணத் தவித்த இதயத்திற்கு சத்திய தரிசனம்
ஊன விழிகாண உன்னதரின் காட்சியில் கரிசனம்
உருகிய உள்ளத்திலோ உவகையின் மாட்சி
கருகிச் சருகான மலர் பூத்த அற்புத நிகழ்ச்சி

அனைவரும் வியந்து நோக்குகையில்
"தோமா இதோ என் கைகள் , கால்கள்
விலாவில் ஈட்டியின் தழும்பு
தொட்டுப் பார் உன் சந்தேகம் தீர்"

விழுதும், வேரும் அறுந்த மரமென
விழுந்து தொழுதார்-விழியில் நீர் ஏந்தி
அழுதார்-ஆணி துளைத்த பாதங்களைத்
தழுவிப் பிழை பொறுக்க இரந்தார்



***"என் ஆண்டவரே- என் தேவனே"***
கதறிய மொழிகளில் கண்ட களிப்பு
துயரக் கண்ணீர் ஆனந்தக் கண்ணீரான உவப்பு

கண்டு விசுவசிப்பதை விட-என்னைக்
காணாமல் விசுவசிப்போர் பேறுபெற்றோர்
அன்போடு தோமாவை அணைத்த குரு

பகுத்தறிவு, நம்பிக்கையின் சங்கமத்தில் தோன்றிய
அறிவார்ந்த ஒழுக்கமாய் இறையியலின் மலர்ச்சி
தோமாவின் உள்ளத்திலோ புது எழுச்சி

சிந்திப்பவர் சந்தேகிக்கின்றார்-நம்பிக்கை தாண்டி
சத்தியத்தை தேடலில் தரிசிக்கின்றார்
சத்தியம் தரிசனமே

உயிர்த்த இலாசரும், நயீம் விதவையின் மகனும்
மீண்டும் மரித்தார், மீண்டும் மரிப்பதற்காய்-
இயேசு உயிர்க்கவில்லை,-மரணத்தை அழித்து
தம் அமரத்துவத்தை நிரூபித்தார்

இறப்பின் வழியாய் உடலை உதிர்த்து
"உயிர்த்து, சுத்த சைதன்யமாய்"
வந்தவரோ இறைமகன்



அவரை கண்டவர் தடுமாறினார்
அழியும் சடத்துவ உடல் நின்று -தொடரும்
அழியாத ஆன்மாவின் பயணம்
அறியாதோர் மரணம் என்றார்

அவதார புருஷர்க்கு மரணமில்லை
இறப்பு, மகாபுருஷருக்கு விதைப்பே
ஆன்மாவின் உடை மாற்றமே

விதை மடிந்து நாற்று முளைத்திட தொடங்கும் புதுவாழ்வு-
விதைக்குள்ளோ விருட்சம்-விருட்சத்தில் விதைகளோ பல இலட்சம்
விதையும், விருட்சமும் சந்திப்பதில்லை
விதையைக் கண்டவருக்கு விருட்சம் தெரியவில்லை
இதில் வியப்பொன்றுமில்லை.

**எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-21-10-2023

# எம்மாவுஸ்- பயணம்



சொல்லொண்ணாத் துயரில் சோர்ந்த மனம்
அனலிடைப் புழுப்போல் சோகத்தீயில் வெந்த தினம்
மலைபோல் கனக்கும் மனச்சோகத்தை இறக்கிட
நிலையான சுமைதாங்கி தேடும் சீடர் மனம்



நிலைத்த நம்பிக்கை மணல் வீடாய் இடிந்து தகர்ந்திட
மனமோ கயிறறுந்த காற்றாடிபோல் புழுதியில் அலைந்திட
கடலளவு அன்பு கொண்ட மனதிற்கு கழுமரத் தண்டனை
இறைமகன் பட்ட துயர் இதயத்தை நொருக்கிய பேரிடர்

விம்மிய இதயம், இமைக் கரையுடைத்த கண்ணீர்
வெள்ளம், நம்பிக்கை நாம் இனியும் காணாத உதயம்
உரையாடி நடந்த நண்பர்கள் பயணம்

உறவாடி மகிழ்ந்த உறவும் கனவாக-களைப்பாறத் தாய்மடி தந்த
குருவும் கல்லறையில் இளைப்பாற, நம்பிக்கை பொய்யாக-நல்
இறைவனும் தன் மகனை கைவிட்ட கதை நிஜமாக, மலைபோல் கனக்கும்
மனது-கார்கால மழைபோல் கண்ணீர் துமிக்கும் பொழுது.

வழிப்போக்கனாய்-வந்தவரும் சீடர்களோடு
இணைந்து நடந்து உரையாடினார், நண்பர்களே
வாட்டமேனோ? நெஞ்சில் தீராத வருத்தமேனோ?



நண்பரே நீர் ஒருவர்தான் -ஜெருசலேமில்
நடந்த கதை அறியாத மனிதர்போலும் -மீட்பர் என
நம்பியவரை நாதியற்ற கள்வனாய்ச் சிலுவையில்
அறைந்த கொன்ற துயரச் சம்பவம் அறியீரோ?

எம் நம்பிக்கை சிதறிட, சீடர் நாம் உற்ற துயரை
சொல்லியழ வார்த்தையின்றி தவிக்கின்றோம்
மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல்
சோகத்தீயில் நாளும் வேகுகின்றோம்

வருந்தாதீர்-எதிர்பார்த்த மெஸியா வந்தார்
பட்ட துயரால் மானுடர் பட்ட கடன் தீர்த்தார்
முன்னுரைத்த இறைவாக்கினர் வாக்கெல்லாம் நிறைவுற
வழியும், உண்மையும், வாழ்வுமானவருக்கு இறப்பேது?

நம்பிக்கை துளிர்விட நலம்பெற்ற சீடர்
மனதிலே நிம்மதி-வார்த்தையோ இறை சந்நிதி-
அமைதியோ பெருநிதி, அளித்தவரோ தயாநிதி

மாலையும் வந்திட-சாலையில் இருள் சூழ்ந்திட
வழிப்போக்கராய் இயேசு பயணத்தை தொடர்ந்திட
வாரும் வந்து சத்திரத்தில் எம்மோடு
எம் விருந்தாய்த் தங்கும்

எம் மனம் உற்ற துயர் உம் வார்த்தைகளால்
மறைந்த மாயம்தான் என்ன?
எம் குருவைச் சந்தித்த இன்பத்தை மனம் துய்த்திட
எம் நெஞ்சுற்ற இன்பம்தான் என்னே!

இன்புற்ற சீடரும்-இறை மகனோடு பந்தியில் அமர்ந்திட
அன்பினால் இன்புற்ற இறைமகனும் -இறை வாழ்துக் கூறி
அப்பத்தை-பிட்டு கொடுத்த செய்கை அண்ணலை இனம் காட்டிட
விடியல் கண்ட பூவினம்போல் பூத்த மனம்
புள்ளினம்போல் பள்ளி எழுச்சி பாடிக் களித்த தினம்
காட்சியளித்த பெருமான் கண்ணின்று மறைந்த கணம்



அம்மான் மகன் வாழ்கின்றார் என்ற உண்மை
ஆனந்தம் அளிக்க-உவகையால் உள்ளம்
புது வைகைபோல் பெருக்கெடுக்க
எழுந்தவர் உடன் தொடர்ந்த பயணம்

சீடர்களோடு இணைந்திட-இயேசு உயிர்த்தார்
மங்கையர் உரைத்த மகத்தான சேதி, நடந்தைக் கூறி-
இன்புற்ற சீடர் இருவர் மனத்திலும் ஆனந்த ஜோதி

ஆனந்தக் கங்கைதான் நெஞ்சில் பெருக்கெடுக்க
மனமும் கானக்குயில்போல் இசைமாலை தொடுக்க
கண்ட விழிகள் புது மலர்போல் பூத்தாட
கலாப மயில்போல் தோகை விரித்தடிய மனம்

வாழ்வோ எம்மாவுஸ் பயணம், வழிப்போக்கராய் நம்மோடு இயேசு
வாரும் வந்து எம்மோடு தங்கும் விடுக்கும் அழைப்பு நமதே
பாதைகள் மாறினும்-பயணங்கள் தொடர்ந்திட,
நதி கடலை அடைந்திடப் பயணம் முடிகின்றது

பரிபூரண சரணாகதியே வழி
சச்சித்தானந்தமாய் இருப்பு

***எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-21-10-2023

# சீமோனின் அன்பு

---

மானுட அன்பில், மகத்தான மூன்று அடுக்குகள்
உடலை நேசிப்போர் காமத்தில் இன்புற, இதயத்தை நேசிப்போர்
காதலில் இன்புற. காமம், காதல் கடந்து ஆன்மாவை நேசிப்போர்
பிரார்த்தனையில் இன்புற- மானுட வாழ்வு



வெள்ளியலைகள் துள்ளி விளையாடும் நீலக்கடல் ஓரம்
பூபாளம் பாடிப் புள்ளினங்கள் விடியலை வாழ்த்திட
மீன்கள் துள்ளி விளையாடிக் களித்திட, வானிலும், கடலிலும்
கதிரவனின் வண்ணக்கோலங்கள்-கரையோரம்
குரு, சீடனின் அன்புறவாடல்கள்

புது உதயம் வந்ததென்றே விழிகள் புதுமலரெனப்
பூத்தாட-இதயம் புள்ளினம்போல் பாடிக் கூத்தாட
மனுமகனை இறை மகனாய் கண்ட,
அன்புச் சீடரின் மனங்கள்

காட்டிக்கொடுப்பு, மறுதலிப்பு, கசை வதை, முள்முடி,
சிலுவை மரணம் கசப்பான யாத்திரை முடித்த குரு
மறுதலித்த சீடன் மனக்காயம் ஆற்றிட
அன்போடு உரையாடிய திரு

யோனாவின மகனாகிய சீமோனே-
என்னை நீ -எல்லோரிலும் பார்க்க
அதிகமாய் வாஞ்சிக்கின்றாயா?

காமம். காதல், பிரார்த்தனை கடந்த
உன்னத அன்பின் பேருணர்வே “வாஞ்சை”

பொருள் புரியாத சீடன்-மறுதலித்துப் புண்பட்ட மனிதன்,
உம்மோடு மரிக்கவும் தயார், ஆவேசமாய்ச் சூளுரைத்து
அடங்கியவன்- ஆம் ஆண்டவரே என் அன்பை
நீர் அறிவீர், அடக்கமாய்ப் பதில் உரைத்த அன்பன்

என் ஆட்டுக்குட்டிகளை மேய்

கேள்வியின் ஆழம் புரியாத சீடன்
வேள்வி மறந்து -இன்றும் ஆழமற்ற கரையில்
அலையும் அவலம் மனதை வருத்த
மீண்டும் வினவினார் குரு

***யோனாவின மகனாகிய சீமோனே-என்னை நீ***
***உண்மையில் நேசிக்கின்றாயா?***



வாஞ்சை என்ற சொற்பதம் நேசமாய் மாறியதை
அறியாத சீடன் ஆம் ஆண்டவரே
என் நேசம் நீர் அறிவீர்

“என் ஆடுகளை மேய்”

***யோனாவின் மகனாகிய சீமோனே***
***என்னை நீ நேசிக்கின்றாயா*** ?

***மூன்றாம் முறையாக இயேசு*** வினவிட மும் முறை
மறுதலித்தவர் நெஞ்சிலே மூன்றாணிகளை அறைந்த துயரம்
வெதும்பிய மனம் ஆணவத்தில் உரைத்தது
***அண்டவரே உமக்கு எல்லாம் தெரியுமே***
***என் நேசமும் உமக்குப் புரியுமே***

என் ஆடுகளை மேய்-

இறைமகன் மெஸியா நீர்- இயம்பியவரை
பாறை நீ எனப் பாராட்டி பெயர் சூட்டிய குரு
இன்று சீமோனின் மகன் என்றழைத்தே
குன்றிய விசுவாசம் தழைக்க-குருவாய்
மும்முறை வினவினார்



மூன்றாம் அடுக்கை கடவாத முதன்மைச் சீடன்
விழிப்புணர்வை-இன்றும்
வரமாய்ப் பெறத் தவமில்லாத சிநேகன்

திசை மாறிய ஆட்டைத் தேடிக் கண்ட நல்லாயன்
இசையாய் என்னைப் பின் செல்-
வாஞ்சையோடு விடுத்த இரண்டாம் அழைப்பு

அன்று கரையோரம் மீன் பிடித்தவரை
ஆழ்கடலில் வலை வீச அழைத்த மனுமகன்
மீண்டும் கரையோரம் அலைபவரை
ஆழ்கடலில் வலை வீசிட அழைத்த இறைமகன்

இளமையில் நீயோ ஆடை உடுத்தி, விரும்பிய
இடங்களுக்குச் சென்றாய்,- முதுமையில்
பிறர் துணையோடு ஆடை அணிந்து
விரும்பாத இடங்களுக்குப் போவாய்

வாசலிலே தந்தை வாஞ்சையோடு காத்திருக்க
ஊதாரிப்பிள்ளையாய்
வீடு திரும்பாத சீமோனின் பயணம்

விழிப்புணர்வை வரமாக்க சீடன் கனியவில்லை
உயிர்ப்பை மகிழ்ந்து கொண்டாட, மறுதலித்த கசப்பு
நெஞ்சை வருத்தும் நிலை, இறந்தவர் உயிர்த்து-மீண்டும்
கடலோரம் அல்லாடும் மீனவனை சீடனாய் அழைத்த பெருநிலை
மனுமகன் கருணைக்கு வானமே எல்லை

**எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-21-10-2023

# விண்ணேற்பு





ஒலிவமலை உச்சியில்-புது உதயம் கண்டார்
களித்த மனம் புதுமலர்போல் பூத்துக் குலுங்க
இளங்கதிரவன்போல் அவர் தோற்றம்
விழித்த மனம் விழிப்புணர்வின் சிகரத்தைப் போற்ற
அன்போடு ஆசீர் அளித்த குருவின் விண்ணேற்றம்

உலகெங்கும் பறைசாற்றுவீர் நற்செய்தியை
உண்மை ஒன்றே இறைவன் ஒருவரே-அன்பினால்
உண்மையை வாழ்வாக்குதலே மெய் வழிபாடு

அன்பினால் இன்புற்று ஒற்றுமையாயிருங்கள்
"**நான்**" எப்போதும் உங்களோடு கூட இருப்பேன்
விழிப்புணர்வே "நான்"-வியந்து அறிந்த மனம்
களிகூர்ந்து அகமகிழ்ந்த தினம்

என் சமாதானத்தை நான் உங்களுக்கு அருள்கிறேன்
மனம் கழித்த தூய மனமே சமாதானத்தின் இல்லம்

விண்ணின்று மண் வந்த வந்த இறை வாக்கு,
நானே வழியும், உண்மையும், வாழ்வும் என்றே
உண்மைக்குச் சான்றாய் தம்மைப்
பலியாக்கிய இறை நோக்கு





ஆணவப் பொய்யழித்து, மெய் கழித்து
உயிர் பிரித்த காயசித்தன்
அறிவுக்கனி கழித்து வாழ்வுக்கனியாய் மாறி
விழிப்புணர்வான மனித நேயப்பித்தன்

மண்ணவர் மண்ணில் நிற்க-தூய சைதன்யமோ
விண்ணோடு ஒன்றாக உயர எழுந்தே
கண்ணின்று மறைந்து இருப்பில் கலந்து
விழிப்புணர்வின் சிகரம் "நான்" என்றது

உள்ளுணர்வின் உன்னதப் பூரணம்
பரிபூரணத்தில் ஒன்றான பிரணவம்
பரிபூரணத்தில் பிறப்பதும் பரிபூரணமே
எஞ்சியதும் பரிபூரணமே

***எங்கும் இன்பமயம் –எல்லாம் இறைமயம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க–எல்லோரும் நலமே வாழ்க***

Pax Ravichandra-21-10-2023

# காதல் சிலுவை

---



காதல் சிலுவையைத் தோளில் சுமந்தவரோ
கல்வாரியில் சிலுவையில் அறையுண்டார்,
கள்வர்கள் இருவர் நடுவே
காதல் கள்வனாய்க் கொலையுண்டார்



மானுடக் காதலால் மாண்ட மனுமகனை
இறைவன் உயிர்ப்பித்தார்.
ஜீவிதமே காதலாக-இறைமகனோ கள்வனாக
மதவாதம் கொன்ற கொடுமை, வரலாற்று உண்மை.

கசையுழுத மேனியோ-ஏர் உழுத பூமிபோல் காட்சி தர
கனத்த சிலுவை சுமந்த தோள்களோ கன்றிச் சிவந்திருக்க
முள்முடியோ திருமுகத்தை சிதைத்திருக்க
ஆணிகள் துளைத்த அவயவங்களோ ‘‘வாழ்வுக்கனியை’’
சிலுவை மரத்தில் பிணைத்திருந்த கொடுமை

என் தந்தையே-அறியாமல் செய்யும் இவர்தம் பிழையை
மன்னித்தருளும், தந்தையாம் இறைவனை வேண்டிய
கருணாகரன், வாழ்வும், போதனையும் ஒன்றான மனுமகனோ,
மானுடத்தின் மேல் அழியாக் காதல் கொண்ட அன்பன்



**எங்கும் இன்பமயம் -எல்லாம் இறைமயம்**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra-21-10-2023

# பிரக்ஞானம் பிரம்மம்



தூய உள்ளுணர்வான பரப்பிரம்மம், ஆண், பெண், அலி
உருக்கடந்த மெய்பொருள், தம் உருவிலும், சாயலிலும்
ஆதி மனிதர்களை ஆணும், பெண்ணுமாய்ப் படைத்து
சிவசக்தியாய் ஆனந்தக் கூத்தாடிய அர்த்தநாரிஸ்வரன்

இருப்பே இறைவன், இருப்பவர் நாமே அவர் நாமம்
சகுண பிரம்மத்தில் உருவும், சாயலுமாய்
நிர்குணபிரம்மத்தில் அறிவு கடந்த பிரக்ஞானமாய் அது



படைப்பெல்லாம் அவன் அழகின் சாயலைச் சொல்ல
உண்மை, அன்பு, கருணை, ஞானம்
மாதா, பிதா, குரு, வடிவில் உறவாடிக் களிக்க
அன்பே சிவமாய், அறிவு கடந்த **பிரக்ஞானம் பிரம்மம்**

நம்மில் அவன் வாழ, நாமோ ஆணவத்தால்
அவனை மறுதலிக்க, சச்சித் ஆனந்தமான
அவன் இருப்பில்தான் மானுடருக்கு அமைதி ?

அளவற்ற தம் அன்பைப் பகிர்ந்திட,
படைத்தலுக்கு மாட்சியாய்,
பல்கிப் பெருகி படைப்பை ஆண்டு நடத்திட
இறைவன் மனிதனைப் படைத்தார்




தம் கரங்களின் கைவண்ணத்தால் உருவாக்கி
தம் உயிர்மூச்சால் உயிர் கொடுத்துப்
படைப்பின் இறுதியில், படைப்பின் பெருமாண்பாக
மண்ணால் இறைவன் மனிதரைப் படைத்தார்

குனிந்து நடக்கும் விலங்குகள் மத்தியில் தலைநிமிர்ந்து
நடக்கும் மனிதன், படைப்பை காத்து, ஆண்டு நடத்திட
இறைவன் தேர்ந்த தலைவன்

உருவத்தில் மனிதனாய், உள்ளுணர்வின் உச்சத்தில்
இறைவனாய் மனிதன், மனிதன் இறைவனாவதே மீட்பு
அதுவே மெய்யறிவு-ஞானம்-நிர்வாணம்

கடவுளாக விரும்பி, அறிவுக்கனியை சுவைத்து
இருமை தோன்றிட , தன்னை இழந்த நிர்வாணி
ஏதேனிலிருந்து வெளியேற்றப்பட்ட ஏமாளி-ஆதாம்

அழியாத ஆன்மாவாய் , படைப்பை ஆண்டு நடத்தும் தலைவனாய்
வாழப் பிறந்தவன், விலக்கப்பட்ட அறிவுக்கனியை உண்டு
இன்பவனத்தை இழந்தான், வீட்டை மீண்டும் அடைந்திட-தன்னை
அறிதலே வழி, ஆணவம் கழித்து பூரண சரணாகதியே உயர் நெறி

Truths are not truth to you, unless you realize them within yourself.

Without realization they are just ideas. For spiritual perception spiritual consciousness lies not in vague theological ideas but in acquisition of Self-realization




தன்னை இழந்தவன், அழியாத ஆன்மா நான்
என்பதை மறந்தவன், அழியும் உடலை தனதாக்கி
நான் எனும் மாயையில் ஆணவம் வளர்த்து
தன் வலையில் தானே சிறைப்பட்ட மூடன்



மனிதன் அப்பத்தினால் மட்டுமன்றி-இறை மொழி
ஒவ்வொன்றினாலும் வாழ்கிறான்-உயிர் மெய்
கடந்து ஆன்ம தரிசனம் காணும் அரிய மொழி
பரி பூரண சரணாகதியே இயேசுவின் வழி

ஆணவத்தால் வீட்டை இழந்தவனோ ஆதாம்
பரிபூரண சரணாகதியில்-ஆணவம் கழித்து
வீட்டை அடைந்தவரோ, கிறிஸ்துவாய் தம்மை
தாதே பிறப்பித்த இயேசு (Christo Genesis)

மனிதன் இறைவனாவதே வாழ்கை வட்டம் -வழியும்,
உண்மையும், வாழ்வும் " நானே" இயேசுவின் பாதை
தூய உள்ளுணர்வான "நானே" மனுமகன் கீதை

***சத்தியத்தை*** சந்திக்க நாணிப் பயந்து ஒளிந்து
அத்தியிலைகளால் நிர்வாணத்தை மறைத்த ஆதாமோ ஏமாளி
ஆணவம் கழித்து, அரை நிர்வாணியாய், பரிபூரண
சரணாகதியில், வீட்டை அடைந்த இயேசுவோ ஞானி



உண்மையிலும், அன்பிலும், உண்மை இறைவனைத்
தொழுங்கள் அதுவே மெய் வழிபாடு-அக வழிபாடு
கட உள்ளே, நீங்களும் தெய்வங்களே-இன்றும் ஒலிக்கும்
இயேசுவின் குரல் மீட்பின் வழியான அமுதக் குறள்

மனிதன் உலகெல்லாம் ஆதாயமாக்கிக் கொண்டாலும்
தன்னை இழந்தால் என்ன பயன்?அழியாத ஆன்மா
நீங்கள், உன்னை நீயே அறிவாய்-அதுவே மீட்பு

நம்பிக்கை உண்மையை அறியத் தடைக்கல்லே
உண்மை தன் சொந்த அனுபவமாகாதவரை
இரவல் அறிவில் வாழும் மனிதன்-ஏழையே

வணங்கப்படுவது தெய்வமல்ல, தன்னுள் கடந்து-தன்னை
அறிந்து, இருமை மறைந்திட தோன்றும் மெய்யறிவே ஞானம்-
நிர்வாணம், ஆணவத்தை ஆகுதியாக்கும் அகவேள்ளி
பூரண சரணாகதியில் நான் அழிய இருப்போடு ஒன்றாகும் ஆனந்தம்





அன்பில் நிலைத்து, உண்மையைத் தவமாக்கி வாழுங்கள்
ஆன்மாவை இழப்பதும், உண்மையை இழப்பதும் ஒன்றே
அனுபூதியில் நீங்களே உண்மையை அறிந்து கொள்ளுங்கள்-
தன்னை அறிவதே மெய்யறிவு-மற்றெல்லாம் தகவல் அறிவு
மெய்யறிவே பிரக்ஞானம் பிரம்மம்

***நானும், தந்தையும் ஒன்றே***
***ஆபிரகாமிற்கு முன் நான் இருக்கிறேன்***

தந்தையின் இல்லிடத்தில் உறைவிடங்கள் பல உண்டு-
நான் போய் உங்களுக்கு இடம் ஏற்பாடு செய்தபின்-திரும்பி வந்து
உங்களை என்னிடம் அழைத்துக் கொள்வேன்-அப்போது
'நான்'' இருக்குமிடத்திலேயே நீங்களும் இருப்பீர்கள்

***வழியும், உண்மையும், வாழ்வும் "நானே"***
***என் வழியாய் அன்றி எவரும் தந்தையிடம் வருவதில்லை***

Do not believe in anything simply because you have heard it. Do not believe in anything simply because it is spoken and rumored by many. Do not believe in anything simply because it is found written in your religious books. Do not believe in anything merely on the authority of your teachers and elders. Do not believe in traditions because they have been handed down for many generations. But after observation and analysis, when you find that anything agrees with reason and is conducive to the good and benefit of one and all, then accept it and live up to it.

(Buddha)

izquotes.c

உள்ளுணர்வின் அதி உன்னதமே -தூய மனம்
சுத்த சைதன்யமே மெய்யான "நான்"
உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்-பூவலகில்
நல்மனத்தவருக்கு அமைதியும்-வானவரின் நற்செய்தி
உன்னதமும, நல் மனதும் ஒன்றே- அது நம்முள்ளே

ஆணவம் கழித்த தூய மனமாய் பிறத்தலே
நம் இரண்டாம் பிறப்பு-அதுவே
இயேசுவின் இரண்டாம் வருகை, அது நம்முள்ளே
கட உள் கடவுளாவீர்-இருப்பது தெய்வீகமே
***அஹம் பிரம்மம் அஸ்மி-தத் த்வம் அஸி***

விழிப்புணர்வெனும் பெருங்கடலில் தோன்றிய
பேரலைகள், கிருஷ்ணா, புத்தர், இயேசு கிறிஸ்து
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே விண்ணரசு

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-21-10-2023